# தமிழகக் கோயிற்கலை

## - தமிழகத் திருக்கோயில்கள் வழிபாட்டு வரலாறு -


கலையிலங்கு மொழியாளர்

*மதுரைப் பேராசிரியர்*

*முனைவர்* **இரா. அரங்கராஜன்,** M.A., Ph.D.,



*மதுரை*

**2000**

# நான்முகம்

தமிழகத் திருக்கோயில்கள் பாரத கலாசாரம் தமிழ்ப்பண்பாடு ஆகிய இவற்றின் சங்கமமாகத் திகழ்கின்றன. வேதாகம புராணங்கள், வான சாஸ்திரம், வாஸ்து சாஸ்திரம், நுண்கலைகள், படிமக்கலைகள் மற்றும் இயல் இசை நாடகத் தமிழ் ஆகியவற்றின் ஒருங்கிணைந்த ஒரு வெளிப்பாடே கோயிற்கலை ஆகும்.

கோயிற்கலையின் ஆதாரம் இறைவழிபாடு. இறைவழிபாட்டின் தோற்றம், வளர்ச்சி மற்றும் இன்றைய வாழ்வுநிலை பற்றி எடுத்துக் கூறும் ஓர் அரிய முயற்சியே இந்நூல்.

இந்நூலில் கோயிற்கலையின் பொதுக்கூறுகளும் சைவ வைணவ சமயக் கூறுகளும் தனித்தனியாக விளக்கப்பட்டுள்ளன.

அண்மைக்காலத்தில் பல்கலைக் கழகங்களில் கோயிற்கலை பட்டப்படிப்புகளிலும் பட்டமேற்படிப்புகளிலும் பாடத்திட்டங்கள் வரையறுக்கப்பட்டுக் கற்பிக்கப்படுகிறது. மதுரைக்கல்லூரி (தன்னாட்சி) தமிழ்த்துறை பணிவாய்ப்புத் தமிழ் முதுகலை பட்டமேற்படிப்பிற்குக் கோயிற்கலை பயில்பொருளாக ஏற்கப்பெற்றப்போது பாடத்திட்டத்தை உருவாக்கி மாணவர்களுக்கு அக்கலையினைக் கற்பிக்கும் பணியை மேற்கொண்டேன். அவர்களுக்குத் திருக்கோயில்களில் நிருவாக அதிகாரிகளாகப் பணி வாய்ப்பினை ஏற்படுத்தும் நோக்கத்துடன் பாடத்திட்டத்தை உருவாக்கினேன். மாணவர்களைத் திருக்கோயில்களுக்கு அழைத்துச் சென்று கோயில் அமைப்பு, நடைமுறைகள், வழிபாடுகள், நிருவாக அமைப்பு ஆகியனவற்றை நேரிடையாக அறிந்து கொள்ளவும் ஆய்வுக் கட்டுரைகள் வரையவும் பயிற்சியளித்தேன்.

இந்நிலையில் தமிழ்நாடு இந்து சமய அறநிலையத் துறையின் சார்பில் சமயப்புத்தொளிப்பயிற்சி வகுப்புகள் திருக்கோயில் பணியாளர்களுக்காக நடைபெற்றபோது மதுரை, சிவகங்கை, ஸ்ரீவில்லிபுத்தூர், சேலம், மயிலாடுதுறை ஆகிய மையங்களில் வைணவ சமயப் பயிற்சியும் திருமால் திருக்கோயில் நடைமுறைப் பயிற்சியும் அளிக்கும் நல்வாய்ப்புப் பெற்றேன். அதைத் தொடர்ந்து பொதுமக்களுக்காக நடத்தப் பெற்ற சமயப் பயிற்சி வகுப்புகளிலும் கோயிற்கலை பற்றி விரிவாகக் கற்பிக்கும் வாய்ப்பும் பெற்றேன். அப்போது

பயன்படுத்திய பாடக்குறிப்புகளை ஒரு நூலாக உருவாக்கி வெளியிடுமாறு அன்பர்கள் வேண்டினர். அதன் விளைவே இந்நூல்.

இந்நூல் பல்வகைப் பிரிவினர்க்கும் பயன்படுமாறு எழுதப்பட்டுள்ளது. கல்லூரிகளில் தமிழிலக்கியம் மற்றும் கலையியல் கற்கும் மாணவர்கள், திருக்கோயில்கள் பற்றி ஆய்வு நிகழ்த்தும் ஆய்வாளர்கள், தமிழ்நாடு இந்து சமய அறநிலையத்துறையில் பணிவாய்ப்புப் பெறத் தேர்வு எழுதும் அன்பர்கள் ஐ.ஏ.எஸ். தேர்வு எழுதும் அறிவாளிகள் திருக்கோயில்களில் பணிபுரியும் அலுவலர்கள் மற்றும் உள்துறைப் பணியாளர்கள், திருக்கோயில் வழிபாட்டை மேற்கொள்ளும் இறையன்பர்கள் ஆகியயோர்களுக்கு இந்நூல் மிகவும் உதவியாக விளங்கும்.

இந்நூல் ஓர் ஆய்வேடு போல் ஒரு வரன்முறையில் எழுதப்படவில்லை. பொதுவான செய்திகளை வேண்டிய அளவு அறிந்து கொள்ள உதவும் நடைமுறை ஏடாகவே உருவாக்கப்பட்டிருக்கிறது.

இந்நூலில் எழுதப்பட்டிருக்கும் சிவாகமங்கள், சிவாலய வழிபாடு மற்றும் சைவசித்தாந்தக் கோட்பாடுகள் பற்றிய கட்டுரைகளைப் படித்து அரிய ஆலோசனைகளை வழங்கிய அன்பர் *சிவநெறிச்செம்மல் திருவாளர்* **நீ.சீ.சுந்தர ராமன்** அவர்களுக்கு என் நன்றியை உரியதாக்கிக் கொள்கிறேன்.

இந்நூல் முழுவதையும் படித்துப் பார்த்து அரியதோர் முன்னுரை வழங்கியுள்ள **பேராசிரியர் முனைவர் வெங்கட்ராமன்,** (வரலாறு மற்றும் கலைத்துறைப் பேராசிரியர் - ஓய்வு) அவர்களுக்கு என் நன்றி உரியதாகும். அன்னார் இற்றைக்கும் மேலைநாட்டு ஆய்வு மாணவர்களுக்குத் திருக்கோயிற்கலை பற்றி நேர்முகப் பயிற்சி அளித்து வருவது பாராட்டத்தக்கது.

இவ்வரிய நூலை அழகுற அச்சியற்றி அணி திகழ்வண்ணம் உருவாக்கிக் கொடுத்த **கௌரி பிரிண்டர்ஸ் திரு. பவானிசங்கர் தம்பதியர்** அவர்களுக்கும் மிகவும் நன்றியுடையேன்.


இங்ஙனம்

*கலையிலங்கு மொழியாளர்*

**இரா. அரங்கராஜன்** M.A., Ph.D.,

28A, அக்கிரகாரம் தெரு

பழங்காநத்தம், மதுரை - 625 003.

✆ 0452 - 601124

# பொருளடக்கம்

**பொது**



**பின் இணைப்புகள்**

# முன்னுரை

**Dr. R. வெங்கட்ராமன்,** M.A., Ph.D.,
கலை வரலாற்றுத்துறைப் பேராசிரியர் (ஓய்வு)
மதுரை காமராஜர் பல்கலைக்கழகம்,
மதுரை.

இந்து சமயம் என்பது உண்மையில் சைவம், வைணவம், சாக்தம், முதலிய பல்வேறு உட்பிரிவுகளின் தொகுப்பாகும். பல்வேறு வேறுபாடுகளுக்கிடையேயும் இவ்வுட்சமயங்களுள் சில ஒற்றுமைகளைக் காணலாம். அவற்றுள் தலையாயது உருவ வழிபாடு. உருவ வழிபாடுதான் இந்திய சமயங்களின் தனித்தன்மை எனலாம். இதுவே இவற்றை உலகின் பிற சமயங்களினின்றும் வேறுபடுத்திக் காட்டுவதாகும். வேதங்களின் முற்பகுதியில் உருவவழிபாடு தெளிவாகச் சொல்லப்படவில்லை. ஆனால் அதன் கடைசிப் பகுதியில் இது முழுமையாக ஏற்கப்படுகிறது.

கடவுள் கொள்கையையும் புறவழிபாடுகளையும் தீவிரமாக எதிர்த்த சமணமும் பௌத்தமும் கூட, ஆன்மீக வளர்ச்சிக்கு உருவங்களின் இன்றியமையாமையை ஏற்க வேண்டியதாயிற்று.

19ஆம் நூற்றாண்டில் மேலைநாடுகளின் தாக்கத்தால் இந்தியாவில் தோன்றிய மதச் சீர்திருத்தத் தலைவர்கள் (ராம்மோகன்ராய், தயானந்தர், வள்ளலார், போன்ற ) பலரும் உருவவழிபாடு என்பது ஏதோ இந்துமதத்தில் ஏற்பட்டு விட்ட பெருந்தவறு போல் தயங்கிட எவ்விதக் கல்வியாலும், மதக்கோட்பாடுகளாலும் பாதிக்கப்படாத ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர் ஒருவரே ஆன்மீக வளர்ச்சிக்கு உருவவழிபாட்டின் முக்கியத்துவத்தை வலியுறுத்தியவர். கல்வியிற் சிறந்தவராயிருந்த அவரது சீடரான விவேகானந்தர் கூட இது விஷயத்தில் தயக்கம் காட்டினார்.

எந்தவொரு மதத்திற்கும் இரண்டு எதிர்பார்ப்புக்கள் உண்டு. ஒன்று, உடல், மற்றும் அன்றாட உலக வாழ்க்கை சம்பந்தப்பட்டது. நோய்நீக்கம், மழை வேண்டல், பயிர்-பசுக்கள், மக்கள் முதலியன பல்கிப் பெருகுதல், தீயசக்திகள் அண்டாமை, குடும்ப நல்லிணக்கம் முதலியன இதில் அடங்கும். சமயச்சடங்குகள் பலவும் இதனடிப்படையில் உருவானவையேயாகும்.

மற்றொன்று மரணத்திற்குப் பின் உயிர் மோக்ஷம் அடைதல், முந்தையது இகசுகம், பிந்தையது பரசுகம், பாமரர் தங்கள் கிராம தேவதைகளை இகசுகம் வேண்டி, அணுகுவர். சமணம், பௌத்தம், அத்வைத வேதாந்தம்,

முதலியன பரசுகத்தை மட்டுமே நாடின. இதற்கு தெய்வங்கள் தேவையில்லை என எண்ணின.

இந்து மதத்தில் இவ்விரண்டின், கலப்பில் தோன்றிய சைவம், வைணவம் முதலிய மேல்மட்ட வழிபாட்டுச்சமயங்கள், தங்கள் தெய்வமே முழுமுதற்கடவுள் என்றும், இகபரசுகம் இரண்டையும் அருளவல்லவர் அவர் ஒருவரே என்றும், இவற்றைப் பெற அத்தெய்வத்தின் அருளே வேண்டப்படுவது என்றும், அவ்வருளைப் பெற சரியை, கிரியை, யோகம், ஞானம், பக்தி, பஜனை போன்றவை வழிமுறைகள் என்றும் கூறும். இவற்றுள் கோயில் வழிபாட்டில் சரியையும் கிரியையும் மேலிடம் பெறும். பிற அவற்றிற்குத் துணை நிற்பவையே. பக்தியுடனான வழிபாடே யோகம், அதில் விளைவதே ஞானம்.

புறவழிபாட்டின் மூலம் ஏற்படும் பிற பயன்பாடுகளுள் தூய்மையும் ஒழுக்கமும் தலையாயின. கோவில் செல்வோர், அதிகாலையில் நன்கு நீராடி தூய உடை உடுத்தி, தூயபொருள்களையும், அன்றுஅலர்ந்த மலர்களையும் தம்மோடு எடுத்துச் செல்வர். இவையாவும் மனத்தூய்மைக்கு வழிகள். இத்தகைய வழிபாடே தமிழ் மன்னரையும் மக்களையும் சங்ககாலம் தொட்டுக் கவர்ந்தது.

சங்ககாலத்திலேயே சமணரும், பௌத்தரும் தமிழகத்திற்கு வரத் தலைபட்டனர். இவர்கள் மறுபிறவிக் கொள்கையை வலியுறுத்தியதுடன் வடக்கிருத்தல் போன்ற கடும் நோன்புகளை நோற்றனர். மன உறுதி மிக்க தமிழரசர் சிலர் இவற்றை ஏற்றது நாம் அறிந்ததே. ஆனால் அதே காலத்தில் தமிழகம் வந்த வேதமரபினர் (வைதிகர்) யாகங்கள் மூலம் யஜமானன் (யாகம் செய்வோன்) புதிய தெய்வீகப்பிறவியை இங்கேயே, இப்போதே எய்திடமுடியும். என்றும், அத்தகைய (தெய்வீக) மன்னனின் ஆணைக்கு மழை முதலிய இயற்கை சக்திகள் யாவும் கட்டுப்படும் என்றதுமான வேதக்கருத்தைப் பரப்பிவந்தனர். பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதி என்ற சங்ககாலப் பாண்டியனையும், ராஜசூயம் வேட்ட பல சேர, சோழர் மன்னர்களையும் வரலாறு அறியும்.

பக்தி இயக்க காலத்தில் சிவனும், திருமாலும் ஏற்றம் பெறவே, அந்தணரின் நிகம (வேள்வி) வழிபாடும், வேத காலத்திற்கு முன்பிருந்தே நிலவி யிருந்த ஆகமவழிபாடும் (விக்ரஹ ஆராதனை) இணைந்து கோயில் வழிபாடுகளாக மலர்ந்தன. இப்புதிய முறைக்கு இந்து மதம் என்று பெயர். இந்தியாவெங்கிலும் இதன் வேகமான வளர்ச்சிக்கு வடமொழிப் புராணங்களும் தமிழ் பக்தி இயக்கமும் பெரும் உந்துகோலாகஅமைந்தன. இப்புதிய மதத்தில் சிவனும், விஷ்ணுவும், பெருங்கடவுளாயினர். வேதக்கடவுளர் திக்பாலர் ஆயினர். சைவம், வைணவம், ஆகிய ஒவ்வொன்றும் தமக்கென ஆகமங்களைத் தொகுக்கலாயின.

ஆகமத்தின் வேர்கள் மிகத் தொன்மை எனினும், அவை

எழுதப்பட்டது கி.பி.5ஆம் நூற்றாண்டுமுதல்தான். அவை வடநாட்டில் வடமொழியில் எழுதப்பட்டன. இவ்வாறு தொன்மையான கருத்துக்கள் மீட்டுருவம் பெறும்போது, அவை இறைவனாலே வெளிப்படுத்தப்பட்டன எனக்கூறும் மரபு உருவாகியது.

ஆகம வழிபாட்டில் பூஜையே முதலிடம் பெறும். இதில் இறைவனுக்குச் செய்யப்படும்.16 வகை உபசாரங்களும், தரிசனம், பிரசாதம், எனும் கொள்கைகளும் மிக முக்கியமானவை. பல்வேறு திருமஞ்சனங்களுக்குப் பின் வண்ண ஆடை அணிகலன்கள், மாலைகள், முதலோடு அழகுற இலங்கும் இறைவனைக் காண்பதும், மனம் குளிர்வதுமே தரிசனம் எனப்படும். நாம் தந்த நிவேதனங்களை ஏற்று அவற்றையே நமக்குப் பிரசாதமாகத் திருப்பித்தரும் இறையருளே இவ்வழிபாட்டின் முக்கிய அம்சம் எனலாம்.

வேள்விகளால் மன்னர்களுக்கு இறைத்தன்மை வரும் என்ற நம்பிக்கையைப் போல் பிரசாதத்தை ஏற்போர் புனிதமடைவர், நலம்பல பெறுவர் என்பதும் இந்துக்களின் ஆழமான நம்பிக்கை. எனவே தமிழ் மன்னர்கள் மக்கள் யாவரும் உய்தல் வேண்டும். என்று எண்ணிப் பல கோயில்களைக் கட்டி அவற்றில் உறையும் இறைவனுக்குத் திருவமுதுக்கு வழங்கிய நிபந்தங்களைப் பற்றித் தமிழகக் கோயில்களிலுள்ள ஆயிரக்கணக்கான கல்வெட்டுக்கள் வாயிலாக அறியலாம். அவற்றுள் மாணிக்கவாசகரைத் தம் மந்திரியாய்க் கொண்டிருந்த 2-ஆம் வரகுணனின் (863-911) திருச்செந்தூர்க் கல்வெட்டும் மதுரையை வென்ற முதலாம் பராந்தக சோழனின் (907-955) ஆனைமலைக் கல்வெட்டும் சிறப்பானவை. வரகுணன் (மாறஞ்சடையன்) 1400 காசுகளை கொற்கை, நல்லூர், சாலியம், வரகுணமங்கலம், தியம்பக (த்ரியம்பக) மங்கலம் முதலிய பல ஊர்களைச் சேர்ந்த சபையார், ஊரார், நகரத்தார் முதலியோரிடம் தந்து திருச்செந்தூர்க்கோயிலில் எழுந்தருளிய சுப்பிரமணியபடாரர்க்கு தினசரி வழிபாட்டிற்கும், மார்கழித் திருவாதிரை, மாசிமகம், வைகாசி விசாகம், ஆகிய திருவிழாக்களுக்கும் அவ்வூரார் என்னென்ன பொருட்களைத் தரவேண்டும் என்றும் அவற்றின் துல்லியமான அளவுகளையும் குறித்துள்ளான். அத்துடன், இப்பரிசு, செலுத்தாது குத்துக்காற்படில் இத்தேவர்க்கு ஐம்பது காசு தண்டமும், பட்டுச்செலுத்தாது விட்டால் முதலிரட்டியும் கொடுப்பது என்று தண்டனையையும் குறித்துள்ளான். உதாரணமாகக் கொற்கை ஊரார் திருவமுதுக்கு 16 நாழி அரிசியும், நாழி அரிசிக்கு முன்னாழி நெல்தரவும் உத்தரவிட்டான். நல்லூர் ஊரார் நிகதிப்படி திருவமுது நிவேதிக்க நெல் , பசுநெய், பசுந்தயிர் 1000 வாழைப்பழம், 7 துலாம் 65 பலச்சர்க்கரை முதலியன தரவேண்டும். இவற்றைக் கொண்டு இறைவனுக்குத் தினந்தோறும் நெய்யமுது, தயிரமுது, சர்க்கரை அமுது, கறியமுது, முதலியன படைக்கவேண்டும். கறியமுதில் புளிங்கறி ஒன்று, புழுக்குக்கறி ஒன்று, பொரிக்கறி ஒன்று, எரிக்கறி நான்கு என்று நீண்டபட்டியல் தரப்படுகிறது. பிற ஊரார் இக்கோயிலுக்குத் தரவேண்டிய பொருட்பட்டியலுள்,

கறிஅமுது, மிளகமுது, மஞ்சளமுது, சீரகஅமுது, சிறுகடுகமுது, கொத்தம்பரி அமுது,. முதலியனவும் விளக்கெரிக்கப் பசுநெய்யும், திருமஞ்சனம் ஆடி அருள பசு நெய்யும், இளநீர் வழுவையும், தேனும், திருமேனி பூசி அருள மஞ்சள், சந்தனக்குழம்பு, கற்பூரம், முதலியனவும் பூசைக்குப் பல்வித நறும்பூக்களும் (அளவை தரப்படுகிறது) உடுத்திட ஸ்ரீ உடை ஆடை, பாவாடையும், ஸ்ரீ தூபத்திற்கான அகில், கற்பூரம் ஆகியனவும் இன்னும் பல பொருட்களும் கூறப்படுகின்றன.

இவற்றைப் பார்க்கும் போது அரசரும் மக்களும் கோயிலில் உறையும் எம்பெருமானை அருள் கொண்டு மண்ணுலகில் நம்முடன் உறையும் பேரரசனாக, பெருந்தலைவனாக, தந்தையாக, தாயினும், சாலப்பரிவு கொண்டவனாகப் பார்த்தனர் என்பது திண்ணம்.

அரசரும் அடியார் பலரும் தரிசு நிலங்களை வாங்கிப் பண்படுத்தி, சாகுபடிக்கு உகந்த நஞ்சையாக்கி, கால்வாயும் வெட்டிப்பின் கோயிலுக்குத் தானம் அளித்தனர். இவை தவிரக் கோயிலுக்குப் பல்வேறு வகைகளிலும் நிலங்களும் வருமானமும் பல்லவர் காலந்தொட்டுப் பெருகின.

மன்னர்கள் போரில் பெற்ற பொன்னிலும் பொருள்களிலும் கோயிலுக்குப் பங்கு தருவதுண்டு. இவ்வாறுதான் மதுரையையும் ஈழத்தையும், வென்ற முதலாம் பராந்தகச் சோழன், சிதம்பரம் கோயிலுக்கும், நெல்லூர் முதலான பகுதிகளை வென்ற ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் சிதம்பரம், ஸ்ரீரங்கம் கோயில்களுக்கும் பொன்வேய்ந்தனர். கர்நாடகம் முதலிய பலபகுதிகளையும் வென்ற இராஜராஜன் தஞ்சைப் பெரிய கோயிலையும் வங்கம், கடாரம், முதலியவற்றை, வென்ற இராஜேந்திரன் கங்கை கொண்ட சோழபுரத்தையும் கட்டினர்.

இவ்வாறு பலவகைகளாலும் கோயில்களுக்குப் பெருஞ்செல்வம் சேரவே, அவற்றை நிர்வகிப்பதற்குப் பல அதிகாரிகள் நியமிக்கப்பட்டனர். செல்வப் பெருக்கால் கோயில் வழிபாடுகள் பெருகின. அதனை ஒட்டி வழிபாட்டாளர் எண்ணிக்கையும் பெருகின. ஒவ்வொரு பெருங்கோவிலும் ஒரு சிறிய அரசு போல் வளர்ந்தது. எனினும் பிரச்சனைகள் ஏற்பட்டாலே அன்றி அரசன் அதன் நிர்வாகத்தில் தலையிடுவதில்லை.

வழிபாடுகளில், இறைவன் திருஉலா வருதல் ஒரு அங்கமாகும். இதில் அந்தணரே அன்றிப் பிற தேவதாசிகள் மற்றும் பலரும் ஈடுபட்டனர், இவருள் நட்டுவனார் உவச்சர், கூத்தர், திருமெய்க்காப்பாளர், திருவடி தாங்குவோர், சிவிகையார், திருவிளக்கு, ஏற்றுவோர் போன்ற பலர் அடங்குவர். பல்லக்குத் தூக்கும் அந்தணர்

ஸ்ரீ பாதம் தாங்கும் நம்பிமார் எனப்பட்டனர்.

ஆகமங்களில், இறைவனை மகிழ்விக்க ஆடலும், பாடலும், மிகவும் வலியுறுத்தப்படுகின்றன.சங்ககாலத்து விறலியர் பக்தி இயக்க காலத்தில் பல்லவ-பாண்டியரால் கோயில் வழிபாட்டில் ஈடுபடுத்தப்பட்டனர். சோழர் காலத்தில் இவர்களது எண்ணிக்கையும், பெருமையும், வளர்ந்தது. இதற்குக் காரணம் இவர்கள் ஆடல் பாடலுடன் ஆழ்ந்த சாஸ்திரஞானமும் கோயில்களுக்குப் பல கொடைகள் தருகின்ற தாராள மனப்பான்மையும் கொண்டிருந்தனர் என்பதே ஆகும். தங்களை இறைவனுக்கே அர்ப்பணித்துவிட்ட இவர்களை பதியிலார் திருப்பதிகள், தேவரடியார், ரிஷபத்தளியிலார், கோயிற்பெண்டுகள், திருவரங்கிருந்த பெண்டுகள், உருத்திர கணிகையர், என்றும் இவர்களது ஆடல் வகைகளை சொக்கம், சந்திக்குனிப்பம், அகமார்க்கம், வரிக்கோலம் எனவும் கல்வெட்டுக்கள்.தெரிவிக்கின்றன.

இராஜராஜன் பல்வேறு கோயில்களிலிருந்தும் 400 கணிகைகளைத் தேர்ந்தெடுத்துத் தஞ்சைப் பெரியகோயிலில் இருத்தி அவர்களுக்கும், நட்டுவனாருக்கும், வீடுகளும், நிலங்களும், தந்து பெருமைப்படுத்தினான். நாட்டியம், தவிர இறைவனுக்குச் சாமரம் வீசுதல், திருநீற்றுக்காப்பு ஏந்துதல், புஷ்பத்தளிகை ஏந்தல், பூப்பறித்தல், பூத்தொடுத்தல், முதலியன இவர்களது கடமை. இவர்களுள் பலர் மனமுவந்து கோயிலைப் பெருக்கி, மெழுகி, கோலமிட்டு விளக்குகளில் திரிகளை மாற்றி எண்ணெய் ஊற்றி இறைவனுக்குப் பணிசெய்தனர். பலர்தோட்டத்தைப் பராமரித்தும் நெல்குத்தியும் இறைப்பணி செய்தனர். இவர்களுள் பலர் கோயில்களில் அதிஷ்டானங்களையும் பிராகாரங்களையும் கட்டினர். கோயில்களில் விளக்கெரிப்பதற்காகவும் நித்திய பூஜைக்காகவும் இவர்கள் தந்த சாவா மூவாப்பேராடுகள்(பசுக்கள்) ஏராளம். பலகோயில்களின் நிலங்கள் இவர்களது மேற்பார்வையில் விடப்பட்டதுண்டு. சோழர்களில் சிலரும் பிற்காலப் பாண்டியர்களில் சிலரும் கணிகையர் சிலரை மணந்து கொண்டனர். நாயக்கமன்னர் ஆட்சிக்காலத்தில் இவர்களது நிலை மிகவும் வீழ்ச்சியுற்றது.

கோயிலின் அபரிமிதமான செல்வங்களையும் வருமானங்களையும் கவனிக்க ஸ்தானத்தார், ஸ்ரீ பண்டாரத்தார் தேவகன்மிகள், ஸ்ரீ காரியம் செய்வோர் எனப் பல அதிகாரிகள் இருந்தனர்.

ஸ்தானத்தாருக்கு ஏராளமான அதிகாரம் இருந்தது. ஒருமுறை நாட்டில் பெரும்பஞ்சம் ஏற்படவே இளையாங்குடி கோயில் ஸ்தானத்தார் அக்கோயிலின் ஆபரணங்களை விற்று மக்களைக் காத்தனர். பஞ்சம்

# இயல் 1

# தொல்காப்பியமும் தெய்வ வழிபாடுகளும்

**முப்பொருட்பாகுபாடு :**

பண்டைத் தமிழரின் சமயக் கருத்துக்களைத் தொல்காப்பியம் ஓரளவு அறிவுறுத்துகிறது. அவை யாவும் முப்பொருட்பாகுபாட்டின் கீழ் இடம் பெறுகின்றன. மக்களால் மதிக்கத்தக்க பொருள்கள் அனைத்தையும் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்று மூன்று திறங்களாகப் பகுத்துக் காட்டுகிறார் தொல்காப்பியர். உயிர்வாழ்க்கை நிகழ அடிப்படைத் தேவையான நிலமும் காலமும் முதற்பொருள் என்று வழங்கப்பெற்றன. முதற்பொருளின் சார்பில் கருக்கொண்டு தோன்றுவதால் புல் முதலாக மக்கள் ஈறாகவுள்ள உயிர்ப்பொருள்களும் உயிரற்ற பொருள்களும் கருப்பொருள் என்று அழைக்கப்பெற்றன. உயிர்ப்பொருள்களில் நிலைப்பொருள்களும் இயங்கு பொருள்களும் அடங்கும். அவற்றைத் தொகுத்து

*தெய்வம் உணாவே மாமரம் புள்பறை*
*செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ*
*அவ்வகை பிறவும் கருவென மொழிப* (தொல். அகத். 20)

என்று தொல்காப்பியர் கூறுகிறார். இந்த நூற்பாவில் "பிறவும்" என்று குறிக்கப்பட்டனவற்றைப் பிற்காலத்துத் தோன்றிய நம்பியகப்பொருள் என்ற நூலின் வாயிலாக அறியமுடிகிறது. அந்நூலில் வருகின்ற

*ஆரணங்கு உயர்ந்தோர் அல்லோர் புள்விலங்கு*
*ஊர் நீர் பூ மரம் உணாப் பறை யாழ் பண்*
*தொழில் எனக் கரு ஈரேழு வகைத் தாகும்* (நம்பியகப். 19)

என்ற நூற்பா பதினான்கு கருப்பொருள்களைத் தொகுத்துக் காட்டுகிறது. தொல்காப்பியரால் மக்களுக்குரிய அகமும் புறமுமாகிய ஒழுக்கங்கள் உரிப்பொருள் என்று அழைக்கப்பெற்றன.

மக்கள் வாழும் நிலத்திற்கும் உணவுப் பொருளுக்கும் வாழ்க்கை முறைகளுக்கும் ஏற்றவாறு அவர்களுடைய மனத்தியல்பாகிய தெய்வக்கோட்பாடுகளும் வழிபாட்டு முறைகளும் பல்வேறாகவே அமையும். இக்காரணம் பற்றியே தொல்காப்பியர் தெய்வத்தைக் கருப்பொருள்களில் ஒன்றாகச் சேர்த்திருக்கிறார். அவற்றில் சிறப்புக் கருதித் தெய்வத்தை முதலில் வைத்து இலக்கணம் செய்தார். இவ்வாறு கருப்பொருள்களில் முதலிடம் பெற்ற தெய்வத்தை நான்காகப் பிரித்து முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் ஆகிய திணைகளில் அமைத்துக் காட்டுகிறார்.

**திணைகளும் தெய்வங்களும் :**

காடுறை உலகமாகிய முல்லை நிலத்தில் மாயோன் வழிபாடும், மைவரை உலகமாகிய குறிஞ்சி நிலத்தில் சேயோன் வழிபாடும், தீம்புனல் உலகமாகிய மருத நிலத்தில் வருணன் வழிபாடும் தோன்றி அவை நன்கு நிலைபெற்றன. இந்த வழிபாட்டு முறைகளைத் தொல்காப்பியர் பின்வரும் நூற்பாவில் தெளிவுறுத்துகிறார் :

*மாயோன் மேய காடுறை உலகமும்*
*சேயோன் மேய மைவரை உலகமும்*
*வேந்தன் மேய தீம்புனல் உலகமும்*
*வருணன் மேய பெருமணல் உலகமும்*
*முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்*
*சொல்லிய முறையால் சொல்லவும் படுமே* (தொல். அகத்.5)

முல்லை நிலத்துக் கோவலர்கள் பசுக்களின் பால் வளம் வேண்டி மாயோனைக் குரவையாடி வழிபட்டனர். குறிஞ்சி நிலத்துக் குறவர்கள் மலைவளம் கருதி வேலனை அழைத்து வெறியாடிச் சேயோனை வழிபட்டனர். மருத நிலத்து உழவர்கள் நிலவளமும் நுகர்வளமும் பெருக வேந்தனை வழிபட்டனர். நெய்தல் நிலத்துப் பரதவர்கள் வலைவளம் கொழிக்கச் சுறா மீனின் கொம்பினை நட்டுக் கிளையுடன் குழுமி வருணனை வழிபட்டனர்.

நானில மக்களும் தழுவிய இவ்வழிபாடுகளேயன்றி வெற்றியை விளைவிக்கும் கொற்றவையாகிய பழையோள் வழிபாடும் போர் மேற்செல்லும் மறவர் குடியினரால் போற்றப்பட்டது. மேலும் கொற்றவை வழிபாட்டின் தன்மையினை

*மறங்கடை கூட்டிய குடிநிலை சிறந்த*
*கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே* (தொல். புறத்.4)

என்ற நூற்பாவால் அறிய முடிகிறது.

சேயோன் வழிபாட்டின் ஒரு பகுதியாக "வெறியாடல்" விளங்கியதையும் வெறியாடியவன் வேலும் கையுமாக விளங்கிய "வேலன்" என்பதையும் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது.

*வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்*
*வெறியாட்டயர்ந்த காந்தளும்* (தொல்.புறத்.5)

என்று வருவது காண்க.

இனி முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்னும் நான்கு நிலங்களுக்கும் உரிய திருமால், முருகன், இந்திரன், வருணன் என்னும் தெய்வங்களைத் தொல்காப்பியம் எவ்வாறு பெயர் குறிப்பிடுகிறது என்பதைக் காணவேண்டும். திருமாலை மாயோன் என்றும் முருகனைச் சேயோன் என்றும் இந்திரனை வேந்தன் என்றும் வருணனை அவ்வாறே வருணன் என்றும் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது.

**மாயோன் :**

நானிலக் கடவுள்களை வரிசைப்படுத்தும்பொழுது தலைமையும் முதன்மையும் கருதி மாயோனை முற்படக் கூறுகிறது தொல்காப்பியம். வடமொழி வேதம் பரம்பொருளை "மாயீ" என்ற சொல்லால் குறிப்பிடுகிறது.

"*அஸ்மாந் மாயீ ஸ்ருஜதே விச்வம்*" (மாயோன் இந்த மாயையாகிற பிரகிருதியிலிருந்து உலகத்தைப் படைக்கிறான்) என்றும் "*மாயாம்து ப்ரக்ருதிம் வித்யாத் மாயிநம் து மஹேச்வரம்*" (மாயையைப் பிரகிருதி எனப்படுவதாக அறிய வேண்டும். அப்பிரகிருதியை உடையவனாகையாலே மாயோன் எனப்படுகிறான் ஸர்வேசுவரன் என்று அறிய வேண்டும்) என்றும் சுவேதாசுவதரஉபநிடத வாக்கியங்கள் தெரிவிக்கின்றன.

இவற்றால், மூலப்பிரகிருதியை நியமிப்பவன் ஆகையாலே வேத வாக்கியங்களால் "மாயீ" என்று அழைக்கப்பட்டவனே தமிழ்ச்சான்றோர்களால் "மாயோன்" என்று முழங்கப்பட்டான் என்பது அறியப்படுகிறது. மேலும் "மாயா" என்ற சொல்லுக்கு ஞானமயமான ஜீவாத்மாக்கள் என்ற பொருளையும் வடமொழி நிகண்டுகள் கூறுவதால், ஜீவாத்மாக்கள் அனைத்தையும் சரீரமாகக் கொண்ட பரம்பொருளே "மாயோன்" என்று தமிழர்களால் அழைக்கப்பட்டதாகவும் கொள்ளலாம். மற்றும் "மாயம்" என்ற சொல் ஆச்சரியத்தைக் குறிப்பதால், ஆச்சரியமான பண்புகளையும் செயல்களையுமுடைய பரம்பொருளான திருமாலை "மாயோன்" என்று அழைத்ததாகவும் கொள்ளலாம்.

"மாயோன்" என்பது மாயன் என்றும் மாயவன் என்றும் இலக்கியங்களில் வழங்கும்.

*மாஅயோயே மாஅயோயே!*
*மறுபிறப்பறுக்கும் மாசில் சேவடி*
*மணிதிகழ் உருவின் மாஅயோயே!* (பரிபா.3)

என்று முன்னிலைப்படுத்தி மொழிந்தார் கடுவன் இளவெயினனார்.

*மாயனை மன்னும் வடமதுரை மைந்தனை* (திருப். 5)

என்று ஆண்டாளும்

*மாயோனை மணத்தூணே பற்றிநின்று*
*என்று கொலோ வாயார வாழ்த்தும் நாளே* (பெரு.தி. 1-2)

என்று குலசேகராழ்வாரும்

*மாயவனை மதுசூதனனை மாதவனை மறையோர்கள் ஏத்தும்*
*ஆயர்கள் ஏற்றினை . . . . . . . . .* (பெ.தி.மொ. 4-10-10)

என்று பெரியாழ்வாரும் இச்சொற்களை வழங்கியுள்ளனர்.

இனி, மாயோன் என்பதைத் தூய தமிழ்ச் சொல்லாகவும் கருதலாம். "மா" என்ற சொல்லுக்குக் கருமை நிறம் என்ற பொருள் உண்டு. அச்சொல்லிலிருந்து "மாயோன்" என்ற சொல் உருவாகிக் கரிய திருமேனியுடைய திருமாலைக் காட்டுவதாகக் கொள்ளலாம்.

**சேயோன் :**

சிவபெருமானுடைய சேயாகவே புராணங்களும் திருமுறைகளும் முருகக் கடவுளைத் தெரிவிக்கின்றன. ஆகையால் தொல்காப்பியமும் அவ்வாறே கருத்துக் கொண்டு "சேயோன்" என்று பெயர் வைத்து முருகக் கடவுளை அழைக்கிறது. மேலும் முருகன் செந்நிறமுடையோன். ஆதலால் அதனைக் காட்டும் வகையில் "சேயோன்" என்று தொல்காப்பியம் குறிப்பிடுவதாகவும் கொள்ளலாம். முருகக் கடவுளின் திருமேனி நிறத்தினை வருணிக்கும் நக்கீரரும்

*உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு*
*பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு*
*ஓவற இமைக்கும் சேண்விளங்கு அவிரொளி* (திருமுரு. 1-3)

என்று செந்நிறமுடையோன் என்பதாகக் காட்டுகிறார்.

**வேந்தனும் வருணனும் :**

தேவர்களுக்குத் தலைவனாக விளங்குவதால் இந்திரன் "வேந்தன்" என்று அழைக்கப்பெற்றான். இந்திரனை விண்ணவர் கோமான் (சிலப்.10 - 99) என்று இளங்கோவடிகளும் குறிப்பிட்டிருக்கிறார். "வருணன்" வேதத்தில் குறிப்பிடப்படும் மழைக் கடவுளாவான். அஷ்ட திக்பாலர்களில் மேற்குத் திசைக்கு அதிதேவதையாகவும் வருணன் புகழப்படுகிறான். இவனே கடல்களுக்கும் அதிதேவதையாவான். இவனுக்கு "பர்ஜந்யன்" என்ற பெயரும் வேத மந்திரங்களில் காணப்படுகிறது.

"*நிகாமேநிகாமே ந : பர்ஜந்யோ வர்ஷது* "(யஜுர்.கா. 7-5-44)

(நாம் விரும்பியபோதெல்லாம் மழைக்கு அதிதேவதையான பர்ஜந்யன் மழைபொழியட்டும்) என்று வருதல் காண்க. வேந்தனை மருதநில மக்களும் வருணனைக் கடலைச் சார்ந்த நெய்தல் நில மக்களும் வழிபட்டு வந்தனர்.

**முறைவைப்பு :**

மாயோனை முதற்கண் எடுத்த தொல்காப்பியம் அடுத்து இந்திரனை வென்ற முருகனையும் அவனையடுத்து இந்திரனையும் இந்திரனையடுத்து இந்திரனுக்கு அடங்கிய வருணனையும் முறைப்படுத்தி அமைக்கிறது.

**கொற்றவை :**

நானிலக் கடவுளர் வரிசையில் இடம் பெறாது போயினும் கொற்றவையாகிய காளியை மறவர் வழிபடும் தெய்வமாகத் தொல்காப்பியம் வருணிக்கிறது.

*மறங்கடைக் கூட்டிய குடிநிலை சிறந்த*
*கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே* (தொல். புறத்.3)

என்று கூறுகிறது. கொற்றவை தெய்வத்தைக் "காடுகிழாள்" என்று சங்கநூல்கள் குறிப்பிடுகின்றன. சுடுகாட்டில் வணங்கப்படும் நிலைபற்றி அவ்வாறு பெயர் வழங்கியது. காளியாகிய கொற்றவை தெய்வத்தைப் பாலைநிலக் கடவுளாகப் பிற்கால நூல்கள் கொண்டன.

**பொதுநிலை :**

தெய்வங்களை நில வகையால் வகுத்துக் கூறிய தொல்காப்பியம் நிலப்பாகுபாடின்றிப் பொதுவகையிலும் முழுமுதற்பொருளை "கடவுள்"

என்றும் "முனைவன்" என்றும் "முதல்வன்" என்றும் சிறப்புறக் கூறுகிறது. இவற்றுள், கடவுள் என்பது கடந்து நிற்றல் என்ற பொருளைத் தரும். இஃது செய்யுள் என்பது போலத் தொழிற்பெயராகும். மனம், மொழி இவற்றைக் கடந்து நிற்றலால் "கடவுள்" என்பது நன்கு பொருந்துகிறது. "*யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸாஸஹ*" (எதினின்றும் வாக்குகள் மனத்தோடுகூட அடையமுடியாது திரும்புகின்றனவோ அது பிரம்மம்) (தைத். உப.) என்ற வேதவாக்கியம் கடவுள் என்ற சொல்லின் பொருளை விளக்குகிறது. மனத்தினால் நினைக்கவும் வாக்கினால் வருணிக்கவும் இயலாத பெருமை படைத்த பரம்பொருளைக் கடவுள் என்ற சொல் சுட்டிக் காட்டுகிறது. மேலும் "இயவுள்" என்ற சொல் எல்லாப் பொருள்களையும் உள்ளிருந்து இயக்குபவன் என்ற பொருளைத் தருகிறது. இச்சொல்லும் தொழிலாகுபெயராகும். ஆன்மாவினுள் உறைந்து கடவுவதாலும் இயக்குவதாலும் கடவுள், இயவுள் என்பவற்றை ஒரு பொருட் சொற்களாகவும் ஏற்கலாம்.

*கொடிநிலை கந்தழி வள்ளி என்ற*
*வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்*
*கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே* (தொல் புறத் 27)

என்ற நூற்பாவில் கடவுள் என்ற சொல்லைத் தொல்காப்பியம் ஆள்கின்றது. மேலும்

*காமப் பகுதி கடவுளும் வரையார்*
*ஏனோர் மருங்கினும் என்மனார் புலவர்*
*குழவி மருங்கினும் கிழவதாகும்.* (தொல். பொரு. 83)

என்ற நூற்பாவிலும் "கடவுள்" என்ற சொல் கையாளப்படுவது காண்க. இனி, முனைவன் என்ற சொல்லை

*வினையின் நீங்கி விளங்கிய அறிவின்*
*முனைவன் கண்டது முதல் நூலாகும்.* (தொல். மர. 96)

என்ற நூற்பாவில் எடுத்தாள்கிறது தொல்காப்பியம். இந்நூற்பாவில் இறைவன் இயல்பாகவே இருவினைப் பாசங்களிலிருந்து விலகி விளங்கிய அறிவுடையோன் என்றும் அவனே ஊழிமுதல்வன் என்றும் அறிவுறுத்தப்படுகிறது. மேலும் முனைவனால் காணப்பட்டது முதல் நூலான வேதம் என்பதும் தெளிவுறுத்தப்படுகிறது. முதல்நூல் குற்றங்கள் நீங்கியவை என்பதைத் தொல்காப்பியம்

*சிதைவில என்ப முதல்வன் கண்ணே* (தொல். மர. 108)

என்ற நூற்பாவால் பிறிதோரிடத்தில் விளக்குகிறது. இந்நூற்பாவில் இறைவனை .முதல்வன். என்பதால் முனைவனும் முதல்வனும் ஒரு பொருட் சொற்கள் என்று அறியப்படுகிறது.

**கண்ணனும் பலராமனும் :**

தொல்காப்பியம் இயற்றப்பட்ட காலத்தில் தமிழகத்தில் கண்ணபிரானும் பலராமனும் நன்கு வழிபடப் பெற்றுவந்தனர்.

*"காமப்பகுதி கடவுளும் வரையார்*
*ஏனோர் மருங்கினும் என்மனார் புலவர்"*
*"குழவி மருங்கினும் கிழவதாகும்"* (தொல். பொரு. 83-4)

என்ற நூற்பாக்களை ஆராய்ந்தால், தெய்வக் குழவியாகிய கண்ணனிடம் ஆயர் சிறுமியர் கொண்ட காதல் வெள்ளத்தை உட்கொண்டு கூறியதாகவே அவை புலப்படுவதாக ஆராய்ச்சிப் பேரறிஞராக விளங்கிய மு. இராகவையங்கார் கருதுகிறார் (ஆராய்ச்சித் தொகுதி, ப.53)

பனைக்கு முன்வரும் சொற்கள் புணரும் முறையினைக் கூறுமிடத்து

*கொடி முன் வரினே ஐ அவண் நிற்ப*
*கடிநிலை முன் வல்லெழுத்து மிகுதி* (தொல். எழுத். 285)

என்று வரும் நூற்பாவை நுட்பமாக ஆராய்ந்தால், பனைக் கொடியை உயர்த்திக் கொண்ட பலராமனுடைய வழிபாடு பண்டைக் காலத்தில் பெருவழக்காக நிலவியிருந்தது நன்கு புலனாகிறது.

**கொடிநிலை, கந்தழி, வள்ளி :**

இறைவழிபாட்டின் சிறப்பு அமிசமாகக் கடவுள் வாழ்த்து இடம் பெற்றது. கடவுள் வாழ்த்துடன் தொடர்புடையதாகக் கொடிநிலை, கந்தழி, வள்ளி என்ற மூன்று செய்திகளைத் தொல்காப்பியத்தின் வாயிலாக அறிகிறோம். இம்மூன்று செய்திகளையும் விளக்குவதில் அறிஞர்கள் கருத்து வேறுபடுகின்றனர்.

கொடிநிலை என்பது ஞாயிறு, கந்தழி என்பது தீ, வள்ளி என்பது திங்கள் என்று பொருளுரைத்து, அவை மூன்றும் முத்தீ வழிபாட்டினைக் குறிப்பதாக மறைமலை அடிகளார் விளக்குகிறார். (மாணிக்கவாசகர் வரலாறும் காலமும், ப. 652 - 56, 696 - 99)

கொடிநிலை என்பது கீழ்த்திசையில் நிலைபெறும் மேகத்தையும் கந்தழி என்பது பற்றுதல்களை அழித்த நீத்தார் பெருமையையும் வள்ளி என்பது வண்மையின்வழி நிகழும் அறத்தையும் குறிக்கும் என்று மு. இராகவையங்கார் விளக்குகிறார். (தொல். பொருளதிகார ஆராய்ச்சி, ப. 141-143) திருக்குறளில் கடவுள் வாழ்த்தையடுத்து வான்சிறப்பு, நீத்தார் பெருமை, அறன் வலியுறுத்தல் என்ற அதிகாரங்கள் கொடிநிலை, கந்தழி, வள்ளி ஆகியவற்றோடு பொருந்தியிருப்பதை அவர் சுட்டிக்காட்டுகிறார்.

தொல்காப்பிய உரையாசிரியரான நச்சினார்க்கினியர்

| | | |
|---|---|---|
| கொடிநிலை | - | சூரியன் |
| கந்தழி | - | பற்றுக்கோடு அழிந்து அருவாகித்தானே தத்துவம் கடந்த பொருள் |
| வள்ளி | - | சந்திரன் |

என்று விளக்கம் தருகிறார்.

தொல்காப்பியத்திற்கு முதற்கண் உரையெழுதிய இளம்பூரணரும் புறப்பொருள் வெண்பாமாலை இயற்றிய ஐயன் ஆரிதனாரும்

| | | |
|---|---|---|
| கொடிநிலை | - | அரிஅயன்அரன் என்ற மூவரின் கொடிகளில் ஒன்றினோடு உவமித்து அரசன் கொடியைப் புகழ்தல் |
| கந்தழி | - | திருமால் வாணாசுரனின் சோநகரத்து அரணை அழித்த வெற்றியைச் சிறப்பித்தல் |
| வள்ளி | - | முருகன் பொருட்டுப் பெண்டிர் வெறியாடுவது |

என்று விளக்கம் தருகின்றனர்.

இவ்விளக்கங்கள் ஒருபுறமிருக்க, கொடிநிலை, கந்தழி, வள்ளி ஆகிய மூன்றும் திணைநிலைக் கடவுளரை ஒரு கோயிற்கண் நிறுத்தி வழிபாடுகள் இயற்றுங்கால் கடவுள் வாழ்த்தை அடுத்து நிகழும் விழாப் பகுதிகளாகக் கொள்ளலாம் என்பதும் பொருந்துகிறது. விழாக்களில் கொடி உயர்த்திக் கடவுட்படிமங்களை உலாவரச் செய்து இறுதியில் நிகழ்த்தப்பெறும் அறச்செயல்களாக அம்மூன்று செய்திகளையும் கருதலாம். மேலும் நுணுகியும் விரிவாகவும் ஆராயத்தகும் செய்திகளாக அவற்றைக் கொள்ளலாம்.

**உருவ வழிபாடு :**

மாயோன், சேயோன் என்ற தெய்வங்களுக்கு நிறங்கள் பற்றிப் பெயர் கூறப்படுவதால், அத்தெய்வங்கட்குத் திருவுருங்கள் அமைத்து வழிபாடுகளைச் செய்திருக்க வேண்டும். அத்திருவுருவங்களைக் கற்களிலிருந்து சிற்பநூல்களின் நெறிப்படி உருவாக்கியிருக்க வேண்டும். நடுகற்கள் பற்றிய நூற்பாக்களை ஆராயின் இவ்வுண்மை புலனாகும்.

போர்க்களத்தில் வீரமரணம் அடைந்த மறவனுக்குக் கல்நட்டு வழிபாடு செய்யும் மரபு தொல்காப்பியத்தில் காட்டப்படுகிறது.

*காட்சி கால்கோள் நீர்ப்படைநடுகல்*
*சீர்த்தகு மரபில் பெரும்படை வாழ்த்தல் என்று*
*இருமூன்று மரபின் கல்லொடு புணர* (தொல். புறத். 63)

என்ற நூற்பா நடுகல் மரபு பற்றிவரும் செய்திகளைத் தருகிறது.

இங்கு, காட்சி என்பது உருவம் பொறித்தற்கேற்ற கல்லைத் தேர்ந்தெடுத்தல், கால்கோள் என்பது அக்கல்லை நடுவதற்கான தொடக்க விழாவை மேற்கொள்ளுதல். நீர்ப்படை என்பது அக்கல்லை நீரில் முழுக்காட்டித் தூய்மைப்படுத்தல், நடுகல் என்பது அக்கல்லை நடுதலாகும். சீர்த்தகு மரபின் பெரும்படை என்பது படைவீரர்கள் அக்கல்லுக்கு மரியாதை செய்தல், வாழ்த்தல் என்பது எல்லோரும் கூடி அந்தக் கல்லில் இறந்த வீரனுடைய ஆவி குடிகொண்டிருப்பதாக எண்ணி வாழ்த்தி வணங்குதல் என்பதாகும்.

இவ்வாறு "கற்கோள்நிலை" ஆறு வகைப்படும். இம்முறையை ஒட்டியே பத்தினிக்குக் கல் நடுதல் வழக்கமும் ஏற்பட்டிருக்க வேண்டும். சிலப்பதிகாரத்தில் வரும் காட்சிக் காதை, கால்கோட்காதை, நீர்ப்படைக் காதை, நடுகற்காதை, வாழ்த்துக்காதை ஆகிய வஞ்சிக்காண்டக் காதைகள் பத்தினிக் கடவுளான கண்ணகிக்கு நடுகல் எடுப்பித்த வரலாற்றைத் தெளிவாகக் கூறுகின்றன. கண்ணகி ஆரஞருற்ற வீரபத்தினியாதலால், போர் வீரனுக்கு ஏற்பட்ட முறைகளின்படியே அவளுக்கும் நடுகல் எடுப்பிக்கப்பட்டது.

பண்டைத் தமிழர்கள் உயிர் துறந்த வீரர்கட்குக் கல்நாட்டி வணங்கினர். வீரக்கல்நடும் வழக்கம் தொல்காப்பியத்திற்கு முன்பே நிலவியிருந்தது. நடுகற்களுக்கு மலர்மாலை அணிவித்து மயிற்பீலிகளால் அணிசெய்து வழிபட்டதைச் சங்க நூல்கள் அறிவிக்கின்றன (புறம் 232, 264) நடுகற்களின் அமைப்புகளின் வளர்ச்சியில் சிற்பக்கலை மற்றும் கோயில் கட்டடக்கலை பிற்காலத்தில் உருவாகின.

**வழிபாடுகள் :**

தொல்காப்பியம் வேதக்கடவுளரைக் குறிப்பிடுவதோடு அக்கடவுளர் வழிபடப் பெற்ற முறையினையும் சுட்டிக் காட்டுகிறது. வைதிக தெய்வங்களுக்குப் பிரதிமை அமைத்துக் கோயிலில் வழிபட்ட செய்தியும் தெரிகிறது.

*மேவிய சிறப்பின் ஏனோர் படிமைய*
*முல்லை முதலாச் சொல்லிய முறையால்*
*பிழைத்தது பிழையா தாகல் வேண்டியும்*
*இழைத்த ஒண்பொருள் முடியவும் பிரிவே* (தொல். அகத். 28)

என்ற நூற்பாவில் தலைவன் பிரிவு பற்றிய அரிய செய்தியொன்று உறைந்திருக்கிறது. இதனால், தெய்வப் படிமைகளுக்கு இயற்றப்பட்ட பூசையும் விழாவும் அழிவுபடாமல் காப்பதற்கும், தலைவன் பிரிந்து செல்வான் என்று அறியப்படுகிறது. இங்கு, படிமை என்ற சொல் பிரதிமா என்ற வடமொழிச் சொல்லின் சிதைவு என்று இளம்பூரணர் கருதுவர். ப்ரதிமா → பிரதிமை → படிமை என்று வரும். படிமையாவது தெய்வத்தின் உருவச்சிலையாகும்.

இத்தகைய படிமைகள் விளங்கும் கோயில்களில் வழிபாடுகள் நடக்கும் பொழுது வடமொழி வேதமும் தமிழியல் துதிகளும் ஓதப்பட்டன.

*புரியறுநரம்பும் இயலும் புணர்ந்து*
*சுருதியும் பூவும் சுடரும் கூடி*
*எரியுரு ககிலொடு ஆரமும் கமழும்*
*செருவேல் தானைச் செல்வ* (பரி. 18-51)

என்று வரும் பரிபாடற்பகுதியில், இயலும் சுருதியும் என்பதற்குப் பரிமேலழகர் புலவர் பாடிய தமிழ்ப்பாட்டுக்களும் வேதஒலியும் என்று பொருள் கூறியிருக்கிறார்.

**நேர்த்திக் கடன் :**

தெய்வ வழிபாட்டின் ஒரு நிலையில், தொல்காப்பியம் தோன்றிய காலத்திலேயே நேர்த்திக் கடன் நிலவியிருந்தது, தான் நினைத்த காரியம் நிறைவேறினால் இன்னது தருவேன் என்று தெய்வத்தை வேண்டிக் கொள்ளுதல் ஒரு வழக்கமாயிருந்தது. இதனைத் தொல்காப்பியர் தெய்வக்கடம் (தொல். கற். 9) என்று குறிப்பிடுகிறார். இக்காலத்தில் இதனையே பிரார்த்தனை என்று சொல்கிறோம்.

**பல்வகை முடிவுகள் :**

தெய்வங்களைப் பற்றிய பல்வகை முடிவுகள் தொல்காப்பியர் காலத்தில் பரவியிருந்தன. வானுலகில் வாழும் தெய்வங்கள் சுவை

மிகுந்த அமிழ்தத்தை உணவாகக் கொண்டனர் என்று கருதப்பட்டது.

*ஏனது சுவைப்பினும் நீகை தொட்டது*
*வானோர் அமிழ்தம் புரையுமால் எமக்கென*
*அடிசிலும் பூவும் தொடுத்தற் கண்ணும்* (தொல். கற். 5)

என்று வரும் நூற்பாவின் பகுதியைக் காண்க.

இறைவழிபாட்டில் மந்திரங்களும் இடம் பெற்றன. மந்திரங்கள் வேதங்களிற் காணப்படும் வாக்கியங்களாகும்.

*நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த*
*மறைமொழி தானே மந்திரம் என்ப* (தொல். செய். 171)

என்ற நூற்பா மந்திரங்களின் தன்மைகளை எடுத்தியம்புகிறது. நிறைமொழி மாந்தர் என்பவர் ரிஷிகள் ஆவர். ரிஷிகள் (இருடியர்) இறைவனுடைய ஆணைகளின் வடிவமான மந்திர மொழிகளைக் கண்டு வெளிப்படுத்தியவராவர். ஆதலால் வேதத்தை "அந்தணர் அருமறை" என்று இறையனார் களவியல் சிறப்பிக்கிறது. (களவி. 3) முருகக் கடவுளின் ஒரு முகம் அந்தணரின் மந்திர மொழிகளை உற்றுக் கேட்பதாக நக்கீரர் திருமுருகாற்றுப்படையிலும் கூறுவர்.(முருகா.95, 96)

**புராணக் கடவுளர் :**

தொல்காப்பியர் புராணக் கடவுளரில் "கூற்றம்" (தொல் புறத் 79) என்று எமனைக் குறிப்பிடுகிறார். தேவர்களைப் பொதுவாக வானோர் என்றும் அவருடைய உணவினை "அமிழ்தம்" (தொல். கள. 146) என்றும் மொழிகுவர். மேலும் அவர்களை "அமரர்" (தொல். பொரு. 79) என்றும் இமையோர் (தொல். பொரு. 52) என்றும் பெயர் குறிப்பிடுவர்.

"ஏமுறுகடவுள்" (தொல். பொரு. 144) என்று அச்சம் நீங்க வேண்டிக் கடவுளை வழிபட்ட செய்தியும் உள்ளது. "தெய்வம் அஞ்சல்" (தொல். மெய்ப். 24) என்று அஞ்சியதும் காட்டப்பட்டுள்ளது. மற்றும் அச்சுறுத்தும் பேய் (தொல். புறத் 79) பற்றியும் தொல்காப்பியம் குறிப்பிட்டிருக்கிறது.

# இயல் 2

# சங்க நூல்களில் தெய்வ வழிபாடுகள்

**குறிஞ்சி முருகன் :**

முருக வழிபாடு பண்டைத் தமிழ் நூல்களில் சிறப்பாகக் கூறப்படுகிறது. நக்கீரர் இயற்றிய திருமுருகாற்றுப்படை முருக வழிபாட்டின் பல்வேறு வகைப்பட்ட முறைகளையும் எடுத்தோதுகிறது. முருகனின் அழகிய திருவுருவம் மனம் கவரும்விதமாய் வருணிக்கப்படுகிறது. கடலில் முளைக்கும் கதிரவனைப் போன்று செந்நிறமுடையவன், காந்தள் மலரை அடையாளப் பூவாகக் கொண்டவன், செங்கடம்பு மாலையை மார்பில் அணிந்தவன். வேலும் எஃகும் அங்குசமும் ஆயுதங்களாகக் கையிலேந்தியவன்; சூர் முதல் தடிந்தவன் ; சூர் அரமகளிரால் போற்றப்படுபவன். பரங்குன்றிலும் ஆவிநன்குடியிலும் திருச்சீரலைவாயிலிலும் திருவேரகத்திலும் கோயில் கொண்டு விளங்குபவன் ; குன்றுகள் தோறும் ஆடி வருபவன் ; சோலைகள் தோறும் நிற்பவன்.

இரு மூன்று திருமுகங்களையும் ஆறிரு தடந்தோள்களையும் உடையவன் ; தெய்வயானையின் தலைவனாகவும் வள்ளியின் கொழுநனாகவும் அமர்ந்து அருள் செய்பவன் ; மயிலூர்தியும் சேவற்கொடியும் உடையவன் ; களிற்றையும் ஆட்டுக் கடாவையும் ஊர்ந்து வருபவன்.

இரு மூன்று திருமுகங்களில், ஒன்று பல் கதிர் விரித்து இருள் அகற்றுகிறது ; ஒன்று ஆர்வலர்களுக்கு வரம் அளிக்கிறது; ஒன்று அந்தணர் இயற்றும் வேள்விக்கண் மந்திரங்களை ஓர்கிறது ; ஒன்று திங்கள் போல் திசைகளை விளக்குகிறது; ஒன்று போர்க்கள வேள்வியை விரும்புகிறது ; ஒன்று வள்ளியோடு பொருந்தி மகிழ்கிறது.

ஆறிருதடந்தோள்களில் ஒருகை விண்வழிச் செல்லும் தேவர்களுக்கு அப்யம அளிக்கிறது. மற்றொரு கை மருங்கிலே பொருந்துகிறது. ஒரு கை அங்குசத்தைச் செலுத்துகிறது. மற்றொரு கை தொடையைப் பொருந்துகிறது. ஒரு கை கேடயத்தைத் தாங்க, மற்றொரு கை வேலைப் பிடிக்கிறது. ஒரு கை மார்போடு பொருந்தித் தத்துவங்களை உணர்த்துகிறது. மற்றொரு கை மாலையோடு சேர்ந்து

தாழ்கின்றது. ஒரு கை களவேள்விக்குச் சுழல, மற்றொரு கை வீரமணியை ஒலிக்கிறது. ஒரு கை மழையைப் பொழிவிக்க மற்றொரு கை தெய்வமகளிர்க்கு மணமாலையைச் சூட்டுகிறது.

**முருகக்கடவுளை வழிபட்ட இடங்கள்:**

ஊர்கள், வேலன் வெறியாடும் களன்கள், காடுகள், பூங்காக்கள், ஆற்றிடைக் குறைகள், ஆற்றின் கரைகள், குளத்தின் கரைகள், நாற்சந்திகள், முச்சந்திகள், கடம்ப மரத்தடிகள், மன்றங்கள் அம்பலங்கள், கந்துடை நிலைகள், மலைமேற் கோயில்கள் ஆகிய இடங்களில் பல்வேறு மக்கள் வழிபட்டனர். குறிஞ்சி நிலத்திற்கு உரியவனான முருகன் எல்லாத் திணை நிலங்களிலும் வழிபடப்பட்டான். குறிஞ்சி நில மக்களான மலைவாழ் குறவர்களும் நானிலங்களுக்கும் உரியோரான நான்மறையாளர்களும் முருகக் கடவுளைத் தாம்தாம் அறிந்த முறைகளிலே வழிபட்டனர்.

ஊர் விழாக்களில் முருகனுக்கு எதிரில் கோழிக் கொடியினை நிறுத்தி, தினை அரிசியில் மலரைக் கலந்து தூவி ஆட்டுக்கிடாயை அறுத்துப் பலி கொடுத்து வழிபட்டனர்.

மலை மேலிருந்த கோயில்களில் குறமகளிர் முருகக் கடவுளை வழிபட்டனர். அவர்கள் முதலில் கோழிக் கொடியை அலங்கரித்தனர். கொடிமரத்திலும் பீடத்திலும் வெண்சிறுகடுகை அரைத்து நெய்யோடு சேர்த்து அப்பினர். முருகனுடைய ப்பெயர்களை மெல்ல உச்சரித்தனர். நிலத்தில் வீழ்ந்து வணங்கினர். முருகனுடைய திருவடிகளில் கொழுவிய மலர்களைச் சிதறினர். மாறுபட்ட நிறங்களில் இரண்டு ஆடைகளை உள்ளும் புறமுமாக அணிந்தனர். சிவந்த நூலைக் கைகளில் காப்பாகக் கட்டிக் கொண்டனர். வெண்மையான நெற்பொறிகளை முருகன் திருமுன்னர்த் தூவினர். ஆட்டுக்கிடாயை வெட்டி அதன் குருதியை அரிசியில் சேர்த்துப் பிசைந்து சிறு உருண்டைகளாகத் திரட்டிப் பிரம்புக் கூடைகளில் முருகக் கடவுளுக்குப் பலியிடுவதற்காகச் சேமித்து முன் வைத்தனர். பசுமஞ்சளோடு நறுமணப் பொருள்களை அரைத்து முருகனுக்குப் பூசினர். செவ்வலரிப் பூக்களால் தொடுக்கப்பட்ட பெரிய மாலையை இரு பக்கத்திலும் இணையாகத் தொங்குமாறு சார்த்தினர். முருகன் கோயில் கொண்ட மலையை வாழ்த்திப் பாடினர். அப்போது நறுமணம் மிக்க தூபங்களைக் காட்டினர். அவ்வாறு தூவும்போது குறிஞ்சிப் பண்ணில் பாட்டுக்களை இசைத்தனர். முருகன் உவக்கும் பல்வேறு வாத்தியங்களையும் இசைத்தனர். சிவந்த நிறத்தையுடைய மலர்களைத் தூவி வழிபட்டனர். அப்போது குருதியால் அளைந்த செந்தினையைப் பரப்பி முருகனுக்குப் படைத்தனர். தெய்வம் இல்லை என்று மாறுபட்டுக் கூறினவர்களும் அஞ்சும்படியாக ஆங்கே குறமகளிர்

முருகனை ஆற்றுப்படுத்தினர். முருகனும் அவர்களிடத்தே ஆவேசி தெய்வத்தன்மையைக் காட்டினான்.

இனி, வெறியாடு களங்களிலும் நால்திசைகளிலும் எ ஒலிக்கும்படி முருகனைப் புகழ்ந்து பாடினர். அப்போது கொம்பு பலவற்றை ஒரே சமயத்தில் ஊதினர். பெரிய மணிகளை அடித்து ஓ எழுப்பினர். முருகனுடைய பட்டத்து யானையான பிணிமுகத்ை வாயாரப் புகழ்ந்தனர். தாங்கள் வேண்டு வனவற்றைக் கூறி வழிபட்ட

**முருகனின் படை விடுகள்:**

முருகவழிபாடு மிகவும் தொன்மை வாய்ந்தது. முருகனுக்கு கடம்ப மரத்தையும் சேவலையும் வேற்கருவியையும் பண்டைத் தமி வணங்கி வழிபட்டனர். கி.மு. நாலாயிரத்துக்கும் முற்பட்டதா ஆதிச்சநல்லூர் நாகரிகத்தில் இரும்பு வேல்களும் பித்தளை சேவல்களும் அகழ்வாராய்ச்சியில் கிடைத்துள்ளவை இதனை வலியுறுத்துகிறது. (History of India, K.A.N. Sast P.55) முருகனுக்குத் தனியான கோட்டங்கள் அமைத்து வணங்கியது சங்க நூல்களால் அறியப்படுகிறது. "அணங்குடை முருகன் கோட்ட (புறம் 299) என்று முருகனுக்கு எடுத்திருந்த ஆலய குறிப்பிடப்பட்டிருந்தது. இதுபோக முருகனுடைய ஆயுதமான வேலுக்கு கோட்டம் எடுத்து வழிபட்டதும் நிலவியிருந்தது. புகார் நகரத்தில் இவ்வா "வேற்கோட்டம்" இருந்ததைச் சிலப்பதிகாரம் கூறுகிறது. (சிலப். 9 :

முருகனுக்குரிய கோயில்கள் நிலவிய தலங்கள் சி பண்டைக்காலத்தில் புகழ் பெற்று விளங்கின. அவற்று திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவிநன்குடி, திருவேரக என்பன மிக்க புகழ்பெற்று நக்கீரரால் திருமுருகாற்றுப்படையி சிறப்பிக்கப் பெற்றவையாகும். தனித்தலங்களான இந்த நான்கினையு தவிர முருகக் கடவுள் குன்றுகள் தோறும் ஆடிவருவதாகவும் பழங்க முதிர்கின்ற சோலைகள் தோறும் உரியோனாகி நிற்பதாகவும் நக்கீர குறிப்பிடுகிறார். இந்த ஆறு இடங்களிலே மட்டுமன்றிக் காடு, துருத் மற்றும் காக்களிலும் அவன் உறைபவன் என்றும் அவர் புலப்படுத்துகிறா

ஆற்றுப்படுத்தல் என்ற தொழிற்பெயர் ஆற்றுப்படை என் ஆகி நூலுக்குப் பெயராயிற்று. முருகக் கடவுளிடத்து வீடு பெறுவதற்கு பக்குவமான ஒரு புலவனை ஆற்றுப்படுத்தும் மேன்மையுடைய நூ திருமுருகாற்றுப்படை ஆகும். முருகன் எழுந்தருளியிருக்கும் பல்வேறு தலங்களையும் இயற்கையிடங்களையும் சுட்டிக்காட்டி முருகனை ஏத்து முறைகளையும் நக்கீரர் குறிப்பிட்டிருக்கிறார். முருகனுடைய திருவருளை வேண்டுவோர் இன்றும் இந்நூலை நியமத்துடன் ஓதி வருகின்றனர்.

ஆற்றுப்படை என்பது ஆறு + படை என்று தவறாகப் பிரிக்கப்பட்டு முருகனுடைய ஆறு படைவீடுகளை வருணிக்கும் நூலாகக் கருதும் மரபு பிற்காலத்தில் தோன்றிவிட்டது. அருணகிரியாரும் "அறுபதிகளில் அமர்வோனே", "அறுதிருப்பதிதனில்" என்று வழங்குகிறார். குமரகுருபரரும் "ஆறுதிருப்பதிகண்டு" என்றே பாடியிருக்கிறார். ஆறுபடைவீடு என்ற பெயர் எக்காலத்தில் தோன்றியது என்று அறியக்கூடவில்லை. ஆயினும் பெரும்பான்மையாக மக்களிடையே வழங்கத் தொடங்கிற்று. இவ்வாறு ப.அருணாசலம் கருதுகிறார் (முருகன் வழிபாடு, வேலும் மயிலும், தமிழ்ஒளி, இதழ் 11, ப. 3) ஆறுபடை வீடுகள் என்ற எண்ணிக்கை முறையைத் தவறான முடிவு என்று ஆராய்ச்சியாளர்களான மா. இராசமாணிக்கனாரும் (பத்துப்பாட்டு ஆராய்ச்சி) மொ. அ.துரை அரங்கசாமியும் (அன்புநெறியே தமிழர் நெறி) மற்றும் உரைவேந்தர் அவ்வை சு.துரைசாமிப்பிள்ளை போன்ற அறிஞர்களும் குறிப்பிட்டிருக்கின்றனர்.

வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் திருச்செந்தூரே முதற்படை வீடு என்று கொள்கிறார். முருகப்பெருமான் திருச்செந்தூரில் முதலில் வந்து தங்கி வீரபாகுவை சூரனிடம் தூதனுப்பினார். போரில் வென்றார். அதன் காரணமாகத் திருப்பரங்கிரியில் தெய்வயானையோடு திருமணம் நடந்தது. நக்கீரர் குகையில் அடைபட்டுத் துதித்த போது முருகன் வேலாயுதத்தால் மலைக்குகையையும் கற்கிமுகி என்ற பேயையும் அழித்தார். அதனால் நக்கீரர் தமக்கு அருள் செய்த இடமான திருப்பரங்குன்றத்தை முதலில் கூறினார். ஆயினும் முருகன் முதலாவதாகத் தங்கிய இடம் திருச்செந்தூரே என்பர். (நாகப்ப. நாச்சியப்பன், வேற்கோட்டம் ப.53) படைவீடு என்ற பெயர் திருச்செந்தூருக்கே பொருந்தும் என்பர். க. வெள்ளைவாரணனார். (மேற்படி நூல் ப.54)

திருமுருகாற்றுப்படை குறிப்பிடும் திருவேரகம் இக்காலத்தில் சுவாமிமலை என்ற கட்டுமலைத் தலமாகக் கொள்ளப்பட்டிருக்கிறது. பண்டைய உரையாசிரியரான நச்சினார்க்கினியர் திருவேரகம் என்பது மலைநாட்டின்கண் உள்ள ஓர் திருப்பதியாகவே கொண்டிருந்தார். திருவேரகத்தில் முருகக் கடவுளை பிரம்மசாரிகளான பிராம்மணர்கள் ஈரம்புலராத ஆடையை அஃது தாமாகவே உலரும்படி அணிந்து கொண்டு கைகளை உச்சிமேல் குவித்துக் கொண்டே "நம : குமாராய" என்ற ஆறு எழுத்து மந்திரத்தை உச்சரித்து நறுமணமிக்க மலர்களைத் தூவி அருச்சித்து வழிபாடு செய்வதாக நக்கீரர் குறிப்பிடுகிறார். இன்றும் மலைநாட்டுத் தலங்களில் இவ்வாறே ஈரம் புலராத ஆடையணிந்து நம்பூதிரி அல்லது போற்றிமார்கள் கருவறைவிட்டுப் பெயராது வழிபாடுகள் செய்து வருவதைக் காணலாம். தமிழ் லெக்சிகனில் ஏரகம் என்பதற்கு

தென் கன்னடத்திலுள்ள உடுப்பியை எடுத்துக்காட்டியிருக்கிறது. இன்றும் உடுப்பியில் புகழ்பெற்ற சுப்பிரமணிய சுவாமி ஆலயம் ஒன்று விளங்கி வருகிறது. பரணீதரன் தம்முடைய புனிதப்பயணம் (பாகம் - 2) என்ற நூலில் இத்தலத்தை நேரிற் சென்று கண்டு விரிவாக எழுதியிருக்கிறார். நச்சினார்க்கினியர் காலத்திற்குப் பிறகு கி.பி. 15ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவரான அருணகிரியார் காலத்திலிருந்து சுவாமிமலையே திருவேரகமாகக் கொள்ளப்பட்டிருக்கலாம். "ஏரக வெற்பெனும் அற்புதமிக்க சுவாமி மலைப்பதி" என்று அவர் கூறியிருக்கிறார். சுவாமி மலையில் பிரணவப் பொருளை முருகன் சிவபெருமானுக்கு ஓதியருளினார் என்பர். அதனாலேதான் "சுவாமிமலை" என்ற பெயர் ஏற்பட்டது. இத்திருப்பதியைத் திருச்செந்தூர் முருகன் பிள்ளைத்தமிழில் "அரியமறை புகலும் ஏரகமும்" என்று குறிப்பிட்டிருக்கிறது. திருவேரகம் திருத்தலத்தைப் பற்றி நன்கு ஆய்வுசெய்த மா. இராசமாணிக்கனாரும் தாமெழுதிய "பத்துப்பாட்டு ஆராய்ச்சி" என்ற நூலில் மேற்குறித்த கருத்துக்களையே வலியுறுத்துகிறார். (ப.225 - 27).

சிலப்பதிகாரத்திலிருந்து முருகன் எழுந்தருளியிருந்த வேறுசில பண்டைப்பதிகளையும் நாம் அறிந்து கொள்ளமுடிகிறது. குன்றக் குரவையுள்வரும்

*சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்*
*ஏரகமும் நீங்கா இறைவன்கை வேலன்றே* (சிலப். 24 - 8)

என்ற அடிகளில் திருச்செந்தூர், திருச்செங்கோடு, வெண்குன்றம், திருவேரகம் என்ற நான்கு தலங்கள் குறிப்பிடப்படுகின்றன. வெண்குன்றமே சுவாமிமலை என்று அரும்பதவுரையாசிரியர் கருதுகிறார். திருவேரகத்தைப் பற்றி நச்சினார்க்கினியரின் கருத்தினை முன்னர்க் கண்டோம்.

இவ்வாறு முருகப்பெருமான் கோயில் கொண்டு எழுந்தருளிய தலங்கள் பலவும் சங்க காலத்தைச் சேர்ந்தவை என்று அறியப்படுகின்றன. ஆயினும் அவற்றுள் ஆறு தலங்களைச் சிறப்பாகக் கொண்டு வழிபடுவதற்குத் திருமுருகாற்றுப்படையைப் பிற்காலத்தில் பிரமாணமாகக் கொண்டார்கள். தேவசேனாதிபதியாகிய முருகன் நிற்கும் இடங்கள் யாவுமே படைவீடுகள் என்று சொல்லத்தகும். அவற்றுள் ஆற்றுப்படை வீடுகள் என்பவை திருமுருகாற்றுப்படையில் நக்கீரரால் பாடப்பட்ட தலங்களாகும். அவற்றுள் திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம் என்பன தனித்தலங்களாகும். குன்று தோறாடல், பழமுதிர்சோலை என்பன பொதுவாகக் குன்றுகளையும் சோலைகளையும் குறிப்பனவாகும். "பழமுதிர்சோலை மலைகிழவோனே"

என்பதைக் கொண்டு அவ்வாறு பெயர் அமைந்த தலமொன்று தனியாக இருக்க வேண்டும் என்று நினைக்க இடமுண்டு. பரிபாடலிலும் சிலப்பதிகாரத்திலும் திருமால் குன்றமாகக் குறிப்பிடப்பெற்றும் ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பெற்றும் விளங்குகின்ற திருமாலிருஞ் சோலையே முருகனுடைய பழமுதிர்சோலை என்று அருணகிரிநாதர் காலத்திலிருந்து ஒரு கருத்து உருவாகியது. அழகர்மலைக் கல்வெட்டுக்கள் ஒன்றிலும் முருகன் கோயில் இருந்ததைக் குறிக்கவில்லை. ஆராய்ச்சிப் பேரறிஞர் டாக்டர் மா. இராசமாணிக்கனாரின் கருத்தே நடுநிலையாளர்களால் ஏற்றுக் கொள்ளத்தக்கதாக அமைகிறது. அவருடைய கருத்தாவது :-

"பழமுதிர்சோலை மலை" என ஒரு மலை முருகனுக்கு உரியது என்பதற்கோ, அம்மலை அழகர் மலையே என்பதற்கோ, அங்கு முருகன் கோயில் இருந்தது என்பதற்கோ சங்க நூல்களிலும் இடைக்காலக் கல்வெட்டுக்களிலும் சான்று இல்லை.

தஞ்சைத் தமிழ்ப்பல்கலைக்கழக வெளியீடான வாழ்வியற்களஞ்சியம் - தொகுதி (2) (பக். 110, 111) என்ற பகுதியில், ஆறுபடை வீடுகள் என்ற கருத்தும் வரலாற்று அடிப்படையில் ஆனதன்று. மக்களின் நம்பிக்கையிற் பிறந்ததாகும் என்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது.

"தமிழ்நாட்டில் முருகன் திருப்பதிகள் சங்க காலத்திலும் நிறைய இருந்தன. ஆனால் ஆறுபடை வீடு என்பது மக்களிடையே பிறந்த நம்பிக்கைதான். வரலாற்று உண்மையன்று" என்று முனைவர் தொ.பரமசிவன் தம்முடைய அழகர்கோயில் ஆய்வேட்டின் இறுதியில் (ப. 261) முடிவு செய்துள்ளார்.

**முருகக் கடவுள் பிறப்பு :**

முருகக் கடவுளின் பிறப்பை வால்மீகி ராமாயணம், வியாசபாரதம் மற்றும் பலபுராணங்கள் கூறிச் செல்கின்றன.

முருகனுடைய பிறப்புச் செய்திகளை வடமொழிப் புராணங்களிலிருந்து தழுவிச் சங்க நூல்கள் விரிவாக எடுத்துக் கூறுகின்றன. பரிபாடலில் 5ஆவது பாடலில் முருகன் பிறப்பு பின்வருமாறு வருணிக்கப்பட்டிருக்கிறது :-

*ஆதி அந்தணன் அறிந்து பரி கொளுவ,*
*வேத மா பூண் வையத்தேர் ஊர்ந்து,*
*நாகம் நாணா, மலை வில்லாக,*

*முவகை ஆறெயில் ஓர் அழல் அம்பின் முளிய,*
*மாதிரம் அழல, எய்து அமரர் வேள்விப்*
*பாகம் உண்ட பைங்கண் பார்ப்பான்*
*உமையொடு புணர்ந்த காம வதுவையுள்*
*அமையாப் புணர்ச்சி அமைய, நெற்றி*
*இமையா நாட்டத்து ஒரு வரம் கொண்டு,*
*விலங்கு என, விண்ணோர் வேள்வி முதல்வன்*
*விரிகதிர் மணிப் பூண் அவற்குத் தான் ஈத்தது*
*அரிது என மாற்றான், வாய்மையன் ஆதலின்*
*எரிகனன்று ஆனாக் குடாரி கொண்டு அவன் உருவு*
*திரித்திட்டோன், இவ்வுலகு ஏழும் மருள*
*கருப்பெற்றுக் கொண்டோர், கழிந்த சேய் யாக்கை*
*நொசிப்பின், ஏமுறுமுனிவர், நனி உயர்ந்து*
*வசித்ததைக் கண்டம் ஆக மாதவர்,*
*மனைவியர் நிறைவயின், வசிதடி சமைப்பின்*
*சாலார், தானே தரிக்க என அவர் அவி*
*உடன்பெய்தோரே, அழல் வேட்டும் அவ் அவித்*
*தடவு நிமிர் முத்தீப் பேணிய மன் எச்சில்*
*வடவயின், விளங்கு ஆல், உறை ஏழு மகளிருள்*
*கடவுள் ஒரு மீன் சாலினி ஒழிய,*
*அறுவர் மற்றையோரும் அந்நிலை அயின்றனர்,*
*மறுவறு கற்பின் மாதவர் மனைவியர்*
*நிறைவயின் வழாஅது நிற்சூலினரே*
*நிவந்து ஓங்கு இமயத்து நீலப் பைஞ்சுனைப்*
*பயந்தோர் என்ப, பதுமத்துப் பாயல்*
*பெரும் பெயர் முருக! நின் பயந்த ஞான்றே*
*அரிதமர் சிறப்பின் அமரர் செல்வன்*
*ஏரியுமிழ் வச்சிரம் கொண்டு இகந்துவந்து, எறிந்தென*
*அறுவேறு துணியும் அறுவர் ஆகி*
*ஒருவனை வாழி, ஓங்கு விறல் சேஎய்*

**இப்பகுதியின் விளக்கமாவது**

முதலில் பிறந்த மறையோனாகிய பிரமன் திரிபுரஸம்ஹார காலத்தில் சிவபிரானுக்கு நன்றாகத் தேரோட்டினான். வேதங்களாகிய குதிரைகள் பூட்டப்பெற்ற உலகமாகிய தேரில் ஏறிச் சென்றான்

சிவபெருமான். அப்போது ஆதிசேஷன் நாணாகவும் இமயமலை வில்லாகவும் ஆயிற்று.

முப்புரங்களும் ஒப்பற்ற அக்கினி உருவத்திலான ஓர் அம்பாலே எரியும் படியும் திசைகள் யாவும் வேகும்படியும் செய்தான் சிவபிரான். முப்புரங்களையும் எரித்ததற்குக் கைம்மாறாக வேள்வியில் அவிர்ப்பாகத்தை வரமாகப் பெற்றுக் கொண்டான்.

அத்தகைய சிவபிரான் பார்வதியோடு புணர்ந்து காமக்கலவியில் ஈடுபட்டான். இந்திரன் சிவபிரானிடம் இப்புணர்ச்சியில் தோன்றிய கருவைச் சிதைக்க வேண்டும் என்று ஒரு வரம் பெற்றுக் கொண்டான். உலகங்கள் யாவும் அஞ்சும்படி மழுவாயுதத்தைக் கொண்டு அக்கருவைச் சிவபிரானே துண்டு துண்டாக்கினான்.

பார்வதியின் வயிற்றிலிருந்து கழிந்ததும் பல துண்டுகளாக வெட்டப்பட்டதுமாகிய அக்கருவை அத்ரி, பிருகு, குத்ஸர், வசிஷ்டர், கௌதமர் காச்யபர், ஆங்கிரஸர் என்ற ஸப்தரிஷிகளும் பெற்றுக் கொண்டனர். அவர்கள் இக்கரு தேவசேனாதிபதியாகும் என்று சமாதியில் நன்கு உணர்ந்ததால் அவ்விதம் பெற்றுக் கொண்டனர்.

அக்கருவின் துண்டுகளை அப்படியே தம் மனைவியர் உட்கொண்டு தம் வயிற்றில் வைத்துக் குழந்தையாக வளர்த்தால், அவர்கள் கற்பு நிலையில் சிறந்து விளங்கமாட்டார்கள் என்று கருதி அம்முனிவர்கள் யாகத்தீயை வளர்த்து இத்தீதானே இக்கருவை தரிக்கக்கடவது என்று அத்தீயில் இக்கருவையும் ஹவிஸ்ஸுடன் ஹோமம் செய்தனர்.

ஆஹவனீயம், கார்ஹபத்யம், தக்ஷிணாக்னி என்னும் முத்தீக்களால் உண்ணப்பட்டு யாகசேஷமான எச்சிலை ஸப்தரிஷிகளின் பத்தினிகளில் வசிஷ்ட பத்தினியான அருந்ததி நீங்கலாக கார்த்திகைப் பெண்கள் என்ற பெயர் பெற்ற மற்றைய அறுவரும் உண்டனர். அக்கினியால் பரிசுத்தமான கருவை உண்டதால் அவர்களின் கற்புக்குக் குறைவும் ஏற்படவில்லை. அவ்வறுவரும் தம் வயிற்றில் தாங்கிப் பின்னர் இமயமலையிலுள்ள சரவணப்பொய்கையில் தாமரை மலரில் பெற்றனர். அதனை அறிந்த இந்திரன் வஜ்ராயுதத்தால் தான் கொடுத்த வரத்தையும் மீறி வந்து தாக்கினான். அதனால் வெவ்வேறான ஆறு பிரிவுகளாயிருந்த குழந்தை ஆறுமுகங்களுடைய ஒரு வடிவத்தை அடைந்து "ஒங்கு விறல் சேஎய்" என்று பெயர் பெற்று விளங்கியது. அப்போதே இந்திரன் படைக்கலன்களுடன் முருகனை எதிர்த்து வந்தான். முருகன் வெறுங்கையால் போர் செய்து இந்திரனைத் தோல்வியுறச் செய்தான். இதைக் கண்ட தேவர்கள் பல்வகையான படைக்கலன்களை முருகனுக்கு அளித்தனர்.

அக்கினிதேவன் தன் உடலின் ஒரு பகுதியைப் பிரித்துச் சிறந்த சேவற்கோழியாக்கிக் கொடியாகுமாறு கொடுத்தான். இந்திரன் தன் உடலின் ஒரு பகுதியைப் பிரித்துச் சிறந்த மயிலை வாகனமாகக் கொடுத்தான். யமன் தன் உடலின் ஒரு பகுதியைப் பிரித்து வெள்ளாட்டின் குட்டியாகக் கொடுத்தான். இவ்வாறு தேவர்கள் கொடுத்தவற்றை முருகன் படைக் கருவிகளாக ஏந்திக் கொண்டான்.

அவையாவன, வெள்ளாட்டுக்குட்டி, மயில், சேவல், வில், தோமரம், வாள், வேல், கோடரி, கணிச்சி, மழு, பாசம், மணி என்பனவாகும். இவற்றைத்தான் பன்னிரு திருக்கரங்களிலும் ஏந்திக் கொண்டான்.

திருமுருகாற்றுப்படை வருணனையில், முருகன் அங்குசமும் கேடயமும் வேலும் வீரமணியும் ஆகியவற்றை தரித்திருந்தான் என்றும் மற்ற திருக்கரங்களால் வேறு வேறு செயல்களைப் புரிந்தான் என்றும் வருகிறது. இவற்றால் அபயஹஸ்தம், கடிஹஸ்தம், ஊருஹஸ்தம் , சின்முத்திரைகள் காட்டப்படுகின்றன.

**முல்லைத் திருமால் :**

முல்லை நிலக்கடவுளான திருமாலைத் தமிழ்ப் பெருமக்கள் பெருந்தெய்வமாகக் கொண்டு எல்லா நிலங்களிலும் கோயில் எழுப்பி வழிபட்டனர். கலித்தொகையில் முல்லைக் கலி நான்காம் பாடலின் கடைசியில்,

*தொல் கதிர்த் திகிரியான் பரவுதும் ஒல்கா*
*உரும் உறழ் முரசின் தென்னவற்கு*
*ஒரு மொழி கொள்கும்இவ்வுலகு உடன்எனவே*

பாண்டியனின் சிறப்பின் பொருட்டுத்திருமாலைத் துதிப்போம் என்று கூறும்போது திருமால் தொன்மையான தெய்வம் என்றும் திகிரியைத் தரித்தவன் என்றும் பாடப்படுகிறது.

மேலும் ஐந்தாம் பாடலின் இறுதியில்

*பாடுஇமிழ் பரப்பு அகத்து அரவணை அசைஇய*
*ஆடுகொள் நேமியான் பரவுதும் .*

என்று வெற்றியைத் தன்னிடத்தில் கொண்ட நேமியோனாகிய திருமாலைப்பரவுதும் என்று பாடப்பட்டது. இதிலிருந்து, நேமிப்படை ஏந்திய பரம்பொருள் திருமாலே என்று கொண்டனர் தமிழர். திருமாலைத் தெய்வமால் (முல்லைக்கலி, 7) என்றும் தேயாவிழுப்புகழ்த் தெய்வம் (முல்லைக்கலி, 3) என்றும் போற்றினர்.

மாயோனாகிய கண்ணபிரான் கேசி என்ற அசுரனைக்
ாறது. (முல்லைக்கலி, 3) கம்ச சபையில் சாணூர முஷ்டிகர்களான
ர்களை அட்டது (குறிஞ்சிக்கலி 16), பகைவர் ஏவிய யானையின்
டியில் சக்கரப்படையை எறிந்து கொன்றது (நெய்தற்கலி, 17).
ளைப் பாம்பின் பிடியிலிருந்து விடுவித்தது (முல்லைக்கலி, 4)
ப சரித்திரங்களைக் கலித்தொகை குறிப்பிடுகிறது. இவற்றில்
னயைச் சக்கரப்படை கொண்டு கொன்ற வரலாறு எந்தப்
ாத்தில் வருகிறது என்று அறியப்படவில்லை. சந்திரனைப்
னின்றும் விடுவித்த வரலாற்றை ஆழ்வார்களும் பாடியுள்ளனர்.
கோள் விடுத்தாய்" (நான். திருவ 12) என்று
ழிசையாழ்வாராலும் "பனிசேர் விசும்பில் பான்மதிக்கோள்
தானிடம்" (பெரிய திரு. 1-8-3) என்று திருமங்கையாழ்வாராலும்
பட்டுள்ளது. இச்செய்தியும் எந்தப் புராணத்தில் வருகிறது என்பது
ப்படவில்லை. தக்ஷமுனிவரால் சந்திரனுக்குச் சாபம் ஏற்பட்டு
ராகம் நேர்ந்ததாகவும் பிறகு சந்திரன் திருவரங்கம் சென்று சந்திர
ணியில் நீராடிப் புன்னை மரத்தடியில் வீற்றிருந்து தவமியற்றித்
ரங்கப் பெருமானுடைய திருவருளால் நோய் நீங்கியதாகவும்
கமஹாத்மியத்தால் அறிகிறோம். "துண்டவெண் பிறையின் துயர்
வன்"என்று திருப்பாணாழ்வாரும் இவ்வரலாற்றைக் குறிப்பிடுகிறார்.
பட்டர் தாமியற்றிய ஸ்ரீரங்கராஜ ஸ்தவத்திலும் (சு. 40)

*பத்ரயீம் ஐந்தவ புஷ்கரிண்யாம்*
*ஜ்ஜ்ய நிர்வாபயிதாஸ்மி யஸ்யா :*
*ய்யாஸதோ அபாம் அகமர்ஷணீநாம்*
*த்ரஸ் ஸுதாதீதிதி தாம் அவாப*

ன் எந்தப் புஷ்கரிணியினுடைய பாபத்தைப் போக்குமதான
த்தினுடைய ஸ்பர்சத்தினால் மீண்டும் அமிர்த கிரணங்களை
ந்தானோ அத்தகைய சந்திரபுஷ்கரிணியில் குடைந்து நீராடி
யத்தைத் தணித்துக் கொள்வேன்) என்று இதே செய்தியைக்
றார். சந்திரனுடைய க்ஷயரோகமாகிய துயர் தீர்க்கப்பட்டதாகக்
ாடால் இவ்வரலாறுகள் பொருந்துகின்றன. ஆனால் மதிகோள்
தாய் என்பது போன்று வருமிடங்களில் மதியை அரவினுடைய
லிருந்து விடுவித்ததாகக் கொண்டால், அதை விவரிக்கும்
ச் செய்திகள் சங்ககாலத்தில் வழங்கியிருந்து பின்னர் அவை
தனவாகவே கருத வேண்டியுள்ளது. கலித்தொகையில் தெளிவாக,

*ஸ்மதி சேர்ந்த அரவினைக் கோள்விடுக்கும்*
*நிற வண்ணனும் போன்ம்* (முல்லைக்கலி - 4)

என்ற பகுதியில் சந்திரனைப் பாம்பிலிருந்து நீலநிற வண்ணனான திருமால் விடுவித்த விருத்தாந்தம் பேசப்பட்டுள்ளது. திருமாலைப் பற்றிய அரிய புராணச் செய்திகளைச் சங்ககாலத் தமிழர் நன்கு அறிந்து வைத்திருந்தனர் என்பதைக் காட்டுவதற்காகவே இவ்வளவும் விரித்துரைக்க நேரிட்டது.

திருவுடை மன்னரெல்லாம் திருமாலின் அமிசம் பெற்றவர்கள் என்று கருதப்பட்டது.

*வல்லார் ஆயினும் வல்லுநர் ஆயினும்*
*புகழ்தல் உற்றார்க்கு மாயோன் அன்ன*
*உரைசால் சிறப்பின் புகழ்சால் மாற!* (புறம் 57)

என்று வருவது காண்க.

திருமால் ஆலிலையில் பள்ளிகொண்டவன் என்ற புகழ்பெற்றான்.

*ஆல்அமர் கடவுள் அன்ன நின்செல்வம்* (புறம் 198)

என்ற அடியில் இவ்வாறு வருவது காணலாம்.

புறநானூறு 174வது பாடலில் மேலும் ஓர் அரிய புராணச் செய்தி திருமாலைப் பற்றியதாக இடம் பெறுகிறது. தேவாசுர யுத்தத்தில் இரவில் பலமுடைய அசுரர் பகலிலும் பலம் பெற்றுத் தாங்கள் வெற்றி வெறுவதற்காகச் சூரியனை ஒளித்துவிட, அதனால் உலகம் அடைந்த துன்பத்தைப் போக்கத் திருமால் சூரியனை மீட்டுவந்து அளித்த கதை பேசப்பட்டிருக்கிறது. அப்பகுதி வருமாறு.

*அணங்குடை அவுணர் கணம் கொண்டு ஒளித்தென*
*சேண் விளங்கு சிறப்பின் ஞாயிறு காணாது*
*இருள் கண் கெடுத்த பருவரல் தீரக் கடுந்திறல்*
*அஞ்சன உருவன் தந்து நிறுத்தாங்கு* (புறம் 174)

இக்கதை எங்குள்ளது என்பதைப் புராணங்களில் ஆராய வேண்டும்.

புறநானூறு 378வது பாடலில் இராமாயணத்திலிருந்து அபூர்வமான செய்தியொன்று விளக்கப்பட்டிருக்கிறது.

சோழனைப் பாடிய கவிஞர்க்குச் சோழன் அரசர்க்குரிய பல அணிகலன்களையும் அளிக்க, கவிஞர் அவற்றைத் தம் சுற்றத்தாரிடம் கொடுக்க, அவர்கள் அவ்வணிகலன்களைக் கண்டு திகைத்து, விரலில் அணிவனவற்றைச் செவியிலும், செவியில் அணிவனவற்றை விரலிலும்,

அரையில் அணிவனவற்றைக் கழுத்திலும் கழுத்தில் அணிவனவற்றை அரையிலும் இவ்வாறு தடுமாறி அணிந்தனர் என்னும் இச்செயல், இராவணன் சீதையைத் தூக்கிச் சென்ற போது அவள் கழற்றி எறிந்த அணிகளைச் சுக்கிரீவனைச் சேர்ந்த குரங்குகள் எடுத்து முறையறியாது அணிந்ததை ஒத்திருந்தது. அது காண்பதற்குப் பெருநகையை விளைவித்தது என்று கூறப்படுகிறது. அச்செய்யுள் பின்வருமாறு :-

*இலம்பாடு உழந்த என் இரும்பேர் ஒக்கல்*
*விரற்செறி மரபின செவித் தொடக்குநரும்*
*செவித் தொடர் மரபின விரற் செறிக்குநரும்*
*அரைக்கு அமை மரபின மிடற்று யாக்குநரும்*
*மிடற்றமை மரபின அரைக்கு யாக்குநரும்*
*கடுந்தெறல் இராமன் உடன் புணர்சீதையை*
*வலித்தகை அரக்கன் வௌவிய ஞான்றை*
*நிலம்சேர் மதர்அணி கண்ட குரங்கின்*
*செம்முகப் பெருங்கிளை இழைப்பொலிந்தாஅங்கு*
*அறாஅ அருநகை இனிது பெற்றிகுமே.*

இதிலிருந்து வால்மீகி ராமாயணத்தில் இல்லாத செய்திகளும் சங்க காலத்தில் தமிழ்நாட்டில் வழங்கி வந்தன என்று விளங்குகிறது. இவ்வாறே அணில்கள் அணைகட்ட உதவியது, அனுமனோடு இராமன் சேர்ந்து உண்டது. சீதை மல்லிகை மாலை கொண்டு இராமனைக் கட்டியது போன்ற செய்திகளை ஆழ்வார்கள் குறிப்பிட்டுள்ளனர். இவையாவும் மூலநூலில் இடம் பெறவில்லை. முல்லை நிலமக்கள் திருமாலை வழிபட்டதை

*மண்ணுறு திருமணி புரையும் மேனி*
*விண்ணுயர் புட்கொடி விறல் வெய்யோன்* (புறம் 56)

என்று புறநானூறு குறிப்பிடுகிறது. திருமால் ஆலிலையில் மேவுபவன் (நற். 32.) என்று நற்றிணை காட்டுகிறது. அவனுடைய ஆயர்பாடி விளையாட்டுக்களை அகநானூறு (51) வருணிக்கிறது. அவன் அரவணையில் படுத்திருப்பதையும் மூவடியால் உலகளந்ததையும் பெரும்பாணாற்றுப்படை (371, 29) புகழ்கிறது. இளம் பெண்கள் தாமரை போன்ற முகங்களையுடைய தம் குழந்தைகளுடனும் கணவர் களுடனும்சென்று காக்கும் கடவுளான திருமாலைப் பூவும் புகையும் இட்டுத் தொழுததை மதுரைக் காஞ்சி (462) வருணிக்கிறது.

**பல்வேறு கடவுளர் :**

வேதங்களிலும் இதிகாச புராணங்களிலும் இடம்பெறும் பல்வகைக் கடவுளரும் சங்ககாலத் தமிழ்க் குடியினரால் வழிபடப்பட்டனர்.

"வேறுபல் உருவின் கடவுட் பேணி" என்ற குறிஞ்சிப் பாட்டுப் பகுதியால் இதனை அறிய முடிகிறது. இவர்களிற் சிலரை திருமுருகாற்றுப்படை பெயர்குறித்து வழங்குகிறது. இந்திரன், எமன், வருணன், குபேரன் ஆகியோர் நாற்பெருந்தெய்வம் என்று குறிக்கப்பட்ட திசைக்கடவுளர் (திக் பாலர்கள்) ஆவர். அரிஅயன் அரன் என்ற மூவரையும் "பலர் புகழ் மூவர்" என்பர் நக்கீரர். மேலும் நால்வேறு இயற்கையினரான முப்பத்துமூவர் தேவகணங்களும் வழிபடப்பட்டனர். அவர்கள் அஷ்ட வசுக்கள், ஏகாதச உருத்திரர், துவாதச ஆதித்தியர், அசுவிநீ தேவரிருவர் என்போராவர். இவர்களையே எண்மர் பதினொருவர் ஈராறுவர் ஓரிருவர் என்று தொகைப்படுத்தி வழங்குவர். இவர்களைத் தவிர பதினெண் தேவகணங்கள் வழிபாடு பெற்றனர். அவர்கள் தேவர், அசுரர், தைத்தியர், கருடர், கின்னரர், கிம்புருடர், யக்ஷர், வித்தியாதரர், ராக்ஷஸர், கந்தருவர், சித்தர், சாரணர், பூதர், பைசாசர், நட்சத்திரங்கள், நாகர், ஆகாயவாசிகள், போகபூமியர் என்று புராணங்கள் வாயிலாக அறியலாம். இவர்களில் சிலருடைய பிறப்புகளையும், இயல்புகளையும் உருவங்களையும் பற்றிய செய்திகளை வியாசபாரதத்தில் காணலாம்.

சங்ககாலத்தில் திருமகள், நிலமகள், மலைமகள், கலைமகள் தெய்வயானை, வள்ளி, காளி ஆகிய பெண் கடவுளரும் வழிபாடு பெற்று வந்தனர்.

நெய்தல் நிலத்து வாழ்ந்த பரதவர்கள் சுறாமீனின் கொம்பை நட்டுக் கோயிலமைத்து வருணனை அதில் வருவித்து வழிபட்டனர் என்பதை

*சினைச் சுறவின் கோடுநட்டு*
*மனைச் சேர்த்திய வல்லணங்கு* (பட்டினப் 86. 87)

எனற பட்டினப்பாலை அடிகள் கொண்டு அறியலாம்.

பிரம்மதேவனின் வழிபாடும் ஓரளவு நிலவியிருந்தது. பிரமன் திருமாலின் உந்தித் தாமரையில் பிறந்தான் என்று பெரும்பாணாற்றுப் படை கூறுகிறது.

*நீல்நிற உருவின் நெடியோன் கொப்பூழ்*
*நான்முக ஒருவற் பயந்த* (பெரும் 402)

என்ற அடிகளைக் காண்க. பிரமதேவனை இடித்துக் கூறும் போக்கினையும் நம்மாற் காண முடிகிறது.

*படைத்தோன் மன்ற அப்பண்பிலான்* (புறம் 194)
*பரந்து கெடுக உலகியற்றியான்* (குறள் 1062)

**சிறுதெய்வங்களும் கிராம தேவதைகளும்**

| | | |
|---|---|---|
| காமன் சாமன் | (கலி 94) | (மன்மதனும் அவன் தம்பியும்) |
| மாநிதிக் கிழவன் | (அக. 66) | (குபேரன்) |
| கூற்றுவன் | (புற. 195) | (எமன்) |
| கலைமகள் | (கலி. 36) | (சரசுவதி) |
| கடல்தெய்வம் | (அக 376) | (பர்ஜன்யன்) |
| சூலி | (குறுந். 218) | (பேய்மகளிர்) |
| சூரரமகளிர் | (அக. 162) | (பேய்மகளிர்) |
| வரையரமகளிர் | (ஐங் 191) | (பேய்மகளிர்) |
| மாயவள் | (கலி 35) | (காளி) |
| வண்டற்பாவை | (அக. 269) | (பாவை மகளிர்) |
| கொல்லிப்பாவை | (அக. 62, 209) | (பாவை மகளிர்) |
| உப்பியற்பாவை | (கலி 138) | (பாவை மகளிர்) |
| தாதுசெய்பாவை | (அக. 392) | (பாவை மகளிர்) |
| விண்மீன் | (நற் 291 | (நட்சத்திர தேவதைகள்) |
| வாயு | (கலி 16) | (காற்றுக்கடவுள்) |
| கள்ளிமரத்தடிக்கடவுள் | (புற 260) | (மரத்தடிக் கடவுள்) |
| ஆலமரத்தடிக்கடவுள் | (புற 198) | ” |
| பனை மரத்தடிக் கடவுள் | (நற் 303) | ” |
| உன்னமரத்தடிக் கடவுள் | (அக. 309) | ” |
| வேம்பு மரக்கடிக்கடவுள் | (அக. 309) | ” |
| கூளி | (புற 23) | (காளியின் ஏவல்மகள்) |
| பேய் | (புற 238, 369, 371, 373) | |
| அலகை | (குறள் 850) | |

இவற்றுள் கொல்லிப்பாவை கொல்லிமலையில் உள்ளது என்பதும் காற்றினாலும் மழையினாலும் ஊறுபாடு எதுவும் அடையாது என்பதும் அழகிய பெண் வடிவு கொண்ட பதுமை என்பதும் சங்கநூல்களால் அறியப்படுகிறது. (புற 251, குறுந் : 89, 100) ஒரு காலத்தில் திருமகள் தன்முன் போர்க்கெழுந்த அவுணர் மூர்ச்சையுற்று விழும்படி இக்கொல்லிப்பாவையின் உருக்கொண்டு ஆடினள் என்று சிலப்பதிகாரம் கூறும். திருமங்கையாழ்வார் இக்கொல்லிப்பாவையைத் தம் பெரிய திருமொழிப் பாசுரத்தில் (2-7-1) குறிப்பிட்டிருக்கிறார்.

இவ்வாறு சங்கநூல்களை ஆராய்ந்தால் தமிழ்க்குடியினர் வழிபட்டு வந்த கடவுளர் தொகையை நன்கு அறியமுடிகிறது.

சங்ககாலத்திலும் ஊழையும் கடவுளையும் பொய் என்று கருதியவர்கள் இருந்தனர். அக்காலப் புலவர்களான சான்றோர்கள் அவர்களுடைய கொள்கையை ஏற்கவில்லை. (புறம் 29).

*"உலகத்தார் உண்டென்ப தில்லென்பான் வையத்து*
*அலகையா வைக்கப் படும்"* (குறள் 850)

என்ற குறட்பாவில் திருவள்ளுவர் அவர்களைக் கடிந்து பேசியிருக்கிறார்.

# இயல் 3

## சங்க காலக் கோயில் வகைகளும் அமைப்பும்

சங்க காலத்துத் தமிழகத்தில் மரக்கோயில்கள், களிமண் கோட்டங்கள், செங்கற்கோயில்கள், மாடக்கோயில்கள் ஆகிய பல்வகைக் கோயில்கள் இருந்தன. இவை கோயில், கோட்டம், நகர், பள்ளி, விகாரம் என்ற பெயர்களால் அழைக்கப்பட்டன.

**அமைப்பு :**

நாற்சந்திகளின் நடுவே மேடையமைத்து அதன் நடுவே வளர்ந்த மரத்தையோ நடப்பெற்ற சூலம், வேல் இவற்றையோ பண்டைய மக்கள் வழிபட்டனர். நெய்தல் நிலங்களில் சுறா மீனின் கொம்பை நட்டு வழிபட்டனர். அம்மேடைகள் பொதியில் அல்லது மன்று என்று வழங்கப்பட்டன. மேடைமேல் சுவரும் கூரையும் மரக்கட்டைகளும் பொருந்தியவற்றை மரக்கோயில்கள் என்றனர். செங்கற்களால் சுற்றுச் சுவர்கள் அமைந்தால் அவை செங்கற்கோயில்கள் என்று அழைக்கப்பெற்றன. இவற்றில் பெரும்பாலும் .கருவறை. மட்டுமே இருந்தது. சிலவற்றில் அம்பலம், பீடிகை, குளம், மதில்கள் ஆகியன பொருந்திப் பெரிய அமைப்புடன் அவை திகழ்ந்தன. சங்க காலத்தின் இறுதியில் ஒன்றின்மேல் ஒன்றாகக் கட்டிய .மாடக்கோயில்கள். கட்டப்பெற்றன.

**அழிநிலைக்கோயில் :**

அழிவடைந்து போன கோயில்களைப்பற்றியும் அகநானூற்றில் உருத்திரங்கண்ணனார் பாடல் தெரிவிக்கிறது.

*இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென*
*மணிப்புறாத் துறந்த மரம் சோர் மாடத்து*
*எழுதணி கடவுள்போகலின் புல்லென்று*
*ஒழுகுபலி மறந்த மெழுகாம் புன்திணை* (அகம். மணிமிடை. 167)

என்ற அடிகளால் மேற்குறித்த செய்தி வெளியிடப்படுகிறது. சங்க காலத்துக் கோயில்கள் பெரும்பாலும் விரைவில் அழியக்கூடிய மண், மரம், செங்கல், சுண்ணாம்பு ஆகியவற்றால் கட்டப்பட்டிருந்தன. கோயில்கள் நீண்டகாலம் அழியாதிருக்க வேண்டும் என்ற நோக்குடன்

முதன்முதலில் முதல் மகேந்திரவர்மன் கி.பி. 615ல் பாறைகளைக் குடைந்து குடைவரைக் கோயிலை மண்டகப்பட்டு என்ற இடத்தில் அமைத்தான். கி.பி. 615க்கு முன் கட்டப்பெற்றவை யாவும் விரைவில் அழியத்தக்கனவாகவே இருந்தன.

**பொதியில் :**

பொது + இல் = பொதியில் என்று வழக்குப்பெற்றது. ஊர்ப்பொதுவான அம்பலம் அல்லது மன்று பொது இல்லாகிப் பொதியிலாக வழங்கியது. கந்துடைப் பொதியில் ஒன்றினைப் பட்டினப்பாலை தெரிவிக்கிறது.

*கொண்டி மகளிர் உண்டுறை மூழ்கி*
*அந்தி மாட்டிய நந்தா விளக்கின்*
*மலரணி மெழுக்கம் ஏறிப் பவர் தொழ*
*வம்பலர் சேக்கும் கந்துடைப் பொதியில்*
*பருநிலை நெடுந்தூண் ஒல்கத் தீண்டி*
*பெருநல் யானையொடு பிடிபுணர்ந்துறையும்* (பட்டினப். 246)

கந்துடைப் பொதியில் என்பது காவிரிப் பூம்பட்டினத்திலிருந்த கோயில் ஒன்றாகும். கந்து என்பதற்குத் தெய்வம் உறையும்தறி என்பர் நச்சினார்க்கினியர். ஸ்கந்தம் என்ற வடசொல் கந்து என்றாயிற்று. இஃது தெய்வம் உறைவதற்கு ஆதாரமான இடமாகும். கந்து என்பதை அருட்குறிநிற்கும் சிவலிங்கம் என்றும் கருதுவர். புகார் நகரத்துச் சிவாலயத்தில் கரிகால் வளவன் சிறைப்பிடித்து வந்த பகைவர் நாட்டு மகளிர் பணிபுரிந்தனர். அவர்கள் தடாகத்தில் நீராடி அந்திப்போதில் நந்தா விளக்குகளை ஏற்றினர். இடங்களையெல்லாம் மெழுகி மலர்களால் அணிசெய்தனர்.

**அம்பலங்கள் பீடிகைகள் குண்டங்கள் :**

மதுரைத் திருஆலவாய்க் கோயிலில் வெள்ளி அம்பலமும், சிந்தா தேவிக் கோயிலில் அம்பலப் பீடிகையும், திருப்பரங்குன்றத்தில் எழுதெழில் அம்பலமும் விளக்கமுற்றிருந்தன. புகார் நகரில் நாளங்காடியிலிருந்த பூத சதுக்கத்தில் பீடிகை (பலிபீடம்) ஒன்றிருந்தது. அதில் மறக்குல மகளிர்

*புழுக்கமும் நோலையும் விழுக்குடை மடையும்*
*பூவும் புகையும் பொங்கலும் சொரிந்து*
*துணங்கையர் குரவையர் அணங்கெழுந்தாடி* (இந்திரவிழவு 70)

பலியிட்டு வாழ்த்தினர். புகார் நகரத்திலிருந்த காமவேள் கோட்டத்தில் சோமகுண்டம், சூரியகுண்டம் என்ற திருக்குளங்கள் புகழ்வாய்ந்தன.

அவற்றில் மூழ்கி நீராடினால் பிரிந்தார் கூடிப் போகம்துய்ப்பர் என்று அக்கால மக்கள் நம்பினர்.

**வழிபாட்டு உருவங்கள் :**

காவிரிப்பூம்பட்டினத்து வேற்கோட்டம், வச்சிரக்கோட்டங்களில் தெய்வங்களுக்குரிய ஆயுதங்களை நிறுத்திவழிபட்டனர். ஆயினும் சங்க நூல்களில் வரும் திருமலை, திருவரங்கம், திருவெஃகா முதலிய கோயில் வருணனைகளைப் பார்க்கும்போது, அத்திருக்கோயில்களில் அழகான உருவத் திருமேனிகளை நிறுவி வழிபட்டனர் என்று தெரிந்து கொள்ளமுடிகிறது.

கண்ணகியின் திருமேனியை இமயக் கல்லினின்று வடித்து உருவாக்கியதைச் சிலப்பதிகாரம் வருணிக்கிறது. இவ்வாறு ஆரம்ப காலத்தில் கோயில்களில் மூலமூர்த்திகளே வழிபாட்டில் இருந்தன. கொடியேற்ற விழாக்களும் கொண்டாடப் பெற்றன. உற்சவமூர்த்தியாகத் திருமேனிகளைத் திருவுலாவாக எழுந்தருளச் செய்ததாகத் தெரியவில்லை. செப்புத் திருமேனிகளைப் பற்றிய செய்திகள் பண்டைய தமிழிலக்கியங்களில் இல்லை. பிற்காலத்தில் சோழப் பேரரசர்களின் ஆட்சியில் உலாவரும் திருமேனிகள் வடிக்கப்பட்டு விழாக்கள் விரிவடைந்தன. சங்க காலத்தில் மூலத்திருமேனிகளைப் பூக்களாலும் மாலைகளாலும் அணிகலன்களாலும் பீதாம்பரத்தாலும் அலங்கரித்து வழிபட்டனர். பூசை, பலி, பீடிகை, படிமம், காப்புக் கடைநிறுத்தல், சேடம், கொடிமரம், அம்பலம், கோபுரம், மண்ணுதல் போன்ற பல கோயில் தொடர்பான கலைச் சொற்கள் பண்டைய இலக்கியங்களில் விரவிக்கிடக்கின்றன. கீழே விழுந்து வணங்கி வழிபடுவதை குடந்தம்படுதல் என்றனர். இத்தகைய அரிய சொற்கள் வழக்கில் நிலவின.

**வேள்விச்சடங்குகளும் வழிபாடுகளும் :**

திருக்கோயில் வழிபாடுகளில் பண்டைக் காலந்தொட்டே வேள்விச் சடங்குகளும் இடம் பெற்றிருந்தன. அதற்குக் காரணம் பண்டைய பேரரசர்கள் வேத வேள்விகளை இயற்றி வைதிகநெறிக்குப் புரவலராக விளங்கியதுதான்.

*அறுதொழில் அந்தணர் அறம்புரிந் தெடுத்த*
*தீயொடு விளங்கும் நாடன்* (புறம். 397)

என்று சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைத் தாயங்கண்ணனார் சிறப்பிக்கிறார். அவனுடைய நாட்டில் எங்கும் வேள்விகள் நடைபெற்றதைக் குறிப்பிடுகிறார். கரிகாற் பெருவளத்தான் அரண்கள் அமைத்துக் குற்றமற்ற பெண்டிர் புடைசூழப் பருந்து வடிவத்தில் ஆக்கப்பட்ட இடத்தில் நீண்ட ஸ்தம்பத்தை நட்டு

வேள்வியியற்றி முடித்தான் என்று புறநானூறு (224) கூறுகிறது. சேரன் பெருஞ்சேரல் இரும்பொறை வேள்விவேட்பதற்கான விதிமுறைகளைக் கேட்டு மனைவியோடு வினைதீர்க்கும் விரதமிருந்து வேள்வி செய்தான் என்றும் அதன் விளைவாக அவளது கருவிலிருந்த குழந்தை நல்லறிவு பெற்று அரசதந்திரங்களை அறிந்தது என்றும் பதிற்றுப்பத்து (74) கூறுகிறது.

இத்தகைய வேள்விச் சடங்குகள் அரசர்கள் எழுப்பிய ஆலயங்களில் அன்றாட வழிபாட்டிலும் சிறப்பு வழிபாடுகளிலும் இடம் பெற்றன. வேள்விச்சாலை திருக்கோயில் அமைப்பில் தனியிடம் பெற்றது.

இனி, தமிழகத்துக் கோயில்களின் கட்டட அமைப்பு பற்றிக் காண்போம். மிகப் பழங்காலத்தில் நமது நாட்டுக் கோயில்களின் கட்டடம் மரத்தினாலும் செங்கல், மரம், சுண்ணாம்பு ஆகியவற்றின் கலவையினாலும் பாறைகளைக் குடைந்து குகைக் கோயில்களாகவும் தனித்தனிக் கற்களைக் கொண்டு கற்றளிகளாகவும் அமைக்கப்பட்டுள்ளன. கருங்கற்களை ஒன்றின்மேல் ஒன்றாக அடுக்கிக் கட்டப்படுவது "கற்றளி" என்றும் வெறும் மண்ணாற்கட்டப்பட்ட கோயில் "மண்டளி" என்றும் பெயர் பெறும். இவை பயன்படுத்தப்பட்ட பொருள்களால் இடப்பட்ட பெயர்கள்.

**செங்கற் கட்டடங்கள் :**

சங்க காலத்தில் சுட்ட செங்கற்களையும் மரவிட்டங்களையும் கொண்டு கோயில்கள் எழுப்பப்பெற்றன. சுவரின் மீது சுண்ணாம்பு பூசப்பட்டிருந்தது. இவை அவ்வப்போது செப்பனிடப்பட்டன. கடைச்சங்க காலத்திருந்த கோச்செங்கணான் சிவபெருமானுக்கும் திருமாலுக்குமாக எழுபதுக்கு மேற்பட்ட கோயில்களைக் கட்டினான். இதனைத் திருமங்கையாழ்வார் மற்றும் திருநாவுக்கரசர் பாசுரங்களிருந்து அறிகிறோம்.

**பாறைக்கோயில்கள் :**

கி.பி. 7-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தொண்டை நாட்டையும் சோழநாட்டையும் சேர்த்து அரசாண்ட மகேந்திரவர்ம பல்லவன் கோயிற் கட்டட அமைப்பில் புதிய முறையைத் தோற்றுவித்தான். பெரியதோர் கற்பாறையைத் தேர்ந்தெடுத்து, அதைச் செதுக்கித் தூண்களையும் முன் மண்டபங்களையும் திருவுண்ணாழிகையையும் அமைக்கும் புதிய முறையை ஏற்படுத்தினான். முதன் முதலில் மண்டகப்பட்டு என்ற ஊரில் இவ்வாறு கோயில் எழுப்பினான். பாறையைக் குடைந்தெடுத்துச் செய்யப்பட்ட இக்கோயில்களை "குடைவரைக்கோயில்" என்றும் அழைப்பர். மகேந்திரவர்மன் அமைத்த குகைக்கோயில்கள் பல்லாவரம், திருச்சிராப்பள்ளி, மகேந்திரவாடி, சீயமங்கலம், மேலைச்சேரி, வல்லம், மாமண்டூர், தளவானூர், சித்தன்னவாசல் ஆகிய ஊர்களில் காணப்படுகின்றன. இவனுக்குப் பிறகு நரசிம்மவர்மனும்

பரமேசுவரவர்மனும் மாமல்லபுரம், சாளுவன்குப்பம் ஆகிய இடங்களில் குகைக்கோயில்களையும் பிறகோயில்களையும் பாறைகளில் அமைத்தனர்.

**கற்றளிகள் :**

கி.பி. 7ஆம் நூற்றாண்டின் இறுதியில் அரசாண்ட இராசசிம்மன் காலத்தில் கற்றளிகள் அமைக்கும் முறை ஏற்பட்டது. கற்றளி என்றால் கற்கோயில் என்பது பொருள். கருங்கற்களை ஒன்றின்மேல் ஒன்றாக அடுக்கிக் கட்டப்படும் கோயில் கட்டடங்களுக்குக் கற்றளி என்று பெயர். கற்களின் ஊடே சுண்ணாம்புச் சாந்து சேர்க்காது இவை கட்டப்பெற்றன. மாமல்லபுரத்தின் கடற்கரையோரமாக உள்ள கற்றளியும், காஞ்சிபுரத்திலுள்ள கைலாசநாதர் கோயிலும் பனைமலை என்னும் ஊரிலுள்ள கற்கோயிலும் முதன்முதலில் அமைக்கப்பட்ட கற்றளிகளாகும். பிற்காலச் சோழர்கள் புதிய கற்றளிகளைக் கட்டினார்கள். மேலும் பழைய செங்கற் கட்டடக் கோயில்களை இடித்துவிட்டுக் கற்றளிகளாக மாற்றி அமைத்தார்கள்.

**கோயில் கட்டடங்களில் மூன்று வகை அமைப்புகள்**

**1. நாகரம் :** அடிப்பகுதி முதல் சிகரமாகிய முடிப்பகுதி வரை நான்கு பட்டைகளாக அமைக்கப்படுவது. இவ்வகையினை வடநாட்டுக் கோயில் அமைப்பிற் காணலாம்.

**2. வேசரம் :** தரை, உடல், விமானம் என்ற மூன்றிலும் வட்ட வடிவமாகவோ நீண்ட அரைவட்ட வடிவமாகவோ இவ்வகைக் கோயில்கள் அமைக்கப்பட்டன.

**3. திராவிடம் :** தென்னிந்தியக் கோயிற் கட்டட அமைப்பு இதுவாகும். திராவிடக் கட்டட அமைப்பில் தமிழர், சாளுக்கியர், ஹொய்சளர் முதலிய உட்பிரிவுகள் தோன்றின. இவற்றை மேலும் பல்லவர்காலத்துக் கோயில்கள் பிற்காலச் சோழர் காலத்துக் கோயில்கள் பாண்டியர் காலத்துக் கோயில்கள், விசயநகர அரசர் காலத்துக்கோயில்கள் என்றும் பிரிக்கலாம்.

**கோயில் அமைப்பு வகைகள்**

**1. மாடக்கோயில்கள் :** இவை மாடி போன்ற அமைப்பை உடையன. ஒன்றின்மேல் ஒன்றாக ஒன்பது நிலைகளையுடைய மாடக் கோயில்களைச் சிற்ப நூல்கள் கூறுகின்றன. இக்காலத்து இரண்டு நிலை, மூன்று நிலை மாடக்கோயில்களே உள்ளன. பல்லவர்கள் மாடக்கோயில்களைச் செங்கற்களால் எழுப்பினர். பெரும்பாலும் அவை அழிந்துவிட்டன. திருமங்கையாழ்வார் திருநாங்கூர் மணிமாடக் கோயிலையும் திருநறையூர் மாடக்கோயிலையும் சோழன் கோச்செங்கணான் கட்டியதாகக் குறிப்பிடுகிறார். திருஞானசம்பந்தர் திருவைகலில் சோழன் கோச்செங்கணான் மாடக்கோயில் ஒன்று கட்டியதாகக் குறிப்பிடுகிறார்.

நரசிம்மவர்ம பல்லவன் மாமல்லபுரத்தில் கருங்கல்லினால் இரண்டு நிலை, மூன்று நிலை மாடக்கோயில்களை அமைத்திருக்கிறான். அங்குள்ள அருச்சுனரதம் இரண்டு நிலை மாடக்கோயில், தருமராஜ ரதம் மூன்றுநிலை மாடக்கோயில், சகாதேவ ரதமும் மூன்று நிலை மாடக்கோயிலேயாகும்.

கற்றளியாக அமைக்கப்பட்டுத் தற்பொழுது வழிபாட்டிலுள்ள மாடக் கோயில்கள் மதுரையிலுள்ள கூடலழகர் கோயில், காஞ்சியிலுள்ள பரமேச்சுர விண்ணகரம், உத்தரமேரூரிலுள்ள சுந்தரவரதப் பெருமாள்கோயில், திருக்கோட்டியூரிலுள்ள சௌமியநாராயணப் பெருமாள் கோயில் ஆகியன.

**2. கரக்கோயில்கள் :** வட்டமான விமானத்தையுடைய கோயில் இவ்வகையாகும். இதை விஜயம் என்று சிற்பநூல்கள் விவரிக்கின்றன. திருக்கடம்பூர்க் கோயிலைக் கரக்கோயில் அமைப்பு என்று திருநாவுக்கரசரும் சுந்தரரும் குறிப்பிடுகின்றனர்.

**3. ஞாழற்கோயில்கள் :** குங்கும மரத்தினால் அமைக்கப்பட்ட கோயில் ஞாழற்கோயில் ஆகும் என்பர் சிலர். இது தவறு. ஞாழல் என்பது குங்கும மரத்துக்குப் பெயர். ஆயினும் ஈண்டு மரத்தைக் குறிக்காது. ஞாழல் என்பது கோயில் வகைகளில் ஒன்று. இக்கோயிலின் அமைப்பு பற்றி இப்போது கண்டறிய முடியவில்லை.

**4. கொகுடிக் கோயில்கள் :** ஸ்ரீபோகம், ஸ்ரீவிசாலம் என்பதாகச் சிற்ப நூல்கள் கூறுகின்ற கட்டடங்களில் ஒன்றாகக் கொகுடிக் கோயில் இருக்கக்கூடும். விஜயம் என்ற வட்டமான சிகரம் கர்ணகூடத்துடன் அமையப்பெற்றால் அதற்கு ஸ்ரீபோகம் என்றும் அதுவே நடுவில் பத்ரவரிசையுடன் கூடியிருந்தால் ஸ்ரீவிசாலம் என்றும் பெயர் பெறும். இவ்வாறு காமிகம் என்ற சிவாகமம் கூறுகிறது.

**5. இளங்கோயில்கள் :** இஃது ஓர் வகைக் கட்டடமுடைய கோயிலாகும். இளங்கோயிலை சிலர் பாலாலயம் என்று தவறாகக் கருதுவர். "கடம்பூர் இளங்கோயிலிலும் கயிலாசநாதனையே காணலாமே" என்று அப்பரடிகள் குறிப்பிடுவர். சோழ நாட்டு மீய்ச்சூர்க் கோயில் இளங்கோயில் வகையாகும். சிற்பநூல்கள் குறிப்பிடும் ஸ்ரீகரக்கோயில் என்பது இளங்கோயில் ஆகும். ஸ்ரீகரம் என்னும் விமானம் நான்கு பட்டையான விமானத்தையுடையது. மாமல்லபுரத்திலுள்ள திரௌபதி அம்மன் ரதம் (கொற்றவை கோயில்) ஸ்ரீகரம் என்னும் அமைப்பைவுடையது.

**6. மணிக்கோயில்கள் :** எட்டுப்பட்டை, ஆறுபட்டையான சிகரத்தையுடைய கோயில்கள் மணிக்கோயில்கள் ஆகும். சிற்ப நூல்கள் கூறும் ஸ்கந்தகாந்தம் என்னும் விமானக் கோயிலே மணிக்கோயில் என்று கருதலாம்.

**7. ஆலக்கோயில்கள் :** ஆலக்கோயில் என்பது ஆனைக்கோயில் என்பதன் மருவிய வடிவமாகும்.

சிற்ப நூல்களில் இக்கோயில் கஜபிருஷ்ட விமானக்கோயில் என்றும் ஹஸ்தி பிருஷ்ட விமானக்கோயில் என்றும் குறிப்பிடப்படும். கஜம், ஹஸ்தி என்பன யானையைக் குறிக்கும் சொற்களாகும். யானையின் முதுகுபோல் இக்கோயில்களின் மேற்கூரை அமைந்திருக்கும். திருக்கச்சூர்க் கோயில், திருவொற்றியூர், வடதிருமுல்லைவாயில், திருவேற்காடு, திருக்கழுக்குன்றம், திருவானைக்கா முதலியன ஆலக்கோயில்களாகும். மாமல்லபுரத்துச் சகாதேவ ரதம் என்ற கோயில் மாடக்கோயிலாகவும் ஆலக் கோயிலாகவும் காணப்படுகிறது.

இவ்வகை கோயில்களைக் குறிப்பிடும் திருநாவுக்கரசர் பாடல் (திருஅடைவு, திருத்தாண்டகம் - 5) வருமாறு

*பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும்*
*பெருங்கோயில் எழுபதினோ டெட்டு மற்றும்*
*கரக்கோயில் கடிபொழில்சூழ் ஞாழற்கோயில்*
*கருப்பறியல் பொருப்பனைய கொகுடிக்கோயில்*
*இருக்கோதி மறையவர்கள் வழிபட்டேத்தும்*
*இளங்கோயில் மணிக்கோயில் ஆலக் கோயில்*
*திருக்கோயில் சிவனுறையும் கோயில் சூழ்ந்து*
*தாழ்ந்திறைஞ்சத் தீவினைகள் தீருமன்றே.*

**8. உயரமான கோயில்கள் :** கருவறை மீதுள்ள விமானங்கள் கோபுரம் போல் அமைந்து மிகவுயரமான கோயில்கள் இவ்வகையாகும். கி.பி. 1000ல் இராசராசசோழன் கட்டிய தஞ்சைப் பெருவுடையார்கோயில், கி.பி. 1025ல் கட்டப்பட்ட கங்கை கொண்ட சோழபுரத்துக்கோயில், திரிபுவனத்துக்கம்பேசுவரர் கோயில் ஆகியவை பெருங்கோயில்களாகும்.

**கோயிற் கட்டடப் பொருளால் பிரிவு**

**1. சுத்தம்** - முழுவதும் மரம், செங்கல், கருங்கல் ஆகிய ஒன்றினால் கட்டப்பெறுவது.

**2. மிசிரம்** - இரண்டு பொருள்களின் கலப்பால் கட்டப்பெறுவது.

**3.சங்கீர்ணம்** - இரண்டுக்கும் மேற்பட்ட பொருள்களால் கட்டப்பெறுவது.

# இயல் 4

# சங்க நூல்களில் தெய்வத் திருவுருவங்கள்

தொல்காப்பியத்தில் சிவனைப்பற்றிய செய்திகள் வெளிப்படையாக இல்லை. ஆனால் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்களில் முக்கட்பெருமானைப் பற்றிய செய்திகள் பரவிக்கிடக்கின்றன. பாரதம் பாடிய பெருந்தேவனார் சிவபிரானை வாழ்த்திப் பாடியது தொகை நூல்களின் கடவுள் வாழ்த்தாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது. அகநானூறு மற்றும் புறநானூற்றின் வாழ்த்துக்கள் இவ்வாறுள்ளன. சங்கநூல்களில் முக்கட்செல்வன், கறைமிடற்றண்ணல், நீலமேனி வாலிழை பாகத்தொருவன், ஆலமர் செல்வன் முதலிய பெயர்களைக் காணலாம். இரட்டைக் காப்பியங்களிலும் சிவன் என்ற பெயர் இடம் பெறவில்லை. சங்கமருவிய காலத்துக்குப் பிறகே இப்பெயர் வழக்கினை நூல்களில் காண இயல்கிறது. சங்க நூல்களைக் காணுங்கால் சிவபெருமானுக்கு உருவமைத்து வழிபாடுகளைச் செய்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. அத்திருவுருவங்களை முறையாகக் காண்போம்.

**1. திரிபுராந்தகமூர்த்தி :**

தாரகன், வித்யுந்மாலி, கமலாட்சன் என்ற அசுரர் மூவருடைய கோட்டைகளை எரித்ததால் திரிபுராந்தகர் என்ற பெயர் சிவபெருமானுக்கு ஏற்பட்டது. புறநானூற்றில் மேருமலையினை வில்லாகவும் வாசுகி என்ற பாம்பினை நாணாகவும் கொண்டு ஒரு கணையினால் மூன்று அசுரர்தம் கோட்டைகளையும் எரித்து அமரர்களுக்கு வெற்றிதந்தவன் என்று கூறப்பட்டுள்ளது.

*ஓங்குமலைப் பெருவிற் பாம்பு ஞாண்கொளீஇ*
*ஒருகணை கொண்டு மூவெயில் உடற்றிப்*
*பெருவிறல் அமரர்க்கு வென்றிதந்த*
*கறைமிடற் றண்ணல் காமர் சென்னிப்*
*பிறைநுதல் விளங்கும் ஒருகண்போல* (புறம் 55)

இவ்வரலாறு சங்கநூல்களில் பல இடங்களில் குறிப்பிடப்படுகிறது. வீரத்துக்கு முதலிடம் கொடுத்த தமிழர் மனத்தினை இவ்வரலாறு பிணித்தது. சோழமன்னன் ஒருவன் தூங்கெயில் எறிந்த தொடித்தோட்செம்பியன் என்று திரிபுராந்தகருடைய பெயரையிட்டு அழைக்கப்பெற்றான்.

**2. காலரிமூர்த்தி :**

மார்க்கண்டேயனுடைய உயிரைக் கவரச் சென்ற எமனைச் சிவபெருமான் லிங்கத்திலிருந்து வெளிப்பட்டுக் காலால் உதைத்ததால் காலரிமூர்த்தி என்ற பெயர் ஏற்பட்டது. கலித்தொகை, பசுமையான கண்களையுடைய முக்கண் முதல்வன் துன்பத்தைத் தரவல்ல எருமைக் கடாவின் மீது ஏறிவரும் கூற்றுவனது நெஞ்சு பிளந்து போகும்படி காலால் உதைத்து அவனது குடலைக் கூளிப் பேய்களுக்கு அளிப்பவன் என்று கூறுகிறது.

*படரணி அந்திப் பசுங்கட் கடவுள்*
*இடரிய ஏற்றெருமை நெஞ்சிடந் திட்டுக்*
*குடர்கூளிக்(கு) ஆர்த்துவான்* (கலித் 101)

**3. பிரமசிரச்சேதக மூர்த்தி :**

பிரமனுக்குச் செருக்கு மிகுந்தபோது சிவபெருமான் அவனுடைய ஐந்து தலைகளில் ஒன்றினைத் தன் கை நகங்களால் கிள்ளி எறிந்தார். இவ்வாறு கிள்ளி எறியப்பட்ட பிரமனுடைய தலை ஓட்டினைக் கொண்டு புலித்தோலையணிந்து கொன்றைமாலை புரண்டாடச் சிவபிரான் கபால நடனமாடிய செய்தி கலித்தொகையுள் வருகிறது.

*கொலை உழுவைத் தோலசைஇக் கொன்றைத்தார்*
*சுவற்புரள*
*தலையங்கை கொண்டு நீ காபாலம் ஆடுங்கால்.*
(கலித். கடவுள் வாழ்த்து)

**4. இராவணானுக்கிரக மூர்த்தி :**

சிவபிரானும் உமையம்மையும் கயிலை மலை மீதேறி வீற்றிருந்த போது இராவணன் தன் வலிய கரங்களால் இமய வெற்பினைப் பெயர்க்க முயன்றான். சிவபிரான் தன்னுடைய காற்பெருவிரலால் அழுத்த இராவணன் வலியிழந்து ஈசனை வாழ்த்தி உய்திபெற்றான். இவ்வரலாறும் கலித்தொகையுள் இடம்பெறுகிறது.

*இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்*
*உமையமர்ந் துயர்மலை இருந்தன னாக*
*ஐயிரு தலையின் அரக்கர் கோமான்*
*தொடிப் பொலி தடக்கையிற் கீழ்புகுத் தம்மலை*
*எடுக்கல் செல்லா துழப்பவன் போல* (கலித் 38)

**5. தட்சிணாமூர்த்தி :**

கல்லால மரத்தின் கீழமர்ந்த முனிவர் பெருமக்கள் நால்வருக்கு நல்லறம் உரைத்ததால் சிவபெருமான் தட்சிணாமூர்த்தி எனப்படுகிறார். ஆலமர் செல்வன், ஆல்கெழு கடவுள் என்ற தொடர்கள் சங்க நூல்களில் பரவிக்கிடக்கின்றன.

*ஆலமர் செல்வற் கமர்ந்தனன் கொடுத்த*
*சாவம் தாங்கிய சாந்துபுலர் திணிதோள்* (சிறுபாண் 98)
*ஆல்கெழு கடவுள்* (திருமுரு. 256)

**6. கங்காதரமூர்த்தி :**

கங்கை நதியைச் சடையில் ஏந்திச் சீற்றம் தணித்ததால் கங்காதரன் என்று சிவபெருமான் அழைக்கப்பெற்றார்.

*வரிசடைப் பொறை யூழ்த்து விழுநகர் மலரேய்ப்பத்*
*தணிவுறுத் தாங்கிய தனிநிலைச் சலதாரி*
*மணிமிடற் றண்ணல்* (பரிபாடல் 9 : 5-7)

**7. ஹரிஹரமூர்த்தி :**

சிவனும் திருமாலும் சேர்ந்த தோற்றம் ஹரிஹரமூர்த்தமாகும். அச்சத்தைத் தரும் சிவபெருமானும் வலிமை மிக்க திருமாலும் இணைந்த தோற்றமாகிய அரியரனின் ஒரு பகுதி செந்நிறத்தையும் மறுபகுதி கரிய நிறத்தையும் உடையது என்று அகம் (360) கூறுகிறது.

*வெருவரு கடுந்திறல் இருபெரும் தெய்வத்து*
*உருவுடன் இயைந்த தோற்றம் போல* (அகம் 360)

**8. அர்த்த நாரீசுவரமூர்த்தி :**

சிவபெருமானும் உமாதேவியும் இணைந்து ஒன்றாக வணங்கப்பட்டனர். புறநானூற்றுக் கடவுள் வாழ்த்து.

*பெண்ணுரு ஒருதிற னாகின்று அவ்வுருத்*
*தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்*

என்று இவ்வுருவத்தை வருணிக்கிறது.

**9. நடராஜமூர்த்தி :**

எல்லையில்லாப் பரம்பொருளாம் ஈர்ஞ்சடை அந்தணன் நாட்டிய வடிவாய் உலகை ஆட்டுவிப்பதால் நடராஜன் என்று போற்றப்படுகிறார்.

இறைவன் ஆடிய பல்வேறு நடனங்களில் ஒரு சில சங்க நூல்களில் இடம்பெறுகின்றன். சிவபிரான் பல்வேறு வடிவங்களுடன் ஆடிய கொடுகொட்டி நடனத்தைப் பற்றியும் மற்றும் கபால நடனத்தைப் பற்றியும் கலித்தொகை வருணிக்கிறது :

*படுபறை பலவியம்பப் பல்லுருவம் பெயர்த்து நீ*
*கொடுகொட்டி யாடுங்கால் கோடுயர் அகல்குறிக்*
*கொடிபுரை நுசுப்பினாள்*

**திருமால் திருவுருவங்கள்**

**1. நின்ற திருக்கோலம் :** திருவேங்கட மலைக்கண் திருமாலின் நின்ற திருக்கோலத்தை இளங்கோவடிகள் வருணித்திருப்பதை இன்றும் மூலமூர்த்தியில் காணமுடிகிறது.

*பகையணங் காழியும் பால்வெண் சங்கும்*
*தகைபெறு தாமரைக் கையில் ஏந்தி*
*நலங்கிளர் ஆரம் மார்பிற் பூண்டு*
*பொலம்பூ ஆடையிற் பொலிந்து தோன்றிய*
*செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்*

சங்கு சக்கரங்களைத் திருக்கரங்களில் ஏந்தித் திருமார்பில் திருவாரம் சார்த்தித் திருவரையில் பொன்னாடை உடுத்திய மூலவர் திருமேனியை இளங்கோவடிகள் காட்டுகிறார். திருமாலிருஞ் சோலைமலைக்கண் திருமால் நின்றதிருக்கோலத்தில் அருள்புரிவதையும் இளங்கோவடிகள் அறிவுறுத்துகிறார்.

*மற்றவை நினையாது மலைமிசை நின்றோன்*
*பொற்றாமரைத் தாள் உள்ளம் பொருந்துமின்* (சிலப்.காடு. 133)
என்ற பகுதி காண்க.

**2. வீற்றிருந்த திருக்கோலம் :** திருமாலின் வீற்றிருந்த திருக்கோலத்தைப் பரிபாடலில் வருணிக்கக் காணலாம். தொல்காப்பியச் செய்யுளியலில் பேராசிரியர் மேற்கோளாகக் காட்டிய பரிபாடலில்

*வானார் எழிலி மழைவளம் நந்தத்*
*தேனார் சிமைய மலையின் இழிதந்து*
*நான்மாடக் கூடல் எதிர்கொள்ள ஆனா*
*மருந்தாகும் தீநீர் மலிதுறை மேய*
*இருந்தையூர் அமர்ந்த செல்வ! நின்*
*திருந்தடி தலையுறப் பரவுதும் தொழுதே*

மதுரைக் கூடலழகரின் மூலவர் திருமேனி வருணிக்கப் படுகிறது. இவரைச் சிலப்பதிகாரம் நீடு நீர் வையை நெடுமால் என்று குறிப்பிடும். நெடுமால் என்பதற்கு அரும்பதவுரைகாரர் ஸ்ரீஇருந்தவளமுடையார் என்று விளக்கம் எழுதினார். இதனால் ஆங்குறையும் திருமாலின் இருந்த திருக்கோலம் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

**3. கிடந்த திருக்கோலம் :** திருமாலின் கிடந்த திருக்கோலம் திருவரங்கத்தில் பொலிவுடன் திகழ்வதை இளங்கோவடிகள் மாடலமறையோன் வாக்காகக் குறிப்பிட்டுள்ளார்.

*நீலமேகம் நெடும் பொற் குன்றத்துப்*
*பால் விரித்து அகலாது படிந்ததுபோல*
*ஆயிரம் விரித்தெழு தலையுடை அருந்திறல்*
*பாயற் பள்ளிப் பலர் தொழுதேத்த*
*விரிதிரைக் காவிரி வியன் பெரும் துருத்தித்*
*திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்*

என்று திருமாலின் சயன திருக்கோலத்தை வருணிக்கிறார்.

காஞ்சிமாநகர்க்கண் திருவெஃகாவில் கிடந்த திருக்கோலத்தை பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுகிறது.

*காந்தளஞ் சிலம்பில் களிறுபடிந் தாங்குப்*
*பாம்பணைப் பள்ளி அமர்ந்தோன் ஆங்கண்* (பெரும். 371)

நச்சினார்க்கினியர் ஈண்டுக் குறிப்பிடப்பெறும் திருமால் திருவெஃகாவில் துயில் கொள்ளும் இறைவன் என்று கருதுகிறார்.

சங்க நூல்களில் திருமாலின் வராக, வாமன, திரிவிக்கிரம, பலராம, ராம, கிருஷ்ணாவதாரங்களின் மூர்த்தங்கள் ஆங்காங்கே சொல்லப்பெற்றுள்ளன. முல்லைப் பாட்டில் திருவிக்கிரமமூர்த்தி

*நனந் தலையுலகம் வளைஇ நேமியொடு*
*வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை*
*நீர்செல நிமிர்ந்த மாஅல் போல* ( முல்லை 1 - 3 )

என்று வருணிக்கப்படுகிறார்.

அகநானூற்றில் பரசுராமவுருவம்

*மன்மருங்கறுத்த மழுவாள் நெடியோன்* ( அக - 220 )

என்று குறிப்பிடப்படுகிறது. வராக மூர்த்தியை இரண்டாம் பரிபாடல் விளக்குகிறது.

*கேழல் திகழ்வரக் கோலமொடு பெயரிய*
*ஊழி ஒருவினை உணர்த்தலின் முதுமைக்கு*
*ஊழி யாவரும் உணரா*
*ஆழி முதல்வ நிற்பேணுதும் தொழுது* (பரி. 2)

நரசிங்க மூர்த்தியை நான்காம் பரிபாடல் விவரிக்கிறது.

*செயிர்தீர் செங்கட் செல்வ நிற்புகழ*
*புகைந்த நெஞ்சின் புலர்ந்த சாந்தின்*
*பிருங்கலாதன் பலபல பிணிபட*
*வலந்துழி, மலர்ந்த நோய் கூர்கூம்பிய நடுக்கத்து*
*அலர்ந்த புகழோன் தாதை ஆகலின்*
*இகழ்வோன், இகழா நெஞ்சினனாக, நீ இகழா*
*நன்றா நட்டவன் உறுவரை மார்பின்*
*படிமதம் சாம்ப ஒதுங்கு*
*இன்னல் இன்னரொடு இடிமுரசியம்ப*
*வெடிபடா ஒடிதூண் தடியொடு*
*தடிதடி பலபட வகிர் வாய்த்த உகிரினை*

**திருமால் ஊர்தியாகிய கருடன்**

விஷமுடைய பாம்பின் உடலையும் உயிரையும் உண்ணும் பறவை கருடன். அக்கருடனுடைய வயிற்றில் அரைக்கச்சாகக் கட்டப்பட்டது பாம்பு. அவன் கையில் தோள்வளையும் பாம்பு. அவன் முடிமேல் சூடியிருப்பதும் பாம்பு, ஆபரணங்கள் யாவும் பாம்பு, தலைக்கு மேல் குடை கவித்திருப்பதும் பாம்பு. தலையணியும் சிறகணியும் பாம்பே என்று நாலாம் பரிபாடல் தெரிவிக்கிறது.

*விடமுடை அரவின் உடலுயிர் உருங்கு உவணம்*
*அவன் மடிமேல் வலந்தது பாம்பு*
*பாம்பு தொடி பாம்பு முடிமேலன*
*பாம்பு பூண் பாம்பு தலைமேலது*
*பாம்பு இறை தலையன*
*பாம்பு படிமதம் சாய்த்தோய் பசும் பூணவை*
*கொடிமேலிருந்தவன் தாக்கு இரையது பாம்பு*

இன்றும் திருமால் திருக்கோயில்களில் கருடவாகனம் என்கிற ஊர்தியின் திருவுருவம் இவ்வாறே காணப்படுகிறது. இவ்வாறு திருமாலின் பள்ளியாகிற ஆதிசேடனையும் பரிபாடல் திரட்டில் முதற் பாடல் வருணித்துள்ளது.

பரிபாடல் திரட்டு முதற்பாடலில் ஆதிசேஷனுடைய பலவகைப் பெருமைகளும் கூறப்பட்டுள்ளது.

*திகழ் ஒளிமுந்நீர் கடைந்தஅக்கால், வெற்புத்*
*திகழ்பு எழவாங்கித் தம்சீர்ச்சிரத்து ஏற்றி*
*மகர மறிகடல் வைத்து நிறுத்துப்*
*புகழ்சால் சிறப்பின் இருதிறத்தோர்க்கும்*
*அமுதுகடைய இருவயின் நாண்ஆகி*
*மிகாஅ இருவடம் ஆழியான் வாங்க*
*உகாஅ வலியின் ஒருதோழம் காலம்*
*அறாஅது அணிந்தாரும் தாம் ;*
*மிகாஅ மறலிய மேவலி எல்லாம்*
*புகாஅ எதிர்பூண்டாரும் தாம் ;*
*மணியுரை மாமலை ஞாறிய ஞாலம்*
*அணிபோல் பொறுத்தாரும் தாஅம் பணிவில்சீர்*
*செல்விடைப் பாகன்திரிபுரம் செற்றுழி*
*கல்உயர் சென்னி இமயவில் நாண் ஆகித்*
*தொல்புகழ் தந்தாரும் தாம்.*

இப்பகுதியின் பொருள் பின்வருமாறு :

தூய ஒளி திகழும் பாற்கடலைக் கடைந்த காலத்தில், விளங்குகின்ற மந்தர மலையை மேலே எடுத்து உலகையே தாங்கும் பெருமையையுடைய தன் தலைகளின் மேலே அம்மலையை ஏற்றி மகர மீன்கள் உலாவும் அப்பாற்கடலிலே மத்தாக நாட்டி, புகழ் அமைந்த சிறப்பினையுடைய தேவர் அசுரர் ஆகிய இருதிறத்தார்க்கும் அமிருதத்தைக் கடைந்து கொடுக்க, மிகவும் நீண்ட கடைகயிற்றின் இரண்டு புறங்களையும் சக்கராயுதத்தை ஏந்தி நிற்கும் திருமால் பிடித்துக்கடைய, இருபுறமும் கடைகயிறாகி, அழிவதோ குறைவதோ செய்யாத தன் பலத்தால் அக்கயிறு அறுந்து போகாதபடி மந்தரமலையை அழகுசெய்ததும் ஆதிசேஷனேயாவான்.

மேலும் வலிமிகுந்த காற்றுக் கடவுளின் மிக்க வலி முழுவதும் (மேருமலையை) அணுகாதபடி எதிரிட்டு நின்றவனும் ஆதிசேஷனேயாவான்.

மற்றும், நீலமணியை ஒக்கும் கருநிறம் பொருந்திய பெரிய மலைகளோடு விளங்கும் இவ்வுலகை ஓர் ஆபரணம் போல் தலையில் தாங்கிக் கொண்டிருப்பவனும் ஆதிசேஷனேயாவான்.

எவர்க்கும்பணிந்தறியாதவனும் எருதின்மீது ஏறி ஊர்பவனும் ஆகிய சிவபெருமான் திரிபுரத்தை அழித்தபோது அவன் தாங்கிய மிகவுயர்ந்த உச்சியையுடைய இமயமலையாகிற வில்லுக்கு நாண்கயிறாக இருந்து அத்திரிபுரத்தை வெல்ல உதவி செய்து திரிபுரம் செற்றவன் என்ற புகழை அவனுக்குக் கொடுத்தவனும் ஆதிசேஷனேயாவான்.

# இயல் 5

## பண்டைய தமிழகத் திருக்கோயில்கள்

சங்ககாலத் தமிழகத்தில் திருக்கோயில்கள் வழிபாட்டிடங்களாகவும் விழாக்களன்களாகவும் நிலவியிருந்தன. "கோயில்" என்பது அரண்மனை என்ற பொருளில் சிலப்பதிகாரத்தில் வருகிறது. பதிற்றுப் பத்தின் இறுதிப் பதிகம் பட்டத்தரசியைக் "கோயிலாள்" என்று வழங்குகிறது. இல்லத்தரசியை "இல்லாள்" என்பது போன்ற வழக்கு இதுவாகும். ஆனால் விரைவில் "கோயில்" என்பது ஆலயத்திற்குப் பெயராக வழங்கவும் அரண்மனையைக் குறித்த மரபு நின்று விட்டது. இறைவன் எழுந்தருள்செய்யும் இடத்தைக் "கோயிலாழ்வார்" என்று பெயர் குறித்து வழங்குவது வைணவ மரபு.

கோயில் நிலைபெற்று விளங்கிய நகர்களும் "கோயில்" என்று அழைக்கப்படும் மரபும் தோன்றியது. "கோயில்" என்பது வைணவர்களுக்குத் திருவரங்கத்தையும் சைவர்களுக்குச் சிதம்பரத்தையும் குறிக்கும். திருவரங்கத்து எம்பெருமானை "கோயிற்பிள்ளை" என்று பெரியாழ்வார் அழைக்கிறார் (2.9.4) ஸ்ரீகோயில் என்று ஆலயங்களையும் ஸ்ரீகோயில் வாரியம் என்று அவற்றைப் புறங்காத்து வந்த குழுவினரையும் பல்லவர் காலத்துக் கல்வெட்டுக்கள் மூலம் அறிகிறோம்.

அரசர்கள் பெரிய ஆலயங்களைத் தமது அரண்மனை போன்றே அகநகரும் புறநகரும் அகழியும் மதிலுமாக எழுப்பினர். அரசனைக் கடவுளின் பிரதிநிதியாகக் கொண்டு "திருவுடைமன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே" (தி.வா. மொ. 4-4-8) என்று பேசுகின்ற நிலை பரவியபோது பிரதிநிதியின் அரண்மனைக்கு மேலாக உண்மைத் தலைவனின் கோயில் அமைய வேண்டும் அல்லவா ? அவ்வாறே சோழன் கோச்செங்கணான் சிவபெருமானுக்கு எழுபது பெருங்கோயில்களையும் திருமாலுக்குக் குன்றமன்னதோர் மாடக் கோயிலையும் எழுப்பினான். இதனைத் திருமங்கையாழ்வார் திருநறையூர்ப் பதிகத்தில் குறிப்பிட்டிருக்கிறார்.

*"இருக்கிலங்கு திருமொழிவாய் எண்தோள் ஈசற்கு*
*எழில் மாடம் எழுபது செய்து உலகமாண்ட*
*திருக்குலத்து வளச்சோழன் சேர்ந்த கோயில்*
*திருநறையூர் மணிமாடம் சேர்மினே"* (பெரிய திரு 6-6-8)

சங்க காலத்துக் கோயில்கள் பெரும்பாலும் சுட்டசெங்கற்களாலும் மரங்களாலுமே கட்டப்பட்டன.

*சுடுமண் ஓங்கிய நெடுநகர் வரைப்பின்* ( பெரு. 405 )

என்று பெரும்பாணாற்றுப்படையில் வருவது காண்க. அவற்றில் வெண் சுதையாலான பிரதிமைகள் அழகுறப் பதிக்கப்பெற்றிருந்தன. இத்தகைய கோயில்கள் வழிபாட்டிடங்களாக விளங்கின என்பதற்குப் பண்டைய நூல்கள் ஆதாரமாகவுள்ளன.

**சேரநாட்டுப் பழங்கோயில்கள் :**

ஆடகமாடத்து அறிதுயில் அமர்ந்தோன் கோயிலை இளங்கோ அடிகள் குறிப்பிடுகிறார். ஆடகமாடம் என்பது "திருவனந்தபுரம்" என்பர் அரும்பதவுரையாசிரியர். இரவிபுரம் என்றும் கூறுவர். சேரன் செங்குட்டுவன் வடதிசைக்கண் படைதிரட்டிச் சென்ற போது

*குடக்கோக் குட்டுவன் கொற்றம் கொள்கென*
*ஆடக மாடத்தறிதுயில் அமர்ந்தோன்*
*சேடம் கொண்டு சிலர் நின்றேத்த* (சிலப். கால்கோட் 62)

சேரன் செங்குட்டுவன் அச்சேடத்தை அதாவது திருவருட் பிரசாதத்தைத் தன் தலைமீது கொள்ளாது புயங்களில் தாங்கிக் கொண்டான். தலைமீது சிவபிரானுடைய சேவடிப்பிரசாதத்தைச் சுமந்ததால் அவ்வாறு புயங்களில் திருமால் வரவிட்ட மாலைப் பிரசாதத்தை ஏற்றுக் கொண்டான். ஆடகமாடத்து அறிதுயிலமர்ந்தோன் திருக்கோயிலில் பூசை புரிந்தவன் பெயர் "சேடக்குடும்பி" என்பது வரந்தரு காதையால் அறியப்படுகிறது.

செங்குட்டுவன் எடுப்பித்த பத்தினிக் கோட்டமும் பழம் பெருமை வாய்ந்தது. பத்தினிக் கோட்டத்தைக் கட்டிய முறையினை இளங்கோவடிகள் விரிவாகக் கூறியுள்ளார்.

*"அறக்கள அந்தணர் ஆசான் பெருங்கணி*
*சிறப்புடைக் கம்மியர்தம் மொடு சென்று*
*மேலோர் விழையும் நூல்நெறி மாக்கள்*
*பால்பெற வகுத்த பத்தினிக் கோட்டத்து*
*இமையவர் உறையும் இமையச் செவ்வரைச்*
*சிமையச் சென்னித் தெய்வம் பரசிக்*
*கைவினை முற்றிய தெய்வப் படிமத்து*
*வித்தகர் இயற்றிய விளங்கிய கோலத்து*
*முற்றிழை நன்கலம் முழுவதும் பூட்டிப்*
*பூப்பலி செய்து காப்புக் கடை நிறுத்தி*
*வேள்வியும் விழாவும் நாடொறும் வகுத்துக்*
*கடவுள் மங்கலம் . . ."* (சிலப் நடுகற்காதை, 222)

செய்தனர் என்றறிகிறோம். இதன் விவரம் வருமாறு.

வைதிகர்கள், வேள்வியாசான், சோதிடர், கம்மியர், மற்றும் சிற்பாசாரியார் ஆகியோர் கூடிப் பத்தினிக் கோட்டம் அமைத்தனர். அஃது பால்பெற வகுக்கப்பட்டது. அதாவது கருநிலையும் பகுதிமண்டபமும் பெருமண்டபமும் என்ற அங்கங்களைக் கொண்டதாய்க் கட்டப்பட்டது. பத்தினிக் கடவுளின் திருவுருவத்தைக் "கைவினை முற்றிய தெய்வப் படிமம்" என்று சிறப்பிக்கிறார். அப்படிமத்துக்கு அணிகலன்களைப் பூட்டி அழகு செய்தனர். பூப்பலியாகிய அருச்சனை புரிந்தனர். காப்புக்கடை நிறுத்தினர். அதாவது திக்தேவதைகளை உரிய இடங்களில் அழைத்தனர். யாக சாலையில் வேள்வி இயற்றினர். இவ்வாறு பத்தினிக் கடவுளை நிலை நிறுத்தினர். அதாவது திருப்பிரதிஷ்டை செய்தனர். திருப்பிரதிஷ்டையானது "கடவுள் மங்கலம்" என்றழைக்கப்பட்டது. இக்கோயில் "மங்கல மடந்தை கோட்டம்" என்னும் பெயரைப் பெற்றது. அங்கு நித்தல் விழாவணி நிகழ்த்தப்பெற்றது. தேவந்திகை என்னும் பார்ப்பன மகள் அக்கோயிற்கண் "பூவும் புகையும் மேவிய விரையும்" கொண்டு வழிபாடியற்றினாள்.

**சோழநாட்டுப் பழங்கோயில்கள் :**

சிலப்பதிகாரத்தில் திருவரங்கம் பெரிய கோயில் மிகவும் புகழ்ப் பெற்றுள்ளது.

*நீலமேகம் நெடும் பொற்குன்றத்துப்*
*பால்விரிந் தகலாது படிந்தது போல*
*ஆயிரம் விரித்தெழு தலையுடை அருந்திறல்*
*பாயற் பள்ளிப் பலர் தொழுதேத்த*
*விரிதிரைக் காவிரி வியன் பெரும் துருத்தித்*
*திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்* (சிலப்.காடுகாண் 35-40)

என்ற பகுதிக்கண் திருவரங்கத்தில் பள்ளிகொண்ட பெரியபெருமாளை இளங்கோவடிகள் பரவுகின்றார்.

**புகார்நகரக் கோயில்கள் :**

காவிரிப்பூம்பட்டினமாகிய புகார் நகரில் பல்வேறு கடவுளர்க்கும் எடுத்த கோயில்களையும் கோட்டங்களையும் பற்றிச் சிலப்பதிகாரம் விரிவாகக் கூறுகிறது.

காவிரி கடலோடு கலக்கும் சங்கமுகத்துறையில் "காமவேள் கோட்டம்" இருந்தது. இஃது மன்மதனுக்குக் கட்டப்பெற்றது. இக்கோயிலுக்கருகில் சோமகுண்டம், சூரிய குண்டம் என்ற தடாகங்கள் இருந்தன. இவற்றில் மூழ்கிக் காமவேள் கோட்டத்தைத் தொழுதால் கணவரைப் பிரிந்தோர் தம் கணவரோடு விரைவிற் பொருந்தி

இம்மையிலும் மறுமையிலும் இன்பம் எய்துவர்.

அமரர்தருக் கோட்டத்தில் கற்பக மரம் வழிபடப்பெற்றது,
வெள்யானைக் கோட்டத்தில் இந்திரனுடைய வாகனமான
ஐராவத யானை வழிபடப்பெற்றது ;
வெள்ளை நாகர்க் கோட்டத்தில் பலராமன் வழிபடப்பெற்றார்;
உச்சிக்கிழான் கோட்டத்தில் சூரியதேவன் வழிபடப்பெற்றான் ;
ஊர்க்கோட்டத்தில் சிவபிரான் கோயிலில் கைலாயமலை
வழிபடப்பெற்றது ;
வேற்கோட்டத்தில் செவ்வேளாகிய முருகக்கடவுள் வழிபடப்
பெற்றார்;
வச்சிரக்கோட்டத்தில் இந்திரனுடைய ஆயுதம் வழிபடப்பெற்றது;
புறம்பணையான்வாழ்கோட்டத்தில் சாதவாகனன்
வணங்கப்பட்டான்.
அதாவது அய்யனார் வழிபடப்பட்டார் ;
நிக்கந்தன் கோட்டத்தில் அருகக் கடவுள் வணங்கப்பெற்றான்;
நிலாக் கோட்டத்தில் சந்திரன் வணங்கப்பெற்றான் ;
பாசண்டச் சாத்தன் கோயிலில் சீரிய வழிபாடு நடைபெற்றது.

பாசண்டம் என்றால் வேதநெறிக்கு முரண்பட்டதான தருக்க நூல்களின் கோட்பாடாகும். இவை 96 வகைப்பட்டது என்று திவாகர நிகண்டு கூறும். இந்த சாத்திரங்களைப் பயின்றதால் "மகாசாத்திரன்" என்றும் பாசண்டச் சாத்தனுக்கு ஒரு பெயர் உண்டு. இக்கோயிலில் பாடு கிடந்தால் பலன் கிட்டும் என்று நம்பினர். பாடு கிடத்தல் என்றால் வரம்வேண்டி உண்ணாதிருத்தலாம்.

சுடுகாட்டிலும் சிறுதெய்வக்கோயில்கள் எழுப்பப்பெற்றுப் பூசைகள் நடைபெற்றன. "சுடுகாட்டுக் கோட்டத்தில்" இடாகினி என்ற பேய்த் தெய்வம் வணங்கப்பெற்றது. இதற்கு "சக்கரவாளக் கோட்டம்" என்ற பெயரும் வழங்கியது. இதைச்சுற்றிலும் உயர்ந்த மதிள்கள் எழுப்பப் பெற்றன. ஆங்கு நான்கு வாசல்கள் திறக்கப்பெற்றன. அவற்றிற்கு செழுங்கொடி வாயில், நலம்கிளர் வாயில், வெற்றிடை வாயில், பூதவுருவத்தின் மண்ணீடு நின்ற வாயில் என்ற பெயர்கள் விளங்கின.

இதற்குள்

1. காடமர் செல்வி கழிபெருங்கோட்டம் என்பதில் தலையைச் சீவி உயிர்ப்பலி கொடுக்கும் பீடிகை நிலைபெற்ற பெரும்பலி முன்றில் இருந்தது.

2. சுடுமண் ஓங்கிய நெடுநிலைக் கோட்டம் என்பது சமாதிக்கோயில் . இங்கு தவத்தோர், அரசர், உடன்கட்டையேறிய மகளிர் ஆகியோருக்குக்

கட்டப்பெற்ற சமாதிகள் சிறியவும் பெரியவுமாக நிறைந்திருந்தன.

3. அருந்திறல்கடவுள் திருந்துபலி கந்தம் என்பது சுடலையாடும் சிவபெருமானுக்குப் பலிபோடும் தூண் நிற்கும் கோயிலாகும். மேலும் சக்கரவாளக் கோட்டத்தில் ஐந்து மன்றங்கள் இருந்தன.

1. வாகை மன்றத்தில் துர்க்கை தங்கியிருந்தாள்.
2. வெள்ளில் மன்றத்தில் விளாமரம் நிறைந்து அங்குப் பறவைகள் தசை உண்ணும்.
3. வன்னி மன்றத்தில் சுடலைநோன்பிகள் (காபாலிகர்) தங்கினர்.
4. இரத்தி மன்றத்தில் மாவிரதியர் மண்டை ஓடுகளை மாலையாகத் தொடுத்து அணிந்தபடி விரதமிருந்தனர்.
5. வெள்ளிடை மன்றத்தில் பிணம் தின்னும் மாக்கள் உணவு சமைத்தனர்.

இனி, புகார் நகரில் திருமால் கோயில் இருந்ததையும்.

*அணிகிளர் அரவின் அறிதுயிலமர்ந்த*
*மணிவண்ணன் கோட்டம் வலஞ்செயாக் கழிந்து*

(சிலப். நாடுகாண். 9)

என்பதால் அறிகிறோம்.

**பாண்டிநாட்டுப் பழம்பெருங்கோயில்கள்**

**1. திருமாலிருஞ்சோலை :** அழகர்மலை என்று போற்றப்பெறும் இத்தலம் சங்க காலத்தில் "திருமால்குன்றம்" என்றழைக்கப்பட்டது. திருமாலின் திருமேனியாகவே இம்மலையைப் பழந்தமிழர் போற்றினர். இதனைத் திசை நோக்கித் தொழுதனர் என்று பரிபாடல் கூறும். இம்மலைக்கண் பெருமால் கெடுக்கும் பிலம் ஒன்றிருந்தது. புண்ணிய சிரவணம், பவகாரிணி, இஷ்டசித்தி என்ற பொய்கைகள் இருந்தன. புண்ணிய சிரவணத்தில் நீராடினால் "விண்ணவர் கோமான் விழுநூல் எய்துவர்". அதாவது இந்திரன் இயற்றிய ஐந்திர வியாகரணத்தின் அறிவு உண்டாகும். பவகாரிணியில் நீராடினால் பழம்பிறப்பை உணருவர். இஷ்ட சித்தியில் நீராடினால் நினைத்தன எல்லாம் கைகூடும். மலையின் சிகரத்திலுள்ள பிலத்திருந்து வற்றாது பெருக்கெடுக்கும் சிலம்பாறு திருமாலுறையும் கோயிலருகில் பாய்ந்து செல்கிறது. அதற்கு நூபுரகங்கை என்ற பெயர் வழங்கி வருகிறது. அதன் கரையில் "இயக்கி" ஒருத்தி காவலாக இருக்கிறாள்.

அவளுக்கு "வரோத்தமை" என்ற பெயரும் உண்டு. அழகர்திருக்கோயிலில் "புள் அணி நீள் கொடிப் புணர் நிலை" என்ற கொடிமரம் உயர்ந்து விளங்குகிறது. அக்கோயிலினுள் நீள்நிலம் கடந்த நெடுமுடி அண்ணல் நின்ற திருக்கோலத்தில் காட்சி தருகிறான். இங்கு நம்பி மூத்தபிரான் என்ற பலதேவருக்கும் கோயில் இருந்தது.

*"நாறிணர்த் துழாயோன் நல்கின் அல்லதை*
*ஏறுதல் எளிதோ வீறு பெறு துறக்கம்*
*அரிதிற் பெறு துறக்கம் மாலிருங்குன்றம்*
*எளிதிற் பெறலுரிமை ஏத்துகம் சிலம்ப"* (பரி. 15)

என்று இளம்பெருவழுதியார் பாடியுள்ளார். சிலப்பதிகாரத்திலும் பரிபாடலிலும் இத்திருக்கோயில் பற்றிய அரிய செய்திகளைக் காணலாம்.

**2. கூடலழகர் திருக்கோயில் :** மதுரை மாநகரில் வையைக்கரையிலுள்ள திருமால்கோயில் ஒன்றினை இளங்கோ அடிகள் குறிப்பிடுகிறார். நீடுநீர் வையைநெடுமால் என்று அங்கு எழுந்தருளியுள்ள இறைவனைப்பெயர் சுட்டுகிறார்.

*"ஆயர்முதுமகள் ஆடிய சாயலாள்*
*பூவும் புகையும் புனைசாந்தும் கண்ணியும்*
*நீடுநீர் வையை நெடுமால் அடியேத்தத்*
*தூவித் துறை படியப் போயினாள்"* (சிலப். துன்பமாலை, 1-5)

மாதரி என்ற இடைக்குல மடந்தை ஆய்ச்சியர் குரவை முடிந்ததும் வையைக் கரையிலுள்ள நெடுமாலைப் பூசிப்பதற்குச் சென்றாள் என்று கூறப்படுகிறது. ஈண்டு "நீடுநீர்வையை நெடுமால்" என்பதற்குச் சிலப்பதிகார அரும்பதவுரையாசிரியர் "ஸ்ரீ இருந்தவளமுடையார்" என்று விளக்கம் எழுதினார். அடியார்க்கு நல்லார் "அந்தரவானத்து எம்பெருமான்" என்று விளக்கினார். இன்றும் கூடலழகர் திருக்கோயில் அஷ்டாங்க விமானத்தின் அந்தர வானத்தில் சயன திருக்கோலத்தில் எம்பெருமான் காட்சியளிக்கிறார்.

தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் கூடலழகருக்குத் திருவிழாக்கள் எடுத்தான். ஆவணித்திருவோணத்தில் கூடலழகருக்குச் சிறப்பு விழாச் செய்தான். மாங்குடி மருதனார் தாமியற்றிய மதுரைக் காஞ்சியில் கூடலழகரைத் துவரைக்கோமான் என்று பெயர் குறிப்பிடுகிறார். பரிபாடல் திரட்டில் கூடலழகரைச் சிறப்பிக்கும் பகுதி :-

*வானார் எழிலி மழைவளம் நந்தத்*
*தேனார் சிமய மலையின் இழிதந்து*

*நான் மாடக் கூடல் எதிர்கொள்ள ஆனா*
*மருந்தாகும் தீநீர் மலிதுறை மேய*
*இருந்தையூர் அமர்ந்த செல்வ நின்*
*திருந்தடி தலையுறப் பரவுதும் தொழுதே*

என்பது குறிப்பிடத்தக்கது. கூடலழகர் இருந்தையூர் அமர்ந்த செல்வன் என்று போற்றப்பட்டார். இருந்தவளமுடையார் ஊராதல் நோக்கி இருந்தையூர் என்று பெயர் பெற்றது.

**3. திருப்பரங்குன்றம் :** பரிபாடலில் முருகனுக்கு எட்டுப் பாடல்கள் உள்ளன. சிவனும் அயனும் அரியும் பன்னிருவர் ஆதித்தரும் அமரரும் அவுணரும் தெய்வமுனிவரும் பிறரும் முருகனைக்காண மண்ணுலகில் வந்து உறையும் இடம் திருப்பரங்குன்றம் ஆனபடியால் "அது இமயத்தை ஒக்கும்" என்று கூறப்படுகிறது. இவ்வாறு நல்லந்துவனார் வருணிக்கிறார். மற்றும் மக்கள் முருகனுக்குரிய பூசைப் பொருள்களையும் காணிக்கைப் பொருள்களையும் கொண்டு வருவதாகவும் குறித்துள்ளார். நல்லந்துவனார் முருகப் பெருமானிடத்துக் கொண்ட பற்றுள்ளத்தை மதுரை மருதன் இளநாகனார்

*சூர்மருங்கறுத்த சுடரிலை நெடுவேல்*
*சீர்மிகு முருகன் தண் பரங்குன்றத்து*
*அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை* (அகம். 59)

என்று பாராட்டியுள்ளார்.

மக்கள் திருப்பரங்குன்றத்திற்கு வந்து முருகவேளை இசையோடும் தாளத்தோடும் பாடிப்போற்றுகிறார்கள் என்கிறார் நல்லழிசியார் என்ற சங்கப் புலவர். "பூந்தாரான் குன்று" எனப் பரிபாடல் இத்தலத்தைக் குறிப்பிடுகிறது. தெய்வயானை முருகன் திருமணம் நிகழ்ந்த இடமாகப் பரிபாடல் இத்தலத்தைக் குறிப்பிடுகிறது.

திருமுருகாற்றுப்படை கொண்டு முருகனுக்கு எடுக்கப்பட்ட திருக்கோயில்கள் பற்றி அறியமுடிகிறது. திருச்சீரலைவாய் (திருச்செந்தூர்) திருஆவிநன்குடி (பழனி) திருவேரகம் (சுவாமி மலை) திருப்பரங்குன்றம் என்பவை அவையாகும்.

மதுரையிலுள்ள சிவாலயத்தையும் இளங்கோவடிகள் குறிப்பிடுகிறார். "ஆலவாய் அவிர்சடைக் கடவுள்" என்று சிவபிரானைக் குறித்து அவன் கூத்தாடும் வெள்ளியம்பலத்தையும் அவர் குறிப்பிடுகிறார். சங்ககாலத்தவனான சோழன் கோச்செங்கணான் சிவபெருமானுக்கு மாடக் கோயில்கள் பலவற்றை எழுப்பினான்.

**4. திருவேங்கடமலை :** தமிழகத்தின் வடஎல்லையாகத் திகழ்ந்த திருவேங்கடம் என்னும் தெய்வமாமலை சங்கத்தொகை நூல்களில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. திருவேங்கடமலைமீதுள்ள திருமலைக் கோயிலை இளங்கோவடிகள் சிறப்பித்துப் பாடியுள்ளார். ஆங்கே கோயில் கொண்டு நின்ற திருக்கோலத்திலுள்ள திருமாலின் எழிலைக் கவினுறப் பாடியுள்ளார் அவர்.

*வீங்குநீர் அருவி வேங்கடம் என்னும்*
*ஓங்குயர் மலையத்து உச்சி மீமிசை!*
*விரிகதிர் ஞாயிறும் திங்களும் விளங்கி*
*இருமருங் கோங்கிய இடைநிலைத்தானத்து*
*மின்னுக்கோடி உடுத்து விளங்குவிற்பூண்டு*
*நானிற மேகம் நின்றது போலப்*
*பகையணங்காழியும் பால்வெண்சங்கமும்*
*தகைபெறு தாமரைக் கையில் ஏந்தி*
*பொலம்பூ ஆடையிற் பொலிந்து தோன்றிய*
*செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்* (சிலப்.காடுகாண் 41-52)

என்பன இளங்கோவடிகளின் வருணனைத் திறனாகும்.

# இயல் 6

# பண்டைய கோயில் விழாக்கள்

பண்டைத் தமிழ்க்குடியினர் பல்வேறு விழாக்களைக் கடவுளின் படிமங்கள் நிலைபெற்ற இடங்களிற்சென்று கொண்டாடினர். சிறப்பு விழாக்களை "சாறு" என்று அழைத்தனர். "சாறயர் மூதூர்" என்ற தொடர் சங்கத்தொகை நூல்களிற் பலமுறை காணப்படுகிறது. இறைவழிபாட்டினை "கடவுட்கடன்" என்று குறிப்பிட்டனர். கடவுட்கடன் செலுத்தியபோது படைக்கப்பட்ட உணவுப்பொருள் "தெய்வமடை" என்று வழங்கப்பட்டது. தெய்வப்படிமங்களை அந்திப்பொழுதில் வணங்கினர். அது "அந்திவிழா" என்று அழைக்கப்பட்டது. திருமால் கோயில்களில் இன்றும் திரு அந்திக்காப்பு என்ற வழிபாடு நடைபெறுவதைக் காணலாம்.

*"இரும்புசெய் விளக்கின் ஈர்ந்திரி கொளீஇ*
*நெல்லும் மலரும் தூஉய்க் கைதொழுது"*

அந்திவழிபாட்டை நிகழ்த்தியதை நெடுநல்வாடை (42, 43) கொண்டு அறியலாம். இனி, திருக்கோயிற்கண் நிகழ்த்தப்பெற்ற பெருவிழாக்களைக் காண்போம்.

**திருவோண விழா**

திருவோண விழா, பண்டைத் தமிழகத்தில் திருமால் நிலை பெற்ற திருக்கோயில்களில் சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது. மதுரை நகரில் இவ் ஓணவிழா மிகச்சீரிய முறையில் நிகழ்த்தப்பெற்றதை மதுரைக் காஞ்சி கொண்டு அறிகிறோம். இதனை "மாயோன் மேய ஓண நன்னாள்" (590) என்பது கொண்டு அறியலாம். இவ் ஓணவிழா மதுரை நகர்த் திருமால் கோயிலில் அக்காலத்தே கொண்டாடப்பெற்ற பெரு விழாவாகும்.

இவ்விழா நடந்தேறியது ஆவணி மாதம் பௌர்ணமி திதியாகும்.

*சென்ற ஞாயிறு நன்பகற் கொண்டு*
*குடமுதற் குன்றம் சேரக் குணமுதல்*
*நாண் முதிர் மதியம் தோன்றி* (மதுரைக் காஞ்சி 546-8)

என்ற அடிகளால் இதனை அறியலாம்.

இந்த ஓணவிழா ஏழு தினங்களில் நடைபெற்றது. அந்தியில் நீராட்டுவிழா நடைபெற்றது. இப்பெருவிழா திருமாலின் வாமனாவதாரதினத்தைக் குறித்தெழுந்தது.

*கணங்கொள் அவுணற் கடந்த பொலந்தார்*
*மாயோன் மேய ஓணநன்னாள்* (மதுரைக் காஞ்சி 590, 591)

என்ற பகுதியில் வரும் அவுணன் என்பது மகாபலி என்ற அசுரனைக் குறிக்கும். மகாபலியை அடக்கித் திருவுலகளந்தருளியவன் திருமால். அவனுடைய புகழுக்கேற்ப மதுரையில் கொண்டாடப்பட்ட இவ்விழா இக்காலத்தில் கேரளத்தில் ஏழு தினங்களில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகிறது.

"கழுநீர் கொண்ட எழுநாள் அந்தி" என்று மதுரைக் காஞ்சி குறிப்பிடுவதற்கேற்ப இன்றும் கேரளத்தில் ஓணவிழாவின் இறுதிநாளில் "ஆறாட்டு" என்னும் விசேடம் கொண்டாடப்படுகிறது. மேலும் திருவோணத்தன்று பெருவிருந்து அளிக்கப்படுகிறது.

*சேறும் நாற்றமும் பலவின் சுவையும்*
*வேறுபடக் கவினிய தேமாங்கனியும்*
*பல்வேறு உருவில் காயும் பழனும்*
*மென்பிணி அவிழ்ந்த குறுமுறி யடரும்*
*அமிர்தியன்றன்ன தீஞ்சேற்றுக் கடிகையும்*
*கீழ் செல வீழ்ந்த கிழங்கொடு பிறவும்*
. . .   . . .   . . . *பல்வயின் நுகர* (527 - 35)

என்று அப்பெருவிருந்து வருணிக்கப்பட்டிருக்கிறது. இன்றும் கனி வகைகளோடு பெரு விருந்தளிப்பதை "ஸர்வாதித்தம்" என்ற பெயரில் கேரள மக்கள் செய்து வழிபடுகின்றனர்.

ஓணவிழா முடிவுற்ற மறுநாட்காலை வீரர், தலைவர், புலவர் முதலானவர்களை அழைப்பித்துப் பெரியதோர் ஓலக்கமாகக் காட்சியளித்து அவர்களுக்கெல்லாம் பரிசிலைப் பாண்டியன் நெடுஞ்செழியன் வாரிவழங்கினான் என்பது மதுரைக் காஞ்சி வாயிலாக அறியப்படுகிறது. கேரளத்தில் இன்றும் இவ்வாறு நடைபெறுகிறது.

ஓணவிழா திருமாலுக்குரியதாயினும் தேசியப் பெருவிழாவாகவே கொண்டாடப்பட்டது. மதுரைக் காஞ்சி சைவரும் வைணவரும் சமணரும் பௌத்தரும் இவ்விழாவிற் கலந்து கொண்ட செய்தியையும் (455 - 87) அறிவிக்கிறது. இன்றைக்கும் கேரளத்தில் ஓணவிழாவில் இந்துக்கள் அல்லாத கிறிஸ்தவர் போன்றோரும் கலந்து கொள்வதைக் காணலாம்.

திருவோணம் திருமாலுக்குரிய நட்சத்திரமாகும். மதுரைக் காஞ்சி குறிப்பிடும் ஓணவிழா மதுரை கூடலழகர் திருக்கோயிலில் எடுக்கப்பட்ட பெருவிழாவாகும். சங்க காலத்தில் இக்கோயிலுள்ள பகுதி "இருந்தையூர்" என்று அழைக்கப்பெற்றது. இங்குக் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள திருமாலை "இருந்தவளமுடையார்" என்று போற்றினர். வீற்றிருந்த திருக்கோலமாதலால் அவ்வாறு பெயர் வழங்கியது. இருந்த வளமுடையார் கோயில் பற்றி இருந்தையூர் என்ற பெயர் வழக்கம் ஏற்பட்டது. இன்றும் கூடலழகர் திருக்கோயிலில் மாதம் தோறும் திருவோண நட்சத்திரத்தில் மாலைக் காலத்தில் உற்சவமூர்த்தி உள்திருச்சுற்றில் உலாவாக எழுந்தருள்கிறார். பஞ்சபருவ உற்சவங்களில் இஃது ஒன்றாகும். இக்கோயிலில் ஆவணித் திருவோண விழா பெரியாழ்வார் காலத்தில் பெரும் சிறப்புடன் கொண்டாடப்பெற்றது.

திருவிழா தொடங்குவதற்கு முதல்நாள் மண் எடுத்து முளையட்டிப் பல்லாண்டு கூறுவது மரபாகும்."மண்ணும் மணமும் கொண்மின்" என்று இதனைப் பெரியாழ்வார் தாம் பாடியருளிய திருப்பல்லாண்டில் குறிப்பிடுகிறார். இவ்விரு சடங்குகளையும் "ம்ருத்ஸங்கிரகணம்" என்றும் "அங்குரார்ப்பணம்" என்றும் ஆகமங்கள் குறிப்பிடுகின்றன. பெரியாழ்வார் திருப்பல்லாண்டுப் பிரபந்தத்தை மதுரை மாநகரில் பாடியருளினார். அப்பிரபந்தத்தில் திருவோணத் திருவிழாவைக் குறிப்பிட்டிருக்கிறார்.

*எந்தை தந்தை தந்தை தந்தைதம் மூத்தப்பன் ஏழ்படிகால்*
*தொடங்கி*
*வந்து வழிவழியாட் செய்கின்றோம் திருவோணத் திருவிழவில்*
*அந்தியம் போதில் அரியுருவாகி அரியை அழித்தவனைப்*
*பந்தனை தீரப்பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு*
*என்றுபாடுதுமே (6)*

என்ற பாசுரம் காண்க. பாண்டியன் கொண்டாடப் பட்டர்பிரான் என்ற பெரியாழ்வார் திருமாலே பரம்பொருள் என்று நிலைநாட்டிப் பொற்கிழி பெற்ற காலை எம்பெருமான் கூடலழகர் கருடன் மீதேறி வந்து காட்சி நல்க, அப்போது யானைமீதேறிப் பவனிவந்த பெரியாழ்வார் யானை மீது கிடந்த மணிகளையே தாளமாகக் கொண்டு திருப்பல்லாண்டு இசைத்தார். இந்நிகழ்ச்சி ஆவணித் திருவோணவிழா ஒன்றில் நடைபெற்றதாகலாம் என்று ஆராய்ச்சிப் பேரறிஞர் மு. இராகவையங்கார் கருதுவார். (கட்டுரைமணிகள், பக். 30) இஃது இந்நாள் மார்கழி மாதம் நேரும் திருவத்தியயனத் திருவிழாவில் பகற்பத்தின் முதல்நாளில் ஒரு திருவிழாவாகக் கொண்டாடப்படுகிறது. கூடலழகர் கருடவாகனத்தில் எழுந்தருளப் பெரியாழ்வார் யானை வாகனத்தில் ஏறியருளித் திருவீதிகளில் உலாவாகப் போந்தருளி "மெய்காட்டும் பொட்டல்" என்ற இடத்தில் விழா நடைபெறுகிறது. அப்போது திருக்கோயிலைச் சேர்ந்த

முதல் தீர்த்த மரியாதை பெற்றுவரும் வென்றுகிழியறுத்த பட்டர் என்ற வமிசத்தில் வந்த ஒருவர் பெரியாழ்வார் பரம்பொருளை நிருணயம் செய்த வரலாற்றைப் படித்துத் திருப்பல்லாண்டுப் பாசுரங்களை இசையுடன் கையில் தாளங்கொண்டு பாடுவர்.

மதுரையில் நிகழ்ந்த ஆவணித்திருவோண விழா சில ஆண்டுகளில் ஆவணி அவிட்டத்தன்றும் கொண்டாடப்பட்டது. ஆவணி மாதத்தில் திருவோண நட்சத்திரம் பௌர்ணமியோடு சேர்ந்திருக்க வேண்டும். அவ்வாறன்றி அடுத்ததான அவிட்ட நட்சத்திரம் பௌர்ணமியோடு கூடிவரும் போது ஆவணி அவிட்டத்தில் நிகழ்ந்துவந்தது. பௌர்ணமி திதி முக்கியமாகக் கொள்ளப்பட்டது. இவ்விழாவை மதுரை ஆவணி அவிட்டம் என்று இறையனார் களவியலுரையில் ஆசிரியர் நக்கீரனார் குறிப்பிட்டிருக்கிறார். அவர், "மதுரை ஆவணி அவிட்டமே உறையூர்ப் பங்குனி உத்திரமே கருவூர் உள்ளி விழாவே" (சூத். 16) என்று மூன்று பெருவிழாக்களைக் குறிப்பிட்டிருக்கிறார்.

**திருவாதிரைத் திருவிழா**

மதுரை மாநகரில் சிவபெருமானுக்குரிய பெருவிழாவாக மார்கழி மாதம் திருவாதிரைத் திருநாள் கொண்டாடப்பட்டது. இச்செய்தியைப் பரிபாடல் நமக்கு அறிவுறுத்துகிறது :-

*கனைக்கும் அதிர்குரல் கார்வானம் நீங்கப்*
*பனிபடு பைதல் விடுதலைப் பருவத்து*
*ஞாயிறுகாயா நளிமாரிப் பிற்குளத்து*
*மாயிருந் திங்கள் மறுநிறை ஆதிரை*
*விரிநூல் அந்தணர் விழவு தொடங்கப்*
*புரிநூல் அந்தணர் பொலங்கலம் ஏற்ப* (பரி. 11 : 77)

இப்பகுதியில் பரிமேலழகர் உரையில்,

*"கார்வானம் அதிர்குரல் நீங்கப் பனிமிகுதலால் குளிரால்*
*நடுங்குதலையுடைய முன்பனிப் பருவத்து ஞாயிறு தெறாத*
*கடைமாரியையுடைய மார்கழி மாதத்துத் திங்கள் மறுவொடு*
*நிறைந்த திருவாதிரை நாளின்கண் திருவாதிரை*
*நிறைமதிநாளாங்*
*கால் ஆதித்தன் பூத்தடத்தின்கண் நிற்குமாதலின்*
*அதனையுடைய*
*மார்கழி மாதம் குளமெனப்பட்டது, ஆகமங்களை யுணர்ந்த*
*பூசகர் அத்திருவாதிரைக்குத் தெய்வமாகிய இறைவனுக்கு*
*விழாவைத் தொடங்க. . . ."*

இவ்வாறுவரும் விளக்கம் காணப்படுகிறது. மார்கழிப் பௌர்ணமி தினத்தில் சிவபிரான் திருக்கோயிலில் ஆதிரை விழா தொடங்கப்பெற்றது. அப்பொழுது சிவாகமங்களை உணர்ந்த அந்தணர்கள் வழிபாட்டிற்குரிய பொற்கலன்களை ஏந்தினர். அவற்றில் வையை நீரை மொண்டு ஆதிரை முதல்வனுக்கு அபிடேகம் செய்தனர்.

**இந்திர விழா**

காவிரிப்பூம்பட்டினத்தில் சித்திரை மாதம் இந்திர விழா கொண்டாடப் பெற்றது. இந்திரன் வேதம் குறிப்பிடும் தேவர்களில் தலைவன், சுவர்க்க லோகத்தில் ஆட்சிபுரிபவன், சத்தியலோகத்திலுள்ள நான்முகனால் தேவேந்திரன் என்று பட்டாபிடேகம் செய்யப் பெற்றவன். நூறு அசுவமேத வேள்விகள் இயற்றி அப்பதவியைப் பெற்றவன். திசைக்கடவுளரில் ஒருவன். அவன் தன்னுடைய வச்சிராயுதத்தைத் ததீசி முனிவரின் முதுகு எலும்பால் செய்து கொண்டு அதனால் அசுரர்களை வென்றவன். அமரர்களுக்கு அமுதம் அளித்து அவரைக் காப்பவன். மேகக்கூட்டங்களை இயக்குபவன்.

அகத்தியரின் ஆணைப்படி தூங்கெயில் எறிந்த தொடித்தோட்செம்பியன் காலம் முதல் வழிவழியாகச் சோழ மன்னர்கள் இந்திரனுக்குத் திருவிழா எடுத்துக் கொண்டாடினர். இத்திருவிழாவினால் அரசும் ஞாலமும் நலமுறும், திருவிழாவை நிறுத்தினால் அவை கேடுறும் என்று தமிழ்க்குடியினர் நம்பினர்.

இவ்விழா இருபத்தெட்டு தினங்கள் நடைபெற்றது. பூம்புகாரிலிருந்த வெள்ளிடை மன்றம், இலஞ்சி மண்டபம், பூத சதுக்கம், பாவை மண்டபம், கல் மண்டபம் ஆகிய ஐந்து மன்றங்களிலும் அரும்பலியிட்டு இந்திர விழாவைத் தொடங்கினர். இந்திரன் கோயிலுக்குக் காப்புக்கட்டி, வச்சிரக் கோட்டத்திலுள்ள மங்கல முரசை யானை மீதேற்றி, ஐராவதம் இருக்கும் கோயிலில், "விழாவின் முதலும் முடிவும்" சாற்றினர். கற்பகக் கோட்டத்திலுள்ள மங்கலநெடுங்கொடியினை வானுறப் பறக்கவிட்டனர். இவ்வாறு விழாவுக்குக் கால் நாட்டி முதுகுடிப் பிறந்தோன் முரசறைந்து தெரிவித்தான்.

நகர்ப்பொது மக்கள் இந்திரவிழாவில் பல்வகையாலும் பங்கேற்றனர். வீதிகளிலும் கோயில் வாசல்களிலும் பூரண கும்பங்களையும் பொற்பாலிகைகளையும் பாவை விளக்குகளையும் மங்கலப் பொருட்களோடு அழகுறச் சேர்த்தனர்.

கமுகுக்குலைகளையும் வாழைத்தார்களையும் வஞ்சிக்கொடிகளையும் கரும்புகளையும் பொலிவுற நட்டு வைத்தனர்.

திண்ணைகளிலிருந்த தூண்களிலே முத்துமாலையைத் தொங்கவிட்டனர். வீதிகளிலும் மன்றங்களிலும் பழ மணல் நீக்கிப் புது மணலைப் பரப்பினர். கதலிகைக் கொடிகளையும் கொம்புகளில் கட்டிக்

கொடுங்கை மாடங்களிலும் வாயில்களிலும் நிறுத்தினர்.

சிவபெருமான் முதலாகச் சதுக்கப்பூதம் ஈறாக உள்ள கோயில்களில் ஆறு அங்கங்களையறிந்தவர்கள் மரபுமீறாது, வழிபாடுகளை இயற்றினர். பந்தல்களிலும் அம்பலங்களிலும் புண்ணிய நல்லுரைகளை அறிந்தோர் புரிந்தனர். சமயவாதிகள் பட்டிமண்டபத்தில் வாதிட்டனர்.

"பசியும் பிணியும் பகையும் நீங்கி வசியும் வளமும் சுரக்க" என்று வள்ளுவன் முரசறைந்தான்.

ஐம்பெருங்குழுவும் எண்பேராயமும் அரசிளங்குமரரும் வணிகரும், நால்வகைப் படைவீரரும் ஒருங்கு கூடினர். அரசனை வாழ்த்தினர். ஆயிரத்தெட்டுப் பொற்குடங்களில் காவிரி சங்கமத் துறையிலிருந்து நன்னீர் கொணர்ந்து இந்திரனுக்கு அபிடேகம் செய்தனர். சிவபிரான், முருகக் கடவுள், திருமால், பலதேவன், வாசவன் ஆகியோர் உறையும் கோயில்களில் வேதவிதிகளின்படி ஓமங்கள் நடைபெற்றன. முப்பத்துமூவகைப்பட்ட தேவர்களுக்கும் பதினெண் தேவகணங்களுக்கும் சிறப்புப் பூசைகள் நிகழ்ந்தன. அறவோர் பள்ளி, பௌத்தர் பள்ளி, ஸ்ரீகோயில் ஆகிய புண்ணியத்தலங்களில் தானம், தருமோபதேசம், புராண படனம் ஆகியவை நிகழ்ந்தன. சோழ மன்னவன் பகைவர்களைச் சிறையிலிருந்து விடுவித்தான். எங்கும் இசை நிகழ்ச்சிகளும் நாடகக் காட்சிகளும் நிறைந்தன. ஆடலும் பாடலும் நிறைந்தன. இருபத்தெட்டு தினங்கள் இவ்வாறு இந்திர விழா நடைபெற்றது. மறுநாள் கொடியிறக்கினர். அன்று காலை ஊர்மக்கள் பெருந்திரளாகக் கூடிக் கடலாடினர். சிலப்பதிகாரத்தில் இந்திரவிழவூரெடுத்த காதையிலும் மணிமேகலையில் விழாவறைகாதையிலும் இவ்விழா பற்றிய செய்திகள் நிறைந்துள்ளன. சித்திரையும் பூரணையும் கூடிய நாளில் கொடியேற்றி இருப்பத்தெட்டு நாளும் விழா நடந்தது என்பர் அடியார்க்கு நல்லார்.

மேற்குறித்த விழாக்களேயன்றி, கார்த்திகைத் திருவிழா கார்த்திகை மாதத்தில் நடைபெற்றது. (அக.141) தைந்நீராடல் திருவிழா தைத்திங்களில் நடைபெற்றது. (நற். 22 கலித் 52)

*மழை கால் நீங்கிய மாக விசும்பில்*
*குறுமுயல் மறுநிறம் கிளர மதிநிறைந்து*
*அறுமீன் சேரும் அகலிருள் நடுநாள்*
*மறுகுவிளக் குறுத்து மாலை தூக்கிப்*
*பழவிறல் மூதூர்ப்பலருடன் துவன்றிய*
*விழாவுடன் அயர. . . .* (அக. 141)

பௌர்ணமிக் கார்த்திகை மாலைப் பொழுதில் மக்கள் மனைகளில் திருவிளக்கேற்றி மாலை சார்த்தி வழிபாடியற்றியதை அகநானூறு வருணிக்கிறது. இன்றும் இம்மரபு தமிழகத்தில் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

# இயல் 7

## கோயில்கள் பொது அமைப்பு

தமிழகக் கோயில்களில் கர்ப்பக்கிருஹம் எனப்படும் கருவறையே கோயில் அமைப்பின் பிரதானமான ஸ்தானம். இக்கருவறையில்தான் மூலமூர்த்திகள் பிரதிஷ்டையாகியுள்ளனர். இதற்கு அங்கமாகவே அர்த்தமண்டபம், முகமண்டபம், மகா மண்டபம், திருச்சுற்றாலை, சுற்றுக்கோயில்கள் (ஸந்நிதிகள்), சுற்று மதில்கள், கோபுரவாசல் பலிபீடம் கொடிமரம் ஆகியவை அமைக்கப்படுகின்றன.

கருவறைக்கு முன்னதாக அமைவது அர்த்த மண்டபம்; அதற்கு முன்னுள்ளது முக மண்டபம்; அதற்கு முன்னுள்ளது மகா மண்டபம்; கருவறையைச் சுற்றி வலம் வருவதற்குரிய பிராகாரம் திருச்சுற்றாலை; பிராகாரத்தில் உள்ளவை பரிவாரக் கோயில்கள்.

**விமானம்**

இந்தியக் கோயில்களின் மிக முக்கியமான பகுதி அதன் கருவறையே. இதன் கூரை மீது அமைக்கப்படும் உயரமான அடுக்குகளை வட இந்தியக் கோயிலில் சிகரம் அல்லது "பிராஸாதம்" என்றும் தென்னிந்தியக் கோயிலில் "விமானம்" என்றும் கூறுவர். தமிழகக் கோயில்கள் விமானக் கோயில்கள்; தமிழகக் கோயிலில் சிகரம் என்பது விமானத்தின் உச்சியில் அமைந்த தலைப்பகுதியைக் குறிக்கும். சிகரத்தின் மீது ஸ்தூபியை (கலசம்) அமைப்பர்.

விமானம் என்பது கருவறையின் அடி முதல் முடிவரையான அமைப்பினைச் சுட்டும். கருவறையின் மேற்பகுதியை மட்டும் விமானம் என்று குறிப்பது தவறு.

**விமானத்தின் பகுதிகள்**

1) அதிஷ்டானம் 2) சுவர் 3) பிரஸ்தரம் 4) கிரீவம்

5) சிகரம் 6) ஸ்தூபி

**1) அதிஷ்டானம் :**

1) பாதபந்தம் (பாதக்கட்டு) 2) பத்மபந்தம் (தாமரைக்கட்டு)

என்று இருவகைப்படும். அதிஷ்டானத்தின் பகுதிகளாவன :

உபானம், ஜகதி, குமுதம், பத்மம், அந்தரி, வாஜனம், பட்டிகை என்பன ஆகும்.

இவற்றை மாற்றி வெவ்வேறு வகையான அதிஷ்டானங்கள் உருவாக்கப்படுகின்றன. அதிஷ்டானத்தின் மீது உபபீடம் அமைக்கப்பட்டுக் கட்டடத்தின் உயரம் அதிகமாக்கப்படும். பலகோயில்களில் உபபீடமின்றி அதிஷ்டானமே உள்ளது. தஞ்சைக்கோயில் மற்றும் கங்கை கொண்ட சோழீச்சுரம் இவற்றில் உபபீடங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

அதிஷ்டானமே வலுவுடையதாய், கோயிலின் கனத்தைத் தாங்கும் உறுப்பாக அமைகிறது.

**2) கால் அல்லது பாதம் :**

அதிஷ்டானத்தின் மேலிருப்பது இப்பகுதி. இதனை "பிட்டி" என்றும் அழைப்பர். இஃது வெறும் சுவராக இருந்தால் அழகாயிருக்காது என்று அதில் அரைத்தூண்களும் தேவ கோஷ்டங்களும், மகரதோரணங்களும் கும்ப பஞ்சரங்களும் அமைக்கப்படும். கோஷ்டங்களில் தெய்வ உருக்கள் வைக்கப்படும். சில கோயில்களில் இவை சித்திரமாக வரையப்பட்டிருக்கும். கோஷ்டங்களில் வைப்பதற்குரிய தெய்வ உருவங்களை ஆகமங்கள் கூறும். மயழதத்தில் சிவாலய விமானத்து கோஷ்டங்களில் தெற்கே தக்ஷிணாமூர்த்தி, மேற்கே மகாவிஷ்ணு வடக்கே பிரம்மா ஆகிய தெய்வவுருக்களை நிறுவுமாறு கூறப்பட்டிருக்கிறது. மேற்கே மஹா விஷ்ணு இடம் பெற்ற கோஷ்டத்தில் பிற்காலச் சோழர்கள் லிங்கோத்பவ மூர்த்தியைப் பிரதிஷ்டை செய்தனர். இவர்களையும் மேல்தளத்து கிரீவ கோஷ்டத்து தேவர்களையும் விமான தேவதைகள் என்பர்.

சுவரிலுள்ள தேவகோஷ்டத்தின் மீது தோரணங்கள் அழகுறப்பல வடிவில் செதுக்கப்படும்.

இலைவடிவிலுள்ளது பத்திரதோரணம்

மகரமீன்களுடன் கூடியது மகரதோரணம்

பக்ஷிகளுடன் சேர்ந்தது சித்திரதோரணம்

சிற்பிகள் தம் கற்பனைகளுக்கு ஏற்ப இதில் பல தெய்வ உருவங்களை இணைப்பதுண்டு.

**3) பிரஸ்தரம் (கூரை)**

சுவரின் மீதுள்ள கூரையே கருவறையை மூடும் அங்கம். இது பூதவரி, கொடுங்கை, யாளிவரி என்ற மூன்று பகுதிகளுடன் அழகுற அமையும். இதற்குமேல் ஒன்றுமுதல் பல தளங்கள் கொண்ட மேல் விமானம் அமைக்கப்படும். ஒரே தளமுள்ளது ஏகதள விமானம். இரண்டு

தளமுள்ளது த்விதள விமானம், மூன்று தளமுள்ளது திரிதள விமானம், விமானத்தின் ஒவ்வொரு தளத்திலும் சிறுசிறு விமான அமைப்புகள் மாலைபோல் அமைக்கப்படும். நான்கு மூலைகளில் கர்ணகூடுகள் அமைக்கப்பட்டு அவற்றிற்கிடையே பத்ரசாலைகளும் நிறுவப்படும்.

**4. கிரீவம் (கழுத்து)**

சிகரத்தின் கழுத்தான இப்பகுதி சதுரமாகவோ, எண் பட்டையாகவோ, வட்டமாகவோ அமைக்கப்படும். சிவன்கோயில்களில் இதன் ஓரத்தில் நந்திகளும் விஷ்ணு கோயில்களில் கருடனும் நான்கு மூலைகளில் நிறுவப்படும். இதன் நான்கு திசைகளில் பிரம்மா, விஷ்ணு, சிவன், இந்திரன் அல்லது முருகன் ஆகிய தெய்வ உருவங்கள் அமைக்கப்படும். திசை மாறியும் வரும். இந்த நான்கின் இடைப்பட்ட பகுதிகள் வெற்றிடமாயிருக்கும் அல்லது திசைக்காவலர் உருவங்களைத் தாங்கியிருக்கும்.

**5. சிகரம்**

கிரீவத்துக்கு மேலுள்ளது இப்பகுதி. இது சதுரம், வட்டம், ஆறு அல்லது எட்டுப் பட்டை, தூங்கானை, வண்டிக்கூடு முதலிய அமைப்பில் இருக்கும். இதன் அமைப்பைக் கொண்டு ஏழு வகைச் சிகரங்களைச் சிற்பநூல்கள் கூறும்.

சதுரமாக இருப்பின் நாகரம்

வட்டமாக இருப்பின் வேசரம்

எண் பட்டையாக இருப்பின் திராவிடம்

**6. ஸ்தூபி :**

சிகரத்துக்கு மேலுள்ள ஆறாவது பகுதி ஸ்தூபியாகும். இதனைக் கலசம் (குடம்) என்பர். இது ஒரு குடமும் அதன்மேல் செங்குத்தாக வைக்கப்பட்ட வாழைப்பூவும் போன்ற தோற்றமுடையது. இது கல், சுதை அல்லது உலோகத்தால் செய்யப்படும். செம்பினால் செய்து அத்தகட்டின் மீது தங்க ரேக்கு இழைக்கப்படும். கும்பாபிஷேகத்தின் போது (குடமுழுக்கு) வேத கோஷத்துடன் இதற்கும் புனித நீராட்டுவார்கள்.

**அஷ்டாங்க விமானம் :** மேலே கூறப்பட்ட ஆறு பகுதிகளைக் கொண்ட ஷடங்க விமானத்திற்கு ஒரு கருவறையே உண்டு. இத்துடன் ஒன்றின்மேல் ஒன்றாக மேலும் இரு கருவறைகளைச் சேர்த்தால் அஷ்டாங்க விமானம் என்பது உண்டாகும். இம்மூன்று கருவறைகளிலும் திருமாலின் நின்ற, இருந்த, கிடந்த கோலங்களை நிறுவி வழிபடுவர். மதுரை கூடலழகர்கோயில், திருக்கோட்டியூர் சௌமியநாராயணப் பெருமாள் கோயில், உத்தரமேரூர் சுந்தர

வரதப்பெருமாள் கோயில், காஞ்சி வைகுண்டப் பெருமாள் கோயில், மன்னார் கோயில் (நெல்லை மாவட்டம்) ஆகியவை அஷ்டாங்க விமானக் கோயில்களாம்.

**பிறபகுதிகள்**

கருவறையின் முன்பாக எழுப்பிய அர்த்தமண்டபத்தை அதனைக் கருவறையுடன் இணைப்பது அந்தராளம் (இடைநாழி) என்ற குறுகலான அமைப்பாகும். அர்த்தமண்டபத்தின் முன்னால் மகா மண்டபம் அமைக்கப்படும். அதையடுத்து வருவது முக மண்டபம், வாகன மண்டபம்முதலிய பல்வகை மண்டபங்களும் பெரிய அமைப்பினாலாகிய கோயில்களில் அமைக்கப்படும்.

**பலிபீடம் :**

தாமரைப் பூக்களின் இதழ்களைக் கீழ்நோக்கி ஒடித்து நடுவிலுள்ள மொட்டுத் தெரியும்படி வைத்ததுபோல் உள்ள அமைப்பு பலிபீடமாகும்.

**துவஜஸ்தம்பம் (கொடிமரம்)**

33 கணுக்களையுடையதாய் உச்சியில் 3 திருஷ்டிப் பலகைகளை உடையதாய் இருக்கும். விழாக் காலங்களில் இதில் கொடியேற்றப்படும். இது பலிபீடத்துக்கு முன்பாகவோ பின்புறமாகவோ இருக்கும்.

**நந்தி அல்லது கருடன்**

சிவாலயங்களில் கொடிமரத்தையொட்டி கருவறையை நோக்கிய வண்ணம் படுத்திருக்கும் காளையே நந்தியாகும். விஷ்ணு ஆலயங்களில் கூப்பிய கைகளுடன் கருடன் நிற்கும் ஸந்நிதி இருக்கிறது. அமர்ந்த கோலத்திலும் அமிர்த கலசத்துடனும் சில கோயில்களின் கருடன் காணப்படும்.

திருச்சுற்று மாளிகை என்பது சுற்று மதிளையொட்டி தொடர்ச்சியாக உள்ள மண்டபங்கள் இவையாகும். ஒன்றின்மேல் ஒன்றாக இரண்டு அடுக்காகவும் இவை இருக்கும். இதனைச் சிதம்பரம் நடராஜர் கோயிலில் காணலாம்.

**மண்டபம் :**

அதிஷ்டானம், தூண், பிரஸ்தரம் என்ற மூன்று உறுப்புகளை மட்டுமே கொண்டது மண்டபமாகும். மண்டபத்தின் பரப்புக்கு ஏற்றவாறு 4, 16, 100, 1000 என்று தூண்களைக் கொண்டிருக்கும்.

மேலே கூறப்பட்ட எல்லா அங்கங்களையும் கொண்டதாக ஒரு கோயில் இருக்க வேண்டிய அவசியமில்லை. கருவறையும் முன் மண்டபமும் கொண்ட சிறுகோயில் முதல் எல்லா அங்கங்களையும் கொண்ட பெருங்கோயில்கள் வரை பல்வகைப்பட்ட கோயில்களைத் தமிழகத்துக் காணமுடிகிறது.

**கோபுரம் :**

கோயிலின் நுழைவாசலில் கோபுரம் கட்டப்படும். இது நீண்ட சதுரமாயும் 3, 5, 7, 9 என்று பல தளங்களைக் கொண்டதாகவும் கட்டப்படும். சோழர்கள் விமானங்களை உயரமாகவும், கோபுரங்களைக் குட்டையாகவும் கட்டினர். பாண்டியர்கள் கோபுரங்களை மிகவும் உயரமாகவும் விமானங்களைத் தாழ்வாகவும் கட்டினர். தஞ்சைப் பெருவுடையார் கோயிலையும் மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் ஆலயத்தையும் ஒப்பிட்டுக் காண்க. விஜயநகரப் பேரரசர்களும் மிக உயரமான கோபுரங்களை எழுப்பினர். ஸ்ரீவில்லிபுத்தூர் கோபுரம் பெரியாழ்வாரால் கட்டப்பெற்றது. அக்கோபுரமே தமிழ்நாடு அரசின் சின்னமாகத் திகழ்ந்து வருகிறது.

கோபுரங்கள் மற்றும் மண்டபங்களைப் பற்றி விரிவான செய்திகளைப் பிறிதோரிடத்தில் காண்போம்.

# கொடும்பாளூர் மூவர்கோயில் விமானம்



## முற்காலச் சோழர்காலக் கோயில் அமைப்பு

(கி.பி.9 ஆம் நூற்றாண்டு)




முற்காலச்
சோழர்காலக்
கோயில் விமானம்
ஸ்தூபி
சிம்மமுகம்
கூடு
கபோதம்
சிகரம்
கோடிக்கருக்கு
விமானத் தேவதை
கிரீவம்
நந்தி
யாளிவரி
கூடு
கொடுங்கை
சாலை
குடம்

# இயல் 8

# கோயில் நிர்மாண நியதிகளும் அளவைகளும்

திருக்கோயில்களை எங்கு, எப்பொழுது, எவ்வாறு நிர்மாணிப்பது என்பதற்குப் பல நியதிகளை உருவாக்கி அவற்றை ஆகமங்கள், வாஸ்துநூல்கள், சிற்ப நூல்கள் வெளியிடுகின்றன. பொதுவாகத் திருக்கோயில்களை மலைகள், குன்றுகள், ஆற்றங்கரைகள், கடற்கரைகள், தாழ்வரைகள், வனங்கள், சோலைகள் ஆகிய வனப்புமிக்க இடங்களில் எழுப்புவது மரபு. இச்சூழல்கள் மனித மனத்துக்கு அமைதி விளைவிப்பனவாகும்.

## 1. பூபரீட்சை (நிலத்தேர்வு)

மேற்குறித்த இயற்கைச் சூழல்கள் இன்றி ஓர் ஊரின்கண் கோயில் கட்ட வேண்டின் கடைப்பிடிக்க வேண்டிய விதிகள் உள்ளன. உதாரணமாக, நல்மரங்கள் நிறைந்ததும் நன்னீர் நிரம்பியதும் வடக்கு அல்லது கிழக்குப் பகுதி தாழ்ந்ததுமான நிலம் கோயில் கட்டச் சிறந்தது என்று "மயமதம்" என்ற சிற்பநூல் கூறுகிறது. மேலும் அதன் மண் சிறந்த மணமுடையதாகவும் சகலவிதமான நற்செடிகள் கொடிகள் வளரத்தக்கதாகவும் இருக்க வேண்டும். தேர்ந்தெடுக்கும் இடத்தில் எலும்பு, மண்டையோடு, பாறைகள், முட்செடிகள், பாழும் கிணறுகள், சாம்பல், மீன்நாற்றம், பொந்துகள் முதலியன இருக்கக்கூடாது.

## 2. பூபரிக்ரஹம் (நிலம் ஏற்பு)

மேற்கூறியவாறு நல்ல நிலத்தைத் தேர்ந்து எடுத்த பிறகு அதனை ஏற்பதற்குச் சில நியதிகள் உள்ளன. அந்நிலத்தில் வாழும் பூதங்கட்கும் தேவதைகட்கும் உணவு படைக்க வேண்டும். பிறகு, "இந்த நிலத்தை நான் ஏற்பதால் இங்கு வாழும் பூதங்களும், தேவதைகளும் இங்கிருந்து நீங்கிச் செல்க" என்று கூறி அந்நிலத்தை ஏற்பர். பின்பு அதனை உழுது பசுஞ்சாணத்தால் உரமிட்டுப் பல்விதமான நல் விதைகளை விதைப்பர். அவை நன்கு முளைத்துப் பக்குவம் அடைந்ததும் அந்நிலத்தில் காளைகள், பசுக்கள், கன்றுகளை மேயவிடுவர். பசுவின் குளம்படியும் கன்றின் வாய்நுரையும் மகிழ்வுற்ற காளைகளின் எக்கார ஒலியும் நிலத்தின் குற்றங்களை நீக்கித் தூய்மையாக்கும். பசுவின் சாணமும் மூத்திரமும் நிலத்துக்குக் காப்புக்கட்டுவது போன்றதாகும்.

பிறகு நல்நாளில் நன்முகூர்த்தத்தில் மங்கள வாத்தியங்கள் முழங்க அந்த நிலத்தில் அக்ஷதை மற்றும் புஷ்பங்களைத்தூவிப் பிறகு வணங்கிப் பின் அதின் நடுவே ஒரு கனமுழம் அளவில் குழிதோண்டுவர். மாலையில் அக்குழியைச் சந்தனம் மற்றும் பூக்களால் பூசித்து வணங்கிக் குழியில் நீரைச் சேர்த்து நிரப்புவர். பிறகு எஜமானன் அல்லது ஸ்தபதி அகப் புறத்தூய்மைகளோடு, "நிலத்தாயே, உன் வளம் பெருகட்டும். எமக்கு நிறையச் செல்வங்களை அளிப்பாயாக" என்று கூறிக் குழியின் அருகில் தருப்பைப் புற்களைப் பரப்பிக் கிழக்கில் தலைவைத்துப் படுப்பர்.

மறுநாட்காலையில் அக்குழியில் நீர் எவ்வளவுக்கெவ்வளவு மீதமிருக்கிறதோ, அவ்வளவுக்கவ்வளவு அந்நிலம் மங்களத்தையும் செல்வத்தையும் அளிக்க வல்லது. நீர் முழுவதும் வற்றி ஈரப்பசை மட்டுமிருப்பின் அது அழிவையும், ஈரப்பசை கூட இல்லாது உலர்ந்திருப்பின் பேரழிவையும் குறிக்கும். இத்தகைய நிலங்கள் விலக்கப்படும்.

மேலும் ஒருவகைத் தேர்வும் உள்ளது. குழியைத் தோண்டி எடுத்த மண்ணை அக்குழியில் இடுவர். குழி நிறைந்து மண் மீதமிருப்பின் அந்நிலம் உத்தமம் என்றும்; குழி நிறைந்து மண்மீதமில்லாதபடியிருப்பின் மத்திமம் என்றும் குழி நிரம்பாவிடின் அதமம் என்றும் அறியப்படும். உத்தமமான நிலமே காமதேனுவைப் போன்று வற்றாத வளத்தைக் கொடுக்கும்.

### 3. திக்பரிச்சேதம் (திசையறிதல்)

திசைகளை அறிவதற்கு சங்கு ஸ்தாபனம் செய்து (முளையடித்து) சூரிய ஒளியில் நிழல் வீழ்வதைக் குறித்துக் கொண்டு திசைகளை வரைந்து கொள்ள வேண்டும்.

### 4. பதவிந்யாஸம் (நிலப்பகுப்புமுறை)

நம்நாட்டு வாஸ்துமரபில் இது முக்கியத்துவம் வாய்ந்தது. இது ஒரு நிலத்தைப் பல பகுதிகளாகப் பகுத்து, ஒவ்வொரு பகுதியிலும் வெவ்வேறு தேவதைகள் வாழ்வதாகக் கொள்ளப்படும். இதனைப் பசு தேவதா விந்யாஸம் என்றும் கூறுவர். நிலத்தின் எட்டுத் திசைகளிலும் அஷ்டதிக் பாலர்கள் உறைகிறார்கள்.

| | |
|---|---|
| கிழக்கே | இந்திரன் |
| தெற்கே | யமன் |
| தென்கிழக்கே | அக்நி |
| மேற்கே | வருணன் |
| தென்மேற்கே | நிருதி |
| வடக்கே | குபேரன் |

வடமேற்கே வாயு

வடகிழக்கே ஈசானன்

அஷ்டதிக் பாலர்களின் நடுப்பகுதிக்குப் பிரம்மஸ்தானம் (இறைவன் உறையுமிடம்) என்று பெயர்.

தேர்ந்தெடுத்த நிலத்தை (2 x 2) நான்கு அல்லது (3 x 3) ஒன்பது அல்லது (32 x 32) 1024 பகுதிவரை பகுப்பார்கள். ஒவ்வொரு பகுதியும் ஒரு பதம் என்றும், ஒவ்வொரு பதத்திற்கும் தனிப்பெயரும் அதில் உறையும் தெய்வத்தின் பெயரும் வாஸ்து நூல்களில் குறிக்கப்பட்டுள்ளன. இன்னின்ன கட்டிடங்களுக்கு இன்னின்ன பகுப்புமுறை பின்பற்றப்பட வேண்டும் என்று விதிகள் கூறப்பட்டுள்ளன.



ஏகபதம் — யாக குண்டம், பிதிரு காரியங்கள்



2 x 2
4 பதங்கள்
பேசக பதம் — சிறு தெய்வங்கள்



3 x 3
9 பதங்கள் பீடபதம் — பெருந்தெய்வம்




8 x 8
64 பதங்கள் மண்டூகபதம்

மண்டுக பதத்தில் 81 சந்திகள் உண்டாகும்.

வலது மூலையிலிருந்து தொடங்கி சுருள்முறையில் சந்திகளை எண்ணினால் வரும் 81வது சந்தியே பிரம்மஸ்தானம். பிரம்மஸ்தானமே பெரும் தெய்வம் உறையுமிடம். இங்குதான் கருவறை அமைக்கப்பட வேண்டும்.

**பலிகர்ம விதானம் (படையல்முறை)**

மேற்குறிக்கப்பட்ட ஒவ்வொரு சந்தியிலும் உறையும் தேவதைக்குரிய மலர், உணவு முதலியன படைத்தல் மரபு. உதாரணமாக ஈசானன் முதல் அஷ்டதிக் பாலர்க்கு முறையே 1) நெய் 2) கிழங்கு 3) நெய்யும் பாலும் 4) சோறு 5) எள்ளும் பிண்ணாக்கும் 6) பாயசம் 7) மஞ்சள் 8) பாற்சோறு படைக்கப்படும். இந்தப் பலிகளை ஸ்தபதி அகப்புறத் தூய்மைகளுடன் அந்தந்த தெய்வங்களை முன்னும் பின்னும் முறையே ஓம், நம: எனச் சேர்த்து (உ-ம் ஓம் வருணாய நம :) உச்சரித்துப் பலிகளைப் படைப்பார்.

**6. பிராணப்ரதிஷ்டை (உயிர்நிலை நிறுத்தல்)**

கோயில் முழுதும் கட்டி முடித்தபின், உரிய பரிவார தேவதைகளையும் மூலமூர்த்தியையும் உரிய இடங்களில் நிலை பெறச் செய்து ஒரு நல்ல நாளில் மறையோதிய அந்தணர்கள் வேத பாகங்களை ஓதி, பூர்ணகும்பம் முதலிய சடங்குகளுடன் மூர்த்திகளுக்குப் பிராணப் பிரதிஷ்டை செய்யப்படும். இதையே கும்பாபிஷேகம் என்றும் ஸம்ப்ரோக்ஷணம் என்றும் கூறுவர். பிராண சக்தியான தீர்த்தத்தை வேத சப்தங்களுடன் கொண்டு குடமுழுக்குச் செய்யும்போது இறைவனின் பிராண சக்தி சிலைவடிவிலிருந்த மூர்த்திகளில் வரவழைக்கப்படுகிறது. இதை ஆவாஹனம் செய்தல் என்பர்.

**7. நித்திய பூஜைகள் (நாள் வழிபாடு)**

குடமுழுக்காட்டியபின் இறைவன் நம்மிடையே எழுந்தருளி அருள்புரிய விரைகிறார். அவருக்கு நாள்தோறும் திருப்பள்ளியெழுச்சி, திருமுழுக்கு, நைவேத்தியம் போன்ற பதினாறு வகையான உபசாரங்கள் (பணிவிடைகள்) செய்யப்படுகின்றன. இவற்றை மொத்தமாக பூஜை என்கிறோம். நைவேத்யம் மற்றும் தாம்பூலம் ஆனபிறகு இறைவன் மகிழ்ச்சியுற்றிருப்பதால் அன்பர்கள் தத்தம் குறைகளை அர்ச்சகர் மூலம் விண்ணப்பம் செய்து இறைவன் திருவடிகளில் மலர்தூவி வணங்குகின்றனர். இதுவே அருச்சனை எனப்படும். இதனால் விரும்பியன எளிதில் இறையருளால் கிடைக்கும்.

**கட்டிடக் கலைஞர்களும் கட்டிடத்துறை அளவுகளும்**

வாஸ்து நூல்கள் கட்டிடக்கலை வல்லுநர்களைப் பற்றிய பொதுவான செய்திகளைத் தருகின்றன. இவ்வல்லுநர்களை நான்கு பிரிவுகளாகப் பகுத்துக் கூறும்.

1. மரம், கல், உலோகம் ஆகியவற்றில் சிறந்த சிற்பங்களைப் படைப்போர் (தச்சர்)
2. நூல் பிடித்துக் கல், உலோகம் ஆகியன மீது அளவுகளை வரைபவர் (சூத்ரக்ராஹி)
3. கற்களையும் சிற்பங்களையும் அழகுறப் பொருத்திக் கட்டிடங்களை எழுப்புவோர் (வர்த்தகி)
4. மேற்கூறியவர்களின் தலைவராகவும் ஆசானாகவும் உள்ளவர்கள்(ஸ்தபதி)

இவர்களில் ஸ்தபதி சிற்பம் ஓவியம் கட்டடக்கலை ஆகிய பல்வேறு துறைகளிலும் ஆழ்ந்த புலமையும் நீண்ட அனுபவமும் பெற்றவராயிருப்பர். இவர் இனிய குணமும் உயர்ந்த ஒழுக்கமும் இறைப்பற்றும் மிக்கவராய் வணக்கத்திற்கும் உரியவராயிருக்க வேண்டும் என்று சிற்பசாத்திரங்கள் வலியுறுத்துகின்றன. தமிழ்நாட்டுக் கோயில்களைக் கட்டிமுடித்தவர்கள் இத்தகைய ஸ்தபதிகளாவர். அவர்களின் பெயர்களைக் கூட இன்று அறிந்து கொள்ளமுடியவில்லை. ஆயினும் கோயிற் கல்வெட்டுக்கள் சிலவற்றில் பெருந்தச்சர் என்றும் தச்சாசாரியர் என்றும் இவர்கள் குறிப்பிடப்பட்டிருக்கின்றனர். இவர்களில் சிலரின் பெயர்கள் கூடக் காணப்படுகின்றன.

மாமல்லபுரத்து "நொண்டிவீரப்பன் குதிரைத்தொட்டி" என்று இன்று வழங்கப்படும் பாறையில் ஏழு பெருந்தச்சர்களின் பெயர்கள் பொறிக்கப் பட்டுள்ளன:-

கேவாத பெருந்தச்சன்
குணமல்லன்
பய்யமிழிப்பான்
சாதமுக்யன்
கலியாணி
திருவொற்றியூர் ஆபாஜன்
கொல்லன் சோமன்

உத்தரமேரூர் சுந்தரவரதப் பெருமாள் கோயில் கல்வெட்டு, வாஸ்து வித்தையில் தேர்ந்தவனும்... பாடக புரவாசியும் சிறந்த அறிவாளியும் எப்போதும் மெய்யே பேசும் ஸ்ரீபரமேசுவரப் பெருந்தச்சன் ஆகம நெறிகளின்படி கட்டினான் என்று குறிப்பிடுகிறது. இக்கோயிலைக் கட்டியவன் நந்திவர்ம பல்லவன் (கி.பி.731 - 96). இவன் காலத்தில் கோயில் கட்டுமானப் பணியில் ஆகமங்கள் முக்கியமான இடம் பெற்றன.

தஞ்சை பிரஹதீசுவரர் கோயில் கல்வெட்டில் சோழன் குஞ்சர மன்னனான ராஜராஜப் பெருந்தச்சன், குணவன் மதுராந்தகனான நித்திய விநோதப் பெருந்தச்சன், இலத்திச் சடையனான கண்டராதித்தப் பெருந்தச்சன் என்ற மூவர் குறிக்கப்பட்டுள்ளனர்.

இப்பெருந்தச்சர்கள் எந்த ஆகம நூல்களைப் பின்பற்றினர் ன்று அறிய முடியவில்லை. இவர்களின் படைப்புகளே பல சிற்ப லக்கண நூல்களுக்கு மூலமாக அமைந்தன.

**ளவைகள்**

சிற்ப நூல்களில் ஒரு வகை நீட்டல் அளவு பயன்படுகிறது. ந்த அளவு பிரதேசந்தோறும் மாற்றத்திற்குட்பட்டது. பெரும்பாலும் ஜமானனின் (கட்டடம் கட்டும் தலைவன்) வலக்கை நடுவிரலின் டுப்பகுதியை அங்குலமாக (விரற்கடை) கொண்டு யாக சாலைகள் ட்டப்பட்டன. இதை தேஹலப்தாங்குலம் என்பர்.

வாஸ்து நூல்கள் தங்கள் அளவுகளை பரமாணுவிலிருந்து வக்கும். இப் பரமாணு யோகிகளுக்கே புலனாகும். இப்பரமாணுவின் தாகுப்பை மானாங்குலம் என்பர்.

| | |
|---|---|
| 8 பரமாணு | ஒரு தேர்த்துகள் |
| 8 தேர்த்துகள் | ஒரு மயிர்நுனி |
| 8 மயிர்நுனி | ஒரு ஈர் |
| 8 ஈர்கள் | ஒரு பேன் |
| 8 பேன்கள் | ஒரு யவை (தானியம்) |
| 8 யவைகள் | ஒரு அங்குலம் இது மானாங்குலம் ஆகும். |
| 6 மானாங்குலம் | ஒரு தாளம் (விரல் நுனி முதல் மணிக்கட்டு வரையான உள்ளங்கை) |
| 2 தாளம் | ஒரு விதஸ்தி (கைம்முழம்) |
| 2 விதஸ்தி | ஒரு கிஷ்கு (தச்சுமுழம்) |

ஒரு தச்சுமுழத்துக்கு 24 விரல் என்பதையே நடைமுறையின் டிப்படை அளவாகக் கொண்டுள்ளனர். எனினும் பல்வேறு ரணங்களால் வேறு சில முழக்கோல்களும் நூல்களில் றப்பட்டுள்ளன. அவற்றுட்சில

| | |
|---|---|
| 24 விரல் | 1 கிஷ்குமுழம் |
| 26 விரல் | 1 தனுர்முஷ்டி |
| 25 விரல் | 1 பிராஜாபத்யம் |
| 27 விரல் | 1 தனுர்கிரஹம் |
| 31 விரல் | 1 பிரகீர்ணம் |

24 விரலுள்ள கிஷ்குமுழமே தஞ்சைக்கோயில் மற்றும் நவண்ணாமலைக் கோயில் நிர்மாணத்தில் பயன்படுத்தப்பட்டமையால், ந்சைமுழம், அண்ணாமலை முழம் என்று வழங்கப்பெற்றன. 25

விரலுள்ள பிராஜாபத்யமுழமே சிதம்பரம் கோயிலில் பயன்பட்டது. அஃது சிதம்பரமுழம் எனப்பட்டது.

24 விரல் உள்ள கிஷ்கு உத்தமம்

$23\frac{1}{3}$ விரல் உள்ள முழம் மத்திமம்

$23\frac{3}{4}$ விரல் உள்ள முழம் அதமம்

மீனாட்சி ஆலயத்தில் அதம கிஷ்குமுழம் பயன்படுத்தப்பட்டது.

இவ்வூரிலுள்ள ஸ்தபதிகள் இன்றும் தத்தம் ஊர் முழங்களையே உபயோகித்து வருகின்றனர். மயமதம் என்ற நூல் வாகனங்களை கிஷ்குவினாலும் விமானத்தை பிரஜாபத்யத்தாலும் கிராமங்களை தனுர்கிரகத்தாலும் அளக்க வேண்டும் என்று விதிக்கிறது.

# இயல் 9

# கோபுரங்களும் மண்டபங்களும்

திருக்கோயிலின் உறுப்புகளில் கோபுரம் என்பது மிகப்பெரியதும் உயர்ந்ததும் வனப்புடையதுமான உறுப்பாகும். இது மதிளை ஊடறுத்துச் செல்லும் நுழைவாயிலுக்கு மேலே அவ்வாயிலை அலங்கரித்து நிற்கும் கட்டடமாகும்.

சங்க காலத்தில் மதிள்களும் வாயில்களும் இருந்தன. ஆனால் வாயில் மேல் கோபுரம் இருந்ததாகத் தெரியவில்லை. இறையனார் அகப்பொருள் உரையில், "கருவமைந்த மாநகருக்கு உருவமைந்த வாயில் மாடம் போலவும்" என்ற உவமை வருகிறது. "கருவறை பொருந்திய கோயிலுக்கு அழகு பொருந்திய வாயிற் கோபுரம் போல" என்று பொருள் கொண்டால் கோபுரம் இருந்ததாகக் கொள்ளலாம். "நகர்" என்பது கோயில் என்ற பொருளில் ஆளப்பட்டிருக்கிறது. "உருஅமைந்த" என்பதற்குப் பதுமைகள் பொருந்திய என்றும் "மாடம்" என்பதற்கு நிலைகள் பொருந்திய கோபுரம் என்றும் பொருள் காணலாம். "எழுநிலை மாடம்" என்று உயர்ந்த மாளிகையை இளங்கோ குறிப்பிடுவர்.

பல்லவர் காலத்தில் நரசிம்மவர்மன் உண்டாக்கிய ஒற்றைக்கல் கோயில்களில் விமானங்கள் உள்ளனவே யன்றிக் கோபுரம் காணப்படவில்லை. அவன் காலத்து வாழ்ந்த திருநாவுக்கரசர் 'கோலக் கோபுரக்கோகரணம்" என்று கோபுரத்தைக் குறிப்பிடுகிறார். இராசசிம்மன் கட்டிய காஞ்சி கைலாசநாதர் கோயிலில்தான் காலத்தால் முற்பட்ட கோபுரத்தைப் பார்க்க முடிகிறது. அக்கோபுரம் விமானத்தை விடத் தாழ்ந்தே எழுப்பப்பட்டிருக்கிறது. மேலும் ஒரே நிலையுள்ளதாகவும் உள்ளது.

சோழர் காலத்தில்தான் கோபுரங்கள் பெருகின. ஆரம்ப காலத்தில் விமானத்தைவிடக் குறைந்த உயரமுள்ளதாகவே அவை கட்டப்பட்டன. மேலைப் பழுவூரிலுள்ள சோழர் கோபுரம் மூன்று நிலைகளோடு கூடியதாய்க் கட்டப்பட்டது. இராஜராஜ சோழன் கட்டிய தஞ்சைப் பெருவுடையார் கோவிலிலும் இரண்டு கோபுரங்கள் உள்ளன. ஆனால் அவற்றை விட விமானம் மிகவும் உயர்ந்தோங்கி நிற்கக் காணலாம். தாராசுரம், திருபுவனம் என்ற ஊர்களில் சோழர்களின் திருப்பணியான கோபுரங்களும் குட்டையாகவே உள்ளன. சோழர் காலத்து இறுதியில் பாண்டியர் ஆட்சி மேலோங்கியபோது சுந்தர பாண்டியன் சிதம்பரத்தில் ஏழுநிலைகளையுடைய கோபுரத்தைக் கட்டினான். இது ஏறத்தாழ 100 அடி உயரமானது.

கோபுரங்களைப் பற்றிய சில செய்திகள் தேவாரம் மற்றும் திவ்வியப் பிரபந்தங்களில் கிடைக்கின்றன.

இலங்கு கோபுரம் தீண்டு மதியம் திகழும் நறையூர் (தே. 770)
கோபுரங்கள் மேற் சென்றெடுத்து உயர்வான்
மதிதோயும் திருக்களர் (தே. 2022)
மாடமாளிகை கோபுரம்.......சூழ்தரு கோட்டூர் (தே. 2654)
கொண்டல்சேர் கோபுரம்...... மயேந்திரப்பள்ளி (தே. 3130)
கோபுரம் குளிர்மதி....ஏடகம் (தே. 3141)
கோபுரம் சூழ்மணிக்கோயில்....ஆலவாய் (தே. 4093)
கொடி மதிள்கள் மாளிகை கோபுரங்கள்
அரிமேய விண்ணகரம் (பெ. தி.மொ. 3.10.8)

பெரியாழ்வார் மதுரை மாநகரில் திருமாலே பரம்பொருள் என்று நிறுவிப் பாண்டியமன்னன் கட்டிய பொற்கிழியைப் பரிசிலாகப் பெற்று அப்பொற்காசுகளைக் கொண்டு ஸ்ரீவில்லிபுத்தூரில் வடபெருங் கோயிலுடையானுக்குக் குன்ற மன்னதோர் கோபுரம் எழுப்பினார். அக்கோபுரமே தமிழ்நாட்டு அரசின் சின்னமாக அணி செய்திருக்கிறது.

நாயக்க மன்னர் ஆட்சியில்தான் மிக நெடிய கோபுரங்கள் கட்டப்பெற்றன. 'கோபுர தரிசனம் பாப விமோசனம்'' என்ற பழமொழி எழுந்தது. மதிள்களின் நாற்புரங்களிலும் கோபுரங்கள் எழுப்பப்பட்டன. மதிள்களின் எண்ணிக்கையும் பெருகியது. திருவரங்கம் மதுரை ஆலயங்களில் இவ்வாறு மதிள்களையும் கோபுரங்களையும் காணலாம். கோபுரங்கள் மிக உயரமாக எழுப்பப்பட்டு மனிதனின் உள்ளத்தில் மகோன்னத உணர்ச்சி தூண்டப்பட்டது. ஆலயங்களில் நுழைவு பெற முடியாதவர்களும் தொலைவிலிருந்து கண்டு தொழுவதற்கு அது வாய்ப்பளித்தது. கோபுரத்தை ''ஸ்தூல லிங்கம்'' என்று சிவாகமங்கள் வருணிக்கின்றன. வைஷ்ணவ சம்பிரதாயத்தில் விமானத்துடன் கூடிய மூலக்கோயிலை 'கோயிலாழ்வார்'' என்று குறிப்பிடுவர். அதுபோல் கோபுரங்களில் உயரமானதை 'கோபுரங்கள் நாயகம்'' என்றழைப்பதும் ''திருக்கோபுரத்து நாயனார்'' என்று அடியார்களுக்குப் பெயரிடுவதும் வைஷ்ணவ மரபாகும்.

விமானங்கள் கருவறை மேற் கட்டப்படும்; கோபுரங்கள் மதிளின் நடுவில் கட்டப்படும். கருவறை, பலிபீடம் கொடிமரம், நந்தி, அல்லது கருடன் கோபுரம் இவை ஒரே நேர்கோட்டில் அமையும். விமானத்தின் பீடம் சதுரமாகவோ வட்டமாகவோ இருக்கும். கோபுரத்தின் அடிப்பாகம் எப்போதும் செவ்வகமாயிருக்கும். விமானங்கள் ஏகதளம், த்விதளம், த்ரிதளம் என்று தளத்தினால் வகைப்படுத்தப்படும். கோபுரங்கள் நிலைகளால் அழைக்கப்படும். விமானத்தில் ஸ்தூபி ஒன்று அல்லது மிகச் சிலவாக இருக்கும். கோபுரத்தின் ஸ்தூபிகள் பலவாக இருக்கும். விமானத்தில் 96 வகைகளை ஆகம நூல்கள் குறிப்பிடும். கோபுரத்தில் 3 வகைகள் குறிப்பிடப்படும்.

கிருஷ்ண தேவராயர் காலத்தில் கோபுரக்கட்டுமானப்பணியில் பெரிய வளர்ச்சி ஏற்பட்டது. சிதம்பரம் வடக்குக் கோபுரமும் திருவண்ணாமலை மேற்குக் கோபுரமும் இக்காலத்தனவாகும். இவற்றின் அடிப்பாகம் கருங்கற்களாலும் மேற்பாகம் செங்கல் சுண்ணாம்புகளாலும் கட்டப்பட்டன. இவர்கள் கட்டிய கோபுரத்தின் உச்சியிலுள்ள யாளிமுக வேலைப்பாடு மிகச் சீரியதாகும். கிருஷ்ண தேவராயர் மற்றும் ராஜப் பிரதிநிதிகள் பல கோபுரங்களுக்கு அடித்தளம் அமைத்து முடிக்காதுவிட்டனர். அவற்றை மக்கள் ராய கோபுரம் என்று அழைத்தனர்.

திருவரங்கத்தில் விஜயநகரப் பேரரசின் வம்சாவளியில் வந்த அச்சுதப்ப நாயக்கன் கி.பி. 16 ஆம் நூற்றாண்டில் தெற்கு வாசற்கண் மாபெரும் ராஜகோபுரம் எழுப்பத் தொடங்கினான். அடையவளைந்தான் திருச்சுற்றில் தெற்கு வாசலில் எழுப்பப்பட்ட இக்கோபுரம் அச்சுதப்ப நாயக்கருக்குப் பிறகு தஞ்சை நாயக்க மன்னர்களால் தொடர்ந்து கட்டப்பெற்றது. திருச்சிராப்பள்ளி (கி.பி. 1751 - 58) பிரஞ்சுப் படையின் ஆதிக்கத்தின்கீழ் வரவே கோபுரத்திருப்பணி நின்று போயிற்று. அண்மைக்காலத்தில் அகோபில மடம் ஜீயர் ஸ்வாமி அக்கோபுரத்தை முழுமையாகக் கட்டி 1987ஆம் வருடம் குடமுழுக்கும், செய்தார். இது ஆசியாவிலேயே மிக உயர்ந்த கோபுரமாகப் புகழ்பெற்று விளங்குகிறது.

தென்காசி கோபுரம் பராக்கிரம பாண்டியனால் கட்டப்பெற்று இடையில் தீக்கு இரையாகிச் சேதமுற்று விழுந்தது. அண்மையில் (ஜூன் 27, 1990) அது முழுமையாகக் கட்டப்பட்டு குடமுழுக்கும் செய்யப்பெற்றுத் திகழ்கிறது.

**கோபுரத்தின் பாகங்கள்**

கோபுரத்தில் கீழ்ப்பகுதி கருங்கற்களால் அமைக்கப்படுகிறது. இது கல்காரம் என்று அழைக்கப்படும்.

இது பிரதமம், உபானம், கண்டம், பட்டிகை, அதிஷ்டானம், வேதிகை, கால், உத்திரம், எழுதகம், யாளம் ஆகிய பகுதிகளைக் கொண்டது.

மேலும் கோஷ்டம், போதிகை, பலகை, கும்பபஞ்சரம் ஆகிய வேலைப்பாடுகளும் இடம் பெறும்.

கோஷ்டங்களில் துவாரபாலகர் உருவங்கள் வைக்கப்படுகின்றன. கல்காரத்தின் மேல் செங்கல் சுண்ணாம்புகளால் நிலைகள் வைக்கப்படும். இவற்றில் இடையிடையே கோபுரம் தாங்கிகள் என்று சொல்லப்படும் சுதை உருவங்கள் அமைக்கப்படும். ஒவ்வொரு நிலையைச் சுற்றியுள்ள கோஷ்டங்களில் தெய்வ உருவங்கள் இதிகாஸ புராணக் கதைக் காட்சிகள் சுதைகளாகச் செய்யப்பட்டு பொருத்தப்பட்டிருக்கும். சுதை வேலைப்பாடில்லாத கோபுரம் மொட்டைக்கோபுரம் என்று அழைக்கப்பட்டது.

கோபுரங்கள் அடியில் பருத்து உயர உயரச் சிறுத்துப் பிரமிடுகள் போலக் கட்டப்பட்டன. சில வகை கோபுரங்களில் நடுப்பாகம் வளைந்து காணப்படும். இவை பெண் கோபுரங்கள். சில வகை கோபுரங்களில் நடுப்பாகம் புடைத்துக் காணப்படும். இவை ஆண் கோபுரங்கள். மீனாட்சி திருக்கோயிலில் தெற்கு கோபுரம் பெண்கோபுரவகையாகும். இதனை மாலைக்கட்டு மண்டபம் என்றும் கூறுவர்.

கோபுரத்தின் மேல் பகுதி சிகரம். இதில் வண்டிக்கூடு போல் அமையும் பகுதி விமானம் என்றும் பாண்டியல் என்றும் குறிப்பிடப்படும். கோபுரத்தின் உச்சியின் நடுப்பகுதிக்குக் கபாலம் என்று பெயர். இதிலுள்ள துவாரம் பிரபஞ்சவெளி எனப்படும். சந்தனக் கல்லைத் துளைத்து நடுவில் தங்கத் தகடுவைத்து அதன்மேல் வெள்ளித்தகடு வைத்து நவரத்தினக் கற்கள் வெள்ளிக் காசுகள் வைத்துக் கபால வெளியை மூடி அதன்மேல் நடுக்கலசத்துக்குரிய யோக தண்டு என்று சொல்லப்படும் தேக்குமரத்துண்டு நடப்படுகிறது. இதில் கலசம் செருகப்படுகிறது. கலசத்தின் குடப்பகுதியில் வெள்ளியால் மீன், ஆமை போன்ற தகடுகளும் நவரத்தினக்கற்களும் இடப்படுகின்றன.

கோபுரத்தின் உச்சியில் (பாண்டியல்) இருகோடியிலும் யாளி வேலைப்பாடுகள் "நாசி" என்று கூறப்படும். கடைசி நிலையின் மையத்திலும் ஒரு நாசி இருக்கும். இதற்கு "அர்த்தநாசி" என்று பெயர். இருபுறமுள்ள மஹாநாசிகளின் மையத்தில் "கந்தர்வ பத்தி, பூதபத்தி, யாளி பத்தி" என்று மூன்று பத்திகளில் கந்தர்வ பாலர்கள், பூதங்கள், யாளிகள் சுதைகளில் அமைக்கப்படுகின்றன. மகாநாசியின் தலை பயங்கரத் தோற்றத்தைக் கொண்டிருக்கும். கண்கள் சட்டியைக் கவிழ்த்ததுபோலக் காணப்படும்.

ஸ்தூபி கலசங்கள் செம்பினால் செய்யப்படுகின்றன. இவற்றில் உள்ளே வரகு தானியம் நிரப்பப்படும்.

சில கோபுரங்கள் கீழ்ப்பகுதியில் தேவகோட்டங்கள் உள்ளன. அவற்றில் தெய்வச் சிலைகள் வைக்கப்படும். அவற்றின் பெயர்கள் கல்லெழுத்தால் பொறிக்கப்பட்டுள்ளன. சிதம்பரம், காஞ்சிபுரம் முதலிய ஊர்களிலுள்ள கோபுரங்களின் நிலைக்கற்களில் 108 நாட்டிய கரணங்கள் சிற்பங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன. சிதம்பரத்தில் இச்சிற்பங்களின் கீழ் நாட்டிய நூல் சூத்திரங்கள் பொறிக்கப்பட்டிருக்கின்றன.

அரசர் தாம் கட்டிய கோபுரங்களுக்குப் பெயர் சூட்டி அழைத்தனர். இராஜராஜ சோழன் கட்டிய தஞ்சைப் பெருவுடையார் ஆலயத்து கோபுரங்கள் கேரளாந்தகன்திருவாயில் என்றும் இராஜராஜன் திருவாயில் என்றும் பெயரிடப்பட்டன.

**மண்டபங்கள்**

கோயில் கட்டட வளர்ச்சியில் மண்டபங்கள் சிறப்பிடம் பெறுகின்றன. காலப்போக்கில் பலவகைப் பயன்பாடுகளுக்காக மண்டபங்களின் எண்ணிக்கை பெருகின.

அர்த்த மண்டபம், மகாமண்டபம், திவ்ய மண்டபம், அபிஷேக மண்டபம், வாகன மண்டபம், அலங்கார மண்டபம், நிருத்த மண்டபம், கல்யாண மண்டபம், முகமண்டபம், நூற்றுக்கால் ஆயிரக்கால் மண்டபங்கள், துலாபார மண்டபம் என்று பல மண்டபங்கள் கோயில் வளாகத்தில் உருவாயின.

மண்டபத்தின் முக்கியமான பகுதி தூண்கள். மொட்டையான தூண்களிலிருந்து கலைவேலைப்பாடுகள் நிறைந்த தூண்கள் வரை இவற்றின் வளர்ச்சி காணப்படுகிறது.

ஒன்றின் மேல் ஒன்றாக அடுக்கிக் கட்டிய தூண்களிலிருந்து ஒரே கல்லால் இயன்ற மிக உயர்ந்த தூண்கள் வரையிலும் பல்வகையான தூண்கள் காணப்படுகின்றன.

இத்தூண்களில் அரசர்கள், அரசிகள், அமைச்சர்கள் உருவச்சிலைகள் இடம் பெறுகின்றன. மண்டபத்தை எழுப்பியவர்கள் உருவச்சிலைகளும் கூப்பிய கைகளுடன் தூண்களில் சேர்க்கப்படுகின்றன. புராண வரலாற்றுச் சிற்பங்களும் குதிரைவீரர்கள், யாளிகள் ஆகிய உருவங்களும் தூண்களை அழகுபடுத்தின.

தூண்களைச் சுற்றி வேலைப்பாடில்லாத பாகங்களில் கல்வெட்டுக்கள் செதுக்கப்பட்டன. தூண்களின் அமைப்பை ஆராய்ந்து மண்டபத்தின் காலத்தை ஒருவாறு அறியமுடியும். தூண்களிலுள்ள சில உருவங்கள் மக்களால் வழிபடப் பெற்று புகழ் பெறுகின்றன.

**தூண்கள்**

இவை கால், தூண், ஸ்தம்பம், கம்பம், கந்து என்றெல்லாம் அழைககப்படுகின்றன.

ஸ்தம்பங்கள், ஜயஸ்தம்பம் என்றும் கீர்த்திஸ்தம்பம் என்றும் இருவகைப்படும்.

ஸ்கந்த புராணத்திலிருந்து மேலும் சிலவகைகளைப் பற்றி நாம் அறியமுடிகிறது. ஸாலோத்பவ ஸ்தம்பம், ஹேமஸ்தம்பம், நில்மயஸ்தம்பம், ஸ்ஹதிஸ்தம்பம், மநஸ்தம்பம் ஆகியவை அவையாகும்.

ஸ்தம்பத்தின் அடிப்பாகத்திலிருந்து காணப்படும் பகுதிகளாவன ஓம, கட, வீரகண்ட போதிகைகள்.

தமிழ்நூல்கள் அவற்றை வரி, கால், பத்மபந்தம், கலசம், தாடி, கும்பம், இதழ், பலகை, போதிகை, உத்திரம், கபோதம் என்று கூறும்.

பொதுவாகக் கூறப்படும் பாகங்கள்

| | | |
|---|---|---|
| திரணை | - | ***Bulbous*** |
| கழுத்து | - | ***Neck*** |
| குடம் | - | ***Cavity*** |
| பலகை | - | ***Abacus*** |
| பட்டி | - | ***Band*** |
| இதழ் | - | ***Petal*** |

| **தூண்களின் வகை** | **மண்டபங்கள்** | |
|---|---|---|
| சதுரப்பட்டைத்தூண்கள் | விஜயமண்டபம் | - 8 தூண்கள் |
| பட்டைத்தூண்கள் | க்ஷீத மண்டபம் | - 4-28 தூண்கள் |
| உருள் பட்டைத் தூண்கள் | ஸாதாரண மண்டபம் | - 28-100 தூண்கள் |
| தேய்க்கப்பட்ட தூண்கள் | | |
| மெருகுத்தூண்கள் | வாஸ்து மண்டபம் | - 4-32 தூண்கள் |
| சிற்பத்தூண்கள் | | |
| கட்டுத் தூண்கள் | | |
| இசைத்தூண்கள் | | |
| யாளித் தூண்கள் | | |
| கோபுரத் தூண்கள் | | |
| சிலைதாங்கித் தூண்கள் | | |

திருக்கோயில் பூஜாகாலங்களில் இசைத்தூண்களில் ஒலி எழுப்பி நாட்டியத்திற்கு ஏற்றவாறு வாத்யகோஷம் செய்து வந்தனர். தமிழகத்திருக்கோயில்களிலுள்ள மண்டபங்களைப் பற்றி விரிவான ஆராய்ச்சிகள் இப்போது மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

# இயல் 10

# திருக்கோயில் செப்புத் திருமேனிகள்

### தெய்வத்திருவுருவங்களின் பழமை

சிந்துசமவெளியில் அகழ்ந்தெடுக்கப்பட்ட பொருள்களில் ஒன்று வெண்கலத்தில் செய்யப்பட்ட நடனமாதின் உருவமாகும். ஏறத்தாழ நாலாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டதாக இதனைக் கருதுவர். இதன் உயரம் 9 செ.மீ. உள்ளது. இதே போல் கி.மு. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கருதப்படும் பார்சுவநாதர் சிலையொன்றும் கிடைத்துள்ளது. இவை அகழ்வாராய்ச்சிகளில் அறியப்பட்டவை. ஆனால் இதற்குமுற்பட்ட காலத்திலேயே உருவச்சிலைகள் வார்க்கப்பட்டிருந்தன என்பதற்கு வேத நூல்களில் ஆதாரங்கள் உள்ளன.

### நூல்களின் குறிப்புகள்

பழமையான ரிக் வேதத்தில் பொன்னாலான உருவங்கள் வார்க்கும் வழக்கம் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதர்வண வேதத்தில் தெய்வ உருவங்கள் செய்வதற்கான இருவகை உலோகங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவை ச்யாம அயஸ் என்றும் லோகித அயஸ் என்றும் பெயரிடப்பட்டு வழங்கின.

சுக்ல யஜுர் வேதத்தில் பொன், இரும்பு, செம்பு, ஈயம், வெள்ளீயம், அயஸ் என்ற ஆறுவகை உலோகங்களைப் பற்றிய செய்திகள் வருகின்றன. கிருஷ்ண யஜுர் வேதத்தில் மூன்று தேவிகளின் பொற்படிமங்களைப் பற்றிய குறிப்பு வருகிறது.

மகாபாரதத்தில், இரும்பினாலான ஓர் பிரதிமையை திருதராஷ்டிரன் தழுவியதாகச் செய்தியுள்ளது.

இராமாயணத்தில் சீதையின் பொற்சிலையை வைத்து இராமபிரான் அசுவமேத யாகம் செய்த செய்தியுள்ளது.

ஸ்மிருதிகளிலும் பாணினியின் வியாகரண நூலிலும் கௌடில்யரின் அர்த்த சாஸ்திரத்திலும் பௌத்த ஜாதகக் கதைகளிலும் மெகஸ்தனீஸ் பயணக் குறிப்புக்களிலும் படிமங்களைப் பற்றிய செய்திகள் உள்ளன.

**தமிழ் நூல்களில் குறிப்புகள்**

வேதியர்களின் இல்லங்களில் மெழுகப்பட்ட அறைகளில் தெய்வ உருவங்கள் வைத்து வணங்கப்பட்டன. (பெ.பா. படை 298)

மலைபோன்ற மார்பினையுடைய திருமாலின் அடிகளைத் தலையினால் வணங்கிக் கைகளால் தொட்டு ஒருவன் ஆணையிட்டான். (கலித் 188)

ஈசன் பொன்னடிக்குக் காரைக்காலம்மையார் பூமாலை புனைந்து அணிவித்தார். (அற்பு. திருவந். 87)

"இவர் இவர் எம்பெருமான் என்று சுவர்மிசைச் சார்த்தியும் வைத்தும் தொழுவர்" என்பது பொய்கையாழ்வார் திருவாக்கு (மு.தி.அ. 14)

"மண் புறம் பூசி உள்ளாய் நின்ற மெழுகூற்றினாற்போல் ஊற்றும்" என்று ஆண்டாள் படிமத்தை வார்க்கும் முறையைக் கூறியுள்ளார். (நாச்தி 10-8)

அரக்கினால் செய்த பாவை வெய்யில் பட்டு உருகுவதைக் கண்ட கவிஞர் "செய்வுறு பாவையன்ன" என்று குறுந்தொகையில் (195) கூறுகிறார். வெண்கல மணியை வார்ப்பதற்காக அரக்கினால் இயற்றிய கரு உலையில் வைக்கப்படும் வழக்கத்தையும் குறுந்தொகை (155) கூறுகிறது.

சங்க காலத்தில் உறையூர் (அகம் 4) திருவேங்கடம் (அகம் 61) திருப்பரங்குன்றம் (அகம் 149) முதலிய தலங்களில் சிறப்பான திருவிழாக்கள் நடைபெற்றன. அப்போது இறைவனுடைய செப்புத் திருமேனிகள் திருவுலாவாக வீதிகளில் எழுந்தருளச் செய்யப்பட்டன.

புகார் நகரில் நடைபெற்ற விழாவில் மகளிர் சாளரங்கள் வழியாகத் தெய்வவுருவங்களைக் கண்டு கைகூப்பினர். (பட்டினப் 150-160) இனி, பல்லவர், சோழர்காலப் படிமங்கள் சிலவற்றைப் பற்றிக் காண்போம்.

**பல்லவர்காலச் செப்புத்திருமேனிகள்**
**(பொருட்காட்சி சாலையில் உள்ளபடி)**

1) தஞ்சை மாவட்டம் பெருந்தோட்டத்தில் கிடைத்த திருமாலின் செப்புத் திருமேனி. இஃது தஞ்சை கலைக் கூடத்திலுள்ளது. உயரம் 24 செ.மீ. இதன் காலம் கி.பி. 8 ஆம் நூற்றாண்டு.

தலையில் மேல் நோக்கிச் சிறுத்துச் செல்லும் கிரீடம் ; காதுகளில் மகரகுண்டலங்கள்,

கழுத்தில் மணிகள் பதித்த கண்டியும் அதிலிருந்து தொங்கும் முத்துக்குஞ்சங்களும்,

பட்டைப் பூணூல் ; இடையில் உதரபந்தம், மேல் வலக்கரத்தில் சக்கரமும் இடக்கரத்தில் சங்கமும் ; கீழ்வலக்கரத்தில் வரதமுத்திரை, இடக்கரம் தொடை மீது அமர்ந்துள்ளது. கடி சூத்திரமும் உத்தரீயமும் அழகுறக் கட்டப்பட்டுள்ளது. பீதாம்பரத்தின் குறுக்கே மெல்லிய கோடுகள் செல்கின்றன.

2) திருச்சி மாவட்டம் வழுதூரில் கிடைத்த திருமால் திருமேனி இப்போது சென்னை அரும் பொருட்காட்சி சாலையிலுள்ளது. உயரம் 21 செ.மீ. சங்கு சக்கரங்கள் உடைந்துள்ளன. கழுத்தில் இரண்டு கண்டிகைகள், வலது மார்பில் ஸ்ரீவத்ஸம் என்ற திருமறு ; முகம் தேய்ந்துள்ளது.

3) கிடைத்த இடம் தெரியவில்லை. மேற்குறித்த அரும்பொருட்காட்சி சாலையிலுள்ளது. உயரம் 25 செ.மீ. அபய முத்திரை காட்டும், கீழ் வலது கையில் பெருவிரலுக்கும், சுட்டுவிரலுக்கும் இடையில் நீண்ட காம்புள்ள தாமரைமொட்டு, கீழ் இடதுகையில் கதாயுதம்.

4) கோவை மாவட்டம் சிங்காநல்லூர் கோயிலில் இன்றும் வழிபாட்டிலுள்ள உலகளந்த பெருமாள் செப்புத் திருமேனி: கிரீடத்தில் கலைநுணுக்கங்கள் அழிந்துள்ளன. பூணூலின் நடுப்புரி வலப்புறமுள்ள நான்காவது கையின் முன்புறமாகச் செல்கிறது. மார்பில் ஸ்ரீவத்ஸம் (திருமறு) உள்ளது. வலப்புறம் மேலேயுள்ள கை முதுகிலுள்ள அம்பறாத் தூணியிலிருந்த ஓர் அம்பை எடுத்திருக்கிறது.

அடுத்த கையில் ஒரு வாளின் பிடிமட்டும் உள்ளது. மூன்றாவது கையில் கதையின் மேற்பாகம் மட்டும் உள்ளது. கடைசிக் கையில் சக்கரம் உள்ளது. இடப்புறத்து மேற்கை அம்பறாத் தூணியிலிருந்து அம்பை எடுக்கப் போகிறது. அடுத்தகை கடக முத்திரையில் வில்லை வைத்துள்ளது. மூன்றாவது கையில் வட்டமான கேடயம் உள்ளது. இவ்விரு கைகளின் நடுவில் மேலே உயர எடுத்த திருப்பாதம். கடைசிக்கை முதலிரண்டு கைகளுக்கிடையே மேல்நோக்கி சூசி முத்திரையிலுள்ளது.

மேல் தூக்கிய காலிலிருந்து கீழ் நிற்கும் கால்வரை அலை அலையான மடிப்புகளுடன் கூடிய விசிறி போன்ற பீதாம்பரம் உள்ளது.

5) கூரம் 'சிவன் கோயிலில் கிடைத்த சிவபிரான் திருமேனி சென்னை அரும்பொருட்காட்சி சாலையில் உள்ளது. உயரம் 53 செ.மீ. இஃது கூத்தப்பிரான் திருவுருவம் . திருவாசி இல்லை. ஜடா மகுடத்தின் வலப்புறம் பாதிமதியும் பாம்புகளும், இடப்புறம் ஊமத்தை மலர், முதுகில் ஆறு பின்னுசடைக் கற்றைகள், கழுத்தில் மூன்று கண்டிகைகள், கீழ்க்கண்டிகையில் பதக்கம் மேல் வலக்கையில் துடி, இடக்கையில் எரி அகல் இல்லை. தோளைத் தொட்டுக் கிடக்கும் அரவம் உடைந்துள்ளது.

**சோழர்காலச் செப்புத் திருமேனிகள்**

கி.பி. 9ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் பல்லவரின் செல்வாக்கு குறைந்துவிட்டது. சோழப் பேரரசு உதிக்கத் தொடங்கியது. அது 10 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் முதல் பராந்தக சோழன் காலத்தில் விரிவடைந்தது. வடக்கே துங்கபத்திரை முதல் தெற்கே ஈழம் வரை விரிவடைந்தது. முதல் இராஜராஜசோழன் ஆட்சியில் சேரநாடும் கலிங்கநாடும் ஈழமும் அடங்கின. அவன் மகன் முதல் இராஜேந்திரன் காலத்தில் கடாரமும் சோழப்பேரரசில் ஒரு பகுதியாகியது. 13ஆம் நூற்றாண்டு வரை இவ்வாட்சி கொடிகட்டிப் பறந்தது. இந்த நானூறு ஆண்டு காலத்தில் கலைகள் செழித்து வளர்ந்தன. சோழர் கலைப் பாணி உருவாகியது. அவற்றில் செப்புப் படிமக்கலை உயர்ந்த நிலையை எய்தியது.

ஆதித்த சோழன் (கி.பி. 871 - 907) காலத்தில் கற்றளிகள் எடுப்பிக்கப்பட்டன. திருப்புறம்பயத்திலுள்ள சாட்சிநாதர் கோயிலில் இருந்த சிவபெருமானுடைய செப்புத்திருமேனி வீணையை ஏந்திய நிலையில் தலையை வலப்புறம் சாய்த்து நான்கு கரங்களுடன் திரிபங்கி நிலையிலுள்ளது. மானும் மழுவும் கைம்மாறி உள்ளன. மிகவும் அரியபடிமமாகக் கருதப்படும் இத்திருமேனி ஆதித்தசோழன் காலத்தைச் சார்ந்தது. 79 செ.மீ. உயரமுள்ள இத்திருமேனி தற்போது தஞ்சை கலைக் கூடத்தில் உள்ளது.

தஞ்சை மாவட்டம் கீழையூர்ச் சிவன் கோயிலில் உள்ள முருகன் செப்புத்திருமேனி மேல் வலதுகையில் வச்சிராயுதம், இடதுகையில் உருத்திராக்க மாலை, கீழ் வலது கையில் அபய முத்திரையுடன் கண் கவர் வனப்புடன் திகழ்கிறது.

பல்லவனீச்சுரம் கோயிலில் உள்ள சேயுடைச் செல்வியின் திருமேனி மிக அரிய கலைப் படைப்பாகும். இடக்காலைத் தொங்கவிட்டும் வலக்காலைத் தூக்கி மடித்து வைத்தும் வலக்கையில் மலருடனும் இடக்கையை மடியின் மீது படிய வைத்தும் உள்ளது. தன் மடியிலிருந்து சேயைத் தழுவத்துடிக்கும் தாயின் பரிவை இப்படிமத்தில் காணலாம்.

நல்லூரில் இடங்கொண்ட கல்யாண சுந்தரேசர் கோயிலிலுள்ள கூத்தப்பிரான் செப்புத்திருமேனி மிகவும் கலை நுட்பம் உடையதாய்த் திகழ்கிறது. நீண்டுயர்ந்த சடாமகுடம், உச்சிமலர், வலப்புறம் பிறைமதி, இடப்புறம் ஊமத்த மலர், இடது காதில் குழை, கழுத்தில் அகன்ற கண்டிகையும் பதக்கமும் உருத்திராக்க மாலையும், தலையை வலப்புறம் சாய்த்து வலதுதோள் கீழேயும் இடது தோள் மேலேயும் போயுள்ளன. கைகள் வலப்புறத்தில் எரியகல், மணி, படமெடுத்த முத்தலை அரவு, வீசியகை இவற்றைக் காட்டுகின்றன. உத்தரீயத்தின் இரு நுனிகளும் திருவாசியோடு சேர்ந்துள்ளன. இரு கால்களுக்கும் இடையே உள்ள

வெளியைச் சதுரமாகத் தோற்றுவித்து நடமாடும் சதுரன் என்பதைக் காட்டியிருக்கிறார் படிமக் கலைஞர். முயலகன் அமர்ந்த நிலையிலுள்ளான் வலப்பாதம் முயலகன் தலை மீதுள்ளது.

சோழர் காலத்தில் இராமபிரானுடைய செப்புத் திருமேனிகள் பலகலை வண்ணங்களோடு படைக்கப்பட்டன. தஞ்சை மாவட்டம் திருச்சேறை, பருத்தியூர், வடக்குப் பனையூர் ஆகிய இடங்களிலுள்ள இராமபிரான் செப்புத் திருமேனிகள் வனப்பு மிக்கவையாகவுள்ளன.

**படிமக்கலை**

தொல்காப்பியம் அகத்திணை இயலில் 28ஆம் நூற்பாவின் உரையில் படிமை என்னும் சொல் பிரதிமா என்ற வடசொல்லின் திரிபு என்று கூறி தேவர்க்கு ஒப்புமையாக நிலத்தின்கண் செய்து அமைத்த தேவர்மேல் வந்தது என்று இளம்பூரண அடிகள் குறிப்பிடுகிறார்.

சிலப்பதிகாரம் நடுகற்காதையில் (225) கைவினை முற்றிய தெய்வப் படிமத்து என்ற தொடர் வருகிறது. வாழ்த்துக் காதையிலும், "நிலவரசர் நீண்முடியால் பலர் தொழு படிமம் காட்டித் தடமுலைப் பூசலாட்டியைக் கடவுள் மங்கலம் செய்தபின்னாள்" என்று வருகிறது.

இராஜராஜ சோழன் காலத்துக்குமுன் பிரதிமம் என்ற சொல் வழங்கப்பெற்றது. அவன் காலத்துக்குப் பிறகு தெய்வவுருவங்களை திருமேனி என்றும் மனித உருவங்களை பிரதிமம் என்றும் குறித்தனர். இதற்கு மாறாக இராஜராஜனுடைய தமக்கை குந்தவையார் தம்முடைய பெற்றோர்களின் திருவுருவங்களை வார்த்து பொன்மாளிகைத் துஞ்சின தேவராக எழுந்தருள்வித்த திருமேனி என்றும் குறித்து வைத்துள்ளனர்.

தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் அறுபதுக்கும் மேற்பட்ட திருமேனிகளை அரசர்கள் அளித்தனர். அவற்றின் உயரம், நிறை, கனமா, பொள்ளலா, நின்றகோலமா, பீடம், பிரபை முதலிய விவரங்களைக் கல்வெட்டுக்களில் பொறித்துவைத்தனர். இராஜராஜன் செய்து வைத்த ஆடல்வல்லான் திருமேனியின் விவரமாவது :-

கீழ்க்கிடந்த முசலகனோடுகூட முக்காலே அரைக்கால் முழம் உசரமும், ஸ்ரீஹஸ்தம் நாலும், ஜடைமேல் கங்க பட்டாரகியும், ஜடை ஒன்பதும், பூமாலை ஏழும் உடைய கனமாக எழுந்தருள்வித்த ஆடவல்லார் திருமேனி ஒன்று. ஐவிரல் உசரத்து அரை முழ நீளத்து இவர் எழுந்தருளிநின்ற மூவிரல் உசரம் உடைய பத்மம் ஒன்று, ஐவிரல் உசரத்து அரைமுழ நீளத்துப் பதிற்றுவிரல் அகலமுடைய பீடம் ஒன்று, மும்முழமே இருவிரல் சுற்றில் கனமாகச் செய்த பிரபை ஒன்று.

சோழர்காலத்துச் செப்புத் திருமேனிகள் பல்லவர் காலத்துச் செப்புத்திருமேனிகளைவிட அளவிற் பெரியவை, அணிகளால் புனையப்பட்டவை.

**படிமநூல்கள்**

சைவ, வைணவ ஆகமநூல்கள் படிமங்களைப் பற்றிய பல்வேறு செய்திகளைத் தருகின்றன. தமிழ்நாட்டில் வழக்கத்திலுள்ள சிற்பநூல்கள் படிமங்களை வார்க்கும் முறை, இலக்கணம் முதலியவற்றைக் கூறுகின்றன.

**மானசாரம் :**

மானம்-அளவு 20 அதிகாரங்களுடையநூல், இலிங்கம், மும்மூர்த்திகள், சக்தி, சமண பௌத்த உருவங்கள், பீடங்கள், வாகனங்கள், பக்தர்கள், முனிவர்கள், இயக்கர்கள், உத்தம மத்திம, அதம தச தாலங்கள், தேன் மெழுகுமுறை, கண்திறத்தல் முதலியவை வருணிக்கப்படுகின்றன.

**காசியபீயம்**

இதன் முற்பகுதி கட்டடக் கலை பற்றியது. பிற்பகுதியில் பரிவார தேவதைகள், பதினெண்மூர்த்திகள், சிவலிங்கங்கள் முதலியன பற்றிக் கூறப்படுகின்றன.

**சகளாதிகாரம் :**

இஃது அகத்தியரால் இயற்றப்பட்டது. சகளம் - அவயவங்களுடன் கூடிய உருவம், பதினாறு மூர்த்திகளின் உருவ இலக்கணங்கள், கண் திறத்தல், நாயன்மார் ஆழ்வார் உருவங்கள் செய்யும் வகை முதலியன கூறப்பட்டுள்ளன. இவையாவும் வடமொழியில் இயற்றப்பட்டவையாம்.

**செய்முறை**

சிற்ப இலக்கணங்களின்படி, தேன் மெழுக்கினால் உருவத்தை முதற்கண் செய்து கொள்ள வேண்டும். பிறகு பாதப் பகுதியில் நீண்ட குழலைச் செய்வார்கள். மெழுக்கு உருவம் கருவாகும். இதன்மீது களிமண் கலவை பூசப்படும். களிமண், உமிக்கருக்கு, பஞ்சு, உப்பு சேர்த்து அரைக்கப்பட்ட கலவையாகும். இக்கலவையைக் காயவைத்து மூன்று முறைக்கு உருவின்மீது பூசவேண்டும். குழல்வாயை மூடக்கூடாது. தேன் மெழுகு உருவத்தில் எடைபோல் எட்டு மடங்கு எடையுள்ள உலோகம் வேண்டும். கருவை நெருப்பிலிட்டுச் சுட வேண்டும். அப்போது மெழுகு குழல் வழியாக வெளிப்படும். முற்றிலும் வெளிப்படுத்தப்பட வேண்டும்.

ஒரு புடக்குடுவையில் உலோகத்தையிட்டு உருக்க வேண்டும். உருக்கிய பின் புடக்குடுவையை வெளியே எடுக்க வேண்டும். அதன் உச்சியில் இரும்புக் கம்பியால் துளை செய்ய வேண்டும். களிமண் அச்சின் வாயினை எரிகின்ற திரியை வைத்துச் சுத்தமாக்க வேண்டும்.

நீர்போல் உருகியிருக்கும் உலோகத்தை ஒரே சீராகக் குழலின் வாய் நிரம்பும்வரை ஊற்ற வேண்டும். தானாகவே அச்சு நன்கு ஆறியவுடன் சுட்டமண்ணைக் கவனத்துடன் பெயர்த்து எடுக்க வேண்டும். தேன் மெழுகினால் ஆகிய உருவம் அங்க அவயவங்களுடன் எப்படி இருந்ததோ அப்படியே உலோகத்தினால் ஆகிய படிமம் கிடைக்கும். பிசிர்களைச் செதுக்கி அப்புறப்படுத்த வேண்டும். கனமான படிமம் கிடைக்கும்.

பொள்ளலான உருவைச் செய்ய முதலில் மண்ணைப் பிடித்து அதன்மீது மெழுகினால் உருவத்தைச் செய்ய வேண்டும். பிறகு முதலில் கூறியபடி மண்பற்று போட்டுச்சுட வேண்டும். மெழுகு உருகி வெளிவந்ததும் உலோகத்தை உருக்கிச் செலுத்திக் குளிரவைக்க வேண்டும். பிறகு மண்பற்றை அப்புறப்படுத்தினால், பொள்ளலான உலோகப் படிமம் கிடைக்கும்.

இவ்வாறு செய்யப்படும் உருவத்தைத் தெய்வத்திருமேனியாக மாற்றுவது கண்திறப்பு என்ற சடங்காகும். ஸ்தபதி தங்க ஊசி அல்லது உளியால் கண்ணைத் திறந்ததும் தெய்வ சக்தி நிரம்புகிறது.

**படிமக்கலைச் சொற்கள்**

1) ஸ்தானக மூர்த்தி - நேராக நிற்கும் திருமேனி

சுகாசன மூர்த்தி - ஒரு காலை மடக்கி ஒரு காலைக் கீழே நீட்டிய திருமேனி

நிருத்த மூர்த்தி - நடனமாடும் நிலையிலுள்ள திருமேனி

2) ஆபரணங்கள்

மகுடம், குண்டலம், கண்டி, ஆரம், கேயூரம், காறை, பூணூல், உதரபந்தம், சன்னவீரம், கடி சூத்திரம், ஊருமாலை

**மகுடம் மூன்று வகைப்படும்.**

1. கரண்ட மகுடம் - தேவி, கணபதி தலைமேல் இருப்பது
2. ஜடா மகுடம் - சிவபெருமான் தலைமேலிருப்பது
3. கிரீட மகுடம் - திருமால் தலைமேலிருப்பது.

**குண்டலம் இரண்டு வகைப்படும்.**

1. பத்ர குண்டலம் - ஓலைச்சுருள்
2. மகர குண்டலம் - மகர மீன்தலையும் பாம்பு உடலும்

**மாலை இரண்டு வகைப்படும்.**

1. ஹ்ருந்து மாலை - கழுத்திலிருந்து கொப்பூழ் வரை
2. ஸ்கந்த மாலை - தோள்மீது, கழுத்தில் தோள் வரை.

கேயூரம் என்பது மேற்கை நடுவில் அணிவது, உதரபந்தம் என்பது மார்பின் கீழும் உந்திக்கு மேலும் அணிவது, சன்னவீரம் என்பது ஒன்றையொன்று குறுக்கிட்டுச் செல்லும் இரு பூணூல் போல் ஆணும் பெண்ணும் அணிவது.

கடி சூத்திரம் என்பது ஒட்டியாணம் போன்றது. இதன் நடுவில் சிங்கம் அல்லது யாளி முகப்பட்டை இருக்கும். இதற்குப் பட்டிகை என்று பெயர். அதிலிருந்து தொங்கும் பல வளைவுச் சரங்கள் ஊருதாமம் எனப்படும். இது தொடையின் கீழ் வரை தொங்கலாம்.

தண்டை, சதங்கை, கிண்கிணி என்பவை குழந்தைகள் அணிவது. சிலம்பு, நூபுரம் என்பவை மகளிர் அணிவது. கழல் என்பது ஆடவர் அணிவது.

**ஆயுதங்கள்**

சிவபெருமானுக்கு - மான், மழு, சூலம், கபாலம், எரியகல், கங்காளம்

திருமாலுக்கு - சங்கு, சக்கரம், கதை

முருகனுக்கு - வேல், வச்சிரம், கேடயம், கோழி

தேவிகளுக்கு - தாமரை, நீலோற்பலம்

**ஹஸ்தங்கள்**

கஜஹஸ்தம் அல்லது தண்டஹஸ்தம் - யானைத் துதிக்கை அல்லது ஒருகோல் போல் உடலின் குறுக்கேயோ வெளியேயோ பொதுவாக இடதுகையை நீட்டுவது. நடராஜர் காளிங்க மற்றும் நர்த்தன கிருஷ்ணன் உருவங்களிற் காணலாம்.

லோல ஹஸ்தம் - துவண்டிருக்கும் விரல்களுடன் தொங்கும் கை, விரல்களில் ஒன்றும் ஏந்தியிருக்காது.

ஆலிங்கன ஹஸ்தம் - சிவ பார்வதி உருவங்களில் ஒருவர் கை இன்னொருவர் உடலைத் தழுவும்.

**முத்திரைகள்**

அபய முத்திரை - காக்கும் குறிப்பு

வரத முத்திரை - இடக்கை விரல்கள் கீழ்நோக்கி உள்ளங்கை வெளிப்புறமாக வழங்கும் குறிப்பு.

| | |
|---|---|
| அஞ்சலி முத்திரை - | கூப்பிய கரம். அடியார்களின் உருவம் |
| தியான முத்திரை - | கால்களை மடித்து உட்கார்ந்து, அவற்றின் மீது இடது உள்ளங்கையில் வலது கையை மேல் நோக்கி வைத்துள்ள நிலை. |
| ஞான முத்திரை<br>சின்முத்திரை<br>வியாக்கியான முத்திரை<br>உபதேச முத்திரை - | வலக்கையில் பெருவிரல் சுட்டு விரல்களின் நுனிகளைச் சேர்த்து வட்டமாக்கி மற்ற விரல்களைத் திறந்து உள்ளங்கையை வெளியே காட்டுவது. |

**சிம்ம கர்ணகம் அல்லது கடகம்** - விரல்களின் நுனிகள் பெருவிரலின் நுனியைத் தொட்டு மலரை வைத்திருக்க வட்டமாகத் தோன்றுவது

**சூசி முத்திரை** - கடகத்தைப் போன்று விரல்களை மடக்கிச் சுட்டுவிரலை நிமிர்த்துவது

**தர்ச்சனி** - எச்சரிப்பது போல் வலதுகைச் சுட்டுவிரலை மேல்நோக்கி நிமிர்த்தி மற்ற விரல்களை மடித்து வைப்பது.

**விஸ்மயம்** - ஆச்சரியப்படுவதுபோல், உள்ளங்கை பார்ப்பவர்க்குத் தெரியாமலும் முன்கையை உயரத்தூக்கி விரல்கள் மேல் நோக்கி நீட்டியிருக்கும்.

**திரிபதாகை** - தோளுக்குமேல் கையை உயர்த்தி உள்ளங்கை பார்ப்பவர்க்குப் பெருவிரலும் மூன்றாவது விரலும் சேர்ந்தும், மற்ற மூன்று விரல்கள் நிமிர்ந்தும் நடுவிரல் சுட்டு விரல்களால் ஆயுதம் தாங்கியும் இருக்கும்.

**அர்த்தசந்திரன்** - பெருவிரலுக்கும் சுட்டு விரலுக்கும் இடையே நீட்டப்பட்ட உள்ளங்கையை பிறைமதிபோல் வைப்பது.

# இயல் 11

# திருமால் திருக்கோயில்களின் அமைப்பும் வளர்ச்சியும்

பண்டைத் தமிழகத்தில் திருமால், சிவபிரான், முருகன், இந்திரன், கொற்றவை போன்றவர்க்கும் மற்றும் பல சிறு கடவுளர்க்கும் கோயில்களை எழுப்பி மக்கள் வழிபட்டனர். இவற்றில் திருமால், சிவபெருமான்ஆகிய இருவர்க்கும் ஆகம, சிற்ப சாத்திர விதிகளின்படி ஆலயங்கள் அமைக்கப்பெற்று, ஆகமநூல்களில் விதித்த நெறிப்படி நித்திய நைமித்திக பூஜைகள் நடைபெறுகின்றன. ஆகம நெறி சாராது மரபுவழிப்பட்ட சிறுகடவுளர் கோயில்களும் பலவாக இருந்தன. ஆகமங்களுக்கு உட்படாத வைதிக மார்க்கத்தில் அந்தணர்களால் வேதமந்திரங்களால் வழிபாடுகள் நடைபெறும் கோயில்களும் ஒரு புறம் விளக்கமுற்றிருந்தன. இவற்றினூடே திணை நில மக்களால் போற்றப்பட்ட சிறு கோயில்களும் செழித்து வளர்ச்சியடைந்தன.

இக்கோயில்கள் ஆதியில் செங்கற்களால் அல்லது மரத்தால் அமைக்கப்பட்டுக் கருவறை மட்டிலும் விமானத்தோடு இருந்தன. பல்லவர்களின் காலத்தில் கற்பாறைகள் குடையப்பட்டுக் கருவறை கொண்ட குடைவரைக் கோயில்கள் தோன்றின. அடுத்து வந்த சோழர்கள் மண்டபங்களையும் திருச்சுற்றுகளையும் சேர்த்துக் கோயிலமைப்பை விரிவுபடுத்தினர். அப்போது விழாக்களும் விரிவடைந்தன. அதனால் எழுந்தருளும் திருமேனிகளான உற்சவ மூர்த்திகள் பிரதிஷ்டை செய்யப்பட்டனர்.

### மூல பேரர்கள்

கருவறையில் பிரதிஷ்டை செய்யப்பெற்ற இறைத் திருமேனிகள் பெரும்பாலும் கற்களால், உருவாக்கப்பட்ட சிலா பேரங்களாகவே அமைந்துள்ளன. சில ஆலயங்களில் செங்கற் சுதை உருவாகவே மூல பேரங்கள் காணப்படுகின்றன.சில ஆலயங்களில் உள்ளே செம்மைப்படுத்தாத முறையில் கல்லில் உருவத்தைச் செதுக்கி அதன்மேல் சாந்து பூசி முழுமையாக்கப்பட்ட மூல பேரங்கள் அமைக்கப்பெற்றன. திருக்கோவலூர் ஆலயத்திலுள்ள உலகளந்த மூர்த்தி திருமேனி மரத்தால் இயன்றது. இதனை "தாரு பேரம்" என்பர். காஞ்சீபுரம் வர்தராஜப் பெருமாள் திருக்கோயிலில் அத்திமரத்தாலாகிய மூர்த்தி வழிபாட்டிலிருந்து தற்போது கோயில் திருக்குளத்தின் அடியிலுள்ள நீராழி மண்டபத்தில் சேமிக்கப்பட்டிருக்கிறது. அதனை

"அத்திவரதர்" என்று கூறுவர். அதனை ஐம்பது ஆண்டுகளுக்கு ஒருமுறை வெளியே எடுத்து வழிபாடுகள் செய்து ஒரு மண்டலமான பிறகு மீண்டும் நீராழி மண்டபத்தில் சேர்த்து விடுவார்கள். மூலமூர்த்தி மூலிகைச் சாந்துகளினாலும் அமைக்கப்படுவதுண்டு. நாகர்கோயிலுக்கருகிலுள்ள திருவண்பரிசாரத்தில் மூலபேரரான திருவாழ்மார்பரின் திருமேனி அவ்வகையில் உருவாக்கப்பட்டுள்ளது. அதற்குப் புனுகு அணிவித்துப் பாதுகாத்து வருகின்றனர். திருமஞ்சனம் செய்வதில்லை. சில கோயில்களில் மூலமூர்த்தி சாளக்கிராம சிலையால் உருவாக்கப்பட்டதைக் காணலாம். பெரிய உருவில் கிடைத்த சாலக்கிராம சிலையை உளியாற் செதுக்கித் திருமேனியை வடித்திருப்பார்கள். விலையுயர்ந்த மரகதப் பச்சைக் கற்களிலும் மூலமூர்த்தியின் திருமேனிகளை வடித்துள்ளனர்.

இவ்வாறு மூலவுருவைச் சமைப்பதனைத்தான் "ஏறியருளப்பண்ணுதல்", என்று கூறுவர். சிலகோயில்களில் முதிர்ந்து கற்போல் மாறிய சந்தன மரங்களிலிருந்தும், மூலத்திருமேனியை ஏறியருளப் பண்ணியுள்ளனர். குடைவரைக் கோயில்களில் முழுமையாகவோ அர்த்த சித்திரமாகவோ (புடைப்புருவம்) மூலத்திருமேனிகள் அமைக்கப்படுகின்றன.

மூலவர் திருமேனிகளை (1) திருமஞ்சனத் திருமேனி என்றும் (2)தைலக்காப்புத் திருமேனி என்றும் இருவகைப்படுத்தி வழங்கியுள்ளனர். கல்லில் வடிக்கப்பட்டதான சிலா மூர்த்திகளுக்குத் திருமஞ்சனம் செய்யப்படும். வானமாமலை (நாங்குனேரி) தெய்வநாயகப்பெருமாள் திருமேனிக்கு நல்லெண்ணெய் கொண்டு அபிஷேகம் செய்யப்படுகிறது. அந்த எண்ணெயைக் கிணறுகளில் சேமித்துவைத்து மருந்தாகப் பயன்படுத்துகின்றனர். பழைய சித்தர் நூல்களில் இந்த எண்ணெயைத் தொழுநோய் போக்கும் மருந்துப் பொருளாகக் குறிப்பிட்டுள்ளனர்.

மூலவர் திருமேனியைப் பலவகை வண்ணத்தால் புனைவதும் உண்டு மூலிகைச் சாறுகள் மற்றும் பலவகைத் தாதுப் பொடிகள் கொண்டு வண்ணக் கலவையைச் செய்து திருமேனியில் பூசுவார்கள். இதற்கு "வர்ண கலாபம்" எனப் பெயர் வழங்குகிறது. திருத்தங்கல், திருவில்லிபுத்தூர், திருக்குறுங்குடி, முதலிய திருக்கோயில்களில் மூலவர் திருமேனிகள் வர்ண கலாபங்களாக இற்றைக்கும் வழிபாட்டில் உள்ளன. ஆகமங்கள் மூர்த்திகளுக்கேற்ற வண்ணங்களைத் தேர்ந்தெடுத்து விதிகின்றன.

பெரும்பாலான திருக்கோயில்களில் தைலக்காப்பினை மூல மூர்த்திகள் திருமேனிக்குச் சார்த்துகின்றனர். சந்தனம், அகில், போன்ற கட்டைகளைச் செதுக்கி சிறு துண்டுகளாக்குவர். அவற்றோடு சாம்பிராணி போன்ற வாசனைப் பொருட்களையும் சேர்த்து அக்கலவையினைத் தண்ணீரில் ஊறவைத்துப்பிறகு காய்ச்சுவார்கள். அப்போது எழும் ஆவியைக் குளிர வைத்துத் தைலத்தை இறக்குவார்கள்.

இம்முறை காய்ச்சி வடித்தல் என்பதாகும். இவ்வாறு காய்ச்சி வடித்த தைலத்தைப் பச்சைக் கற்பூரம் மற்றும் இளநீர் சேர்த்து இளக்குவர். இளக்கிய தைலத்தை ஒரு பானையில் சேர்த்து வழிபாடு செய்வர். இதற்கு "தைலப்பிரதிஷ்டை" என்று பெயர். இதற்கு அங்கமாக யாகவேதியில் ஹோமங்கள் இயற்றப்படும், பிறகு தைலத்தைத் துணியால் தோய்த்து மூலவர், திருமேனியில் அணிவிப்பர். தைலத்தின் சக்தியால் திருமேனியின் ஆற்றல் கூடுகிறது. கருவறையும் நறுமணம் கமழும். புழு பூச்சிகள் திருமேனியை நெருங்கமாட்டா. திருமேனியில் பூசப்பட்ட தைலக்காப்பு காய்வதற்கு ஒரு மண்டல காலமாகும். அப்போது இறைவனுக்கு மண்டலாபிஷேகம் செய்து இறுதி நாளில் புதுவஸ்திரங்களை அணிவிப்பர், இப்படிப்பட்ட தைலக்காப்பு சாந்துத் திருமேனிகளைப் பாதுகாக்கிறது.. பன்னிரண்டு வருடங்களுக்கு ஒரு முறையாகினும் தைலக்காப்பு சார்த்தவேண்டும். திருவரங்கம் பெரிய கோயிலில் ஆண்டு தோறும் தைலக்காப்பு நடைபெறுகிறது. தைலக்காப்பு சார்த்துவதில் கவனக்குறைவால் தைலம் சரிவர அமையாது போவதால் திருமேனியிலுள்ள ஆபரண வேலைப்பாடுகள் பூசப்பட்டு மறைக்கப்படுகின்றன. சில போது சார்த்தப்பட்ட தைலம் கம்பிபோல் அவயங்களிலிருந்து வழியத் தொடங்கும்.

தைலக்காப்பு உறைவை முழுவதும் சுரண்டியெடுத்து, சிலா பேரமான திருமேனியாக இருந்தால் திருமஞ்சனத் திருமேனியாக மாற்றிக்கொள்ளும் முயற்சி சமீப காலத்தில் சில திருக்கோயில்களில் நடைபெற்றிருக்கிறது. திருநறையூர் (நாச்சியார் கோயில்) ஆழ்வார் திருநகரி ஆதிநாதர் திருக்கோயில்களில் இம்முயற்சி செய்யப்பட்டு இன்று திருமஞ்சனத் திருமேனியாக விளங்குகின்றன.

மூலவர் திருமேனியை "த்ருவ பேரம்" என்று ஆகமங்கள் கூறுகின்றன. பிறகு காலவளர்ச்சியில் மற்ற பேரங்களும் இடம் பெற்றன. பஞ்ச பேர விதானத்தில் த்ருவ பேரமே முக்கியமானதும் பழமையானதுமாகும். த்ருவ பேரங்களின் அமைப்பினை ஆகம நூல்களும் சிற்ப நூல்களும் வரையறை செய்கின்றன. த்ருவபேரர் ஸ்திரமாக பீடத்தில் பொறுத்தப்பட்டு அசைவு ஏற்படாதபடி கெட்டியான மருந்துகளால் நிலை நிறுத்தப்படுகிறார். பீடத்திலுள்ள குழியையும் மூலபேரரின் சிலையையும் இம்மருந்து கெட்டியாகப் பிணிக்கிறது. இவ்வாறு மருந்து சேர்த்துப் பிணிப்பை "அஷ்டபந்தனம்" என்பர். எட்டுவகைச் சரக்குகள் சேர்த்து இம்மருந்து செய்யப்படுகிறது. இது நாளாக நாளாக மேலும் மேலும் இறுகும். திருமஞ்சன நீர் பீடத்தில் குழிக்குள் இறங்காதபடி இம் மருந்து தடுக்கும். பூச்சிகளும் அருகே அணுகாது..

த்ருவ பேரங்களின் மீது கிரீடம் ஹாரம், வஸ்திரம், முதலிய அலங்காரங்கள் சிற்பத்தின் மீது பொறிக்கப்பட்டிருந்தாலும் அவற்றின் மீது கிரீடம், மாலைகள் வஸ்திரங்கள், ஆபரணங்கள், சார்த்தி அலங்காரங்கள் செய்யப்படுகின்றன. அனேகமாக, மூலமூர்த்திகளின்

திருமேனிகளில் மார்பு, கைகள், திருவடி, ஆகியவற்றிற்கு வெள்ளி, தங்கம், இவற்றால் கவசம் செய்து அழகுபடுத்தும் முறை எங்கும் வழக்கத்திலுள்ளது. திருமேனிக்கும் கவசத்துக்கும் இடையே வாசனைச் சரக்குகள் சேர்ந்த கலவை காப்பிடப்படுகிறது. மூல மூர்த்திகளின் கண்களில் கண்மலர் அணிவிக்கிறார்கள், இதனால் கண்கள் பளிச்சென்று மிகத் தொலைவிலும் தெரிகிறது. ஆனால் பல கோயில்களில் இவை மூக்குக்கண்ணாடி போல் அமைந்து திருக்கண்களின் அழகை மறைத்துக் கொடூரமான பார்வையாகக் காட்டுகிறது.

மூல மூர்த்திகளில் நின்ற நிலை, வீற்றிருந்த நிலை, சயனநிலை, (ஸ்தானம், ஆஸனம், சயனம்) என்று மூன்று திருக்கோலங்கள் பொதுவாக எங்கும் காணப்படுகின்றன.

நின்ற திருக்கோலத்தில் பின்புறத் திருக்கரங்கள் இரண்டிலும் சங்கு சக்கரங்கள் முறையே ஏந்தப்பட்டிருக்கும். சில கோயில்களில் வலக்கரத்தில் பிரயோக சக்கரமாக ஏந்தப்பட்டிருக்கும். அழகர் கோயிலில் மூலவரான பரமஸ்வாமி திருக்கரத்தில் பிரயோக சக்கரம் அணி செய்கிறது. நாச்சியார் கோயிலில் இரண்டு திருக்கரங்களையும் முன்புறம் சற்று நீட்டியவாறு சங்க சக்கரங்களைத் தாங்கிய நிலை காணப்படுகிறது. எல்லா வகையான மூல மூர்த்திகளின் சிரத்திலும் கிரீடம் உண்டு. இது மகுடம், சூடாவதம்ஸம் என்று அமைப்பினால் பெயர் பெறும். நான்கு திருக்கரங்களில் சங்கு சக்கரங்கள், ஏந்தியவைபோக எஞ்சிய திருக்கரங்களில் அபய, வரத முத்திரைகள் அல்லது அபய கடி ஹஸ்த முத்திரைகள் அல்லது தான,கடி ஹஸ்த முத்திரைகள் இருக்கும்.

அபயமுத்திரை அஞ்சற்க என்று அபயமளிப்பது ; வரத முத்திரை வேண்டிற்றெல்லாம் அளிப்பது ; கடி ஹஸ்தம் அணைத்துக் கொள்வது ; தான ஹஸ்தம் மாவலிபால் முவடி மண் இரப்பது ; மூலவர் இராமபிரானாக இருந்தால் திரிபங்கி இலட்சணத்தோடு இருப்பார். மூலவர் கண்ணபிரானாக இருந்தால் குழலூதல், காளிங்கநர்த்தனம், நவனீதம் ஏந்தியிருத்தல் முதலிய திருக்கோலங்களாக இருக்கும் அவதாரங்களைக் காட்டும் மூலவர் திருமேனிகள் சொற்பமாகவே உள்ளன. பெரும்பாலும் தசாவதார மூர்த்திகள் பெருங்கோயில்களின் தனி ஸந்நிதிகளில் இடம் பெறுகின்றன. திரிவிக்ரம மூர்த்திக்கு வலது காலை உயரே தூக்கி அளக்கும் வடிவம் அமைக்கப்பட்டுள்ளது.

திருக்கோவலூரிலும் காஞ்சி உலகளந்த பெருமாள் கோவிலிலும் மிக உயரமான திரிவிக்கிரம மூர்த்திகளைக் காண்கின்றோம். சீர்காழியிலுள்ள தாடாளன் திருக்கோயிலுள்ள திரிவிக்ரம மூர்த்தி இடது காலை உயரத்தூக்கி அளக்கும் கோலத்தில் காட்சி தருகிறார்.

வீற்றிருந்த திருக்கோலங்களில் ஒரு திருவடி மடிக்கப்பட்டும் ஒரு திருவடி தொங்கவிடப்பட்டும் இருக்கும். ஒரு திருக்கரம் அபயமுத்திரையோடும் ஒரு திருக்கரம் ஆஹூய முத்திரையோடும் இருக்கும். ஆஹூய முத்திரையாவது அழைக்கும் நிலையிலுள்ளது. மதுரை கூடலழகர் திருக்கோயிலிலும் நந்திபுர விண்ணகரம் நாதன் கோயிலிலும் இவ்வாறு அன்பர்களை அழைத்து அபயமளிக்கும் திருக்கரங்களோடு திருமால் எழுந்தருளியுள்ளார். மூலமூர்த்தி சிங்கப்பிரானாக இருந்தால் வீராஸனத்திலும் அல்லது யோகாஸனத்திலும் எழுந்தருளியிருப்பார்.

சயன திருக்கோலத்தில் வீரசயனம், புஜங்க சயனம், உத்தான சயனம் என்று பலவகைகளை ஆகமநூல்கள் கூறும். ஆதிசேஷன் மீது சயனித்துள்ள முறையில் மூலவர் திருமேனி காணப்படும். பொதுவாக எதிரே வணங்குபவரின் வலக்கை எதிரே திருவடி நீட்டப்பட்டிருக்கும். இதற்கு மாறாகவும் சில திருக்கோயில்களில் சயனம் அமைந்துள்ளது. காஞ்சி திருவெ.ஃகா சொன்ன வண்ணம் செய்த பெருமாள் கால்மாடுதலைமாடாக மாற்றிக்கிடக்கிறார். மலைநாட்டுத் திருவாட்டாற்று ஆதிகேசவப்பெருமாளும் இவ்வாறே மாறிக்கிடந்த திருக்கோலம் கொண்டுள்ளார். மூலபேரருக்கு இருமருங்கிலும் ஸ்ரீதேவி, பூமிதேவிகளின் மூலத்திருமேனிகள் இடம் பெறுகின்றன. இவ்விருவரும் மூலமூர்த்தியான பெருமாளின் நிலைக்கு ஏற்ப நின்றோ, இருந்தோ காணப்படுகின்றனர். வலப்புறம் திருமகள். இடப்புறம் நிலமகள். இவர்களுக்கு இரண்டு திருக்கரங்களே உள்ளன. ஒரு திருக்கரம் கீழே தொங்கும். மற்றதில் மலர் ஏந்தப்பட்டிருக்கும். திருமகளின் இடக்கரமும் நிலமகளின் வலக்கரமும் இவ்வாறு மலரைத் தாங்கியிருக்கும். நிலமகள் திருமேனியில் ஸ்தன பந்தம் இருக்காது செவிகள் நீண்டு குழைக்காதாகக் காணப்படும். திருமகளின் திருமேனியில் யக்ஞோபவீதம் தரிக்கப்பட்டிருக்கும். செவிகளில் தோடு செறிந்திருக்கும். இருவர்க்கும் சிரத்தில் கிரீடம் உண்டு. எம்பெருமான் சயன கோலத்தில் மலர்மகளும் நிலமகளும் அருகருகிலோ எதிர் எதிராகவோ அமர்ந்து பாதங்களை வருடிக் கொண்டிருப்பதாக அமைவர். திருப்புளிங்குடியில் இவ்வாறிருப்பதை நம்மாழ்வார் பாசுரமிட்டுப் பாடியுள்ளார்.

*வடிவிணையில்லா மலர்மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடி*

என்பது ஆழ்வார் திருவாக்கு. திருவரங்கத்தில் இவ்விருவரும் காணப்பெறவில்லை. திருமோகூர்த் திருத்தலத்தில் தேவியர் இருவரும் பள்ளிகொண்ட பெருமாளை எழுப்பும் நிலையில் திருவடிகளுக்கு எதிரில் வீற்றிருக்கின்றனர்.

மூலமூர்த்தி கிருஷ்ணனாயிருப்பின் இவ்விருவர் இடத்தில் ருக்மிணி ஸத்யபாமா என்ற இருவரும் இடம் பெறுவர். திருவல்லிக்கேணி பார்த்தசாரதி திருக்கோயிலில் இவ்வாறிருப்பதைக் காணலாம்,

மூலவருடன் ஸ்ரீதேவி, பூமிதேவி தவிர வேறு மூர்த்திகளும் ..ம் பெறுவர் சில கருவறைகளில் பலராமன் நிற்கிறார். மூலவர் ாமபிரானாக இருப்பின் கருவறையுள் இலக்குவன் சீதாப்பிராட்டி நலியோர் இடம் பெறுவர் சில கோயில்களில் கருடன் ஆதிசேடன் நவரும் கருவறையுள் இருப்பதைக் காணமுடிகிறது. பல நக்கோயில்களில் கருவறையுள் பிருகு, மார்கண்டேயர் என்ற ரிஷிகள் ாஸனத்தில் வீற்றிருப்பதையும் காணலாம். கதம்பரிஷி, வைகானஸரிஷி, ோமசரிஷி போன்ற ரிஷிகளும் சில கருவறையுள் ர்க்கப்படுகின்றனர். சயன திருக்கோலம் கொண்ட கருவறையில் மது டபர்கள், என்ற அசுரர்கள், நிற்பதைக் காணலாம். இந்திரன் ிச்சக்கரவர்த்தி நமுசி, விரோசனன், போன்றவர்களும் சில நக்கோயில் கருவறைகளில் இடம் பெறுகின்றனர். நந்திபுரவிண்ணகர் 'தன் கோயில்) கருவறையுள் அதிகார நந்திகேசுவரர் புடைப்பு நவத்தில் காணப்படுகிறார். ஆதனூர் ஆண்டளக்கும் பெருமாள் ாயில் கருவறையில் திருமங்கையாழ்வார் நிற்கிறார். அரசர்கள் நவங்களும் சில கருவறையில் காணப்படுகின்றன. திருத்தங்கல் நக்கோயிலில் கருவறையில் பதினோரு திருவுருவங்கள் இடம் ற்றுள்ளன. கருவறைச் சுவர்களில் புடைப்புச் சிற்பமாக தேவகணங்கள் துக்கப்பட்டுள்ளனர். சயனத்திருக்கோலத்தில் எம்பெருமானுடைய நநாபி கமலத்தில் நான்முகன் இவ்வாறு புடைப்புச் சிற்பமாகக் ணப்படுவார், சில திருக்கோயில் கருவறைச் சுவர்களில் வகணங்கள் ஓவியமாக வரையப்பட்டிருக்கின்றன, கூடலழகர் நக்கோயில் திருக்கோட்டியூ, திருக்கோயில் கருவறைகள் மீதுள்ள ல்தளக் கருவறைச் சுவர்களில் இவ்வாறுள்ள ஓவியங்கள் ணப்படுகின்றன.

கருவறைச் சுவர்களைத் திருமெழுக்கிட்டுக் காப்பது வழக்கம். காயிலாழ்வார் திருமெழுக்கு" என்று இதனைக் குறிப்பிடுவர். சந்தனக் வையில் அரிய. நறுமணப்பொருள்களைச் சேர்த்து இவ்வாறு நமெழுக்கிடுவர். கருவறையுள் மூலபேரர் இருக்கும் இடம் கமநூல்களாலும் சிற்பசாத்திரங்களாலும் நிருணயிக்கப்படிருக்கிறது.

மூலமூர்த்தி எழுந்தருளியுள்ள மேடை "தேவாசனம்" என்று ழைக்கப்படும். இம்மேடையில் மற்ற மூர்த்திகளும் நிலை ுத்தப்படுகின்றனர். கருவறையின் வடக்குச் சுவரில் திருமஞ்சன நீர் ளியேறுவதற்கு துவாரமும் கோமுகையும் அமைக்கப்படும்.

**நசபேரவிதானம்**

திருவிழாக்கள் எடுக்கப்பட்ட காலத்தில்,உலாவருவதற்குரிய நமேனியாக உற்சவபேரர் உருவாக்கப்பட்டு கருவறையில் மூலவருக்கு ர் பகுதியில் இடம் பெற்ற நிலை ஏற்பட்டது . இந்த மூர்த்தியை ப்புத் திருமேனியாகவோ அன்றிப் பஞ்சலோகத் திருமேனியாகவோ ர்க்கப்பட்டு ஏற்றுக்கொண்டனர். தூய பொன்னாலும் அல்லது

வெள்ளியாலும் உற்சவ மூர்த்திகளை ஏறியருளப்பண்ணினர். பாண்டியநாட்டுத் திருக்கோட்டியூரிலுள்ள உற்சவமூர்த்தி வெள்ளியால் இயன்றது. இம் மூர்த்தியை "வெள்ளியான் கரியான் மணிநிற வண்ணன்" என்று திருமங்கையாழ்வார் குறிப்பிட்டிருக்கிறார். உற்சவ மூர்த்திகளின் பெருக்கத்தினால் படிமக்கலை மிக வளர்ச்சியுற்றது உற்சவ மூர்த்திகளோடு உபயநாச்சிமார்களின் திருமேனிகளும் சேர்க்கப்பட்டன. திருமஞ்சனம் அல்லது அபிஷேகம், செய்வதற்காக ஸ்நபன பேரர் திருமேனியும் சேர்த்துக்கொள்ளப்பட்டது. இவர் திருமஞ்சனமூர்த்தியாவார். இவருக்கே அபிஷேகங்கள் செய்யப்படவேண்டும். என்று ஆகமங்கள் விதிக்கின்றன. ஆயினும் காலப்போக்கில் உற்சவ மூர்த்திக்கே திருமஞ்சனங்கள் செய்யும் பழக்கம் புகுந்தது. அதனால் உற்சவத் திருமேனிக்குச் சிறிது சிறிதாகத் தேய்மானம் ஏற்படத் தொடங்கியது. அத்தேய்மானத்திலிருந்து திருமேனிகளைப் பாதுகாப்பதற்காகக் கவசங்கள் அணிவிக்கும் மரபும் உருவாகியது. கவசத்தோடுதான் திருவரங்கத்தில் உற்சவரான நம்பெருமாளுக்குத் திருமஞ்சனம் செய்யப்படுகிறது. ஆட்டைப் பெருவிழாக்களில் திருக்கோயில்களில் யாகசாலைகள் அமைத்து வேள்விகள் இயற்றப்படும். இவை நித்திய வழிபாட்டிலும் விதிக்கப்படுகின்றன. யாகசாலைக்கு எழுந்தருள "யாக பேரர்" என்ற மூர்த்தி தோற்றுவிக்கப் பட்டது. இவற்றைத் தவிர, திசைக் கடவுளர்க்கு பலி போடும் போது எழுந்தருள "பலிபேரர்" என்ற மூர்த்தி பிரதிட்டை செய்யப்பட்டது. பெருவிழாக்களின் இறுதியில் நடைபெறும். தீர்த்தவாரிக்காகச் சக்கரத்தாழ்வார் திருமேனியும் கருவறை மேடையில் சேர்த்துக்கொள்ளப்பட்டது. வைகானஸக்கோயில்களில் "கௌதுகர்" என்ற திருமேனி இடம் பெற்றது. இது பெரும்பாலும் மூலமூர்த்தியைப் போன்றே வடிவுள்ளதாக இருக்கும். இவருக்கே அருச்சனை வழிபாடுகள் இயற்றப்பட வேண்டும்.

கருவறையில் துருவ பேரரைப் பிரதிஷ்டை செய்வதற்குரிய இடத்தினையும் ஆகமநூல்கள் வரையறுத்துள்ளன. பிரம்ம பாகம், பைசாச பாகம், மாநிட பாகம் என்றெல்லாம் கருவறைப் பகுதிகள் வகுக்கப்பட்டிருக்கின்றன. துருவமூர்த்தி பைசாச பாகத்தில் பிரதிஷ்டையானால் கிராமத்திற்குக் கேடுகள் விளையும்.

கருவறையில் மூர்த்திகளின் இடப்புறத்தில் நிலை விளக்குகள் நிறுத்தப்படும். வலப்புறமானது அர்ச்சகர் நிற்பதற்குரிய பாகமாகும். உற்சவ மூர்த்திகளின் முன்பாக வழிபாட்டிற்காகப் பயன்படுத்தப்படும் பாத்திரங்கள் வைப்பதற்கான பாத்திர வேதி நிறுவப்படும். இது மரத்தாலோ உலோகத்தாலோ நான்கு எல்லது ஆறு கால்கள் கொண்டதாக அமையும். இதன் மேல் வட்டில்கள் முறைப்படி வைக்கப்படும்..

உற்சவமூர்த்தியின் அருகில் மற்ற பேரர்களோடு ஸாளக் கிராமமூர்த்திகள் வழிபாட்டில் இருக்கும். கருவறையுள் ஏழு மூர்த்திகள் இடம் பெறுதலும் உண்டு. தசபேரவிதானம் என்று பத்து மூர்த்திகள்இடம்

பெறும் கோயில்களும் தமிழகத்தில் காணப்படுகின்றன. இவற்றைத் தவிர, சந்தான கிருஷ்ணன் திருவுருவையும் கருவறையில் இடம்பெற வைத்துள்ளனர். ஆல் இலையில் துயில்வது போலுள்ள திருமேனியை ஊஞ்சல் ஒன்றில் தொங்கவிட்டு வழிபாடு செய்யப்படுகிறது.

கருவறையில் இறைத்திருமேனிகள் மட்டுமின்றி ருஷிகள், தேவர்கள், அரசர்கள் திருவுருவங்களும் நிறுவப்பட்டிருப்பதும் உண்டு. மூலவர் பள்ளிகொண்ட திருக்கோலத்தில் இருக்கும் கருவறையில் பிருகு, மார்கண்டேய ருஷிகள் தரையில் வீராசனத்திலோ குந்தியிட்டமர்ந்த நிலையிலோ சடைமுடிகளோடு காணப்படுகின்றனர். மேலும் மது , கைடபர்களின் உருவங்களும் சில கருவறைகளில் இடம் பெறுகின்றன. இது புராண மரபாகும். இந்திரன், பிரம்மா முதலிய தேவர்களும் தமக்குரிய இடங்களில் நிறுவப்படுகின்றனர். தசாவதாரச் சிற்பங்கள் சில கருவறைகளில் புடைப்புச் சிற்பங்களாகக் காணப்படுகின்றன. திருக்கோட்டியூரில் மகாபலி மன்னனின் உருவம் உள்ளது.

**சுற்றுக் கோயில்கள்**

கோயில் வளர்ச்சியில் கருவறை தவிரப் பிற சந்நிதிகளும் காலப் போக்கில் தோன்றின. கருடன், ஆஞ்சனேயர், சேனை முதலியார், இராமன், கிருஷ்ணன், தசாவதாரமூர்த்திகள் என்று இவர்களுக்குத் தனித்தனியாக சந்நிதிகள் எழுப்பப்பட்டன. சுற்றுக் கோயில் சந்நிதிகளில் சிறப்பிடம் பெறுவது சக்கரத்தாழ்வார் சந்நிதியாகும். இது மூலவர் கருவறைக்கு வலப்புறத்தில் தாயார் சந்நிதிக்குப் பின்புறமாக அமைக்கப்படும். திருமோகூர், அழகர் கோயில் முதலிய தலங்களில் இவ்வாறுள்ளதைக் காணலாம். இதற்கு மாறாக இடவசதி போன்ற பல்வேறு காரணங்களால் சக்கரத்தாழ்வார் சந்நிதி வேறிடங்களிலும் அமைக்கப்படுவதுண்டு. திருவரங்கத்தில் வெளிச்சுற்றில் தென்மேற்கு மூலையில் தனிப்பெரும் சந்நிதியில் சக்கரத்தாழ்வார் கோயில் கொண்டிருக்கிறார். திருக்கோவலூரில் தாயார் சந்நிதிக்குமுன் இடதுபுறமாகத் தெற்கு நோக்கிக் கோயில் கொண்டிருக்கிறார்.

சக்கரத்தாழ்வார் மூல மூர்த்தியின் முன்புறம் சுதரிசனரும் பின்புறம் யோகநரசிம்மரும் காணப்படுவார்கள். உற்சவ பேரத்திலும் இவ்வாறே அமைப்பிருக்கும். சுதரிசனர் பதினாறு திருக்கரங்களிலும் பதினாறு ஆயுதங்களைத் தாங்குவார். ஒரு காலை ஊன்றி ஒரு காலைப் பின்புறம் மடித்துத் தூக்கிப் பாய்கின்ற நிலையில் உற்சவ மூர்த்தி சில திருக்கோயில்களில் காட்சியளிக்கிறது. இந்நிலைமை "பிரத்யாலீடஸ்த்த பாதம்" என்று கூறப்படும்.

**விஷ்வக்சேனர் ( சேனை முதலியார் )**

இவர் வைகுந்தத்தில் விஷ்ணு கணங்களின் தலைவர். நித்திய சூரிகளிலே முதன்மை பெற்றவர். இவருடைய தலைமையின் கீழ் பரிமுகர்,

கரிமுகர் போன்றோர்களை கணநாதர் என்று பாஞ்சராத்ர ஆகமம் கூறும். இவருக்குத் தனி ஸந்நிதி உண்டு. மூலவர் ஸந்நிதிக்கு முன் இடப்புறத்தில் தெற்கு நோக்கியவாறு இவருடைய ஸந்நிதி காணப்படும். இவர் சங்கு சக்கரங்களோடு நான்கு திருக்கைகளையுடையவர். அழகர் கோயிலில் இவர் சூத்திரவதி என்ற தேவியோடு எழுந்தருளியுள்ளார். பிரம்மோற்சவ காலத்தில் இவர் முதல் திருநாளுக்கு முதல் நாள் வீதியுலாவாக எழுந்தருளி அவர் முன்பாக அங்குரார்ப்பணம் மிருத்ஸங்கிரஹணம் போன்ற பூருவாங்கக் கிரியைகள் நடைபெறும். வைணவ மரபில் இவரை நம்மாழ்வாருக்கு மந்திரோபதேசம் செய்த ஆசாரியராகக் கொள்கின்றனர். எம்பெருமான் அமுது செய்து பிறகு சேடமான பலி பிரசாதத்தை இவர் அமுது செய்வதால் இவர் சேஷாசனர் என்று போற்றப்படுகிறார்.

### இராமர் சந்நிதி மற்றும் கண்ணபிரான் சந்நிதிகள்

இங்கு இராமர் இலக்குமணர், சீதை மூவரும் சேர்த்து வழிபடப்படுகின்றனர். இந்த சந்நிதிக்கு நேர் எதிரில் ஆஞ்சனேயருக்கு ஸந்நிதி அமைத்து வழிபாடு இயற்றப்படுகிறது. வெண்ணெய்க் கண்ணன், நர்த்தன கண்ணன், வேய்ங்குழல் கண்ணன், தவழ்ந்த கிருஷ்ணன் போன்ற பல்வேறு உருவங்களில் கண்ணபிரானை வழிபடுகின்றனர். ஆவணி மாதம் ஸ்ரீ கிருஷ்ண ஜயந்தி உற்சவம் உறியடி, சறுக்குமரம் முதலிய நிகழ்ச்சிகளோடு கொண்டாடப்படுகிறது.

### திருக்கோயில் வளர்ச்சி

ஒரு கோயிலுக்குள்ளேயே தனிக் கோயில்கள் தோன்றி கோயில் வளாகம் பெருக்கமடையத் தொடங்கியது. திருவல்லிக்கேணியில் கிழக்கு நோக்கிப் பார்த்தசாரதியான பிரதான தெய்வத்தின் ஸந்நிதி அமைந்துள்ளது. அதற்கு பின்புறம் மேற்கு நோக்கி நரசிம்மர் ஸந்நிதி தனிக்கோயில் அந்தஸ்துடன் அமைந்துள்ளது. அங்கேயே பள்ளிகொண்ட பெருமாள் சந்நிதியும் இராமர் சந்நிதியும் தனித்தனியாக அமைந்துள்ளன. இவை தவிர வரதராஜர் சந்நிதி யொன்றும் திருச்சுற்றில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. திருமங்கையாழ்வார் திருமொழியில் திருவல்லிக்கேணிப் பதிகத்தில் இங்கு கோயில் கொண்டுள்ள எம்பெருமான்கள் அனைவருக்கும் குறிப்புகள் அடங்கியுள்ளன.

சுற்றுக் கோயில்கள் திருமதிளுக்குப் புறத்தில் அடுத்துள்ள மாட வீதிகளிலும் அமைக்கப்படுவதும் உண்டு. காலையில் பிரதான பூஜை முடிந்த பிறகு சுற்றுக் கோயில்களுக்கு பூஜை வழிபாடுகளும் நிவேதனங்களும் நடைபெறும். இதில் ஆகம நெறிப்படி.யான வரிசைமுறை பின்பற்றப்படுகிறது. திருவரங்கம் போன்ற பெரிய ஆலயங்களில் சுற்றுக்கோயில்களுக்குத் தனித்தனியான மடைப்பள்ளிகள் கட்டப்பட்டிருக்கின்றன. அங்கு சுதந்திரமாக பூஜை

முறைகள் பின்பற்றப்படுகின்றன. திருமால் திருக்கோயில்களில் சிவபெருமான் பரிவார தேவதையாகத் தனிச் சந்நிதியில் வைக்கப்பெற்று வழிபாடுகள் இயற்றப்படுகிறது. திருக்கோட்டியூர், திருக்குறுங்குடி, ஆகிய தலங்களில் சிவபெருமானுக்குத் தனிச்சந்நிதிகள் உள்ளன. இவற்றையும் சேர்த்தே ஆழ்வார்கள் பாடியுள்ளனர். இங்கு இவற்றில் தனியாகச் சிவாகம முறையில் சிவாசாரியர்களைக் கொண்டு பூசைகள் நிகழ்த்தப்படுகின்றன. திருக்கோவலூரில் உலகளந்த பெருமாள் கோயிலில் அர்த்த மண்டபத்தை அடுத்த மகாமண்டபத்தில் வடக்கு நோக்கி துர்க்கைக்குத் தனியாக இருப்பிடம் வகுக்கப்பட்டிருக்கிறது. இதனையும் திருமங்கையாழ்வார் பாடிச்சிறப்பித்துள்ளார் அழகர்கோயிலில் பைரவரும் வினாயகரும் சுற்றுத் தேவதைகளாக நிர்மாணிக்கப்பட்டு அழகருக்குக் காவலாக விளங்குகின்றனர்.

திருக்கடிகை என்ற சோளிங்கபுரத்தில் ஒரு திருக்கோயில் இருபெரும் பகுதிகளாக வெவ்வேறிடங்களில் அமைந்துள்ளது மலைக்குமேல் நரசிம்மர் தனிக்கோயிலிலும் கீழே ஊருக்குள் நின்ற கோலத்தில் எம்பெருமான் தனிக் கோயிலிலும் எழுந்தருளியுள்ளனர். இவருக்குத் "தக்கான்" என்பது திருநாமம். இவ்விரு கோயில்களுக்கும் சேர்த்தே ஆழ்வார் பாசுரங்கள் பொருந்தியுள்ளன.

திருமெய்யம், திருப்புல்லாணி போன்ற தலங்களில் ஒரு கோயிலுக்குள்ளேயே ஒன்றுக்கு மேற்பட்ட மூலவர்களின் கருவறைகள் கொண்ட சந்நிதிகள் உள்ளன. இவை தனித்தனியாக இருந்து ஒருகாலத்தில் ஒரே வளாகத்துக்குள் அமைக்கப்பட்டன.

காலவளர்ச்சியில் ஒரே கோயிலில் பல்வேறுபட்ட தெய்வ சந்நிதிகள் நிலை கொண்டன. ஆகமங்களுக்கு விரோதமாய் இருந்தாலும் அரசியல் பொருளாதாரச் செல்வாக்குகளால் இவை புகுத்தப்பட்டன. மண்டபங்களிலுள்ள தூண்களில் அலங்காரமாக இடம் பெற்ற புடைப்பு உருவங்களுக்குத் தனியாக மரியாதை உண்டாகி அவையும் தனிச் சந்நிதிகளாக வளர்ச்சியடைந்தன. அனுமார் மற்றும் விநாயகர் உருவங்கள் இவ்வாறு வழிபடப்பெறுகின்றன.

மேலும் தேவதைகள் விரிவு அடைந்ததால், ஒரு கோயிற்கண் பல்வேறு மண்டபங்களும் அறைகளும் தோன்றிக் கோயில்கள் பரப்பளவில் மிகப் பெருக்கமடைந்தன. ஆஸ்தான மண்டபம், அபிஷேகமண்டபம் அலங்கார மண்டபம், வாகன மண்டபம், நிருத்தமண்டபம் அத்தியயன விழா மண்டபம் கல்யாண மண்டபம் என்று பெருகிவளர்ந்து கோயில்கள் விரிவடைந்தன. இவையனைத்தும் சேர்ந்து புனித நீர்நிலைகள், தேர்முட்டிகள், திருக்கண் மண்டபங்கள் ஆகியவற்றுடன் இன்று மிகவும் விஸ்தரித்து நிற்கின்றன.

# இயல் 12

# வைணவ ஆகமங்கள்
# வைகானசமும் பாஞ்சராத்திரமும்

ஆகமங்களில்தான் கோயில் தொடர்பான செய்திகளைக் காணலாம். வேதங்களில் வேள்விபற்றிய செய்திகளே பரவிக்கிடக்கின்றன. திருக்கோயில் பற்றிய குறிப்புகள் மிகவும் தேடிக் காணவேண்டியவையாகவே இருக்கும். பரம்.பொருளை வேள்வியில் வழிபட்டமுறைகளே வேதத்தின் முற்பகுதியான கரும காண்டத்தில் பெரிதாகக் காட்டப்படும். பல்வகைக் கடவுளர்களின் படிநிலை வரிசையில் அக்னியை இறுதி நிலையிலும் விஷ்ணுவை உயர்நிலையிலும் வைத்து யாகங்கள், யஜ்ஞங்கள் ஹோமங்கள் ஸவனங்கள், என்று பல்திறப்பட்ட வேள்விகளை வேதத்தின் பூர்வபாகமான கருமகாண்டம் கூறுகின்றது. அந்த அந்த தேவதைகளைக் குறித்த மந்திரங்ளை உச்சரித்து அவி உணவைத் தீயிலிட்டு அவர்களை வழிபடும் விளக்கங்கள் காணப்படுகின்றன. வேள்விச் சாலைகளின் அமைப்பு, வேள்வியில் பயன்படும் பொருட்களின் விவரம் போன்றவற்றையும் அவை தெளிவுறுத்துகின்றன. ஆகமங்களில் கோயில் அமைப்புகளின் எல்லா நிலைகளும் விரித்துரைக்கப்படுகின்றன. அவற்றோடு தத்துவப்பொருள்களின் ஆராய்ச்சியும் ஆகமங்களில் இடம் பெறுகிறது.

வேதம் அனாதி, நித்தியமானது. குற்றமற்றது., ஒருவராற்செய்யப் படாதது. ஆகமம் இறைவனாலும் இறையருள் பெற்ற ரிஷிகளாலும் வெளிப்படுத்தப்பட்டவை. ஆகமம் என்றால் வருகை என்று பொருள்படும். அதாவது தொன்றுதொட்டு உபதேச பரம்பரையில் வருவனவாகும். ஆகத, கத, மத என்ற மூன்று சொற்களின் சேர்க்கையால் ஆகமம் என்ற ஒரு சொல் தோன்றியதாகக் கூறுவர். இவற்றுக்கு வருகை, சென்றவை, ஏற்பவை என்று பொருளாகும். காலவெள்ளத்தில் செல்பவை, வருபவை, ஆகிய மரபுகளில் ஏற்பவற்றை எடுத்துக்கூறும் நூல்கள் என்று பொருளாகும்.

கோயில் வழிபாட்டைப் பொறுத்தவரை ஆகம சாஸ்திரங்களோடு சிற்ப சாத்திரங்களையும் இணைத்தே கோயில்களைக் கட்டி பிரதிஷ்டை மற்றும் வழிபாடுகளைச் செய்து வருகின்றனர். இவை ஒன்றுக்கொன்று உதவுபவைகளாக விளங்குகின்றன. சிற்ப நூல்களில் கட்டட அளவுகள் கட்டுமானப் பொருள்கள், படிமைகளை வார்ப்பது போன்ற செயல்களின் விளக்கங்களும் இருக்கும், அவற்றை

வழிபாட்டுக்கு எடுத்துக்கொள்ளும் போது பின்பற்ற வேண்டிய சடங்கு முறைகளை ஆகமநூல்களைக் கொண்டே அறியவேண்டும் . ஆகம நூல்கள் பல உள்ளன. 108 பாஞ்சராத்திர ஸம்ஹிதைகள், 28 சைவாகமங்கள், 77 சாக்தாகமங்கள் என்று கணக்கெடுத்துள்ளனர்.

ஆகமநூல்கள் பல ஸம்ஹிதைகளாகத் தொகுப்பட்டுள்ளன. ஒவ்வொரு கோயிலிலும் ஒரு ஸம்ஹிதை பின்பற்றப்பட்டுவருகிறது. உதாரணமாக, திருவரங்கம் பெரியகோயிலில் பாஞ்சராத்திர ஆகமத்தில் பாரமேசுவர ஸம்ஹிதை அனுஷ்டானத்தில் உள்ளது. சிலவற்றில் விஷ்ணு ஆலய வழிபாட்டு நெறிகளைச் சிவபிரான் பார்வதி தேவிக்கு உபதேசிப்பதாக அமைந்துள்ளது. அஹிர்புத்நிய ஸம்ஹிதை என்பது அத்தகையதே. அஹிர்புத்நியன் என்பது சிவனுக்குரிய பெயர்களில் ஒன்றாகும்.

ஆகம நூல்களையும் ஒருவரால் இயற்றப்படாத அபௌருஷேயமானது என்றும் கருதுவோர் உளர். அதாவது வேதத்திற்குச் சமமான மதிப்புப் பெற்றுள்ளவையாகக் கருதுகின்றனர். மஹாபாரதத்தில் பாஞ்சராத்திர ஆகமத்தை வேதத்தோடு ஒத்த பிரமாண நூலாக கௌரவிக்கப்பட்டிருக்கிறது. "பாஞ்சராத்ரம் ஸர்வக்ஞான ஸர்வேசுவரனால் அருளிச் செய்யப்பட்ட தாகையால், வேதம் போன்று தன்னுடைய பிராமாண்யத்தில் மற்றொன்றை அபேட்சியாதிருப்பதால் வேததுல்யம்" என்பர். (ஸ்ரீராமானுஜஸித்தாந்தப்ரகாசிகை, பக்.4) வியாசருடைய பிரம்ம ஸூத்திரத்திலேயே பாஞ்சராத்திர மதம் ஸ்தாபிக்கப்பட்டிருப்பதால் அதன் தொன்மை விளங்கும்.

இதற்கு மாறுபட்டும் சிலர் கருத்துக்களைத் தெரிவிக்கின்றனர். ஆதி சங்கரர் பாஞ்சராத்திர ஆகமங்களைப் பிரமாணமாக அங்கீகரிக்கவில்லை. அவருடைய வாதங்களை ஆளவந்தார் என்ற வைணவ ஆசாரியர் மறுத்து பாஞ்சராத்திர ஆகமங்கள் பிரமாணங்களே என்று ஆகம ப்ராமாண்யம் என்ற நூலில் நிறுவியுள்ளார்.

பாஞ்சராத்திர ஆகமநூல்களின் காலத்தை கி.மு. ஆறாம் நூற்றாண்டு என்று ஆர்.ஜி பண்டார்கர் போன்ற ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். சங்க காலத்திலேயே பாஞ்சராத்திரக் கோட்பாடுகள் தமிழகத்தில் பரவலாகப் புலவர்களால் அறியப்பட்டிருந்தன. பாஞ்சராத்திரம் கூறும் திருமாலின் வியூஹமூர்த்திகளின் பெயர், நிறம், இவற்றைப் பரிபாடல் கூறியுள்ளது.

டி.ஏ. கோபிநாதராவ் என்பவர் ***"Elements of Hindu Iconography"*** என்ற நூலின் முன்னுரையில், பாஞ்சராத்திர ஆகமம் ஈசுவர ஸம்ஹிதையில் நம்மாழ்வாரைப் பற்றியும் இராமானுஜரைப் பற்றியும் குறிப்புகள் வருவதால் அவை கி.பி. 10ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்ட காலத்தில் தோன்றியவையாகக் கருதுகின்றார். பிருஹத் பிரம்ம ஸம்ஹிதையும் அவ்வாறே குறிக்கிறது. வைஷ்ணவ ஆகமங்களில்

மற்றொன்றான வைகானஸ ஆகமத்தில் திருமால் திருவீதி உலாவாகப் புறப்பட்டருள்கிற காலத்தில் இறைவன் திருமுன்னர் திவ்வியப் பிரபந்தங்களை இசைத்துச் செல்ல விதிக்கப்பட்டிருப்பதால் ஆகமங்கள் யாவையுமே ஆழ்வார்களின் காலத்துக்குப் பிற்பட்டவையே என்று அபிப்பிராயப்படுகிறார். உண்மையில் அப்படியன்று. ஆகமங்களில் நித்திய சூரிகளின் அம்சங்களான அடியார்களின் (பக்தர்கள்) திருவுருவங்களைக் கோயில்களில் வைத்து வழிபடும் விதிகளும் வகுக்கப்பட்டிருக்கின்றன. அதனை "பக்த பிம்பபிரதிஷ்டை" என்பர். பிற்காலத்தில் அந்த ஆகமங்களில் அப்பகுதிகளில் அந்த பக்தப்பெருமக்களை இன்னார் இன்னார் என்று வகை பிரித்துச் சேர்த்துக் கொண்டனர். அப்பகுதிகளில் பிற்காலச் சேர்க்கை என்று கொள்ளலாமே தவிர ஆகமங்களின் காலத்தை மிகவும் பிற்காலத்துக்குக் கொண்டுவருவது பொருந்தாது. மஹாபாரதத்தில் மோட்சதர்மம் என்ற பகுதியில் பாஞ்சராத்திர ஆகமசாஸ்திர வருணனை நன்கு இடம் பெறுவதால் அவற்றின் பழமையை உணரலாம்.

ஆகமநூல்களின் தோற்றத்திற்குத் தமிழ்ப்பண்பாடுதான் அடிப்படையென்று சர்வபள்ளி டாக்டர். எஸ். ராதாகிருஷ்ணன் என்ற தத்துவப் பேறறிஞர் கருதுகிறார்.

*"The Vedic Aryans possessed no temples and used no images. The Dravidian culture provided image worship and insisted on puja in place of Yagna. The various traditions on temples and image worship took shape after Hinduism grew out of Vedism." (Religion and Society, P.125)*

இன்றும் தமிழகத்தில்தான் ஆகமரீதியான வழிபாடுகள் திருக்கோயில்களில் பின்பற்றப்பட்டுவருகின்றன. ஆகமங்களே சைவ வைணவப் பண்பாட்டுக்குக் கருவூலங்களாகத் திகழ்கின்றன. சைவசித்தாந்த சாஸ்திரங்களுக்குச் சைவாகமங்கள் அடிப்படையாக இருக்கின்றன. வைணவ சம்பிரதாயத்துக்கு பாஞ்சராத்திர ஆகமங்கள் பெரிதும் உதவுகின்றன.

**வைகாநஸ ஆகமம்**

வைகாநஸ ஆகமம் என்பது பகவச்சாஸ்திரமாகும். விகநஸ முனிவரால் சொல்லப்பட்டதால் வைகாநஸஸூத்திரம் என்று அழைக்கப்படுகின்றது. போதாயனர் ஆபஸ்தம்பர், ஆச்வலாயனர் த்ராஹ்யாயணர் போன்ற ரிஷிகளால் சொல்லப்பட்ட சூத்திரங்கள் போன்று விகனஸ ரிஷியால் சொல்லப்பட்டவை வைகானஸ ஸூத்திரமாகும். விகநஸரின் ஸம்பந்தமுற்றோர் வைகாநஸர் என்று அழைக்கப்படுவர். ஸம்பந்தமாவது பிதா புத்திர சம்பந்தம் மற்றும் ஆசாரிய சிஷ்ய சம்பந்தமாகும். விகனஸரிஷி திருமாலின் திருவவதாரமாகவே கொள்ளப்படுகிறார், இவர் மஹாவிஷ்ணுவின் மாநஸ புத்திரர்.

மஹாவிஷ்ணு இவரை பிரம்மதேவனுக்கு முன்னதாகவே மானஸ ஸங்கல்பத்தால் படைத்தார். இவருக்கே மஹாவிஷ்ணு ஸ்ரீவைகானஸ சாஸ்திரத்தை உபதேசித்தார். மேலும் அவருக்கு திருமந்திரம் துவயம் முதலிய மந்திரங்களையும் அவற்றின் அர்த்தங்களையும் உபதேசித்தார். விஷ்ணு என்று தொடங்கும் பாரமார்த்திக உபநிஷத் மந்திரங்களை தரிசித்து விகநஸ ரிஷி வெளியிட்டார்.

**விகனஸ் என்ற சொற் பொருள்**

வி + கநநம் = வேதாந்த தத்வ மீமாஸ்ஸா கநநம் க்ருதவாந்விபு அதாவது, வேதாந்த விழுப்பொருளை நன்கு தோண்டி வெளிக் கொண்டுவந்தவர் என்று பொருள். இவ்வாறு மரீசியால் சொல்லப்பட்ட ஆனந்த ஸம்ஹிதை விளக்குகிறது.

**விகநஸ முனியின் உருவ வருணனை**

முனிவர்களின் வேஷத்தை உடையவர், சங்கம் சக்ரம் அபயமுத்திரை வரதமுத்திரை ஆகியவற்றை நான்கு கரங்களிலும் தரித்தவர், தர்ப்பைப்புல் ஆஸனத்தில் வீற்றிருப்பவர்,. ஊர்த்வ புண்ட்ரத்தையும் பவித்திரத்தையும் அணிந்தவர். கிரீடம் ஹாரம் குண்டலம் தோள்வளை ஆகிய ஆபரணங்களை அணிந்தவர். சிகை, பூணூல், முக்கோல், தரித்தவர், அபயஹஸ்தத்தில் தாமரையை ஏந்தியவர்.

ஸ்ரீமந் நாராயணன் விகநஸருக்கு வைகாநஸ சாஸ்திரத்தை முதலில் உபதேசித்தார். விகநஸ ரிஷி அதைச் சுருக்கி ஸூத்திரமாக்கினார். ஆபஸ்தம்பர், போதாயநர் போன்றோர் இயற்றிய கல்ப ஸூத்திரங்களுக்குள் வைகாநஸ ஸூத்திரம் பிரதானமானது. விகநஸமுனிவரிடமிருந்து பிருகு, அத்ரி, மரீசி, காசியபர் ஆகியோர் உபதேசிக்கப்பெற்றனர். வைகாநஸமுனிவர் 1.5 கோடி சூத்திரங்களைச் சொன்னார். அதைச் சீடர் நால்வரும் 4 லட்சங்களில் சுருக்கினர். மேலும் ஸம்ஹிதைகளையும் தொகுத்து வெளியிட்டனர்.

விகநஸ முனிவரின் வழி வந்தவர்களான வைகானசர்கள் கர்ப்ப வைஷ்ணவர்கள். இவர்கள் கருவிலே திருவுடையவர்கள். அதாவது கர்ப்ப வாசம் செய்யும் போது,, கர்ப்பாஷ்டமத்தில் விஷ்ணுபலியிட்டு சுதரிசனமூர்த்தியைப் பாயஸத்தில் ஆவாஹனம் செய்து சீமந்த முகூர்த்தத்தில் தாய்க்குப் பருகக் கொடுத்து அதனால் கர்ப்ப சக்ர ஸம்ஸ்காரம் பெற்றவர்கள். அதே கருப்பையில் பின் பிறக்கும் குழந்தைக்கும் இதுவே ஸம்ஸ்காரமாக ஆகிறது. இவர்கள் பிறக்கும் போதே விஷ்ணுபூஜைக்குத் தகுதி பெற்று விடுகிறார்கள். இவர்கள் விஷ்ணு பூஜை தவிர்த்து வேறு வழிகளில் செல்லக்கூடாது. விஷ்ணு பூஜையையும் இவர்கள் வேறு உலகியற்பயன் கருதிச் செய்தல் கூடாது. அதாவது ஸ்வயம் பிரயோஜனமாகவே விஷ்ணு பூஜை செய்யவேண்டும். பொருளைக் கூலியாகப் பெற்று விஷ்ணு பூஜை செய்தாலும் பிற

தெய்வங்களைப் பூஜை செய்தாலும் அவர்கள் "தேவலகர்" என்று என்றழைக்கப்பட்டனர்.

வைகாநசர்கள் அங்கங்களை அறிந்து வேதங்களை அத்தியனம் செய்தவராயிருக்கவேண்டும். அஷ்டாதச ச்ரௌத கர்மங்களை சிரத்தையோடு செய்யவேண்டும். ஷட்விம்சதி (இருபத்து ஆறு) யக்ஞங்களை விதிவழாது செய்யவேண்டும். அவை பஞ்சமகாயக்ஞங்கள், ஸப்தபாக யக்ஞங்கள், ஸப்தஹவிர் யக்ஞங்கள், ஸப்தஸோம யக்ஞங்களாகும்.

வைகானச சமுகத்தினர் தமிழ்நாடு, ஆந்திரம், கர்நாடகம், ஆகிய மூன்று மாநிலங்களில் மட்டுமே வாழ்கின்றனர். தமிழகத் திருக்கோயில்களைப் பண்டைக்காலத்தில் இவர்களே நிருமாணித்தனர். இன்றும் தமிழ்நாட்டிலுள்ள திருமால் திருக்கோயில்களில் பெரும்பாலும் இவர்களே பூஜை செய்து வருகின்றனர். பாஞ்சராத்ர ஆகமத்தைப் பெரிதும் போற்றிய இராமானுஜர் அவதரித்த ஸ்ரீ பெரும்புதூர் ஆலயத்திலும் வைகானசர்களே பூஜை செய்கின்றனர். இராமானுஜர் திருமலையில் சீர்த்திருத்தம் செய்தபோது வைகானச பூஜை விதானத்தை மாற்றாது போற்றினார். திருவரங்கத்தில் வைகானஸ வழிபாட்டை மாற்றி பாஞ்சராத்திர முறையைப் புகுத்தியது இராமானுஜரே என்று சிலர் கருதுவது தவறு. திருவரங்கம் கோயிலின் வரலாற்று ஆதாரமான கோயிலொழுகை ஆராய்ந்தால் உண்மை புலனாகிறது. ஒரு காலத்தில் பாஞ்சராத்ர பாரமேச்வர ஸம்ஹிதையால் வழிபாடாற்றிய பூஜகர்கள் ஏதோ காரணத்தால் கோயிலை விட்டு வெளியேறியிருந்தனர். அப்போது அரசர்கள் தலையீட்டால் வைகானச நம்பிமார்கள் இடைக்கால ஏற்பாடாகப் பூஜைகளைச் செய்து வந்தனர். பிறகு இராமானுஜர் வருகைக்குப் பிறகு பூர்வகாலத்தில் பூஜை செய்துவந்த பாஞ்சராத்திர தீட்சிதர்களைக் கொண்டு மீண்டும் பாஞ்சராத்ர பூஜாவிதானத்துக்குத் திருவரங்கம் பெரியகோயிலை மாற்றியமைத்தார் இராமானுஜர். வைகானச ஆகமத்துக்கு அவர் விரோதமாயிருந்ததில்லை. வைகானசர்களின் பெருமை இதிஹாசபுராணங்களிலும் ஸ்மிருதியிலும் ஏறியிருக்கிறது.

வராஹபுராணத்தில்

*அச்வத்த : கபிலா காவ : துலஸீ விகநா முநி :*

*சத்வாரோ மத்ப்ரியா ராஜந் தேஷாம் வைகானஸோ வர :*

என்ற சுலோகத்தில் திருமாலுக்குப் பிரியமானவை அச்வத்த விருட்சம், காராம்பசு, துளசிச்செடி, விகனசமுனிவர் என்றும் இவருள் விகனசரே மிகவும் உகப்பானவர். என்றும் கூறப்பட்டிருக்கிறது.

**வைகானசரும் மற்றைய ஸ்ரீவைஷ்ணவர்களும்**

வைகானசர்கள் பிறப்புரிமையால் வரும் சமூகத்தைச் சேர்ந்துள்ளனர். வைகானசர் யாவரும் அந்தணர்கள். வைகானச

ஆண்மகனுக்கு வைகானசப் பெண் வயிற்றிற் பிறக்கும் பிரஜையே வைகானசமாகும். அவர்களுக்குள் கோத்திரப் பிரிவுகள் உள்ளன. அவற்றுக்குள் அவர்கள் மணவினைத் தொடர்புகள் வைத்துக் கொள்வர். வேறு அந்தணர்களோடு அவ்வுறவு கொள்வதில்லை. சைவத்தில் சிவாச்சாரியார்களின் (ஆதிசைவர்) சமூகமும் இத்தகைய தனித்தன்மை கொண்டிருப்பது ஒப்பு நோக்கத்தக்கது. வைகானச சமூகத்தினர் ஸ்ரீவைஷ்ணவ குருபரம்பரையில் சம்பந்தப்படாதவர்கள். அவர்கள் இராமானுஜரையோ நம்மாழ்வாரையோ தம் குலகுருவாக ஏற்றுக் கொள்ளவில்லை. அதனால் திவ்வியப் பிரபந்தங்களை அவர்கள் அத்தியயனம் செய்வதில்லை. ஸ்ரீவைஷ்ணவ ஆசாரியர்களின் தனியன்களை அனுசந்திப்பதும் இல்லை. பஞ்ச ஸம்காரம் என்ற வைஷ்ணவ தீட்சையை இவர்கள் பெறுவதில்லை. அத்தகைய தீட்சையை கர்ப்ப வாசத்தின்போதே மந்திர ஸம்ஸ்காரத்தால் பெற்றுவிடுகிறார்கள்.

இவர்களுக்குத் தனிப்பட்ட வைதிகப் பிரயோகங்கள் உள்ளன. உதாரணமாக சிறு குழந்தைகளுக்கு உத்தானம் என்ற ஸம்ஸ்காரம் சிறப்பாக இவர்களுக்கு விதிக்கப்பட்டிருக்கிறது.

**வைகானஸ ஸம்பிரதாயம்**

இவர்களின் கொள்கை லக்ஷ்மீவிசிஷ்டாத்வைதம் என்று குறிப்பிடப்படுகிறது. ஸ்ரீநிவாசமகி என்ற வைகானச ஆசாரியர் பிரஹ்ம சூத்திரத்துக்கு பாஷ்யம் இயற்றியுள்ளார்.

ஸ்ரீமந்நாராயணன் ஒருவனே பரம்பொருள். சேதன அசேதன வடிவமான பிரபஞ்சம் அவனுக்கு சரீரம்; அவனே சரீரி, அசேதனதத்துவம் 24 வகைப்படும் என்ற கோட்பாடுகள் எம்பெருமானார் தரிசனத்தோடு பொருந்தியவை. காலஸ்வரூபம் ஜீவ ஈச்வர லக்ஷணங்கள் தர்மபூதஜ்ஞானம், அர்ச்சிராதி கதி, நித்திய விபூதி முதலிய விஷயங்களிலும் இராமானுஜ சம்பிரதாயக் கோட்பாடுகள் உள்ளன. பிராட்டி விஷயத்தில் மட்டும் ஈசுவர கோடியில் சேர்க்கிறார்கள். ஆயினும் பிராட்டிக்கு புருஷகாரமே ஸ்வரூபம் என்பர். முக்தியில் பல பேதத்தை ஒப்புக்கொள்கின்றனர். கைவல்யமும் மோக்ஷமே என்று கருதுகின்றனர். ஒரு சில விஷயங்களில் தேசிக ஸம்பிரதாயத்தைக் கொண்டிருக்கின்றனர். வைகானசர்களில் கி.பி. 1059ல் வாழ்ந்தவரான ஸ்ரீநிவாச அத்வரி என்பவர் கவிகுலதிலகர் என்றும் வைகானஸவேதாந்த தேசிகர் என்றும் போற்றப்படுகிறார்.

ஸ்ரீநிவாஸாசாரியர் என்பவர் வான்மீகீ இராமாயணத்துக்கு வியாக்கியானம் எழுதினார். இவர் எட்டு மொழிகளில் புலமை பெற்றுத் திகழ்ந்தார். இவர் திருமலையில் திருவேங்கடமுடையானுக்கு அர்ச்சகராகப் பணிபுரிந்தார். அப்போது எம்பெருமான் தலைதாழ்த்தி அவரிடமிருந்து மாலையை ஏற்றுக்கொண்டான். முதல் சேஷப்பிரசாதம் வைகானசருக்கே அளிக்கப்படும் மரபு இன்றும் திருமலையில் பழக்கத்தில் உள்ளது.

வைகானசர்கள் அனுசந்திக்கும் குருபரம்பரைத் தனியன்கள் இரண்டு உள்ளன. அவை

*ஸ்ரீலஷ்மீ வல்லபாரம்பாம் விகநோமுநி மத்யமாம்*
*அஸ்மதாசார்ய பர்யந்தாம் வந்தே குருபரம்பராம்*
*தேவராஜ தயா பாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்*
*ப்ருகுவாதி முநிபிர் மாந்யம் வந்தே ஸ்ரீவிகநோமுநிம்*

**பாஞ்சராத்ரம்**

பாஞ்சராத்ரம் என்றால் ஐந்து இரவுகள் என்று பொருளாகும். ஸத்ரயாகம் ஒன்றில் ஐந்து இரவுகளில் பகவானை வழிபடும் விதானம் உபதேசிக்கப்பட்டதால், அவ்வாறு பெயர் ஏற்பட்டதாக சதபத ப்ராஹ்மணம் கூறுகிறது. பரம, ஸம்ஹிதையில் வேறு காரணம் கூறப்படுகிறது. இராத்திரியின் குணங்களான மஹாபூதம், தந்மாத்ரை, அஹங்காரம், புத்தி, அவ்யக்தம் என்ற ஐந்தின் காரணமாகவே அப்பெயர் ஏற்பட்டதாக அது கூறுகிறது.

பாத்ம தந்திரம் என்ற நூலில் யோகம் சாங்கியம் பௌத்தம், ஆர்ஹதம், காபாலம் பாசுபதம் ஆகிய பஞ்சசாஸ்திரங்களும் இருள் அடைந்து போகும்படி செய்ததால் பாஞ்சராத்ரம் என்று பெயர் வந்ததாகக் கூறுகிறது. மற்றொரு விளக்கத்தின்படி, இராத்ரி (இரவு) அறியாமையைக் குறிக்கும். பச (சமை) என்ற வினையடியிலிருந்து தோன்றிய பாஞ்ச என்ற சொல் ராத்ரி என்ற சொல்லுடன் சேர்ந்து அறியாமையைச் சமைக்கிறது, அதாவது அழிக்கிறது என்ற பொருள் தருகிறது. இன்னும் சிலர் ப்ரஹ்மம், முக்தி, போகம், யோகம், பிரபஞ்சம் என்ற ஐந்து லக்ஷயங்களையும் அடைவிக்கும் நெறிகளைக் காட்டுவதால் பாஞ்சராத்ரம் என்று பெயர் பெற்றதாகக் கருதுவர். உண்மையில், பாஞ்சராத்ர சாஸ்திரமானது பரம்பொருளின் ஐந்து நிலைகளை விவரிப்பதால் அவ்வாறு பாஞ்சராத்ரம் என்று பெயர் பெற்றதாகப் பலர் கருதுகின்றனர். பரம் பொருளின் ஐந்து நிலைகள் பரத்துவம், வியூஹம், விபவம், அந்தர்யாமித்துவம், அர்ச்சாவதாரம் என்பனவாம். இவற்றுள் வியூஹ நிலையை விரித்துக் கூறுவதில் பாஞ்சராத்ரம் நோக்காயிருக்கிறது. வேதத்தைக் கொண்டு பரத்துவத்தையும், பாஞ்சராத்ர ஆகமங்களைக் கொண்டு வியூஹத்தையும், இதிஹாஸ புராணங்களைக்கொண்டு விபவங்களையும், ஸ்மிருதிகளைக் கொண்டு அந்தர்யாமித்துவத்தையும், திவ்வியப்பிரபந்தங்களைக் கொண்டு அர்ச்சாவதாரத்தையும் அறிந்து கொள்ளவேண்டும். என்று ஆசாரிய ஹிருதயம் என்ற நூல் குறிப்பிடுகிறது.

ஆளவந்தார், இராமானுஜர் ஆகியோர் காலத்தில் பாஞ்சராத்ர சாஸ்திரங்கள் போற்றப்பட்டுப் பிரபலமடைந்தன. இராமானுஜர் தம்முடைய விசிஷ்டாத்வைத சித்தாந்தத்துக்கும் சரணாகதி தர்மத்துக்கும் பிரமாணமாக பாஞ்சாரத்திர ஆகமங்களை ஆதரித்தார். ஆதிசங்கரர்

பாஞ்சராத்திர ஆகமத்தைப் பிரமாணமாகக் கொள்ளவில்லை. அதில் ஜீவனுக்கு உற்பத்தி சொல்லப்பட்டிருந்ததாகக் கொண்டு அஃது வேதாந்தத்திற்கு முரண்பட்டது. என்பதால் அவ்வாறு கொள்ளவில்லை. ஆளவந்தார் ஆகமப்ராமாண்யம் என்ற நூலில் சங்கரரின் கருத்தைக் கண்டித்து பாஞ்சராத்ர ஆகமம் பிரமாண நூலேயாகும் என்று நிருபித்தார்.

*பாஞ்சராத்ரஸ்ய க்ருத்நஸ்ய வக்தா நாராயண ஸ்வயம்*
*இதி ஸர்வத்ர விக்யாதம் பகவச் சாஸ்திர கௌரவம்*

(ஸ்ரீமந் நாராயணனால் நேராகவே திருவாய் மலர்ந்தருளின படியால் மிகவும் புகழ் பெற்றது)

**பாஞ்சராத்ர ஸம்ஹிதைகள் 108**

அவற்றில்

*ஸாஸ்வதம் பௌஷ்கரஞ்சைவ ஜயாக்க்யம் தந்த்ரமுத்தமம்*
*ரத்னத்ரயமிதம் ஸாக்ஷாத் பகவத் வக்தா நிஸ்ருதம்*

(ஸாஸ்வதம், பௌஷ்கரம், ஜயாக்யம் என்ற இம்மூன்றும் பகவானால் சொல்லப்பட்டதால் ரத்தினத்திரயம் என்றும் மூல ஸம்ஹிதைகள் என்றும் சொல்லப்படுகிறது)

பௌஷ்கரத்தின் விரிவை பாரமேச்வர ஸம்ஹிதையும். ஸாத்வதத்தின் விரிவை ஈச்வர ஸம்ஹிதையும் ஜயாக்யத்தின் விரிவை பாத்ம ஸம்ஹிதையும் தெரிவிக்கிறது,. இவற்றுள் ஜயாக்யம் சிறந்ததாகப் போற்றப்படுகிறது. அதிற் சொல்லப்பட்டபடியே பிரதிஷ்டை முதலான காரியங்கள் நடத்தப்படுகின்றன.

**பாஞ்சராத்திர வைகானஸ ஆகமங்கள் நடைமுறை வேறுபாடுகள்**

1. வைகானஸ ஆகம சாஸ்திர விதிகள் வைகானச பிராம்மணர்களையே சடங்குகளில் அனுமதிக்கின்றன. பாஞ்சராத்திர சாஸ்திர விதிகள் தீக்ஷை பெற்றுக் கொண்ட பிராம்மணர்கள் எல்லோரையும் கோயில் பூஜைகளில் அனுமதிக்கின்றன. திருவிலச்சினை முதலிய பஞ்சஸம்ஸ்காரங்கள் பெற்றுக்கொண்ட பிராம்மணர் அல்லாதவர்களையும் சில காரியங்களில் அவை ஏற்கின்றன, கிராமப்புறங்களில் விஷ்ணு ஆலயங்களில் சாத்தாத ஸ்ரீவைஷ்ணவர்கள் இன்றும் பூஜைகள் செய்துவருகின்றனர். பிரதிஷ்டை முதலிய விசேட காலங்களில் அவர்கள் பாஞ்சராத்திர தீட்சை பெற்ற பிராம்மணர்களின் உதவியைப் பெறுகின்றனர்.

2. வைகானச ஆகமவிதிகளின்படி, வைகானச பிராம்மணர்களே கருவறையிலுள்ள இறைவனுடைய திருமேனிகளைத்

தீண்ட உரிமை பெறுகிறார்கள். பிற பிராம்மணர்கள் தொடுதல் கூடாது. இது வைகானச பிராம்மணர்களின் பிறப்புரிமையாகக் கொள்ளப்படுகிறது. வைகானச அர்ச்சகர் ஏதோ காரணங்கருதி பூஜை செய்ய முடியாமற்போனால் வேறு ஓர் வைகானச குலத்துதித்த பிராம்மணரே பூஜை செய்யவேண்டும். பொதுவாக, கோயில்களில் இருவேறு கோத்திரங்களைச் சேர்ந்த வைகானச பிராம்மணர்கள் முறை வைத்துக்கொண்டு பூஜைப் பணிகளைச் செய்வார்கள். ஒருவர்க்குத் தீண்டல் ஏற்பட்டாலும், இதனால் கோயில் வழிபாடு சிறிதும் தடைபடாது. பாஞ்சராத்திர ஆகமத்தை அனுசரிக்கும் கோயில்களில் தீக்ஷை பெற்ற பிராம்மணர் எவரும் கருவறையுள் புகுந்து பூஜைகள் செய்யலாம்.

3. வைகானச அர்ச்சகர்கள் திருவிலச்சினை என்ற பஞ்சஸம்ஸ்கார தீக்ஷை பெறுவதில்லை. கர்ப்பத்திலிருக்கும் போது அனுட்டிக்கப்படும் ஒரு சடங்கினால் அவர்கள் ஸம்ஸ்காரம் பெற்று கர்ப்ப வைஷ்ணவர்கள் ஆகிவிட்டபடியால் மேற்குறித்த ஸம்ஸ்காரம் தேவையில்லை ஆனால், வானமாமலை மடத்தின் நிருவாகத்திலிருக்கும் விஷ்ணு கோயில்களில் வைகானச அருச்சகர்கள் வானமாமலை ஜீயரிடம் திருவிலச்சினை பெற்றுக் கொண்டு பூஜைகள் புரிகிறார்கள்.

4. வைகானசர்கள் ஆழ்வார்களிடத்திலும் வைணவ குருபரம்பரை ஆசாரியர்களிடத்திலும் தொடர்பற்றிருப்பதால், கோயில்களில் ஆழ்வார் ஆசாரியர் ஸந்நிதிகளில் ஸ்ரீ வைஷ்ணவ ஆசாரிய குலத்தினரே பூஜை புரிகின்றனர். இன்று நடைமுறையில் நிர்ப்பந்தங்கள் மற்றும் பல தேவைகளால் வைகானசர்கள் ஆழ்வார் ஆசாரியர்கள் சந்நிதிகளிலும் பூஜைகள் செய்துவருகின்றனர். அவர்களே அந்த சந்நிதி பிரதிஷ்டை முதலிய சிறப்பு நிகழ்ச்சிகளையும் செய்துவைக்கின்றனர்.

5. வைகானச வழிபாட்டுமுறையில் மந்திரங்கள் பெரும்பங்கு பெறுகின்றன. பாஞ்சராத்திரமுறையில் தந்திரங்களும் முத்திரைகளும் கிரியைகளில் முக்கிய இடம் பெறுகின்றன.

6. வைகானசர்கள் விஷ்ணு, புருஷன், சத்யன், அச்யுதன், அநிருத்தன் என்று ஐவகை மூர்த்தங்களை வழிபடுகின்றனர். பாஞ்சராத்ரமுறையில் வாசுதேவன், ஸங்கர்ஷணன், பிரத்யும்னன், அநிருத்தன், மூர்த்தி என்ற விதானமான வழிபாட்டைச் செய்கின்றனர்.

7. கோயில் அமைப்புகளிலும் திருவாராதன முறையிலும் மூர்த்திகளின் அமைப்பிலும் வேறுபாடுகளைக் காணலாம். வைகானசத்திருக்கோயில்களில் பொதுவாக பலி பீடத்தைக் தாண்டிப் பின்னால் கொடிமரம் நிற்கும். பாஞ்சராத்திரக் கோயில்களில் கொடிமரம் முன்னால் நிற்கும். பாஞ்சராத்திரக் கோயில்களில் பெரும்பாலும் உற்சவமூர்த்தி ஒரு திருக்கையில் கதை பிடித்திருக்கக் காணலாம். வழிபாட்டில் தூப தீபங்கள் காட்டுவதில் வரிசை முறை மாறுபடும்.

திவ்வியப் பிரபந்தங்களில் வைணவ தீக்ஷையான திருவிலச்சினை வலியுறுத்தப்படுகிறது. "நின் கோயிற் பொறியாலே ஒற்றுண்டு" என்று பெரியாழ்வார் குறிப்பிடுவது காண்க. ஆதலால் திவ்யப்பிரபந்தங்கள் பாஞ்சராத்திர சாஸ்திரத்தையே ஏற்றுக்கொண்டிருப்பது அறியப்படுகிறது.

பாஞ்சராத்திர, வைகானச ஆகமங்களைப் பின்பற்றாது வேதமந்திரங்களைக் கொண்டு பூஜை செய்யும் முறையும் உள்ளது. வைதிகப்பிரதிஷ்டை, வைதிக ப்ரக்ரியை, வைதிக பூஜை என்ற முறையும் சிறுகோயில்களில் பின்பற்றப்படுகின்றன. இவற்றை ஸ்ரீ வைஷ்ணவரல்லாத ஸ்மார்த்தப் பிராம்மணர்கள் நடத்துகின்றனர். வைஷ்ணவ ஆலயங்களில் வேதத்திலும் ஆகமங்களுக்கே சிறப்பிடம் அளிக்கப்படுகிறது. ஆகமரீதியான சடங்குகள் வேத மந்திரங்களுடன் சேர்ந்தே இயற்றப்படுகின்றன. சிவாலயங்களில் கூட சிவாகமவாதிகளான சிவாசாரியார்கள் வைதிக பிராம்மணர்களான ஸ்மார்த்தர்களுக்கு மேலிடம் தருவதில்லை.

# இயல் 13

## பாடல் பெற்ற திருமால் திருப்பதிகள்

ஆழ்வார்களால் பாடப்பெற்ற திருமால் திருக்கோயில்களை வைணவ மரபில் "திவ்விய தேசங்கள்" என்றழைப்பர். ஆழ்வார்களை "திவ்விய சூரிகள்" என்றும் அவர்கள் அருளிச் செய்த பிரபந்தங்களை "திவ்யப்பிரபந்தங்கள்" என்றும் அழைப்பர். அவற்றில் போற்றப்பெற்ற திருத்தலங்களை திவ்விய தேசங்கள் என்றும் அழைப்பர். இம்மூன்றினையும் ஒரு சேர திவ்வியத்திரயங்கள் என்று குறிப்பிட்டு வழங்குவர். பிரமாணம், பிரமாதா, பிரமேயம் அதாவது உண்மை அறிவைத்தரும் கருவி, உண்மை அறிவை உணர்த்தும் சான்றோர், உண்மை அறிவுக்கு விஷயம் ஆகிய மூன்றினையும் திவ்யம் என்ற அடைமொழி கொடுத்துச் சிறப்பித்தனர் வைணவப்பெருமக்கள். திவ்வியம் என்றால் தெய்வீகமானது என்று பொருளாகும்.

ஆழ்வார்கள் - பிரமாதாக்கள்
அருளிச்செயல் - பிரமாணம்
திருப்பதிகள் - பிரமேயம்
அதாவது,
பிரமாதாக்கள் - திவ்வியசூரிகள்
பிரமாணம் - திவ்வியப்பிரபந்தம்
பிரமேயம் - திவ்வியதேசம்

திவ்விய தேசங்களில் கோயில் கொண்டு உறையும் அர்ச்சா மூர்த்தியான இறைவனை வழிபடுவதும் அவ் இறைவனுக்குத் தொண்டுகள் செய்வதும் வைணவநெறியில் வலியுறுத்தப்படும் புருஷார்த்தமாகும். (உறுதிப்பொருள்) இதனை கைங்கரியம் என்பர். இஃது திவ்விய சூரிகளான ஆழ்வார்கள் அருளிய திவ்வியப் பிரபந்தத்தின் மூலமாகவே தெளிவுறுத்தப் பட்டிருக்கிறது.

திவ்விய தேசங்களை "உகந்தருளின நிலங்கள்" என்ற தமிழ்த் தொடரால் குறிப்பிடுவதும் வைணவ மரபாகும். ஆழ்வார் பாசுரங்களால் பாடப்பெற்றதால் இறைவன் உகந்து எழுந்தருளியிருக்கும் இடம் என்பது பொருள்.

"தான் உகந்த ஊரெல்லாம் தன தாள்பாடி" என்று திருமங்கையாழ்வாரின் திருநெடுந்தாண்டகத்திலிருந்து இத்தொடர் தழுவப்பட்டிருக்கிறது.

ஆழ்வார்களால் பாடப்பெறாது, ஆசாரியப் பெருமக்களால் - ஆதரிக்கப்பட்ட திருமால் திருத்தலங்களை அபிமானஸ்தலங்கள் என்றும் ஆழ்வார்களும் ஆசாரியர்களும் அவதரித்த தலங்களை திருஅவதாரஸ்தலங்கள் என்றும் குறிப்பிடுவர்.

ஆழ்வார்களால் பாடப்பெற்ற திருப்பதிகளை மங்களாசாஸனத் திருப்பதிகள் என்பது பொது மரபு, இவ்வாறு ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப்பட்ட திவ்விய தேசங்கள் வடக்கே பரமபதமும் பாற்கடலும் உட்பட இமயமலை முதல் தெற்கே திருக்குறுங்குடி முடிய 108 திவ்விய தேசங்களாகக் கணக்கிட்டிருக்கின்றனர். இவற்றுள் திருப்பிரிதி என்ற திவ்வியதேசம் மானசரோவர் என்ற ஏரிக்கரையில் இமயத்துள் இருந்தது. இப்போது சீன ஆக்ரமிப்பிலுள்ள திபேத்தில் சேர்ந்துவிட்டது. ஆனால் இதற்குப் பன்னூறு ஆண்டுகளுக்கு முன்பே அங்கே எழுந்தருளிய மூர்த்தங்களை அப்புறப்படுத்தி ஜோஷிமட் என்ற இடத்துக்கு மாற்றி அங்கு கோயில் எழுப்பி வழிபட்டனர். இவ்வாறு செய்தவர் ஆதிசங்கரர் என்று ஜோஷிமட்டிலுள்ள பண்டாக்கள் தெரிவிக்கின்றனர். திருமங்கையாழ்வார் காலத்தில் திருப்பிரிதி பாரததேசத்தின் எல்லையில் இருந்து அடியார்கள் போக்குவரத்தால் புகழ்பெற்றிருந்தது. திருமங்கையாழ்வார் ஒருவரே திருப்பிரிதியைப் பாடியிருக்கிறார். திருமங்கையாழ்வார் காலத்துக்கும் இராமானுஜர் காலத்துக்கும் இடைப்பட்ட காலத்தில் திருப்பிரிதி அன்னியர் வசமாகி வழிபாடுகள் நின்றுபோய் இடமாற்றமும் ஏற்பட்டிருக்கவேண்டும். இராமாநுஜருடைய வடதேச யாத்திரையை வருணிக்கும் பிள்ளைலோகஞ்சீயர் தம்முடைய இராமாநுஜார்ய திவ்ய சரிதை என்ற நூலில் (கி.பி.16நூ) இராமானுஜர் திருப்பிரிதி சென்றதாகக் கூறவில்லை. இன்று ஜோஷிமட் என்ற ஜ்யோதிர்மடமே திருப்பிரிதியாகக் கொள்ளப்படுகிறது.

பாரததேசம் முழுவதும் பரவிக்கிடக்கும் திவ்விய தேசங்களை

1. சோழநாடு 2. பாண்டியநாடு 3. மலைநாடு

4. தொண்டை நாடு 5. நடுநாடு 6. வடநாடு 7. திருநாடு

என்ற ஏழு பிரிவுகளில் அடக்குகிறார்கள். இப்பிரிவுகள் பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் என்பவரால் இயற்றப்பட்ட நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதியில் முதற்கண் சொல்லப்பட்டன. அந்நூலில் கீழ்வரும் வெண்பா எண்ணிக்கையை அளிக்கிறது.

*ஈரிருபதாம் சோழம் ஈரொன்பதாம் பாண்டி*

*ஓர்பதின் மூன்றாம் மலைநாடு ஓரிரண்டாம் - சீர் நடுநா (டு)*

*ஆறோ(டு) ஈரெட்டாம் தொண்டை அவ்வடநாடு ஆறிரண்டு*

*கூறுதிரு நாடு ஒன்றாக் கொள்*

| | | | |
|---|---|---|---|
| சோழநாடு | 40 | பாண்டியநாடு | 18 |
| மலைநாடு | 13 | நடுநாடு | 2 |
| தொண்டைநாடு | 22 | வடநாடு | 12 |

திருநாடு - 1

ஆகத் திருப்பதிகள் மொத்தம் 108

சைவத்தில் பதிகம் பெறாது குறிப்புமட்டுமுள்ள திருத்தலங்கள் "வைப்புத்தலங்கள்" என்று பெயர் பெறுகின்றன. வைணவத்தில் பதிகம் பெறாது ஒரு பாடலில் ஒரு சொல்லாக இடம் பெற்றாலும் போதும். அவை திவ்விய தேசங்களேயாகும். உதாரணமாக, மதுரை மாநகரிலுள்ள கூடலழகர் திருக்கோயிலைத் திருமங்கையாழ்வார் ஒரே பாசுரத்தில் மட்டும் குறிப்பிடுகிறார். நாகப்பட்டினம் என்ற திருநாகைத் திருமாலைக் குறித்து ஒரு பதிகம் பாடியுள்ளார். அதில் ஒரு பாடலில்

'*கோழியும் கூடலும் கோயில் கொண்ட கோவலரே ஒப்பர்*

என்று திருநாகை அழகியாரின் அழகுக்குத் திருஉறையூரிலும் திருக்கூடலிலும் கோயில் கொண்ட எம்பெருமான்களை உவமை கூறுகிறார், ஈண்டு, திருக்கூடல் என்பதும் கோழி என்ற திருஉறையூரும் இடம் பெற்றிருப்பதால் அவை திவ்விய தேசங்களாக மதிப்புப்பெற்றன. இவ்வாறு பதிகம் பெறாத திவ்விய தேசங்கள் 37 ஆகும். அவற்றில்

| | |
|---|---|
| ஒரே பாசுரம் பெற்றவை | 16 |
| இரண்டு பாசுரம் பெற்றவை | 6 |
| இரண்டிற்கும் மேல் பாசுரம் பெற்றவை | 15 |
| ஆக | 37 |

நூற்றெட்டுத் திவ்விய தேசங்களின் விவரங்களைத் தெரிவிக்கும் நூல்கள் பல அவ்வக் காலங்களில் எழுதப்பட்டுள்ளன. அவையாவன

1. 108 திருப்பதிக்கோவை - திருவரங்கத்தமுதனார்
2. 108 திருப்பதிப் பெருமாள் கோவை - பெயர் அறியப்படவில்லை
3. 108 திருப்பதி அந்தாதி - பிள்ளைப்பெருமாள் அய்யங்கார்
4. நாலாயிரப் பாசுரப்படி - 108 திருப்பதிக்கோவை - வங்கிப் புரத்தாய்ச்சி
5. 108 திருப்பதி திருப்புகழ் - குரவை ராமானுஜ தாசர்
6. 108 திருப்பதிக் கலித்துறை அந்தாதி - பெயர் தெரியவில்லை
7. விஷ்ணுஸ்தல மஞ்சரி - கோ. பட்டாபிராம முதலியார்
8. விஷ்ணுஸ்தலாதர்சம் - பெயர் தெரியவில்லை
9. 108 திவ்வியதேச யாத்திராப்ரபாவ சந்திரிகா - பலிஜ

இவற்றைத் தவிர காஞ்சி அண்ணங்கராசாரியார், புத்தூர் சுதரிசனர், சுப்பு ரெட்டியார் போன்ற பெருமக்கள் அண்மைக் காலத்தில் திவ்விய தேச விவரங்கள் அடங்கிய நூல்களை வெளியிட்டிருக்கின்றனர். இந்த நூல்களில்,

திவ்வியதேசத்தின் இக்கால வழக்குப் பெயர்
எம்பெருமான் திருப்பெயர்கள்
எழுந்தருளியுள்ள திசை (திருமுக மண்டல திசை)
திருக்கோல அமைப்பு
பிராட்டி திருநாமங்கள்
விமானம்
தீர்த்தங்கள்
காட்சி பெற்றவர்கள்
மங்களாசாஸனம் செய்த ஆழ்வார்கள்
புராணச் செய்திகள்
அமைவிடக்குறிப்புகள்

ஆகியவை இடம் பெற்றுள்ளன. இவற்றோடு அக்கோயிலிலுள்ள கலைச் செல்வங்கள் கல்வெட்டுச் செய்திகள், வரலாற்றுப் பின்னணிகள் போன்ற செய்திகளைத் தாங்கிய பயணக்கட்டுரைகள் அவ்வப்போது வெளிவந்துள்ளன. உதாரணமாக அறிஞர் தொ.மு. பாஸ்கரத் தொண்டமான் அவர்கள் எழுதியுள்ள நூல்களிலிருந்து திருக்கோயில் கலைச் செல்வங்களை அறியமுடிகிறது. மேலும் தனிப்பட்ட திவ்வியதேசத் திருக்கோயில் பற்றிய ஆராய்ச்சி நூல்களும் அண்மைக்காலத்தில் வெளிவந்துள்ளன.

அறிஞர் வி.என். ஹரிராவ் என்ற வரலாற்றுப் பேராசிரியர் எழுதியுள்ள திருவரங்கம் பெரிய கோயிலின் கட்டிடக்கலைச் செல்வம் பற்றிய நூலும் அறிஞர் கே.வி.இராமன் காஞ்சிபுரம் வரதராசப் பெருமாள் திருக்கோயில் பற்றி எழுதியுள்ள ஆய்வுநூலும் மிகவும் போற்றத்தக்கனவாம்.

**பாடற்பெயரும் வழக்குப்பெயரும்**

| | |
|---|---|
| அஷ்டபுயகரம் | அஷ்டபுஜம் |
| அத்தியூர் | (சின்ன) காஞ்சிபுரம் |
| திரு அழுந்தூர் | தேரழுந்தூர் |
| திரு இடவெந்தை | திருவடந்தை |
| திருஇந்தளூர் | திருவிழந்தூர் |
| திரு எவ்வுள் | திருவள்ளூர் |

| | |
|---|---|
| திருக்கடன்மல்லை | மகாபலிபுரம் |
| திருக்கரம்பனூர் | உத்தமர் கோயில் |
| காழிச்சீராம விண்ணகரம் | சீயாழி |
| திருக்குடந்தை | கும்பகோணம் |
| திருக்குருகூர் | ஆழ்வார் திருநகரி |
| திருக்குளந்தை | பெருங்குளம் |
| திருக்கூடலூர் | ஆடுதுறைக்கோயல |
| திருக்கோவலூர் | திருக்கோயிலூர் |
| திருக்கோழி | உறையூர் |
| திருக்கூடல் | மதுரை |
| திருச்சித்திரகூடம் | சிதம்பரம் |
| திருச்சிரீவரமங்கை | வானமாமலை |
| நந்திபுர விண்ணகரம் | நாதன்கோயில் |
| திருநின்றவூர் | தின்னனூர் |
| திருவண்பரிசாரம் | திருப்பதிசாரம் |
| வரகுணமங்கை | நத்தம் |
| திருத்தொலைவில்லிமங்கலம் | இரட்டைத்திருப்பதி |
| தென்திருப்பேர் எயில் | தென்திருப்பேரை |
| திருப்பேர் | கோயிலடி |
| திருவாறன்விளை | ஆரம்முளா |
| திருவல்லவாழ் | திருவள்ளா |
| திருக்கடித்தானம் | திருகொடித்தானம் |
| திருவண்வண்டூர் | திருவமுண்டூர் |
| திருமெய்யம் | திருமயம் |
| திருப்புட்குழி | திருப்பக்குழி |
| திருவெஃகா | எதோக்தகாரி கோயில் |
| திருப்பாடகம் | பாண்டவதூதன் சந்நிதி |
| திருத்தண்கா | விளக்கொளிப்பெருமாள் |
| திருத்தண்கால் | திருத்தங்கல் |
| திருவிண்ணகர் | உப்பிலியப்பன் கோயில் |
| திருஅரிமேயவிண்ணகரம் | குடமாடுகூத்தன் சந்நிதி |
| திருஊரகம் | உலகளந்த பெருமாள்கோயில் |
| திருக்கண்டங்கடிநகர் | தேவப்பிரயாகை |
| திருக்கவித்தலம் | கபிஸ்தலம் |

| | |
|---|---|
| திருச்சிங்கவேள்குன்றம் | அஹோபிலம் |
| திருத்தலைச்சங்க நாண்மதியம் | தலைச்சங்காடு |
| திருத்துவராபதி | துவாரகா |
| திருக்தேவனார் தொகை | கீழைச்சாலை |
| திருநறையூர் | நாச்சியார் கோயில் |
| திருநாகை | நாகப்பட்டினம் |
| திருப்பரமேச்சுவர விண்ணகரம் | வைகுண்டப் பெருமாள் கோயில் |
| திருமணிமாடக்கோயில் | நாராயணப் பெருமாள் கோயில் |
| திருமாலிருஞ் சோலை | அழகர்கோயில் |
| திருவெள்ளக்குளம் | அண்ணன் கோயில் |
| திருவேளுக்கை | முகுந்தநாயகர் கோயில் |
| திருவித்துவக்கோடு | திருமித்தக்கோடு |
| திருநாவாய் | திருநாவா |

**திவ்விய தேசங்களின் பெயரமைப்புகள்**

| | |
|---|---|
| ஊர் | அத்தியூர், ஆதனூர், இந்தளூர், முதலியன |
| புரம் | திருக்கண்ணபுரம், திருவயிந்திரபுரம், முதலியன |
| குடி | திருக்கண்ணங்குடி, திருக்குறுங்குடி |
| பாடி | திருவாய்ப்பாடி, திருக்காவளம்பாடி, முதலியன |
| அகம் | ஊரகம், காரகம், நீரகம் |
| குளம் | திருவெள்ளக்குளம் |
| மலை | திருநீர்மலை, திருமலை |
| குன்றம் | சிங்கவேள்குன்றம் |
| மங்கலம் | தொலைவில்லிமங்கலம்,சிரீவரமங்கலம் |
| மங்கை | கண்ணமங்கை, வரகுணமங்கை |
| கோயில் | தஞ்சைமாமணிக்கோயில், மணிமாடக்கோயில் முதலியன |
| அம்பலம் | திருத்தெற்றியம்பலம் |
| விண்ணகர் | திருவிண்ணகர் |
| விண்ணகரம் | அரிமேயவிண்ணகரம், நந்திபுரவிண்ணகரம் |
| தலம் | கவித்தலம் |

| | |
|---|---|
| கரை | காட்கரை |
| கூடம் | திருச்சித்திரகூடம் |
| கா | திருத்தண்கா |
| கால் | திருத்தண்கால் |
| மதியம் | தலைச்சங்கநாண்மதியம் |
| தொகை | திருத்தேவனார்தொகை |
| பள்ளி | பார்த்தன்பள்ளி |
| குழி | திருப்புட்குழி |
| நகர் | திருப்பேர்நகர் |
| எயில் | தென்திருப்பேர் எயில் |
| சோலை | திருமாலிருஞ்சோலை |
| களம் | திருமூழிக்களம் |
| ஆச்சிரம | திருவதரியாச்சிரமம் |
| வாழ் | திருவல்லவாழ் |
| விளை | திருவாறன்விளை |
| ஆறு | திருவாட்டாறு |
| கோடு | திருவித்துவக்கோடு |
| அறை | திருவெள்ளறை |

**நிலப்பாகுபாடுகள்**

| | |
|---|---|
| கடற்கரைத்தலங்கள் | 7 (3, 7, 13, 17, 55, 61, 77) |
| கட்டுமலைத்தலங்கள் | 6 ( 2, 39, 60, 81, 96, 103) |
| காஞ்சிபுரத்துத்தலங்கள் | 14 ( 1, 2, 15, 27, 29, 30, 52, 63 ,65, 69, 70, 71, 101, 106 ) |
| காவிரிக்கரைத் தலங்கள் | 12 ( 5, 9, 14, 21, 25, 26, 33, 37, 41, 54, 79, 81 ) |
| திருநாங்கூர்த்தலங்கள் | 12 ( 6, 12, 31, 49, 56, 57, 72, 82, 83, 90, 102, 108) |
| மலைமேலும் சரிவிலும் உள்ள தலங்கள் | 13 (18, 20, 36, 43, 44, 53, 66, 67, 74, 84, 86, 92, 105) |
| நவதிருப்பதிகள் | 8 ( 34, 35, 42, 58, 78, 80, 94, 107) |

**திசைப்பாகுபாடுகள்**

| | | |
|---|---|---|
| வடக்கு நோக்கிய தலங்கள் | - | 3 (4, 41, 43) |
| தெற்கு நோக்கிய தலங்கள் | - | 7, (5, 29, 47, 66, 68, 73, 99) |

| | | |
|---|---|---|
| மேற்கு நோக்கிய தலங்கள் | - | 19 (1, 2, 12, 15, 27, 30, 48, 52,55, 57, 59, 63, 69, 70, 72, 81, 91, 96, 101) |
| கிழக்கு நோக்கிய தலங்கள் | - | 79 (பிற) |
| ஆக | | 108 |

**சயனப்பாகுபாடுகள்**

| | | | |
|---|---|---|---|
| 1. | உத்தியோக சயனம் | - | (33) 1 |
| 2. | தர்ப்ப சயனம் | - | (77) 1 |
| 3. | தலசயனம் | - | (17) 1 |
| 4. | புஜங்கசயனம் | - | (3, 5, 9, 10, 16, 25, 26, 39, 42, 47, 56, 73, 74, 78, 79, 81, 96, 99, 101, 104) ஆக 20 |
| 5. | போக சயனம் | - | (45) 1 |
| 6. | மாணிக்க சயனம் | - | (66) 1 |
| 7. | வடபத்ர சயனம் | - | (100) 1 |
| 8. | வீரசயனம் | - | (14) 1 |
| | ஆக சயனத் தலங்கள் | - | 27 |

**திருக்கோலப் பாகுபாடுகள்**

| | | |
|---|---|---|
| வீற்றிருந்த திருக்கோலம் | - | 21 (4, 6, 12, 18, 38, 44, 46, 51, 55, 59, 62, 68, 69, 71, 75, 80, 83, 89, 92, 94, 108) |
| நின்ற திருக்கோலம் | - | 60 |

**மங்களாசாசனப் பாகுபாடுகள்**

| | | |
|---|---|---|
| ஆழ்வார் பதின்மரும் பாடிய தலம் | - | திருவரங்கம் |
| ஆழ்வார் ஒன்பதின்மர் பாடிய தலம் | - | திருவேங்கடம் |
| ஆழ்வார் எண்மர் பாடிய தலம் | - | திருப்பரமபதம் |
| ஆழ்வார் எழுவர் பாடிய தலம் | - | திருக்குடந்தை |
| ஆழ்வார் அறுவர் பாடிய தலம் | - | திருமாலிருஞ்சோலை |
| ஆழ்வார் ஐவர் பாடிய தலம் | - | 6 ( 4, 23, 39, 55, 88, 101) |
| ஆழ்வார் நால்வர் பாடிய தலம் | - | 3 (36, 71, 81) |
| ஆழ்வார் மூவர் பாடிய தலம் | - | 5 ( 2, 7, 11, 40, 98) |

| | | |
|---|---|---|
| ஆழ்வார் இருவர் பாடிய தலம் | - | 21 (1, 12, 15,- 18, 38, 43, 45, 51, 53, 62, 66, 76, 85, 87, 92, 95, 100, 103, 106) |
| ஆழ்வார் ஒருவர் பாடிய தலம் | - | 67 (3, 6, 8-10, 13, 14, 19-22, 24-32, 34, 35, 37, 41, 42, 44, 46 -50, 52, 54, 56-61, 63, 65, 67, 69, 70, 72, 74, 75, 77-80, 82, 83,86, 89-91, 93, 94, 96, 97, 99,102, 104, 107, 108) |

**ஆழ்வார்கள் பாகுபாடு**

| | | |
|---|---|---|
| பொய்கையாழ்வார் | - | 6 திருத்தலங்கள் |
| பூதத்தாழ்வார் | - | 13 திருத்தலங்கள் |
| பேயாழ்வார் | - | 15 திருத்தலங்கள் |
| திருமழிசையாழ்வார் | - | 16 திருத்தலங்கள் |
| நம்மாழ்வார் | - | 36 திருத்தலங்கள் |
| குலசேகராழ்வார் | - | 8 திருத்தலங்கள் |
| பெரியாழ்வார் | - | 19 திருத்தலங்கள் |
| தொண்டரடிப்பொடி ஆழ்வார் | - | 4 திருத்தலங்கள் |
| திருமங்கையாழ்வார் | - | 86 திருத்தலங்கள் |
| திருப்பாணாழ்வார் | - | 3 திருத்தலங்கள் |
| ஆண்டாள் | - | 11 திருத்தலங்கள் |

குறிப்பு : தொண்டரடிப் பொடியாழ்வார் திருவரங்கத்தைத் தவிர திவ்ய தேசங்களைப் பாடாதவர் என்பது சம்பிரதாயம். திருமலை திருவேங்கடவனைக் கவி பாடச் சொன்னபோது,, அரங்கனைப் பாடிய வாயால் மற்று ஓர் குரங்கனைக் கவி பாடமாட்டேன் என்று மறுத்த பதிவிரதா நிருபம் பூண்டவர் . இவர் அயோத்தி, திருப்பாற்கடல், வடமதுரை, ஆகிய மூன்றினையும் பாடியிருந்தாலும், அவை அவதாரத்தலங்களாகவும் நிலவுலகத்துக்கு வெளிப்பட்டதாகவும் இருத்தலால் அர்ச்சாவதாரத்தலக்கணக்கில் சேர்க்கவில்லை.

**பாசுரத் தொகைப் பாகுபாடு**

| பாசுரங்கள் | தலங்கள் |
|---|---|
| 200க்கு மேல் | திருவரங்கம் |
| | திருவேங்கடம் |
| 100-200 | திருக்கண்ணபுரம் |
| | திருநறையூர் |
| | திருமாலிருஞ்சோலை |
| 11-100 | 49 தலங்கள் |
| 10 | 24 தலங்கள் |
| 2-9 | 15 தலங்கள் |
| 1 | 15 தலங்கள் |

**நாட்டுப்பாகுபாடுகள்**

| | | | |
|---|---|---|---|
| 1. | சோழநாடு | - | 40 (5, 6, 8-10, 14, 21-26, 31-33, 37,41, 45, 47, 49-51, 54, 56, 57, 59-61, 72, 79, 81-83, 90, 98, 102-104, 108) |
| 2. | பாண்டியநாடு | - | 18 (34, 36, 38, 39, 42, 46, 53, 58, 77, 78, 80, 84, 86, 87, 94, 100, 107) |
| 3. | மலைநாடு | - | 13 (3, 19, 28, 48, 62, 76, 85, 89, 91, 95-97, 99) |
| 4. | நடுநாடு | - | 2 ( 40, 93) |
| 5. | தொண்டைநாடு | | 22 ( 1,2, 7, 13, 15-18, 27, 29, 30, 52, 63-66, 69-71, 75, 101, 106) |
| 6. | வடநாடு | - | 12 ( 4, 11, 20, 43, 44, 55, 67, 73, 74, 88,92, 105) |
| 7. | திருநாடு | - | 1 (68) |

**சில வழக்குகள்**

1) கோயில், திருமலை, பெருமாள் கோயில் , என்று சேர்த்து வழங்குவது சம்பிரதாயம். கோயில் - திருவரங்கம் ; பெருமாள்கோயில் - காஞ்சிபுரம் இம்மூன்றையும்

| | | |
|---|---|---|
| கோயில் | - | போக மண்டபம் |
| திருமலை | - | புஷ்ப மண்டபம் |
| பெருமாள் கோயில் | - | தியாக மண்டபம் |

என்று மண்டபங்களாக உருவகிப்பார்கள்.

2) மைசூருக்கு அருகில் உள்ள திருநாராயணபுரம் என்ற மேல் கோட்டையில் கோயில் கொண்டிருக்கும் திருநாராயணப் பெருமாளுக்கு "ஒரு நாயகமாய்" என்று தொடங்குகின்ற திருவாய் மொழிப் பதிகத்தை இராமாநுஜர் மங்களாசாசனப் பதிகமாக சமர்ப்பித்தார் இதற்கு ஞானமண்டபம் என்று பெயர்.

3) மன்னார் குடியிலுள்ள இராஜகோபாலப் பெருமாளுக்கு "உன்னித்து மற்றொரு தெய்வம்" என்று தொடங்கும் திருவாய்மொழிப் பாசுரத்தை மணவாள மாமுனிகள் மங்களாசாசனப் பாசுரமாக சமர்ப்பித்தார்.

4) சில திவ்விய தேசங்களில் சிவபெருமானுக்கும் சந்நிதிகள் அமைந்துள்ளன. அவை சுற்றுக்கோயிலாகக் கருதப்படும். சிவனை அங்கு பரிவார தேவதையாக நிலைப்படுத்தியுள்ளது. சிவாகம பூஜையே செய்யப்படுவது கருதத்தக்கது. அவற்றில் தனியாக மடைப்பள்ளி இருக்கும். பாண்டியநாட்டிலுள்ள திருக்கோட்டியூரிலும் திருக்குறுங்குடியிலும் இவ்வாறு சிவபிரானுக்குத் தனி சந்நிதிகள் உள்ளன. இவை ஆழ்வார்களாலும் பாடப்பெற்றுள்ளது பலர் அறியாதசெய்தி,

*ஏறுமேறி இலங்கும் ஒண் மழுப்பற்றும்*
*ஈசற்கிசைந்து உடம்பிலோர்*
*கூறுதான் கொடுத்தான் குலமாமகட்கினியான்*

என்று திருக்கோட்டியூரிலுள்ள சிவனைத் திருமங்கையாழ்வார் பாடியுள்ளார். அவரே திருக்குறுங்குடியுள் குடியிருக்கும் சிவபிரானையும்

*அக்கும் புலியும் அதளும் உடையார் ஒருவர்*
*பக்கம் நிற்க நின்ற பண்பர் ஊர்போலும்*

(பெ. தி. மொ.9-6-1)

என்று பாடியுள்ளார். இங்குள்ள சிவபெருமானை சைவ சமய குரவர்கள் பாடவில்லை. அவற்றை சிவத்தலமாகவும் சைவர்கள் கருதுவதில்லை.

5) தில்லைப்பதியாகிய சிதம்பரத்தை சித்திரகூடம் என்று ஆழ்வார்கள் குறிப்பிடுவர். இங்கு கூத்தப்பெருமான் கோயில் ஒரு பாகமாக விளங்குகிறது. இது "கோயில்" என்று சைவப் பெருமக்களால் போற்றப்படுகிறது. தேவார முதலிகளால் பெரிதும் போற்றிப்பாடப்பட்ட திருத்தலம் சிதம்பரம் நடராஜப் பெருமான் கோயிலாகும். இஃது தனிப்பட்ட கோயிலாகவே தீட்சிதர்களால் வழிபடப்பட்டு வருகிறது. இங்குக் கோயில் கொண்டுள்ள கோவிந்தராஜப் பெருமாள் தில்லைச் சிற்றம்பலத்துக்கு மிக அருகில் கிழக்கு நோக்கிச் சித்திரகூடமான மேடையின்மீது சயனித்துள்ளார். தனியான அந்தஸ்துடன் தனிக் கொடிமரம் பலி பீடம், தாயார் சந்நிதி முதலிய அங்கங்களுடன் எம்பெருமான் எழுந்தருளியுள்ளார்.

சோழநாட்டில் உத்தமர் கோயில் என்றழைக்கப்படும் திருக்கரம்பனூரில் ஒரே வளாகத்தில் சிவாலயமும் உள்ளது. இக்கோயிலைத் திருநாவுக்கரசர் பாடியுள்ளார்.

இவை தவிர, சில திவ்விய தேசங்களில் பாடல் பெற்ற சிவதலங்களும் ஊரின் ஒரு புறம் அமைந்திருக்கின்றன. திருக்கோவலூர், திருநறையூர் போன்ற ஊர்களில் இவ்வாறு காணலாம்.

6) தமிழ்நாட்டிலுள்ள திவ்விய தேசங்களில் வைகாநசம் அல்லது பாஞ்சராத்திரம் என்ற ஆகம விதிகளின்படி வழிபாடுகள் நடத்தப்படுகின்றன. மலைநாட்டிலுள்ள திவ்விய தேசங்களில் மலையாள நம்பூதிரிகள் அல்லது போற்றிமார்கள் தாந்திரிக முறையில் பூஜைகள் இயற்றுகின்றனர். வடநாட்டுத் திவ்ய தேசங்களில் பூஜைமுறை பெரிதும் மாறுபட்டிருக்கிறது.

7) தமிழ்நாட்டிலுள்ள திவ்விய தேசங்களிலும் தென்கலை, வடகலை, என்ற இரண்டு விதமான சம்பிரதாயங்கள் நடைமுறையிலுள்ளன. மலைநாட்டிலும் வடநாட்டிலும் (அஹோபிலம், திருமலை, நீங்கலாக) இவை பின்பற்றப்படவில்லை.

சில திவ்விய தேசங்களில் தென்கலைத் திருமண்காப்புச் சின்னமும் வடகலை ஆசாரமும் காணப்படுகிறது, இதற்கு மாறாக வடகலைத் திருமண்காப்புச் சின்னமும் தென்கலை ஆசாரமும் காணப்படும் திவ்விய தேசமும் உள்ளது.

8) சில திவ்விய தேசங்கள் இந்து சமய அறநிலையத்துறையின் ஆட்சியின் கீழ் இல்லாது மடாதிபதிகளின் நேரான பொறுப்பில் உள்ளன. திருக்குறுங்குடி, வானமாமலை, நாதன்கோயில், திருக்கோவலூர், திருவள்ளூர் போன்ற திவ்விய தேசங்கள் ஜீயர்களின் நிருவாகத்தில் உள்ளன.

9) ஒவ்வொரு திவ்விய தேசத்திலும் தீர்த்த மரியாதை போன்ற முதல் மரியாதை பெற்றுவரும் வைணவ ஆசாரியர்களின் பொறுப்பில் வைணவ சம்பிரதாயச் சடங்குகள் நிகழும்.

10) சில திவ்விய தேசங்கள் பிரார்த்தனைத் தலமாகவும் விளங்கி வருமானம் மிக்கவையாய்த் திகழ்கின்றன,. திருவிண்ணகர் என்ற உப்பிலியப்பன் கோயில் இவ்வாறு புகழ் பெற்றிருப்பதைக் காணலாம்.

| 11) | ரிஷிகளால் நிறுவப்பட்டவை | ஆர்ஷம் |
|---|---|---|
| | சித்தர்களால் நிறுவப்பட்டவை | சைத்யம் |
| | மனிதர்களால் நிறுவப்பட்டவை | மாநுஷம் |
| | தாமாகவே தோன்றியவை | ஸ்வயம் |

வ்யக்தம்

**ஸ்வயம் வியக்த ஸ்தலங்கள்**

| | |
|---|---|
| பதரிகாச்சிரமம் | திருமலை |
| சாளக்கிராமம் | திருவரங்கம் |
| நைமிசாரண்யம் | வானமாமலை |
| புஷ்கரம் | ஸ்ரீமுஷ்ணம் |

12) புண்ணியஸ்தலங்கள் ஏழு (ஸப்தபுண்ணியபுரிகள்) காசி, காஞ்சி, மாயா, அவந்திகா, துவாரகை, மதுரா, அயோத்தியா, (அயோத்யா, மதுரா, மாயா, காசி, காஞ்சி, அவந்திகா, துவராவதி, என்பது வரிசை)

13) ஒவ்வோரு திவ்விய தேசத்துக்கும் ஸ்தலபுராணம் வடமொழியில் அமைந்திருக்கும் அவையாவும் பிரம்மாண்ட புராணம் போன்ற புராணங்களில் இடம் பெற்றவை. சிலவற்றைத் தமிழிலும் மொழிபெயர்த்துப் பாடியுள்ளனர். அவற்றிலிருந்து ,ஸ்தல விருட்சம், தீர்த்தம் போன்ற செய்திகள் மற்றும் காட்சி பெற்ற முனிவர்கள் சரித்திரம் போன்ற செய்களை அறிந்து கொள்ளலாம்.

14. பஞ்சகிருஷ்ண க்ஷேத்திரங்கள் என்பன திருக்கண்ணபுரம், திருகண்ணமங்கை, திருக்கண்ணங்குடி, திருக்கோவலூர், கவித்தலம்,

15. நேபாள நாட்டிலுள்ள திவ்வியதேசம் சாளக்கிராமம்.

**திவ்விய தேசங்கள் அகராதி**

| | | | |
|---|---|---|---|
| 1. | திரு | அட்ட புயகரம் | (தொ) |
| 2. | திரு | அத்தியூர் | (தொ) |
| 3. | திரு | அனந்தபுரம் | (ம) |
| 4. | திரு | அயோத்தி | (வ) |
| 5. | திரு | அரங்கம் | (சோ) |
| 6. | திரு | அரிமேயவிண்ணகரம் | (சோ) |
| 7. | திரு | அல்லிக்கேணி | (தொ) |
| 8. | திரு | அழுந்தூர் | (சோ) |
| 9. | திரு | அன்பில் | (சோ) |
| 10. | திரு | ஆதனூர் | (சோ) |
| 11. | திரு | ஆய்ப்பாடி | (வ) |
| 12. | திரு | ஆலி | (சோ) |
| 13. | திரு | இடவெந்தை | (தொ) |
| 14. | திரு | இந்தளூர் | (சோ) |
| 15. | திரு | ஊரகம் | (தொ) |

| | | |
|---|---|---|
| 16. | திரு எவ்வுள் | (தொ) |
| 17, | திருக்கடல்மல்லை | (தொ) |
| 18. | திருக்கடிகை | (தொ) |
| 19. | திருக்கடித்தானம் | (ம) |
| 20. | திருக்கண்டங்கடிநகர் | (வ) |
| 21. | திருக்கண்டியூர் | (சோ) |
| 22. | திருக்கண்ணங்குடி | (சோ) |
| 23. | திருக்கண்ணபுரம் | (சோ) |
| 24. | திருக்கண்ணமங்கை | (சோ) |
| 25. | திருக்கரம்பனூர் | (சோ) |
| 26. | திருக்கவித்தலம் | (சோ) |
| 27. | திருக்கள்வனூர் | (தொ) |
| 28. | திருக்காட்கரை | (ம) |
| 29. | திருக்காரகம் | (தொ) |
| 30. | திருக்கார்வானம் | (தொ) |
| 31. | திருக்காவளம்பாடி | (சோ) |
| 32. | திருக்காழிச் சீராம விண்ணகரம் | (சோ) |
| 33. | திருக்குடந்தை | (சோ) |
| 34. | திருக்குருகூர் | (பா) |
| 35. | திருக்குளந்தை | (பா) |
| 36. | திருக்குறுங்குடி | (பா) |
| 37. | திருக்கூடலூர் | (சோ) |
| 38. | திருக்கூடல் | (பா) |
| 39. | திருக்கோட்டியூர் | (பா) |
| 40. | திருக்கோவலூர் | (ந) |
| 41. | திருக்கோழி | (பா) |
| 42. | திருக்கோளூர் | (பா) |
| 43. | திருச்சாளக்கிராமம் | (வ) |
| 44. | திருச்சிங்கவேள் குன்றம் | (வ) |
| 45. | திருச்சித்ரகூடம் | (சோ) |
| 46. | திருச்சீரிவரமங்கை | (பா) |
| 47. | திருச்சிறுபுலியூர் | (சோ) |
| 48. | திருச்செங்குன்றூர்த்திருச்சிற்றாறு | (ம) |
| 49, | திருச்செம்பொன்செய்கோயில் | (சோ) |

| | | |
|---|---|---|
| 50. | திருச்சேறை | (சோ) |
| 51. | திருத்தஞ்சைமாமணிக்கோயில் | (சோ) |
| 52. | திருத்தண்கா | (தொ) |
| 53. | திருத்தண்கால் | (பா) |
| 54. | திருத்தலைச் சங்க நாண்மதியம் | (சோ) |
| 55. | திருத்துவராபதி | (வ) |
| 56. | திருத்தெற்றியம்பலம் | (சோ) |
| 57. | திருத்தேவனார் தொகை | (சோ) |
| 58. | திருத்தொலைவில்லிமங்கலம் | (பா) |
| 59. | திருநந்திபுர விண்ணகரம் | (சோ) |
| 60. | திருநறையூர் | (சோ) |
| 61. | திருநாகை | (சோ) |
| 62. | திருநாவாய் | (ம) |
| 63. | திரு நிலாத்திங்கள்துண்டம் | (தோ) |
| 64. | திருநின்றவூர் | (தொ) |
| 65. | திருநீரகம் | (தொ) |
| 66. | திருநீர்மலை | (தொ) |
| 67. | திருநைமிசாரண்யம் | (வ) |
| 68. | திருப்பரமபதம் | (தி) |
| 69. | திருப்பரமேச்சுவர விண்ணகரம் | (தொ) |
| 70. | திருப்பவளவண்ணம் | (தொ) |
| 71. | திருப்பாடகம் | (தொ) |
| 72. | திருப்பார்த்தன்பள்ளி | (தொ) |
| 73, | திருப்பாற்கடல் | (தொ) |
| 74. | திருப்பிரிதி | (வ) |
| 75. | திருப்புட்குழி | (தொ) |
| 76. | திருப்புலியூர் | (ம) |
| 77. | திருப்புல்லாணி | (பா) |
| 78. | திருப்புளிங்குடி | (பா) |
| 79. | திருப்புள்ளம் பூதங்குடி | (பா) |
| 80. | திருப்பேரை | (பா) |
| 81. | திருப்பேர்நகர் | (சோ) |
| 82. | திருமணிக்கூடம் | (சோ) |
| 83 | திருமணிமாடக்கோயில் | (சோ) |

84. திருமாலிருஞ்சோலை (பா)
85. திருமூழிக்களம் (ம)
86. திருமெய்யம் (பா)
87. திருமோகூர் (பா)
88. திருவடமதுரை (வ)
89. திருவண்பரிசாரம் (ம)
90. திருவண்புருடோத்தமம் (சோ)
91. திருவண்வண்டூர் (ம)
92. திருவதரிஆச்சிரமம் (சோ)
93. திருவயிந்திரபுரம் (ந)
94. திருவரகுணமங்கை (பா)
95. திருவல்லவாழ் (ம)
96. திருவாட்டாறு (ம)
97. திருவாறன்விளை (ம)
98. திருவிண்ணகர் (சோ)
99. திருவித்துவக்கோடு (ம)
100. திருவில்லிபுத்தூர் (பா)
101. திரு வெஃகா (தொ)
102. திரு வெள்ளக்குளம் (சோ)
103. திரு வெள்ளறை (சோ)
104. திரு வெள்ளியங்குடி (சோ)
105. திரு வேங்கடம் (வ)
106. திருவேளுக்கை (தொ)
107. திருவைகுண்டம் (பா)
108. திருவைகுந்த விண்ணகரம் (சோ)

**அவதாரத்தலங்கள்**

| | |
|---|---|
| பொய்கையாழ்வார் | திருவெஃகா |
| பூதத்தாழ்வார் | திருக்கடல்மல்லை |
| பேயாழ்வார் | திருமயிலை |
| திருமழிசையாழ்வார் | திருமழிசை |
| நம்மாழ்வார் | திருக்குருகூர் (ஆழ்வார் திருநகரி) |
| மதுரகவியாழ்வார் | திருக்கோளூர் |
| குலசேகராழ்வார் | திருவஞ்சைக்களம் |
| பெரியாழ்வார் | திருவில்லிபுத்தூர் |

| | |
|---|---|
| ஆண்டாள் | திருவில்லிபுத்தூர் |
| தொண்டரடிப்பொடியாழ்வார் | திருமண்டங்குடி |
| திருப்பாணாழ்வார் | திருஉறையூர் |
| திருமங்கையாழ்வார் | திருக்குறையலூர் |
| நாதமுனிகள் | வீரநாராயணபுரம் (காட்டுமன்னார்கோயில்) |
| உய்யக்கொண்டார் | திருவெள்ளறை |
| மணக்கால் நம்பி | அன்பில் |
| ஆளவந்தார் | வீரநாராயணபுரம் |
| பெரியநம்பி | திருவரங்கம் |
| திருமலைநம்பி | திருமலை |
| திருக்கோட்டியூர் நம்பி | திருக்கோட்டியூர் |
| திருமாலையாண்டான் | திருமாலிருஞ்சோலை |
| திருக்கச்சிநம்பி | பூவிருந்தவல்லி |
| எம்பெருமானார் | ஸ்ரீபெரும்பூதூர் |
| முதலியாண்டான் | பச்சைக்கோயில்(காஞ்சி) |
| கூரத்தாழ்வான் | கூரம் |
| எம்பார் | மழலைமங்கலம் |
| பட்டர் | திருவரங்கம் |
| நஞ்சீயர் | திருநாராயணபுரம் |
| நம்பிள்ளை | நம்பூர் |
| பெரியவாச்சான்பிள்ளை | சேங்கனூர் |
| வடக்குத் திருவீதிப்பிள்ளை | திருவரங்கம் |
| பிள்ளை லோகாசாரியார் | திருவரங்கம். |
| அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் | திருவரங்கம் |
| திருவாய்மொழிப்பிள்ளை | கொந்தகை (குந்திநகர்) |
| வேதாந்த தேசிகர் | தூப்புல் |
| ஆதிவண்சடகோபஜீயர் | திருநாராயணபுரம் |
| மணவாள மாமுனிகள் | ஆழ்வார் திருநகரி |
| வானமாமலை ஜீயர் | வானமாமலை |

# இயல் 14

# திவ்வியப்பிரபந்தங்களும் திரு அத்தியயனவிழாக்களும்

## முன்னுரை

இறைவனான திருமாலால் மயர்வற மதிநலம் அருளப்பெற்றவர்கள் ஆழ்வார்கள். அத்தகையோர் இறையனுபவத்திற்குப் போக்குவீடாக அருளிச் செய்த அந்தமிழ் இன்பப் பாக்களே அருளிச்செயல்கள். இவற்றை திவ்வியப்பிரபந்தங்கள் என்று வழங்கிச் சிறப்பிப்பர். ஆழ்வார்களின் அருட்பாசுரங்கள் தென் தமிழ்நாட்டில் வைணவ சமயத்தில் தென்கலை மரபினைத் தோற்றுவித்தன. தென்னாட்டு வைணவம் ஆழ்வார்களின் கோட்பாடுகளை முழுதும் தழுவி மலர்ச்சி அடைந்தது . வடமொழியில் அமைந்த வைணவ சமய நூல்களோடு ஆழ்வார் பாசுரங்களின் தொகையும் சேர்ந்து உபய வேதாந்த மரபுகள் உருவாயின. ஆழ்வார் பாசுரங்கள் தென்னகத் திருமால் கோயில்களில் வைதிகப் பெருமக்களால் ஓதப்பெற்றன. வடமொழி வேதங்களுக்கு நிகரான பெருமைகள் அளிக்கப்பெற்றன. ஆழ்வார்கள் வாழ்ந்த காலத்திலேயே அப்பெருமைகள் சேரப்பெற்றன. அவ்வாறு பெருமை சேர்த்தவர்கள் மதுரகவியாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் ஆவர். அவர்க்குப் பிறகு நாதமுனிகளும் இராமாநுசரும் ஆழ்வார் பாசுரங்களை நன்கு போற்றிப் பெருமைகளை நிலைபெறச் செய்தனர். அவ்விருவர்க்கும் பின் தோன்றிய ஆசாரியர்கள் ஆழ்வார் பாசுரங்களுக்கு உரைவிளக்கங்களைத் தோற்றுவித்தும் வழிவழியாக வந்த மரபுகளைப் பெருக்கியும் ஏற்றங்களைச் செய்தனர். இவ்வாறு பல நூற்றாண்டுகள் இடையறாது திருக்கோயில்களில் வளர்க்கப்பெற்ற திவ்வியப் பிரபந்தங்களின் செல்வாக்கு, அடைவுமுறை மற்றும் திருவிழாக்கள் பற்றி இனி விரிவாகக் காண்போம்.

## ஆழ்வார் என்ற குறியீடு

நாலாயிரத்திவ்வியப் பிரபந்தத்தில் அடங்கியுள்ள பாசுரங்களைப் பாடியவர்கள் ஆழ்வார்கள் என்று அழைக்கப் பெறுகின்றனர். அவர்களை ரிஷிகள், முனிகள், யோகிகள் கவிகள், புலவர்கள் என்று அழைக்காது ஆழ்வார்கள் என்றே தண்டமிழ்ச் சான்றோர்கள் போற்றினர். ஆழ்வார் என்ற சொல் மேற்குறித்த பெயர்களிலிருந்து வேறுபட்டும் வீறுபெற்றும் பொருள்பொதிந்ததாக உள்ளது.

**ரிஷிகளுக்கும் ஆழ்வார்களுக்குமுள்ள வேறுபாடுகள்**

(1) ரிஷிகள் பல பிறவிகளில் முயன்றும் நோற்றும் ஈட்டிய தவத்தின் பயனாகவே இறையருளைப் பெற்றனர். ஆழ்வார்கள் இறைவனே தன் பேறாகக் கொண்டு மயர்வற மதிநலம் அருளப்பெற்றனர்.

(2) ரிஷிகள் அஷ்டாங்கயோக முயற்சியால் இறைவனை நெஞ்சத்துட் கண்டனர். ஆழ்வார்கள், திருமாலே தன்னைக் காட்டத் தெளிவுறக்கண்டனர்.

(3) ரிஷிகளது செயற்கைப் புலமை; ஆழ்வார்களது தெய்வப்புலமை.

(4) ரிஷிகள் இறைவனுடைய ஆத்மசொரூபத்தில் அறிவைச் செலுத்தினர். ஆழ்வார்கள் இறைவனுடைய திருமேனி எழிலில் மனத்தைப் பறிகொடுத்து ஆழங்காற்பட்டனர்.

திருமாலாகிய பேர் எழிற்பொய்கையுள் ஆழ மூழ்கிக் கவிபாடியவர்கள் ஆதலால் ஆழ்வார்கள் என்று அழைக்கப்பெற்றனர்.

**ஆழ்வார் சடகோபரே**

பொதுப்படையாக, ஆழ்வார் என்பது சடகோபராகிய நம்மாழ்வாரையே குறிக்கும். இன்றும் இம்மரபு போற்றப்பட்டு வருகிறது. ஆழ்வார் எம்பெருமானார் சீயர் திருவடிகளே சரணம் என்ற மரபுத் தொடரில் ஆழ்வார் என்பது சடகோபரையே குறித்து நிற்கிறது. மாறன் (சடகோபர்); மாறன் அடிபணிந்து உய்ந்தவர் (எம்பெருமானார் என்ற இராமானுசர்); எம்பெருமானாரின் மறு அவதாரமாகிய சீயர் (மணவாளமாமுனிகள்) என்று வரிசை அமைந்துள்ளது. கம்பநாட்டாழ்வார் இயற்றிய சடகோபர் அந்தாதியை மணவாளமாமுனிகள் ஆழ்வார் நூற்றந்தாதி என்றே குறிப்பிடுகிறார். சடகோபரையே முதலில் ஆழ்வார் என்றழைத்துப் பிறகு மற்றையோரையும் ஆழ்வார்கள் என்று அழைக்கும் மரபு தோன்றியது. சடகோபரான ஆழ்வார் வேதம் தமிழ்செய்த பெருமைபற்றி அவரை நம்மாழ்வார் என்று தமிழ்ப் பெருமக்கள் கொண்டாடினர்.

*நம்பெருமாள் நம்மாழ்வார் நஞ்சீயர் நம்பிள்ளை*
*என்பர் அவரவர்தம் ஏற்றத்தால் - அன்புடையோர்*
*சாற்றுதிரு நாமங்கள் தானென்று நன்னெஞ்சே*
*ஏத்ததனைச் சொல்லிநீ இன்று*

என்று மணவாள மாமுனிகள் மொழிந்திருப்பது காண்க.

**அவயவ அவயவி சம்பந்தம்**

வேதம் தமிழ் செய்த தண்டமிழ்ச் சடகோபரை அவயவியாகவும் மற்றை ஆழ்வார்களை அவயவங்களாகவும் உருவகப்படுத்திப் போற்றும் மரபு உருவாகியது. இம்மரபில்,

| | | |
|---|---|---|
| பூதத்தாழ்வார் | நம்மாழ்வாரின் | திருமுடி |
| பொய்கையாழ்வார் | நம்மாழ்வாரின் | வலத்திருக்கண் |
| பேயாழ்வார் | நம்மாழ்வாரின் | இடத்திருக்கண் |
| பெரியாழ்வார் | நம்மாழ்வாரின் | திருமுகம் |
| திருமழிசையாழ்வார் | நம்மாழ்வாரின் | திருக்கழுத்து |
| குலசேகராழ்வார் | நம்மாழ்வாரின் | வலத்திருக்கை |
| திருப்பாணாழ்வார் | நம்மாழ்வாரின் | இடத்திருக்கை |
| தொண்டரடிப் பொடியாழ்வார் | நம்மாழ்வாரின் | திருமார்பு |
| திருமங்கையாழ்வார் | நம்மாழ்வாரின் | திருவுந்தி |
| மதுரகவியாழ்வார் | நம்மாழ்வாரின் | திருவடிகள் |
| இராமாநுசர் | நம்மாழ்வாரின் | திருவடிகள் |

நம்மாழ்வாரின் திருவடி நிலைகளுக்கு மதுரகவி என்று பெயரிடப் பெற்றிருந்தது. இராமாநுசர் திருவாய்மொழியை வளர்த்த பெருமைகருதி நம்மாழ்வாரே அருச்சகர்முகமாக ஆணையிட்டுத் தம்முடைய திருவடி நிலைகளை இராமாநுசன் என்று அழைக்கும்படி அபிமானித்தார் என்று குருபரம்பரை நூல்கள் தெரிவிக்கின்றன.

**திவ்வியசூரிகள் என்ற வடசொற்குறியீடு**

ஆழ்வார் என்ற அருந்தமிழ்ச் சொல்லுக்கு முற்றிலும் பொருத்தமான வடசொல்வழக்கு இல்லை. ஆழ்வார்களை "நாராயண பராயணர்கள்" என்று ஸ்ரீபாகவதத்தில் சுகப்பிரம்ம ரிஷி குறிப்பிடுகிறார். "கலௌ கலு பவிஷ்யந்தி நாராயண பராயணா:" என்பது அவருடைய வாக்கியம். ஆயினும் ஆழ்வார்களை திவ்வியசூரிகள் என்றே வடமொழியிற் குறிப்பிடுவது வைணவ சம்பிரதாயம். இராமாநுசர் காலத்தில் வாழ்ந்த கருடவாகனபண்டிதர் என்பவர் ஆழ்வார்களின் வரலாற்றை ஒரு காவியமாக வடமொழியில் எழுதி அதற்கு "திவ்வியசூரி சரித்திரம்" என்று பெயரிட்டார். பரமபதத்தில் வாழும் பேராஇயற்கைப் பெரியோர்களை நித்திய சூரிகள் என்று அழைப்பதற்கு ஏற்ப ஆழ்வார்களை திவ்வியசூரிகள் என்று பெயரிட்டுப் போற்றினர்.

மேலும் நித்தியசூரிகளே (அயர்வறும் அமரர்கள்) ஆழ்வார்களாகத் திருஅவதரித்தனர் என்ற சம்பிரதாயமும் அறியத்தக்கது. இன்ன ஆழ்வார் இன்ன நித்திய சூரியின் அமிசம் என்று திவ்வியசூரிசரிதம் போன்ற நூல்களின் வாயிலாக அறியலாம்.

| | |
|---|---|
| பொய்கையாழ்வார் | ஸ்ரீபாஞ்சஜன்யம் என்ற சங்கம் |
| பூதத்தாழ்வார் | கௌமோதகீ என்ற கதாயுதம் |
| பேயாழ்வார் | நந்தகம் என்ற வாள் |
| திருமழிசையாழ்வார் | சுதரிசனம் என்ற சக்கரம் |

| | |
|---|---|
| நம்மாழ்வார் | விஷ்வக்சேனர் என்ற சேனைமுதல்வர் |
| குலசேகராழ்வார் | கௌஸ்துபம் என்ற இரத்தினம் |
| பெரியாழ்வார் | கருடன் என்ற பெரியதிருவடி |
| ஆண்டாள் | பூமிதேவி என்ற நிலமகள் |
| தொண்டரடிப்பொடியாழ்வார் | வைஜயந்தி என்ற வனமாலை |
| திருப்பாணாழ்வார் | ஸ்ரீவத்ஸம் என்ற திருமறு |
| திருமங்கையாழ்வார் | சார்ங்கம் என்ற வில் |
| மதுரகவியாழ்வார் | குமுதர் என்ற கணாதிபர் |

வேதாந்த தேசிகர் ஆழ்வார்கள் பதின்மரையும் எம்பெருமானின் புதிய பத்து அவதாரம் (அபிநவதசாவதாரம்) என்ற கருத்துடையவர்.

ஆயினும் நம்பிள்ளை என்ற ஆசாரியரும் அவருடைய சிஷ்யரான வியாக்கியான சக்கரவர்த்தி பெரியவாச்சான்பிள்ளையும் ஆழ்வார் ஸம்ஸாரிகளிலே ஒருவராகப் பிறந்து இறைவனான திருமாலால் மயர்வற மதிநலம் அருளப்பெற்றவர் என்று கருதுவர் அதற்குக் காரணம் பொய்யில் பாடலான திருவாய்மொழியில் வரும் அகச்சான்று ஆகும். "மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்து ஈறிலின்பத்து இருவெள்ளம் யான் மூழ்கினன்" (திருவாய்மொழி 2-6-8) என்று நம்மாழ்வார்தாமே வெளியிடுகிறார்.

ஆழ்வாருடைய ஞான பக்தி வைராக்கியங்களைக் கருதினால் அவரைப் பலவாறு உயர்த்தி எண்ணவே தோன்றும்.

திருமாலின் நேர் அவதாரமோ ?
வியாசரைப்போல் ஆவேச அவதாரமோ ?
மூதுவரான நித்யசூரிகளில் ஒருவரோ ?
பிறவிக்கடலைக் கடந்து அக்கரைப்பட்ட முக்தரிலே ஒருவரோ ?
பலபிறவிகளில் ஈட்டிய புண்ணியங்க்ள் பலித்ததால் அறிவு திருந்திய உலகினர்தானோ ?
இறைவனுடைய காரணம் கருதாத இயற்கை இன்னருளால் திருந்திய ஒருவர்தானோ ?

என்று இவ்வகைகளால் பேரளவுடையாரும் ஐயப்படா நிற்பர். அதற்குக் காரணம் ஆழ்வாருடைய பிரபாவமேதான். மேற்சொன்னவையாவும் உத்பிரேட்சை (உயர்வு நவிற்சி) என்பர் பெரியவாச்சான்பிள்ளை. இவற்றை உள்ளவாறு கொண்டால், நித்திய சம்சாரியாகப் பிறந்தவன் ஒருவனை நித்யசூரிகளுக்கும் மேற்பட்ட ஞானியாக இவ்விருள்தருமா ஞாலத்தில்

உயர்த்திய எம்பெருமானுடைய நிர்ஹேதுகமான அபாரகிருபை அறியப்படாதுபோகும்.

**திவ்வியப் பிரபந்தம் என்ற குறியீடு**

ஆழ்வார்கள் அருளிய செந்தமிழ்ப் பாசுரங்கள் திவ்வியப் பிரபந்தம் என்ற வடமொழிப் பெயர் கொண்டு வழங்குகின்றன, திவ்வியம் என்ற சொல் தெய்வீகமான பொருட்களுடன் தொடர்புபடுத்தப்பட்டே வழங்குகிறது எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் திருத்தலம் திவ்விய தேசம் எனப்படும். தெய்வப் புலமை பெற்ற ஆழ்வார்கள் திவ்வியசூரிகள் எனப்படுவர்.

வைணவ நெறியில் பிரமாணம், பிரமாதா, பிரமேயம் என்ற மூன்றும் திவ்வியம் என்று அடைமொழி பெறுகின்றன.

பிரமாணம் - உண்மை அறிவிற்குக் கருவியாயிருப்பது.

பிரமேயம் - பிரமாணத்தால் அறியப்படும் பொருள்

பிரமாதா - உண்மை அறிவுடையோன்

இறைவனது உண்மையை அறிவதற்கு நான்கு வேதங்களும் முக்கியமான பிரமாணங்களாகின்றன. அவ்வுண்மையை ஆழ்வார்கள் தமிழால் வெளியிட்டனர். அதாவது வேதம் தமிழ் செய்தனர். எனவே அத்தமிழ்ப்பாக்கள் பிரமாணங்களாயின. ஆதலின் திவ்வியம் என்ற அடைமொழி பெற்றுச் சிறப்படைந்தன.

திவ்வியப்பிரபந்தம், திவ்வியதேசம், திவ்வியசூரிகள் என்ற இவற்றைச் சேர்த்து திவ்வியத்திரயம் என்று வழங்குவர்.

ஆழ்வார்கள் அருளிய நூல்களை மட்டுமே திவ்வியம் என்று அடையடுத்துப் போற்றினர். கவிச் சக்கரவர்த்தி கம்பரின் இராமாயணம் மற்றும் சடகோபர் அந்தாதியை திவ்வியப் பிரபந்தங்களாகக் கொள்ளவில்லை. திவ்வியகவி என்று புகழப்பெற்ற பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் என்ற அழகிய மணவாள தாசர் இயற்றிய அருந்தமிழ் நூல்களையும் அஷ்டப்பிரபந்தம் என்று அழைத்தனரேயன்றி திவ்வியப்பிரபந்தம் என்று அழைத்திலர். ஆசாரியர்களாக விளங்கிய வேதாந்த தேசிகர், மணவாள மாமுனிகள் ஆகியோரின் சமயநூல்களையும் திவ்வியப் பிரபந்தங்களாகக் கொள்ளவில்லை.

**அருளிச்செயல்**

திவ்வியப் பிரபந்தங்களைத் தூய தமிழில் "அருளிச்செயல்" என்று வழங்குவது வைணவ மரபு.

*ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல்வாழி* (உபதேச 3)

என்று வாழ்த்துகிறார் மணவாள மாமுனிகள். "அருளிச்செயல்" என்ற பெயர் வழக்கிற்கு மதுரகவியாழ்வாரின் திருவாக்கே காரணமாகும்.

*அருளினான் அவ்வருமறையின் பொருள் (க.நு.சி)*

என்பது அவர்தம் திருவாக்கு. திருமாலின் திருவருள் பெற்ற நம்மாழ்வார் உலகினர் பாற்கொண்ட அருள்காரணமாகவே வேதம் தமிழ் செய்தார். ஆதலின்

*அருள் கண்டீர் இவ்வுலகினில் மிக்கதே (க.நு.சி.)*

என்பர் மதுரகவிகள். திவ்வியப்பிரபந்தங்கள் அருளிச் செயல்களாயின. இவற்றை அருட்செயல் என்பது மரபன்று.

**ஆழ்வார்கள் அவதார அடைவு**

மணவாள மாமுனிகள் ஆழ்வார்களின் திருஅவதார அடைவைப் பின்புள்ளோர் நன்கு அறியும்படி உபதேசரத்தின மாலை என்ற நூலில் தெளிவு படுத்தியுள்ளார்.

*பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ்மழிசை*
*அய்யன் அருள்மாறன் சேரலர்கோன் - துய்யபட்ட*
*நாதன் அன்பர்தாள் தூளிநற்பாணன் நற்கலியன்*
*ஈதிவர் தோற்றத் தடைவாமிங்கு ( உபதேச 4)*

இவ்வடைவு முறை ஒரோர் காரணம்பற்றி மாற்றியருளிச் செய்யப்பட்டிருப்பதும் உண்டு. நம்மாழ்வார் அவயவியாகக் கருதப்பட்டதால் பல ஆசாரியர்கள் அவரை இறுதியில் வைத்துப் போற்றினர். அதையறியாதவர்கள் நம்மாழ்வாரைக் கடைசியாக அவதரித்தவர் என்ற முடிவுக்கு வந்தனர்.

திருக்கோயில்களில் நம்மாழ்வார் வீற்றிருந்த நிலையில் நடுவில் எழுந்தருளியிருப்பார். அவருக்கு இருபுறங்களிலும் மற்றைய ஆழ்வார்கள் நின்ற நிலையில் எழுந்தருளியிருக்கக் காணலாம்.

**அருளிச்செயல் வேத, உப்பிரும்மணங்கள் ஒப்பீடு**

நம்மாழ்வாருடைய நான்கு நூல்களும் நான்கு வேதங்களுக்குச் சமமாகப் போற்றப்பட்டன.

| | |
|---|---|
| திருவிருத்தம் | ரிக்வேதம் |
| திருவாசிரியம் | யஜுர் வேதம் |
| பெரியதிருவந்தாதி | அதர்வண வேதம் |
| திருவாய்மொழி | சாமவேதம் |

வேதங்களுக்கு அங்கங்கள் அமைந்தது போல், மேற்குறித்த நான்கு வேதங்களுக்கும் திருமங்கையாழ்வார் அருளிய ஆறு நூல்களும் அங்கங்களாகக் கொள்ளப்பட்டன. அவை,

பெரியதிருமொழி
திருக்குறுந்தாண்டகம்
திருவெழுகூற்றிருக்கை
சிறிய திருமடல்
பெரிய திருமடல்
திருநெடுந்தாண்டகம்

என்று ஆறு அங்கங்களாகும்.

"மாறன் தமிழ் மறைக்கு ஆறங்கம் கூற அவதரித்தவர்" (உபதேச) என்று மணவாள மாமுனிகள் திருமங்கையாழ்வாரைப் பற்றிக் குறிப்பிடுவர். இவற்றுள்

| | | |
|---|---|---|
| பெரியதிருமொழி | - | ஆசுகவி |
| திருவெழுகூற்றிருக்கை | - | சித்திரகவி |
| சிறியதிருமடல் | - | விஸ்தாரகவி |
| பெரியதிருமடல் | - | விஸ்தாரகவி |
| திருக்குறுந்தாண்டகம் | - | மதுரகவி |
| திருநெடுந்தாண்டகம் | - | மதுரகவி |

என்று கொள்ளப்படுகின்றன.

வேதங்களுக்கு உபாங்கங்கள் உண்டு. ஆழ்வார் பதின்மரில் ஆண்டாள் மதுரகவியாழ்வார் தவிர மற்றைய எண்மரின் நூல்களும் உபாங்கங்களாகக் கொள்ளப்படுகின்றன. அவையாவன,

| | | |
|---|---|---|
| பொய்கையாழ்வார் | முதல் திருவந்தாதி | 1 |
| பூதத்தாழ்வார் | இரண்டாம் திருவந்தாதி | 1 |
| பேயாழ்வார் | மூன்றாம் திருவந்தாதி | 1 |
| திருமழிசையாழ்வார் | திருச்சந்தவிருத்தம் | 2 |
| | நான்முகன் திருவந்தாதி | |
| குலசேகராழ்வார் | பெருமாள் திருமொழி | 1 |
| பெரியாழ்வார் | திருப்பல்லாண்டு | 2 |
| | பெரியாழ்வார் திருமொழி | |
| தொண்டரடிப்பொடியாழ்வார் | திருமாலை | 2 |
| | திருப்பள்ளியெழுச்சி | |
| திருப்பாணாழ்வார் | அமலனாதிபிரான் | 1 |
| | மொத்தநூல்கள் | 11 |

நான்கு வேதங்கள், ஆறு அங்கங்கள், பதினோரு உபாங்கங்கள் சேர்ந்து 21 நூல்கள் ஆகின்றன. எஞ்சியவை

| | | |
|---|---|---|
| மதுரகவியாழ்வார் | கண்ணிநுண் சிறுத்தாம்பு | 1 |
| ஆண்டாள் | திருப்பாவையும் நாச்சியார் திருமொழியும் | 2 |
| | **ஆக** | **3** |

ஆகிய மூன்று நூல்களாம். இம்மூன்றில் ஆண்டாள் அருளிய திருப்பாவை தமிழ் வேதங்களின் உபநிஷத் என்ற பெருமையைப் பெற்றுள்ளது. கண்ணிநுண் சிறுத்தாம்பு அஷ்டாக்ஷரத்தின் நடுப்பதமான நம: என்ற பொருள் விளக்கமாகக் கொள்ளப்படுகிறது.

**திவ்வியப்பிரபந்தங்கள் - உபபிருமம்மணங்கள் ஒப்பீடு**

வேதப்பொருளை விளக்குவன ஸ்மிருதி, இதிஹாஸ, புராணங்கள் என்பன ஆகும். அவற்றை உபப்பிரும்மணங்கள் என்றழைப்பர் . அவற்றைப் போன்றே திவ்வியப் பிரபந்தங்களையும் உபப்பிரும்மணமாகக் கொண்டனர் வைணவ ஆசாரியப் பெருமக்கள். மேலும் வேதமே எம்பெருமானின் நிலைக்கு ஏற்ப மாறிவரும் முறையில் தமிழாகி திவ்வியப்பிரபந்தங்களாக அவதரித்தது என்பதும் சம்பிரதாயம். இதனை வேதவேத்யநியாயம் என்பர் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார்.

| | |
|---|---|
| வேதத்துக்கு நோக்கு | பரத்துவம் |
| பாஞ்சராத்திரத்துக்கு நோக்கு | வியூகம் |
| இதிஹாஸபுராணங்களுக்கு நோக்கு | விபவம் |
| ஸ்மிருதிகளுக்கு நோக்கு | அந்தர்யாமித்வம் |
| திவ்வியப்பிரபந்தத்துக்கு நோக்கு | அர்ச்சாவதாரம் |

பரம்பொருள் அர்ச்சைத் திருமேனியை அடையும் போது வேதமும் திவ்வியப்பிரபந்தமாக மாறுகிறது. பகவானுக்கு பரத்வாதி பஞ்சகம் போல் பரமப்பிரமாணமாகிய வேதத்துக்கும் ஓர் பஞ்சகம் இவ்வாறு அமைகிறது..

**நாலாயிரம் என்ற பெரும் பிரிவு**

திவ்வியப்பிரபந்தம் பொதுவாக நான்கு பெரும் பிரிவுகளையுடையது. அதனால் நாலாயிர திவ்வியப்பிரபந்தம் என்ற சொல் வழக்கும் பெற்றது. இந்த நான்கு பெரும் பிரிவுகள் வருமாறு

1. முதலாயிரம்
2. திருமொழி
3. இயற்பா
4. திருவாய்மொழி

இந்த நான்கு பெரும் பிரிவுகளில் 24 தனி நூல்கள் அடங்கியுள்ளன.

மேற்கூறிய நான்கு பெரும் பிரிவுகளும்

1. திருமந்திரம் 2. த்வயம் 3. சரம சுலோகம்

என்ற முப்பொருள் மறைமொழிகளின் அடிப்படையில் அமைந்துள்ளன.

திருமந்திரம் என்பது அஷ்டாக்ஷரம் (திருவெட்டெழுத்து)

த்வயம் என்பது இரு வேதவாக்கியங்கள்.

சரமசுலோகம் என்பது பகவத்கீதையில் வரும் ஒரு சுலோகம்

அவையாவன :-

1. ஓம் நமோ நாராயணாய
2. ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே
   ஸ்ரீமதே நாராயணாய நம :
3. ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ
   அஹம்த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச:

இம்மூன்றும் 1 திருமந்திரம்
2 சரமசுலோகம் (ரஹஸ்யத்ரயம் என்பது தொகைப்பெயர்)
3. த்வயம்

என்ற வரிசையில் வைக்கப்பட்டு திவ்வியப்பிரபந்தம் நான்கு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

ஓம் நம : என்பது முதலாயிரம்

நாராயணாய என்பது திருமொழி

கீதாசரமசுலோகம் என்பது இயற்பா

த்வயம் என்பது திருவாய்மொழி

எனவே

(1) திருமந்திரம் என்ற அஷ்டாக்ஷரத்தின் விரிவே முதலாயிரமும் திருமொழியும்

(2) சரம சுலோகத்தின் விரிவே இயற்பா

(3) த்வயத்தின் விரிவே திருவாய்மொழி

| | |
|---|---|
| முதலாயிரத்தில் அடங்கிய நூல்கள் | 10 |
| திருமொழியில் அடங்கிய நூல்கள் | 3 |
| இயற்பாவில் அடங்கிய நூல்கள் | 10 |
| திருவாய்மொழியில் அடங்கிய நூல் | 1 |
| ஆக | 24 நூல்கள் |

**திருமந்திரப் பொருள் விரிவு**

முதலாயிரமும் திருமொழியும் சேர்ந்து திருவெட்டெழுத்தின் பொருள். முதலாயிரத்தில் முதல் நூலாகிய திருப்பல்லாண்டு ஓம் என்னும் பிரணவத்தின் பொருளை உட்கொண்டது. மணவாள மாமுனிகள் உபதேசரத்தின மாலையில் திருப்பல்லாண்டுக்குண்டான ஏற்றத்தையுரைக்கிறார் :

*கோதிலவாம் ஆழ்வார்கள் கூறுகலைக்கெல்லாம்*
*ஆதிதிருப் பல்லாண்டு ஆனதுவும் - வேதத்துக் (கு)*
*ஓம் என்னுமது போல் உள்ளதுக்கெல்லாம் சுருக்காய்த்*
*தான் மங்கலமாதலால்* (உபதேச 19)

திருப்பல்லாண்டு = ஓம்

பெரியாழ்வார் திருமொழி
திருப்பாவை
நாச்சியார் திருமொழி
பெருமாள் திருமொழி
திருச்சந்தவிருத்தம்
திருமாலை
திருப்பள்ளியெழுச்சி
அமலனாதிபிரான்

ஆகிய எட்டு நூல்கள் — ஓம் என்ற பிரணவத்தின் விரிவு

ஓம் நமோ நாராயணாய என்ற திருமந்திரத்தில் நம: என்கிற பதத்தின் விரிவாகக் கண்ணிநுண் சிறுத்தாம்பு என்ற நூல் கருதப்படுகிறது.

*வாய்த்த திருமந்திரத்தின் மத்திமமாம் பதம்போல்*
*சீர்த்த மதுரகவி செய்கலையை - ஆர்த்தபுகழ்*
*ஆரியர்கள் தாங்கள் அருளிச் செயல் நடுவே*
*சேர்வித்தார் தாற்பரியம் தேர்ந்து* (உபதேச 26)

என்ற மணவாள மாமுனிகளின் திருவாக்கும் இதனை அரண் செய்கிறது.

எனவே, கண்ணிநுண் சிறுத்தாம்பு = நம :

இனி, நாராயணாய என்கிற பதப்பொருளின் விளக்கம் பெரிய திருமொழியாகும். இதில் மூன்று நூல்கள் அடங்கியுள்ளன. எனவே திருப்பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழி , திருப்பாவை, நாச்சியார் திருமொழி, பெருமாள் திருமொழி, திருச்சந்த விருத்தம், திருமாலை,

திருப்பள்ளி எழுச்சி, அமலனாதிபிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு, பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், ஆகிய 13 நூல்கள் ஓம் நமோநாராயணாய என்பதன் விளக்கமாகும்.

**சரமசுலோகப் பொருள் பிரிவு**

. இயற்பா என்ற பெரும் பிரிவிலுள்ள 10 நூல்களும் சேர்ந்து பகவத்கீதையிலுள்ள சரம சுலோகத்தின் விரிவாகும். சரமசுலோகம் என்றால் சரமமான (இறுதியான) உபாயத்தை (நெறியை) தெரிவிக்கும் சுலோகம் என்பது பொருள். சரமமான உபாயமாவது சரணாகதி என்ற பிரபத்தியாகும். சரணாகதியாவது இறைவனையே உபாயமாகக் கொள்வதாகும். கர்ம ,ஞான, பக்திகளாகிற உபாயங்களுக்கு மேல் பிரபத்தியைக் கண்ணன் எம்பெருமான்,

*ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ*
*அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச :*

என்ற சுலோகத்தில் உபதேசிக்கிறான். இதன் பொருள்

எல்லாவித உபாயங்களையும் அறவே விட்டு என்னை ஒருவனையே உபாயமாகப் பற்று, நான் எல்லாப் பாபங்களிலிருந்தும் உன்னை விடுவிக்கிறேன். கவலையுறாதே என்பதாகும்.

இயற்பாவில் இடம் பெறும் நான்முகன் திருவந்தாதியில்,

*சேயன் அணியன் சிறியன் மிகப்பெரியன்*
*ஆயன் துவரைக்கோனாய் நின்ற - மாயன் அன்று*
*ஓதிய வாக்கதனைக்கல்லார் உலகத்தில்*
*ஏதிலராம் மெய்ஞ்ஞானமில் (நா. தி. அ.71)*

என்ற பாடலில் கீதா சரம சுலோகம் வெளிப்படையாகவே சொல்லப்படுகிறது.. ஈண்டு கண்ணனெம்பெருமான் ஓதிய வாக்கைக் கல்லாதவர்கள் மெய்யறிவு பெறார் என்பதும் அறிவுறுத்தப்படுகிறது.

எனவே, முதல் திருவந்தாதி, இரண்டாம் திருவந்தாதி, மூன்றாம் திருவந்தாதி, நான்முகன் திருவந்தாதி, திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவெழுகூற்றிருக்கை, சிறிய திருமடல் , பெரிய திருமடல், ஆகிய பத்து நூல்களும் சரமசுலோகப் பொருளை விளக்குவனவாம்.

**த்வயத்தின் விரிவு**

திருவாய்மொழியே த்வயத்தின் விரிவாகக் கொள்ளப்படுகிறது. திருவாய் மொழி த்வயத்தில் வெளியிடப்பட்ட பத்து அர்த்தங்களையும் பத்து பத்துக்களில் விளக்குகிறது.

| | | |
|---|---|---|
| முதல் பத்து | - | ஸ்ரீமந் |
| இரண்டாம் பத்து | - | நாராயண |
| மூன்றாம் பத்து | - | சரணௌ |
| நான்காம்பத்து | - | சரணம் |
| ஐந்தாம் பத்து | - | ப்ரபத்யே |
| ஆறாம் பத்து | - | ஸ்ரீமதே |
| ஏழாம் பத்து | - | நாராயண |
| எட்டாம் பத்து | - | நாராயண |
| ஒன்பதாம் பத்து | - | ஆய |
| பத்தாம் பத்து | - | நம |

த்வயம் - ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே ஸ்ரீமதே நாராயணாய நம :

பொருள் - திருமகளோடு கூடிய நாராயணனின் இரண்டு திருவடிகளையும் புகலாகப்பற்றுகிறேன். திருமகளோடு கூடிய நாராயணனுக்கே எல்லா அடிமைகளையும் செய்யப்பெறுவேன்.

**வரிசை மாற்றம்**

முதலாயிரம், திருமொழி, இயற்பா, திருவாய்மொழி என்ற பெரும்பிரிவின் வரிசையைச் சிலர் மாற்றிப் பதிப்பித்துள்ளனர். அவர்கள் முதலாயிரம், திருமொழி, திருவாய்மொழி, இயற்பா, என்று வரிசைப்படுத்தினர். அதற்கு இரண்டு காரணங்களைக் காட்டியுள்ளனர்.

திருமந்திரம், த்வயம், சரமசுலோகம், என்பது ஒருவரிசையாகக் கொள்ளப்பட்டிருப்பதை முதற்காரணமாகக் காட்டுகின்றனர். விவரண, விவரணி பாவம் என்ற நியாயத்தில் இம்முறை பொருந்துகிறது. திருமந்திரத்தின் விவரணம் த்வயம், த்வயத்தின் விவரணம் சரமச்லோகம் எனவே சரமசுலோகத்தின் விரிவான இயற்பா இறுதியில் வைக்கத்தகும் என்பர்.

திருவரங்கத்தில் திருஅத்யயனத் திருவிழாவில் இருபது தினங்களில் முதலாயிரம் திருமொழி, திருவாய் மொழிப் பிரிவுகளை சேவித்து இறுதியான 21 ஆவது நாளில் இயற்பாவை அனுசந்திக்கின்றனர். இந்நடைமுறையை இரண்டாவது காரணமாகக் காட்டுவர்.

திருமந்திரம், சரமசுலோகம், த்வயம், என்ற வரிசையும் பூருவாசாரியர்களால் ஆதரிக்கப்பட்டிருக்கிறது,.

திருமந்திரம் ப்ரதமரஹஸ்யம், (முதல் மறைப்பொருள்) என்பதில் ஒரே கருத்து நிலவுகிறது.

(1) த்வயம் + சரமசுலோகமா?

(2) சரமசுலோகம் + த்வயமா? என்று ஆய்வு செய்யப்பட்டிருக்கிறது.

முன்னதில், விவரண விவரணி பாவம் தொடர்கிறது. எவ்வாறு என்றால், திருமந்திரத்தில் நடு மற்றும் மூன்றாம் பதங்களுக்கு (அதாவது நம: மற்றும் நாராயணாய) வாக்யத்வயம் விவரணமாய் அதற்கு சரமசுலோகத்தில் வரும் இரண்டு கண்டங்கள் விவரணமாய் அமைகிறது. பின்னதில், விதி, அனுஷ்டானம் என்ற முறை துவயம், சரமசுலோகம் என்ற வரிசையில் அமைகிறது. இரண்டு பிரகாரமும் அனுஸந்திக்கத் தட்டில்லை என்று மணவாள மாமுனிகள் முமுக்ஷுப்படி த்வயப்ரகரண வியாக்யான அவதாரிகையில் கூறுவர்.

இனி, திருவரங்கத்தில் முற்பகுதியில் இசைப்பாக்கள், பிற்பகுதியான ஒருநாளில் இயற்பாக்கள் என்ற கிரமத்தில் அனுஸந்திக்கப்பட்டு வருகிறது.. இயற்பாவை கடைசிப் பிரிவாகக் காட்டுவதற்கு இது சான்று ஆகாது. எனவே, முதலாயிரம், திருமொழி, இயற்பா, திருவாய்மொழி, என்ற வரிசையே மிகப் பெரும்பாலான பதிப்பாசிரியர்களால் கொள்ளப்பட்டிருக்கிறது.

**இயற்பாவும் இசைப்பாவும்**

நாலாயிரதிவ்வியப் பிரபந்தத்துள் முதலாயிரம்., பெரிய திருமொழி, திருவாய்மொழி, ஆகிய மூன்று ஆயிரங்களும் இசைப்பாடல்களால் அமைந்தன. முதல் திருவந்தாதி முதல் பெரிய திருமடல் ஈறாகவுள்ள மூன்றாவது ஆயிரம் இயற்பாக்களால் அமைந்தன. இசைப்பாக்கள் பண்ணும் தாளமும் வகுக்கப்பட்டவை. திருவாய் மொழிக்கு நாதமுனிகள் வகுத்த பண்ணும் தாளமும் இன்று நமக்குக் கிடைத்துள்ளன. பெரிய திருமொழிக்கும் பண்கள் வகுக்கப்பட்டுள்ளன. மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் கிடைத்த பெரிய திருமொழி ஏட்டுச் சுவடிகளில் பண்கள் குறிக்கப்பட்டிருந்தன. அதை எஸ். ராஜம் பதிப்பில் காட்டியுள்ளனர். அதை அவ்வாறே வி.புதூர் வேங்கடசாமி ரெட்டியார் தம்முடைய நாலாயிர திவ்வியப்பிரபந்தப் பதிப்பில் அச்சிட்டுள்ளார். முதலாயிரத்திலுள்ள நூல்களின் பாசுரங்களுக்கும் பண்கள் இருந்திருக்கவேண்டும். இப்பொழுது கிடைக்கவில்லை. பெரியாழ்வார் திருமொழியில்

இன்னிசை மாலைகள் ( பெரியா திரு. 1-5-11)

ஏரார் இன்னிசை மாலை ( பெரியா திரு 3-1-11)

மாலைபத்தும் பண்ணின்பம் வரப்பாடும் பத்தர் (பெரியா 3-1-10)

என்று வரும் அடிகளால் பெரியாழ்வார் திருமொழிக்கும் பண்கள் வழங்கின என்று அறியமுடிகிறது.

பண் வகுக்கப்படாதன இயற்பாவில் அடங்கிய நூல்கள் மட்டுமே. ஆதலால் பாசுரங்களை இயற்பா, இசைப்பா என்று இரு பெரும் பிரிவுகளில் அடக்கலாம்.

நாதமுனிகள் என்ற ஆசாரியர் திவ்வியப்பிரபந்தங்களில் இசைப்பாக்களாக அமைந்தவற்றிற்குப் பண்ணும் தாளமும் வரையறை செய்து அவற்றை முதற்கண் தம் மருமக்களாகிய கீழையகத்தாழ்வான் மேலையகத்தாழ்வான் ஆகிய இருவருக்கும் ஓதுவித்தார். நாதமுனிகள் மேலும் பலருக்கு ஓதுவித்து அத்தியயன பரம்பரையை உருவாக்கினார்.

பண்ணும் தாளமும் பொருந்தி இசையோடு பாடும் ஒருமுறையையும் வடமொழி வேதங்களைப்போல் மூன்றே ஸ்வரங்களுடன் ஓதுகின்ற மற்றொரு முறையையும் உருவாக்கினார். அதற்காகப் பாசுரங்களின் பொருள் அமைதிக்கு ஏற்ப நிறுத்தும் இடங்களையும் வகுத்து நெறிப்படுத்தினார்.

**பாசுரங்களை நிறுத்துமிடங்கள்**

திவ்வியப் பிரபந்தத்தில் வரும் செய்யுள்களைப் பாடல்கள் என்று கூறாது பாசுரங்கள் என்று குறிப்பிடுவதுதான் மரபு. சுரத்தோடு கூடிய பா என்பது இதற்குப் பொருள். நாதமுனிகளின் காலத்தில் பண்ணோடு பாசுரங்களை இசைத்தனர். அம்முறையில் இன்றும் சில பாசுரங்களைத் திருவரங்கத்தில் அரையர்கள் பாடிவருகின்றனர். ஆனால் முன்பு கூறியதுபோல் மூன்றே ஸ்வரங்களோடு (எடுத்தல், படுத்தல், நலிதல்) பொருளுக்கு ஏற்ப ஓதும் மரபே இன்று நடைமுறையில் வருகிறது. இம்முறையிலும் ஒருவகை இசை அமைகிறது,. எல்லோருக்கும் பண்முறையில் பாசுரங்களைப் பாடுதல் இயலாததால், இம்முறை பின்பற்றப்படுகிறது. இம்முறையிலும் செய்யுள் இனத்துக்கு ஏற்ப ஓசை மாற்றங்கள் நிலவுகின்றன.

**நிறுத்தி சேவித்தல்**

ஆழ்வார் பாசுரங்களைப் பாடுதல் என்று கூறாது சேவித்தல் என்பதே மரபாகும். அவ்வாறு சேவிக்கும் சமயத்தை "சேவாகாலம்" என்று வழங்குவர். திவ்வியப்பிரபந்தம் சேவிப்பவர்களை "அத்யாபகர்கள்" என்று வழங்குவர். விண்ணப்பம் செய்வார் என்பது அதற்கு ஏற்ற தமிழ்த் தொடர். இத்தொடர் வியாக்கியானங்களில் காணப்படுகிறது. நடைமுறையிலும் திருக்கோயில்களில் சில சந்தர்ப்பங்களில் உள்ளது.

பாசுரங்களை சேவிக்கும்போது பாசுரத்தின் முன்பாதியை ஒரு பிரிவினர் சேவிப்பார்கள். பின் பாதியை மற்றொரு பிரிவினர் சேவிப்பார்கள். இஃது கோஷ்டிசேவித்தல் என்று குறிப்பிடப்படும். சேவிப்பவர்களை சேவாகால கோஷ்டி என்று அழைப்பர்.

ஒரு பாசுரத்தைப் பொதுவாக நான்கு இடங்களில் நிறுத்திச் சேவிப்பார்கள். இவ்வாறு நிறுத்தும் இடங்கள் பொருள் பொருத்தமுறவே அமையும். நிறுத்துமிடங்களை இக்காலப் பதிப்புகளில் நட்சத்திரக் குறியிட்டுக் காட்டியுள்ளனர். பொதுவாக 4 நிறுத்தங்கள் கொண்டது ஒரு நான்கு அடிப்பாசுரம். ஒவ்வொரு நிறுத்தப்பகுதியையும் இடையில் ஓரிடத்தில் விட்டிசைத்துச் சேவிப்பார்கள். எடுத்துக்காட்டாக,

முன்பொலாவிராவணன்தன் - முதுமதிளிலங்கை வேவித்து
அன்பினால் அனுமன் வந்து - ஆங்கடியிணை பணியநின்றார்க்கு
என்பெலாம் உருகியுக்கிட்டு - என்னுடை நெஞ்சமென்னும்
அன்பினால் ஞானநீர் கொண்டு - ஆட்டுவணடியனேனே. (தி.கு.தா.15)

என்ற பாசுரத்தைக் காணலாம். அடிகளின் விட்டிசைக்கும் ஈற்றில் வரும் குற்றியலுகரங்களை அடுத்துவரும் பகுதியின் முதற்சீரின் முதலெழுத்தோடு புணர்த்துக் கூறுவதில்லை. அவற்றை குற்றியலுகரம் போன்றே ஒலித்து வருகிறார்கள். மேற் பாசுரத்தில் 2,3, 4வது அடிகளிற் காண்க.

செய்யுள் இலக்கணத்தின்படி சீர்களாகச் சேவிப்பது மரபு இல்லை. செய்யுள் இலக்கணத்தின்படி,

எந்தைதந் / தைதந்தை / தந்தைதம் / மூத்தப்ப / னேழ்படி / கால்தொடங்கி

என்பது திருப்பல்லாண்டில் ஆறாம் பாசுரத்தின் முதலடி அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம், இதைச் சேவிக்கும் போது,

எந்தை தந்தை தந்தை / தந்தை தம்மூத்தப்பனேழ் படிகால் தொடங்கி என்று சேவிப்பர். இங்கு ஓரிடத்தில் மட்டும் விட்டிசைத்து ஒரு நிறுத்தத்தைச் சேவிக்கிறார்கள்.

ஒரு 'நிறுத்தம் என்பது ஓர் அடியாகவோ, அதற்குக் கூடுதலாகவோ அன்றிக் குறைவாகவோ இருக்கலாம்.

எந்நாளெம்பெருமான் - உன்தனக்கடியோமென்றெழுத்துப்பட்ட
வந்நாளே *அடியோங்களடிக்குடில் - வீடு பெற்றுய்ந்ததுகாண்*
செந்நாள் தோற்றி - திருமதுரையுட்சிலை குனித்து* ஐந்தலைய
பைந்நாகத்தலைப் பாய்ந்தவனே - உன்னைப்பல்லாண்டு கூறுதுமே

இப்பாட்டில் விட்டிசைக்கும் இடங்களும், நிறுத்துமிடங்களும் அத்தியாபகர்கள் சேவிக்கும் முறைப்படி காண்பிக்கப்பட்டுள்ளது.

நான்கு நிறுத்தங்களும் நிறுத்தத்திற்கு ஒரு விட்டிசைப்பும் வருவதைக் காணலாம். இரண்டு நிறுத்தங்களை ஒரு பாதம் என்பர் அத்தியாபகர்கள். இப்பாசுரத்தைச் சீர்பிரித்துக் காட்டினால்.

எந்நா/ளெம்பெரு/மானுன்/றனக்கடி/யோமென்/றெழுத்துப்பட்(ட)
அந்நா/ளேயடி/யோங்க/ளடிக்குடில்/வீடுபெற்/றுய்ந்ததுகாண்
செந்நா/டோற்றித்/திரும/துரையுட்/சிலைகுனித்/தைந்தலைய
பைந்நா/கத்தலைப்/பாய்ந்தவ/னேயுன்னைப்/பல்லாண்டு/கூறுதுமே

என்று இவ்வாறு அமைந்தபடியே வாய்விட்டுப் படிக்கவேண்டும். இவ்வகைமுறை யாப்பிலக்கண அமைதி காண்பதற்குப் பயன்படும். பொருட் பொருத்தம் உடையதாய்ப் பாராயணம் செய்வதற்குப் பயன்படாது. இன்று இதையுணர்ந்து பாராயணப் பதிப்புக்களே அண்மைக்காலமாக வெளிவருகின்றன.

**திவ்வியப்பிரபந்தங்களின் எண்ணிக்கை.**

ஆழ்வார் பதின்மரும் மதுரகவிகளும், ஆண்டாளும், ஆகிய பன்னிருவரும் அருளிச் செய்த நூல்கள் இருபத்துநான்கு என்று கணக்கிடப்படுகிறது. வடமொழி வேதங்களின் சாரமாக காயத்திரி மந்திரம் விளங்குகிறது,. இம்மந்திரத்தில் இருபத்து நான்கு எழுத்துக்கள் உள்ளன. அதே போன்று திவ்வியப்பிரபந்தமாகிய திராவிட வேதத்தில் இருபத்து நான்கு நூல்கள் இடம்பெற்றன. இவற்றை ஆழ்வார்களின் கால வரிசைப்படி அடைவு படுத்தினால் பின்வருமாறு அமையும்.

1. முதல் திருவந்தாதி
2. இரண்டாம் திருவந்தாதி
3. மூன்றாம் திருவந்தாதி
4. நான்முகன் திருவந்தாதி
5. திருச்சந்த விருத்தம்
6. திருவிருத்தம்
7. திருவாசிரியம்
8. பெரியதிருவந்தாதி
9. திருவாய்மொழி
10. கண்ணிநுண் சிறுத்தாம்பு
11. பெருமாள் திருமொழி
12. திருப்பல்லாண்டு
13. பெரியாழ்வார் திருமொழி
14. திருப்பாவை
15. நாச்சியார் திருமொழி
16. திருமாலை
17. திருப்பள்ளியெழுச்சி
18. அமலனாதிபிரான்
19. பெரியதிருமொழி
20. திருக்குறுந்தாண்டகம்
21. திருவெழுகூற்றிருக்கை
22. சிறிய திருமடல்
23. பெரிய திருமடல்
24. திருநெடுந்தாண்டகம்

நாதமுனிகள் ரஹஸ்யத்ரயம் என்ற மும்மறைப்பொருளின் அடிப்படையில் தொகுத்த அடைவு பின்வருமாறு

1. திருப்பல்லாண்டு (12,1)
2. பெரியாழ்வார் திருமொழி (13, 2)
3. திருப்பாவை (14, 3)
4. நாச்சியார் திருமொழி (15,4)
5. பெருமாள் திருமொழி (11, 5)
6. திருச்சந்த விருத்தம் (5, 6)
7. திருமாலை (16,7.)
8. திருப்பள்ளியெழுச்சி (17, 8)
9. அமலனாதிபிரான் (18, 9)
10. கண்ணிநுண்சிறுத்தாம்பு (10, 10)
11. பெரிய திருமொழி (19, 11)
12. திருக்குறுந்தாண்டகம் (20, 12)
13. திருநெடுந்தாண்டகம் (24, 13)
14. முதல் திருவந்தாதி (1, 14)
15. இரண்டாம் திருவந்தாதி (2, 15)
16. மூன்றாம் திருவந்தாதி (3, 16)
17. நான்முகன் திருவந்தாதி (4, 17)
18. திருவிருத்தம் (6,18)
19. திருவாசிரியம் (7,19)
20. பெரிய திருவந்தாதி (8, 20)
21. திருவெழுகூற்றிருக்கை (21, 21 )
22. சிறிய திருமடல் (22, 22)
23. பெரிய திருமடல் (23, 23)
24. திருவாய்மொழி (9, 24)

கண்ணிநுண்சிறுத்தாம்பு, திருவெழுகூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல், ஆகிய நான்கு பிரபந்தங்கள் மட்டும் இருவகை அடைவிலும் ஒரே நிலையில் இடம் பெறுகின்றன.

ஒரே நூல் அருளிச்செய்தவர்கள் அறுவர்

பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார்

மதுரகவியாழ்வார், குலசேகராழ்வார், திருப்பாணாழ்வார்

இரு நூல்கள் அருளிச் செய்தவர்கள் நால்வர்

திருமழிசையாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், தொண்டரடிப் பொடியாழ்வார் நான்கு நூல்கள் அருளிச் செய்தவர் ஒருவர் நம்மாழ்வார்

ஆறு நூல்கள் அருளிச் செய்தவர் திருமங்கையாழ்வார் ஒருவரே.

ஒன்றுக்கு மேற்பட்ட நூல்கள் அருளிச் செய்திருந்தால், அந்நூல்களின் தோற்றவரிசையை உரையாசிரியர்கள் காட்டியுள்ளனர்.

**திவ்வியப் பிரபந்தத்திலுள்ள பாசுரங்களின் எண்ணிக்கை.**

| | | | |
|---|---|---|---|
| திருப்பல்லாண்டு | 12 | திருவிருத்தம் | 100 |
| பெரியாழ்வார் திருமொழி | 461 | திருவாசிரியம் | 7 |
| திருப்பாவை | 30 | பெரியதிருவந்தாதி | 87 |
| நாச்சியார் திருமொழி | 143 | திருவெழுகூற்றிருக்கை | 1 |
| பெருமாள் திருமொழி | 105 | சிறிய திருமடல் | 1 |
| திருச்சந்த விருத்தம் | 120 | பெரிய திருமடல் | 1 |
| திருமாலை | 45 | திருவாய்மொழி | 1102 |
| திருப்பள்ளியெழுச்சி | 10 | **ஆக மொத்தம்** | **3776** |
| | | பாசுரங்கள் | |
| அமலனாதிபிரான் | 10 | | |
| கண்ணிநுண் சிறுத்தாம்பு | 11 | முதலாயிரம் | 947 |
| பெரிய திருமொழி | 1084 | திருமொழி | 1134 |
| திருக்குறுந்தாண்டகம் | 20 | இயற்பா | 593 |
| திருநெடுந்தாண்டகம் | 30 | திருவாய்மொழி | 1102 |
| முதல் திருவந்தாதி | 100 | **ஆக மொத்தம்** | **3776** |
| இரண்டாம் திருவந்தாதி | 100 | | |
| மூன்றாம் திருவந்தாதி | 100 | | |
| நான்முகன் திருவந்தாதி | 96 | | |

நாலாயிர திவ்வியப் பிரபந்தம் என்று அழைக்கப்பட்டாலும்., அதில் 3776 பாடல்களே அடங்கியுள்ளன.

**திவ்வியப் பிரபந்தங்களின் எண்ணிக்கையில் வேறுபாடு**

நாலாயிர திவ்வியப்பிரபந்தத்தில் 24 நூல்கள் அடங்கியுள்ளன என்று முன்னர்க் கண்டோம். ஆனால் சில பதிப்புக்களில் 23 நூல்களாகக் காட்டப்பட்டுள்ளது. அவர்கள் திருப்பல்லாண்டையும் பெரியாழ்வார் திருமொழியையும் ஒரே நூலாகக் கணக்கிடுகின்றனர். மொத்த நூல்களின் எண்ணிக்கையை 24 என்று ஆக்குவதற்காக அவர்கள்

இராமாநுச நூற்றந்தாதியைச் சேர்த்துக் கொள்கின்றனர். மேலும் அதனை இயற்பாவாகக் கொண்டனர். அதனை நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தின் இறுதியில் வைத்தனர். இயற்பா பிரிவை நான்காவதாகக் கொள்ளும் முயற்சி இதனால் ஏற்பட்டது.

இராமாநுச நூற்றந்தாதி திவ்வியப் பிரபந்தங்களில் ஒன்றா? என்ற கேள்வி எழுவது இயற்கை. அந்நூலை இயற்றியவர் திருவரங்கத்தமுதனார். அவர் ஆழ்வார்கள் திரளிலே சேர்ந்தவர் அல்லர். இராமாநுச நூற்றந்தாதி இராமாநுசர் காலத்தில் கூரத்தாழ்வானின் சீடராகிய அமுதனாரால் இயற்றப்பட்டது. இராமானுசரே அதை ஏற்றுக்கொண்டார். நம்பெருமாளும் திருச்செவி சார்த்தி அங்கீகாரம் அளித்தார். அதனால் திவ்வியப்பிரபந்தங்களுக்கு நிகரான மதிப்பைக் கொடுத்துப் போற்றினரேயன்றி, திவ்வியப் பிரபந்தமாக ஏற்றுக்கொள்ளவில்லை. அதாவது திவ்வியப் பிரபந்தங்களின் எண்ணிக்கையில் சேர்க்கவில்லை. சேராமலேயே அந்நூல் திவ்வியப் பிரபந்தங்களுக்கு ஈடான பெருமையைப் பெற்றது. இது சிஷ்டாசாரம் (மேலோர்கள் மேற்கொண்டது) என்பர் காரப்பங்காடு சிங்கப்பெருமாள் ஸ்வாமி (ஸ்ரீராமாநுஜஸித்தாந்தப்ரகாசிகை) அதற்குக் காரணங்கள்

1) நாதமுனிகளுக்கு திவ்வியப் பிரபந்தங்கள் நாலாயிரத்தையும் யோக தசையில் நம்மாழ்வார் உபதேசித்ததாக குருபரம்பரை நூல் குறிப்பிடுகிறது. அப்போது இராமாநுச நூற்றந்தாதி தோன்றவில்லை.

2) ஆழ்வார் இனி ஏற்படும் இந்தப் பிரபந்தத்தையும் வருவது உணரும் ஆற்றலால் கண்டு உபதேசித்தார் என்று கூறுவதற்குச் சான்று ஒன்றும் இல்லை.

3) அவ்வாறே ஆழ்வார் நாதமுனிகளுக்கு உபதேசித்திருந்தால் நாதமுனிகள் தொடங்கி அந்நூல் உபதேச பரம்பரையாக வந்ததாகச் செய்தி ஒன்றும் இல்லை.

4) கண்ணிநுண்சிறுத்தாம்பை அருளிச் செயல் நடுவில் சேர்வித்தார் என்று மாமுனிகள் குறித்தது போல் இதற்குக் குறிப்பில்லை.

5) அப்படிச் சேர்ப்பித்தால் கண்ணிநுண்சிறுத்தாம்பை அடுத்துச் சேர்க்க வேண்டிவரும். ஆனால் சம்பிரதாயத்தில் அவ்வாறில்லை. நாலாயிரப் பிரபந்தங்கள் சேவித்து முடிவிலேயே ஓதப்படுகிறது. ஆதலால், இராமாநுச நூற்றந்தாதி நாலாயிரத்தில் சேர்ந்ததில்லை.

ஆகிலும் திருவரங்கர் இதனை அமுதனார் விண்ணப்பிக்கக் கேட்டு மகிழ்ந்த அன்றிலிருந்து திவ்வியப் பிரபந்தங்களுக்குச் சமமாக ஓதிவரும்படி ஆணையிட்டார். இவ்வரலாறு கோயிலொழுகு என்ற நூலில் குறிப்பிடப்படுகிறது. அதனால் திருப்பல்லாண்டுக்கு முந்தி இப்பிரபந்தமும் சாற்றுமுறை செய்யப்படுகிறது. அனத்தியயனம் என்கிற நடைமுறைக்கு

இராமாநுச நூற்றந்தாதியு உட்பட்டது. அனத்தியயனம்பற்றிப் பிறிதோரிடத்தில் காண்போம். எனவே திவ்வியப்பிரபந்தத் தொகுப்பில் இராமாநுச நூற்றந்தாதி இன்றியே 24 நூல்கள் அடங்கியுள்ளன. இவ்வாறு தென்கலை மரபில் ஏற்றுக் கொள்ளப்பட்டு நடைமுறையிலுள்ளது.

**நாலாயிரம் எண்ணிக்கையில் வேறுபாடு**

3776 பாடல்களை 4000 ஆக ஆக்குவதற்கு இருவகை முயற்சிகள் செய்யப்பட்டன.

முதல்வகை இராமாநுச நூற்றந்தாதியைச் சேர்ந்து 24 பிரபந்தங்கள் என்ற மரபினர்.

இரண்டாம் வகை இராமாநுச நூற்றந்தாதி நீங்கலாக 24 பிரபந்தங்கள் என்ற கொள்கையினர்.

இருவகையிலும் சிறியதிருமடல், பெரியதிருமடல், ஆகிய நூல்களின் பாசுரங்களைக் கணக்கிடுவதில் வேறுபாடுகள் நிலவுகின்றன.

**1. வேதாந்ததேசிகர் கொள்கை**

| | | | |
|---|---|---|---|
| அ) | முதலாயிரம் | 947 | பாடல்கள் |
| ஆ) | திருமொழி | 1134 | பாடல்கள் |
| இ) | இயற்பாவில் | | |
| | இருமடல்கள் | | |
| | நீங்கலாக | 591 | |
| | சிறிய திருமடல் | 40 | |
| | பெரிய திருமடல் | 78 | |
| ஈ) | திருவாய்மொழி | 1102 | |
| | இராமாநுச நூற்றந்தாதி | 108 | |
| | மொத்தம் | 4000 | பாடல்கள் |

**2. அப்பிள்ளை என்பவரின் கோட்பாடு**

| | | | |
|---|---|---|---|
| அ) | முதலாயிரம் | 947 | பாடல்கள் |
| ஆ) | திருமொழி | 1134 | பாடல்கள் |
| இ) | இயற்பா | | |
| | (இருமடல்கள் நீங்கலாக) | 591 | பாடல்கள் |
| | சிறிய திருமடல் | 77 $^1/_2$ | பாடல்கள் |
| | பெரிய திருமடல் | 148 $^1/_2$ | பாடல்கள் |
| ஈ) | திருவாய்மொழி | 1102 | பாடல்கள் |
| | மொத்தம் | 4000 | பாடல்கள் |

இவர் மடல்களை ஈரடிக் கண்ணிகளாகக் கொண்டு பாடல்களின் எண்ணிக்கையைக் கணக்கிட்டார்.

சிறிய திருமடல் - 155 அடிகள் 77 $^1/_2$ கண்ணிகள்

பெரிய திருமடல் - 297 அடிகள் 148 $^1/_2$ கண்ணிகள்

சிறிய திருமடல், பெரிய திருமடல் இரண்டும் ஒவ்வொரு பாடலாகவே தமிழ் யாப்பிலக்கண நெறியின்படி கொள்ளப்படும். காஞ்சிபுரம் மகாவித்துவான் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியார் ஸ்வாமி அந்நெறியே கொள்ளத்தக்கது என்று நிறுவியுள்ளார். அதன்படி நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் 3776 பாசுரங்களே அடங்கியுள்ளன. மிகுதி பற்றி 4000 என்று வழங்கப்படுகிறது. 947 பாடல்களேயுள்ள பகுதியை முதலாயிரம் என்றும் 1134 பாடல்கள் உள்ள பகுதியைத் திருமொழி ஆயிரம் என்றும் வழங்குவதெல்லாம் மிகுதி பற்றியதாகும். அதனால் 3776 பாடல்களே கொண்டிருந்தாலும் 4000 என்று வழங்கி வருவதிற் குறையில்லை.

**திருவத்தியயனத் திருவிழா**

திருமால் திருக்கோயில்களில் நடைபெறும் விழாக்களில் மிகச்சிறப்புடன் கொண்டாடப்படுவது திரு அத்யயன உற்சவமாகும். இவ்விழா இருபது தினங்களில் நடைபெறுகிறது. மார்கழி மாதம் சுக்கில பட்ச ஏகாதசிக்கு முன் பத்து தினங்கள் (1) சிறிய திருஅத்யயன உற்சவம் என்றும் ஏகாதசி தொடங்கி பத்து தினங்கள் (2) பெரிய திரு அத்யயன உற்சவம் என்றும் வழங்கப்படுகிறது.

சிறிய திருஅத்யயன உற்சவம் பகற்பத்து என்றும் திருமொழித்திருநாள் என்றும், பெரிய திருஅத்தியயன உற்சவம் இராப்பத்து என்றும் திருவாய்மொழித் திருநாள் என்றும் குறிப்பிடப்பெறும்.

பெருமாள் கோயில்களில் இதற்கென பகற்பத்து மண்டபம் இராப்பத்து மண்டபம் என்று விழா மண்டபங்கள் உள்ளன. இங்கு பெருமாள் எழுந்தருளியிருப்பார். அவருக்கு எதிரிலோ இரு மருங்குகளிலோ ஆழ்வார்கள் எழுந்தருளியிருப்பர். ஸ்ரீவைஷ்ணவர்கள் அத்திருக்கோயிலில் தீர்த்த மரியாதைகள் பெறும் ஆசாரியர்களின் தலைமையில் கோஷ்டியாக இருந்து நாலாயிரம் பாசுரங்களையும் சேவிப்பார்கள். இருபது தினங்களிலும் நாலாயிர திவ்வியப்பிரபந்தம் முழுவதையும் எம்பெருமான் திருமுன்பு அவர்கள் விண்ணப்பம் செய்வார்கள்.

பகற்பத்தில் முதலாயிரமும் திருமொழியும் சேவிப்பர். இராப்பத்தில் திருவாய்மொழியும் இயற்பாவும் சேவிப்பர். சில திவ்விய தேசங்களில் 21வது நாள் ஒரே நாளில் இயற்பா முழுவதையும் சேவிப்பது மரபாயிருக்கிறது.

இராப்பத்துவிழா திருமங்கையாழ்வாரால் திருவரங்கத்தில் தொடங்கப் பெற்றது. பகற்பத்துவிழா நாதமுனிகளால் திருவரங்கத்தில் தொடங்கப் பெற்றது. இவ்விழாக்கள் தொடங்கப் பெற்ற வரலாற்றை கோயிலொழுகு என்ற நூல் விரித்துரைக்கிறது. திருவரங்கத்தில் தொடங்கப் பெற்ற இவ்விழாக்கள் மற்ற திவ்விய தேசங்களிலும் அவ்வாறே பின்பற்றித் தொடங்கப்பெற்றன.

### இராப்பத்து என்ற திருவாய்மொழித் திருநாள்

மார்கழி மாதம் சுக்கில பட்ச ஏகாதசி தொடங்கிப் பத்து நாட்கள் பகல் வேளையில் வைதிகர்களான அந்தணர்கள் பெரும் கூட்டமாக இருந்து திருவரங்கர் திருமுன்பு முறையாக வேதங்களைப் பாராயணம் செய்து உற்சவமாகக் கொண்டாடினர். இதனைக் கண்ணுற்ற திருமங்கையாழ்வார் நம்மாழ்வார் அருளிச் செய்த திருவாய் மொழியும் அவ்வாறே வைதிகர்களால் எம்பெருமான் திருமுன்னர் ஓதப்பெறவேண்டும் என்று விரும்பினார்.

ஒருசமயம் திருமங்கையாழ்வார் திருநெடுந்தாண்டகப் பாசுரங்களை இனிய தமிழிலே பண்ணும் தாளமும் சேர இசைத்துத் திருவரங்கரை மகிழ்வித்தபோது, இறைவன் உள்ளம் பூரித்து உவகையோடு வரம் கொடுக்கமுன்வந்தான். அப்போது நம்மாழ்வாரின் திருவாய் மொழியை வடமொழி வேதத்துக்குச் சமமாக மதித்துப் பெருமைப்படுத்த வேண்டும் என்று திருமங்கையாழ்வார் வரம் வேண்டினார். திருவரங்கரும் மிகவும் உகந்தருளி

*அப்படியே வேதஸாம்யம் அநுக்ரஹித்தோம்*
*அத்யயன உத்ஸவத்திலே வேத பாராயணத்தோடு*
*திருவாய் மொழியையும் பாராயணம் பண்ணுங்கோள்*

என்று திருவாய் மலர்ந்தருளியதான இந்நிகழ்ச்சி பெரியவாச்சான் பிள்ளையால் கலியனருள்பாடு என்ற நூலில் விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது.

திருவரங்கரால் வரம் அருளப் பெற்ற திருமங்கையாழ்வார் ஆழ்வார் திருநகரியிலிருந்து நம்மாழ்வார் அர்ச்சைத் திருமேனியை மதுரகவிகள் மூலமாக எழுந்தருளச்செய்தார். திருவரங்கரும் ஆழ்வாரை "நம்மாழ்வார்" என்று திருநாமம் சார்த்திச் சிறப்பித்தார். திருமங்கையாழ்வாரும் மதுரகவிகளும் நம்மாழ்வார் திருவுருவத்திருமேனியுடன் திருக்குறளப்பன் சந்நிதியில் எழுந்தருளினர். இரவுப்பொழுதில் அழகிய மணவாளன் திருமண்டபத்திற்கு ஆழ்வார் எழுந்தருளினார். எம்பெருமான் திருவரங்கனும் "அருளப்பாடு திருவாய் மொழி விண்ணப்பம் செய்வார்" என்று அருளப்பாடு முதலான அனைத்து வரிசைகளையும் புகழ்மொழிகளையும் கூறவே, மதுரகவிகளும் நம்மாழ்வாரின் ஸ்தானத்தில் திருவாய்மொழியைத் தொடங்கி

தேவகானத்திலே இசையுடன் பாடி அபிநயத்துடன் விண்ணப்பம் செய்தார். பத்தாம் திருநாளில் நான்மறைகளை ஓதியவுடன் இரவில் திருவாய்மொழியை விண்ணப்பித்து ஆழ்வார் முன்புநின்று மதுரகவிகள் தலைக்கட்டினார். மதுரகவிகளே திருவாய் மொழி விண்ணப்பம் செய்பவராக இருந்து அம்மரபினைத் தோற்றுவித்தார்.

**நாதமுனிகளும் பகற்பத்துவிழாவும்**

திருமங்கையாழ்வாரால் தோற்றுவிக்கப்பட்ட திருவாய்மொழித் திருநாள் காலப்போக்கில் நின்றுவிட்டது. திவ்வியப் பிரபந்தப் பாசுரங்கள் கற்பாரின்றி மறையத்தொடங்கின. அதற்கான காரணங்கள் முழுவதும் தெளிவாகத் தெரியவில்லை. குருபரம்பரை நூல்களின் மூலம் ஒரு காரணம் அறியப்படுகிறது. அக்காலப் பகுதியில் வாழ்ந்த மக்களிடையே ஆழ்வார் பாசுரங்கள் கொல்லும் பாட்டுக்கள் என்ற தீயபிரச்சாரம் ஏற்பட்டிருந்தது. ஆழ்வார் பாசுரங்களை ஓதியவுடனேயே மோட்சம் கிடைத்துவிடும், அதனால் உடனே மரணமும் நிகழ்ந்துவிடும் என்று நம்பத் தொடங்கினர். பன்னீராயிரப்படி குருபரம்பராப் பிரபாவம் என்ற நூலில்,

**ஆழ்வார்கள் தன்னுடைச் சோதிக்கு எழுந்தருளியபிறகு**
**சில பிராம்மணர்கள் கலி விசேடத்தால் அருளிச்**
**செயல்கள் மேல் கொல்லும் பாட்டு என்று தோஷங்**
**கூறி அவற்றை நெருப்பிலிட்டு உருவழிக்கத் தலைப்பட்டனர்.**

என்ற செய்தி கூறப்பட்டிருக்கிறது.

ஆழ்வார் பாசுரங்களில் பலன்கூறும் இடங்களில்

*தெருள்கொள்ளச் சொன்ன ஓராயிரத்துள் இப்பத்து*
*அருளுடையவன் தாள் அணைவிக்கும் முடித்தே*

(திருவாய் 2-10-11)

என்று வரும் பாசுரத்தைக் காட்டி அச்சமூட்டினர். நிலவுலகில் நெடிதுவாழ முடியாதோ என்று வைண சாமானிய மக்கள் மருட்கை அடைந்தனர்.

*மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான்* (திருவாய் 9-10-5)

என்ற பாடல்வரியில் பழையபாடம் மரணமாக்கி என்று இருந்ததாகவும் அதுவே மரணமானால் என்று பிறகு திருத்தப்பட்டதாகவும் பிரசாரம் செய்யப்பட்டது.

வேறு ஒரு வகையாலும் வைதிகர்கள் ஆழ்வார் பாசுரங்களுக்குக் குறை கற்பித்தனர். சாஸ்திரங்களில் புருஷார்த்தமாகச் சொல்லப்பட்ட கைவல்யத்தை ஆழ்வார் இகழ்ந்திருப்பதைச் சுட்டிக்காட்டினர். கைவல்யம் என்பது இழிவானதோர் மோட்சம் என்பது

கொண்டு அவ்வாறு ஆழ்வார்கள் இகழ்ந்ததை அவர்கள் உணர்ந்து கொள்ளவில்லை.

**கைவல்ய விளக்கம்**

உடல் தொடர்பை அறவே விட்டு ஆன்மா தன்னையே இனிமையாகக் கொண்டு நுகருகையாகிற மோட்சத்தைக் கைவல்லியம் என்று சாஸ்திரங்கள் பகருகின்றன. ஆத்மாநுபவம் என்று இதனையே கூறுவர். ஆழ்வார் பாடல்களுக்கு வியாக்கியானங்கள் வரையப்படாத காலம் அது. எனவே, திராவிட வேதமாகிற அருட்பாசுரங்களில் பொதிந்து கிடக்கும் ஆழ்வார்களின் உட்கிடையை உணராத அறிவுக் குறைவாளர் அப்பாடல்களுக்கு எதிர்ப்புத் தெரிவித்தனர். வியாக்கியானங்கள் தோன்றிய பிறகே ஆழ்பொருள்கள் வெளிப்படத் தொடங்கின.

ஒரு நாயகமாய் (4-1) என்ற திருவாய் மொழிப்பதிகத்தில் நிலையாமைகளை ஆழ்வார் அறிவுறுத்துகிறார். ஒன்பது பாடல்களில் செல்வம் நிலையாமை, யாக்கை நிலையாமைகளைப் பரக்க மூதலித்தார். பதினோராம் பாடலில் பலனைக் கூறினார். இவையாவும் இனியசொற்களால் இயன்று பொருள்காண எளியனவாய்க் கிடக்கின்றன. ஆனால் பத்தாம் பாடலில் சொற்கள் எளியனவாய்க் கிடப்பினும் பொருள் அறிதற்கு அரியாதாயுள்ளது. அப்பாடல் வருமாறு

*குறுக மிக உணர்வத்தொடு நோக்கி எல்லாம் விட்ட*
*இறுகல் இறப்பென்னும் ஞானிக்கும் அப்பயனில்லையேல்*
*சிறுக நினைவதோர் பாசமுண்டாம் பின்னும் வீடில்லை*
*மறுகலில் ஈசனைப் பற்றி விடாவிடில் வீடஃதே*

(திருவாய் 4-1 10)

இப்பாடலுக்கு நம்பிள்ளையின் வியாக்கியானம் இல்லையாயின் பொருள் கூறுவது அரிதாகும். சாஸ்திரங்கள் கூறும் கைவல்லிய மோட்சத்தை ஏன் ஆழ்வார்கள் இழிவாகக் கருதினர் என்பது விளங்கும்.

இப்பாடலில் கைவல்ய மோட்சத்தை ஆழ்வார் "இறுகல், இறப்பு" என்று குறிப்பிடுகிறார்.

மனத்தை ஆன்மாவோடு ஒன்றாக்கி ஆன்மாவைக் காண்பவர்கள் இறுதியில் உடலை உதறிக் களைந்து ஆன்ம ரூபமான நிலையில் மட்டுமே இருந்து ஆன்மாநுபவம் செய்வார்கள். இதுவே கேவல மோட்சம் எனப்படும். உடலை அறவே உதறி ஆன்மா மட்டுமாயிருத்தலை இறுகல் என்றும் மோட்சம் என்பதை இறப்பு என்றும் ஆழ்வார் தமிழ்ப்படுத்தியுள்ளார். இந்நிலையில் இறை அனுபவம் என்ற உயர்ந்த பேரின்பம் அவர்களுக்கு இல்லையாகிவிடுகிறது. இறையனுபவத்தை நோக்க, ஆத்மானுபவம் மிகவும் அற்பமானதாகும். ஆத்மானுபவமே கைவல்லியானுபவம். இதிலிருந்து அவர்கள் மீண்டு இறையனுபவம்

ஆகிற மோட்சத்தைப் பெறுவது இயலாது. கைவல்யமோட்சத்திற்கு ஸ்தானம் விரஜையாறு தாண்டிப் பரமபதத்தின் ஏதோ ஒரு பகுதியாகும். அவர்கள் பேராவியற்கையான நிலையிலிருந்து மீண்டும் கர்மயோகாதி உபாயங்களை இயற்ற இந்நிலவுலகிற்கும் வரவியலாது ; இறையனுபவத்தை இழந்தே போகின்றனர். அதனால் அந்த ஸ்தானத்தை ஏடுநிலம் என்று பெரியாழ்வார் திருப்பல்லாண்டில் குறிப்பிடுகிறார். ஏடு என்றால் பொல்லாங்கு என்று பொருள்படும்.

*ஏடுநிலத்திலிடுவதன் முன்னம் வந்து எங்கள் குழாம்புகுந்து*
*கூடுமனமுடையீர்கள் வரம்பொழிவந்து ஒல்லைக்கூடுமினோ*

என்று கைவல்யாநுபவத்தை விரும்பி முயல்கின்றவர்களைக் குறித்துப் பெரியாழ்வார் அறிவுரை கூறுகிறார்.

கேவல மோட்சத்தைப் பெறவிரும்புகின்றவர்க்கும் அவித்யைகள் என்ற மயர்வு ஏற்படும். மேலும் அவர்களுக்கு உடலை விட்டு உயிர்நீங்கும் காலத்து இறைவனைப் பற்றிய நினைவு கூடப்பெறவேண்டும். இல்லையானால் அந்தக் கேவல மோட்சமாகிற ஆன்மாநுபவமும் இல்லையாகிவிடும். இத்தனை அரியதும் கீழ்ப்பட்டதுமாகிய ஆன்மாநுபவத்தை விட்டு இறையின்பமாகிய உயர்ந்த அனுபவத்தைப் பெறமுயல்க என்று ஆழ்வார் "ஒரு நாயகமாய் "எ திருவாய்மொழிப் பதிகத்தில் அறிவுரை கூறுகிறார்.

மேலும் அக்காலத்து வைதிகர்கள் பல தெய்வழிபாடுகளை மேற்கொண்டொழுகினர். நாராயணனே பரம்பொருள் என்று அறிந்து வைத்தும் அவர்கள் பிற கடவுளரையும் பல்வேறு உலகியற் பலன்களைக் கருதி வழிபட்டனர். ஆழ்வார்கள் மறந்தும் புறம்தொழாமையை வலியுறுத்தினர். வைதிகரில் ஒரு பகுதியினர்க்கு அக்கருத்தில் மனம் ஒப்பவில்லை. அதனால் ஆழ்வார் பாசுரங்களுக்குக் குறைகளை ஏறிட்டு அவை அழிவதற்கும் காரணமாயிருந்தனர். அவர்களின் வாதங்களை நாதமுனிகள் தொடங்கி வழிவழிவந்த வைணவ ஆசாரியப் பெருமக்கள் மறுத்து ஆழ்வார் பாசுரங்கள் திவ்யப் பிரபந்தங்கள் என்று நிரூபித்து நிலைநாட்டினர்.

நாதமுனிகள் காலத்தில் சோழப் பேரரசு தலை நிமிர்ந்து ஆட்சி செய்தது. இலக்கியங்கள் தோன்றின ; காப்பியங்கள் மலர்ந்தன. அக்காலப் பகுதியே ஒரு கவிச் சக்கரவர்த்தியைத் தோற்றுவித்தது. கம்பர் தமது இராமகாதையைத் திருவரங்கத்தில் அரங்கேற்றினார். அதற்குப் பெரிதும் உறுதுணையாயிருந்தவர் நாதமுனிகள். கி.பி.885 ஆம் ஆண்டு கம்பராமாயணம் நாதமுனிகள் முன்னிலையில் நம்பெருமாள் ஸ்ரீரங்கநாச்சியார் திருமுன்பு ஒரு பங்குனி உத்தரத்தில் அரங்கேறியது. அப்போது கம்பரும் தமக்கு அருள் செய்த காரிமாறப்பிரான் கழலிணைகளைத் துதித்துச் சடகோபரந்தாதி பாடி நாதமுனிகளையும்

நம்பெருமாளையும் மகிழ்வித்தார், இந்நிகழ்ச்சியைப் பிள்ளை லோகஞ்சீயர் என்ற பெரியார் தாம் எழுதிய உபதேச ரத்தின மாலை வியாக்கியானத்தில் தெளிவாகக் குறிப்பிட்டிருக்கிறார். "நம்பெருமாள்" என்று தொடங்கும் பாடலின் பேருரையைக் காண்க.

நாதமுனிகள் காலத்தில் பகற்பத்து இராப்பத்து விழாக்கள் சிறப்புடன் நடைபெற்றன. அவற்றில் நாதமுனிகளுடன் கவிச்சக்கரவர்த்தி கலந்து கொண்டிருந்தார் என்பதற்கு சடகோபரந்தாதியில் குறிப்புகள் உள்ளன.

**அரையர் கலை**

திருவாய்மொழி வியாக்கியானங்களில் உரைவிளக்கமாகப் பயன்படும் பல கலைக்குறிப்புகள் பொதிந்துள்ளன. அவற்றில் அரையர் கலை பற்றிய அரிய செய்திகள் ஈண்டு ஆய்வுசெய்யப்படுகின்றன.

**விண்ணப்பம் செய்வார்கள்**

சோழப்பேரரசில் இசை நாடகக் கலைகள் மன்னர்களின் ஆதரவோடு சமயக்கருத்துக்களின் வெளிப்பாடாகவே வளர்ந்து முழுமை நிலையை எய்தின. திருமால் திருக்கோயில்களில் நம்மாழ்வார் அருளிச் செய்த திருவாய்மொழி இறைவன் திருவோலக்கத்தில் இசையுடன் ஓதப்பட்டது. தமிழ்ப்பண்ணிசையில் வல்லுநராய்த் திருவாய்மொழியை இசைத்தவர்கள், "திருவாய்மொழி விண்ணப்பஞ் செய்வார்" என்று கௌரவித்து அழைக்கப்பட்டனர். மதுரகவியாழ்வாரே திருவரங்கத்தில் பெரிய பெருமாள் திருமுன்பாகத் திருவாய்மொழியை இசையுடன் விண்ணப்பித்துத் "திருவாய்மொழி விண்ணப்பஞ் செய்வார் ". என்ற விருதினை முதன்முதலில் திருவரங்கரால் வழங்கப்பெற்றார் என்று கோயில் ஒழுகுவாயிலாக அறியப்படுகிறது. இவ்விருதுப் பெயர் நம்மாழ்வாரின் திருவிருத்தத்தில் "அடியேன் செய்யும் விண்ணப்பமே" என்ற தொடரிலிருந்து உருவாக்கப்பட்டிருக்கலாம்.மதுரகவியாழ்வாருக்குப் பிறகு நாதமுனிகளும் (கி.பி.832-917) அவர்தம் மருமக்கள் வழியினரும் திருவாய்மொழி விண்ணப்பஞ் செய்வார்களாகத் திருவரங்கம் திருக்கோயிலில் தொடர்ந்து பணியாற்றிவந்தார்கள். இவ்வகைத் தொண்டும் இடையறாது நிகழ மன்னர்கள் அவ்வக் காலத்தே நிபந்தங்களும் பொறக்கழஞ்சுகளும் வழங்கிவந்தார்கள். முதலாம் குலோத்துங்க சோழன் (கி.பி. 1070-1120) தன் பதினைந்தாம் ஆட்சியாண்டில் திருவரங்கம் பெரிய கோயிலில் திருவாய்மொழி விண்ணப்பஞ் செய்ய ஐம்பது பொற்காசுகள் வழங்கியிருக்கிறான். அக்கோயிலில் விண்ணப்பஞ் செய்வார்கள் எண்ணிக்கையிற் பலராயிருத்தனர். இவர்கள் திருவாய்மொழிமட்டுமன்றி மற்றைய பிரபந்தங்களையும் இசையுடன் விண்ணப்பித்து வந்தனர். பெரிய திருநாளின் இறுதியில் தீர்த்த வாரியன்று தொண்டரடிப்பொடிஆழ்வாரின் திருமாலை இசையுடன் ஓதப்பட்டுவந்தது,. திருமொழித் திருநாளில்

ஒருநாள் குலசேகராழ்வாரின் பெருமாள் திருமொழி இசையுடன் அபிநயிக்கப்பட்டிருக்கிறது.

**திருவத்யயனம்**

இசை, நாடகம், அபிநயங்கள் ஒருங்கிணைந்து முத்தமிழ்க் கலையாகத் திவ்வியப்பிரபந்தங்களை விண்ணப்பிக்கும் முறை ஒரு திருவிழாவாகத் தோன்றி வளர்ந்து முழுமை எய்தியது .திருவரங்கத்திலே தான். இங்கிருந்து தான் இவ்விழா தமிழகத்தின் பிற கோயில்களுக்கும் பரவியிருக்கிறது. ஒவ்வோறாண்டிலும் மார்கழி மாதத்தில் இருபது தினங்களில் இத்திருவிழா நடைபெறுகிறது. இவ்விருபது நாள் உற்சவத்தை "திருவத்யயனம்" என்று நம்பிள்ளை குறிப்பிடுகிறார். திருவத்யயன உற்சவம் பகற்பத்து என்றும் இராப்பத்து என்றும் இரு பிரிவுகளாகக் கொண்டாடப்படுகிறது. அவற்றுள் இராப்பத்து உற்சவமே முதலில் திருமங்கையாழ்வாரால் தொடங்கப்பட்டுத் "திருவாய்மொழித் திருநாள்" என்று பெயரிடப்பட்டது. பகற்பத்து உற்சவம் நாதமுனிகளால் தொடங்கப்பட்டுத் "திருமொழித் திருநாள்" என்று பெயரிடப்பட்டது. இவ்விரு திருநாளிலும் பங்கு கொண்ட அரையர்களைப் பற்றியும் சுவையான செய்திகளை நம்பிள்ளை தம் பேருரையில் ஆங்காங்கே குறிப்பிட்டிருக்கிறார். திருவாய்மொழியாகிய மூலநூலில் முத்தமிழ் பற்றிய குறிப்புகள் வருவன உளவேனும் முத்தமிழும் ஒருங்கிணைந்த திருவத்யயனம் பற்றிய செய்தி யாண்டுமில்லை. இருத்தற்குக் காரணமுமில்லை. ஆயினும் உரை நூலாகிய நம்பிள்ளை ஈட்டில் திருவத்யயனம் பற்றிய செய்திகளை ஐதிஹ்யங்கள் வாயிலாகத் தொகுக்க முடிகிறது. இச்செய்திகளின் மூலம் திருவத்தியனத்திற் பாடிய அரையர்களின் அபிநயத்திறன், ஆழ்ந்த புலமைத்திறன் இன்னோரன்ன அரிய செய்திகள் பலவற்றையும் ஐதிஹ்யங்களைக் கொண்டு நம்பிள்ளை உரையிடையிட்டதால் ஆராய்ச்சியாளர்களுக்கு அவ்வுரை நூல் அரிய பெட்டகமாக விளங்குகிறது.

**அரையர்கள்**

திருவத்யயன உற்சவத்தில் .ஆழ்வார் பாசுரங்களை இசையுடனும் அபிநயத்துடனும் விண்ணப்பித்தவர்கள் அரையர்கள் என்றும் அழைக்கப்பட்டனர். அரையர் என்பது அரசர் என்ற சொல்லின் போலியாகும். அரசர்களே அரையர்கள் என்றும் வழங்கப்பட்டனர். பெரியாழ்வாரும் சக்கரவர்த்தி திருமகனான இராமனை "எரிசிதறும் சரத்தால் இலங்கையினைத் தன்னுடைய வரிசிலைவாயிற்பெய்து வாய்க் கோட்டம் தவிர்ந்துகந்த அரையன்" என்று குறிப்பிடுகிறார். அகளங்க நாட்டாழ்வான் என்ற விக்கிரம சோழனை அரையன் என்று நம்பிள்ளைதாமும் குறித்திருக்கிறார். ஆயின் விண்ணபஞ் செய்வார்களையும் அரையர்கள் என்றே சிறப்பித்ததற்குக் காரணத்தைக் கோயிலொழுகுமூலமே அறிகிறோம். திருவாய் மொழியிசையில் நிகரற்ற தேர்ச்சி பெற்று விளங்கிய தலைமை தோற்றவே அரையர்கள் என்று

திருவரங்கரால் பாராட்டப்பெற்றனர். அத்தலைமை தோற்றவே தலையில் மகுடமாகப் பட்டுக் குல்லாய் அணிந்து கொள்ளும் உரிமையும் வழங்கப்பெற்றனர். திருவாய்மொழி விண்ணப்பஞ் செய்வார்களைக் குறிப்பிடும் போதெல்லாம் நம்பிள்ளை அவர்தம் இயற் பெயரையோ ஊர்ப்பெயரையோ அடுத்து அரையர் என்று சிறப்பித்து வழங்கத் தவறுவதில்லை. அரையர் எண்மர் ஈடு உரையில் இடம் பெறுகின்றனர்.

**இசைகாரர்**

இசைக் கலையில் விரகராய்த் திகழ்ந்த அரையர்களை இசைகாரர் என்றும் இராமாநுசர் காலத்து வழங்கியிருக்கின்றனர். நம்மாழ்வார் வளவேழுலகின் இறுதிப் பாசுரத்தில் திருவாய்மொழியைப் பரவுகின்றவர்கள் மூவகையினர் என்று மொழிகிறார்.

*பாலேய் தமிழர் இசைகாரர் பத்தர் பரவும் ஆயிரத்தின்*
*பாலே பட்ட இவை பத்தும்.............*

என்று வரும் அப்பாடற்பகுதியில் பாலேய்தமிழர்களும் இசைகாரர்களும் பத்தர்களும் திருவாய்மொழியைப் பரவுவார் என்று அறியப்படுகிறது. அவருள் இசைகாரர் என்பார் தமிழ்ப் பண்ணிசையைத் தாமிட்டவழக்காகப் பெற்றவராவர். இச்சொல்லின் பொருள் நுட்பத்தை யுணர்ந்த கூரத்தாழ்வான் ஆழ்வார் திருவரங்கப் பெருமாள் அரையரை இசைகாரர் என்று அழைத்துக் கௌரவித்தாராம். இவ்வரிய செய்தி நம்பிள்ளை உபகரித்தது. இசையறியும் கூட்டத்தார் என்ற சொல் வழக்குண்மையும் கோயில் ஒழுகால் அறியக்கிடக்கிறது .

**இசை - தாளம் - நடிப்பு**

அரையர்கள் இனிய மிடற்றோசையையே பெருஞ்செல்வமாகக் கருதினர். தேவப்பெருமாள் அரையர் என்பவர் இனிய குரல் வளத்தைப் பெற்று மற்றவர்களால் பாராட்டப்பெற்றிருக்கிறார். அரையர்கள் பாசுரங்களை இசைக்கும்போது கைகளில் தாளங்களை ஏந்தி ஒலித்தனர். ஆப்பான் திருவழுந்தூர் அரையர் அங்ஙனம் "வந்தருளி" என்ற பாசுரத்தைத் தாளவோசையுடன் நெடும்போது இசைத்ததை நம்பிள்ளை ஒரு பாடலுரையில் குறிப்பிடுவர். இசை தப்பாதிருக்கத் தாளத்தைக் கருவியாகப் பயன்படுத்திய அரையர்கள் வேறு இசைக் கருவிகளைப் பயன்படுத்தியதாகத் தெரியவில்லை. பாசுரங்களின் பொருளைக் கேட்பார் மனத்தில் தைக்கவல்லது நடிப்பாகும். இந்நடிப்புக் கலையிலும் அரையர்கள் முழுத் தேர்ச்சி அடைந்திருந்தனர். பரதக் கலையிற் குறிப்பிடப்படும் முத்திரைகளை நன்கு அறிந்திருந்தனர். இறைவனது திருவோலக்கத்திற் பாடியாடி மகிழ்வித்ததோடு அமையாது இறைவன் திருவுலா எழுந்தருளும் போதும் நடையழகுக்கு ஈடாக அரையர்கள் ஆடிவந்தனர். என்றும் நம்பிள்ளை பேருரையால் அறிகிறோம். கோயிலொழுகுக் குறிப்பு ஒன்றும் இச்செய்திக்குச் சான்று பகருகின்றது.

**இசையால் ஏத்துதல்**

திருவரங்கராகிய இறைவன் முன்னின்று அவனுடைய குணநலங்களை அடுக்கிய தொடர்மொழிகளால் இசையிலே ஏறிட்டு ஏத்தி மகிழ்விப்பதும் அரையர்களின் பணியாகும். இப்பணியைத்தான் "கொண்டாட்டம்" என்று குறிப்பிடுகிறார்கள். அரையர்களின் இன்னிசை ஏத்து மொழிகளுக்கு இறைவன் வசப்பட்டான் என்றும் இச்செயல் மதயானையொன்றை இசையால் ஏத்தி வணக்குவதோடு ஒக்கும் என்றும் நம்பிள்ளை விவரிக்கிறார். யானைகளை இசைகொண்டு வணக்குவது என்பது சங்கநூல்களில் காணப்படுகின்றன. நம்பிள்ளை காலத்து இது நடைமுறையில் இருந்திருக்க வேண்டும்.

**மனவுருக்கம்**

ஆழ்வார் பாசுரங்களை இசையோடு பாடும்போது சில போது அரையர்கள் பாடற்பொருளில் ஆழ்ந்து நெஞ்சுருகிக் கண்பனிப்ப நின்று மேற்பாடல்களைத் தொடரமுடியாமல் விம்மல் பொருமலாய்க் குறையோடே தலைக்கட்டிவிடுவதுண்டு. அத்தகைய சந்தர்ப்பங்களில் சிலவற்றை நம்பிள்ளை நல்விருந்தாக நமக்கு அளித்திருக்கிறார்.

ஆழ்வார் திருவரங்கப் பெருமாள் அரையர் "ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா வடிமைசெய்ய வேண்டும் நாம் " என்ற பாடலையிசைக்கும் போதெல்லாம் ஒழிவில் காலமெல்லாம் என்ற தொடரையே நெடும்போது பாடி மேல் போகமாட்டாதே அவ்வளவிலேயே தலைக்கட்டிப் போவாராம். நம்மாழ்வார் எம்பெருமானுக்குச் செய்யப்பாரிக்கும் தொண்டின் நீட்சியை நினைத்துப் பார்த்த அரையர் மனமுருகிவிட்டார் என்க.

பிள்ளை திருநறையூர் அரையர் திருவாய்மொழியை அனுபவிக்கத் தொடங்கும் போதே ஆழங்காற்பட்டு மனமுருகிக் கண்ணீர் மல்கிநிற்பாராம். இந்நிலையை நஞ்சீயர் கண்டு வியந்து தம் சீடரான நம்பிள்ளையிடம் பிற்காலத்தில் கூறி மகிழ்ந்திருக்கிறார். பாராங்குச நாயகி தனிப்போக்கிலே ஒருப்பட்டு உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன் எம்பெருமான் என்றென்றே கண்கள் நீர் மல்கி நள்ளிரவில் திருக்கோளூர் புக்காள் என்று திருத்தாயார் வருந்தினாள். பாராங்குச நாயகி கண்கள் நீர் மல்கி நின்றதை அரையரின் மனவுருக்கம் நஞ்சீயருக்கு நினைப்பூட்டியபடியால் அது அவருடைய நெஞ்சில் நீங்காமற் பதிந்துவிட்டது.

**பரந்தமனம்**

சிறந்த கலைஞர்கள் பிறரிடம் கலைத்திறங்காணின் அழுக்காறின்றிப் பாராட்டுவார்கள். ஆற்றுப்படை நூல்களில் இத்தகைய அருங்கலையுள்ளத்தைக் காணலாம். சங்க காலக் கலைப்பண்பாடு அரையர்களிடம் இயல்பாக அமைந்திருந்தது. ஆழ்வார் திருவரங்கப்

பெருமாள் அரையர் வடதேசத்திலிருந்து தென்திருவரங்கம் போந்த ஓரிசைக்கலைஞரை மொழிமாறு தேசமாறு காணாது பெரிதும் பாராட்டி இறைவன் திருமுன்னர் இட்டுச் சென்று பரிசில் வழங்கிச் சிறப்பித்தார்.

**பயன் கருதாத் தொண்டு**

அரையர்கள் ஒரு போதும் இசை விலை வணிகராயிருந்திலர். இசையைக் காட்டி இறைவனை வசமாக்கிக் குடும்ப நலன்களான உலகியற் பொருள்களை ஒரு நாளும் இரந்திலர். இசைபாடி இறைத்தொண்டு புரிவதையே பெரும் பயனாகக் கொண்டிருந்தனர். பிள்ளை தேவப் பெருமாள் அரையர் ஒரு கால் இராப்பத்தன்று திருவாய்மொழியில் "உன் தாமரைக் கண்களால் நோக்காய்" என்ற பாசுரப் பகுதியைப் பலகாலும் சொல்ல அருகிருந்த திருவரங்கப் பெருமாள் அரையர் எழுந்திருந்து, "பிள்ளாய், நீ இங்ஙனே திருவுள்ளம் புண்படும்படி பலகாலும் நிர்ப்பந்திக்கிறதென்? அழகிய மிடற்றைத் தந்தாராகில் நல்ல பாட்டைத் தந்தாராகில் பிள்ளைகளையும் செல்வத்தையும் தந்தாராகில் என் செய்யாதாராக நீர் இங்ஙனே கிடந்துபடுகிறது.? " என்றருளிச் செய்தாராம். பயன்கருதாத சேவையே பின்பற்றத்தக்கது என்று திருவரங்கப்பெருமாள் அரையர் மற்றவருக்கு அறிவுறுத்தித் திருத்தினார். என்று தெரிகிறது.

**உலகியலறிவு**

ஆழ்வார்களின் அருளிச் செயல்களை இசைப்பதே பொழுதுபோக்காகக் கொண்டாலும் அரையர்கள் தம்மைச் சுற்றுமுள்ள அன்றாட வாழ்க்கையையும் உலகினரின் இயல்புகளையும் உயிரினங்களில் வாழ்வியல்புகளையும் உற்று நோக்கி அவ்வறிவு கொண்டு பிறருக்கு நல்லறங்களை விளக்கினார்கள் என்று நம்பிள்ளை பேருரையால் அறிந்து கொள்கிறோம்.

*ஒரு குருவி பிணைத்த பிணை ஒருவரால் அவிழ்க்கப் போகிறதில்லை.*
*சர்வ சக்தி கர்மாநுகுணமாகப் பிணைத்த பிணையை அவனையே காலக்கட்டி அவிழ்த்துக் கொள்ளுமித்தனை காண்.*

என்று பிள்ளை திருநறையூர் அரையர் அடிக்கடி கூறுவராம். இவ்வார்த்தையின் இன்சுவையறிந்த நம்பிள்ளை இதனை இரண்டிடங்களில் காட்டியிருக்கிறார். மேலும், உலகினரின் இயல்பறிந்து பாசுரங்களுக்குப் பொருள் நிறுவுவதிலும் பிள்ளை திருநறையூர் அரையர் வல்லவராயிருந்தார்.

*பொருள் கையுண்டாய்ச் செல்லக் காணில்*
*போற்றியென்று ஏற்றெழுவர்*
*இருள்கொள் துன்பத்தின்மை காணில்*
*என்னே என்பாருமில்லை.*

என்று நம்மாழ்வார் உலகினர் இயல்பை ஒரு பாசுரத்தில் நயம்பட மொழிகிறார். இங்கு என்னே என்பதை ஐயோ! என்னும் இரக்கக் குறிப்பாகக் கொண்டு ஒரு பொருளாட்சி ஏற்பட்டது. பிள்ளை திருநறையூர் அரையரோ என்னே என்பதை வினாக்குறிப்பாகக் கொண்டு பொருள் விரிப்பாராம். அவ்விரிவில் உலகியல்பை எளிதாகக் காட்டுகிறார்.

"அவனாலே ஸம்ருத்தனானவன் இவனை என்னே என்னுதல் , இவன் க்ருஹத்திலே வந்தொருநாள் கால் கழுவிப் போதல் செய்ய, அவ்வளவிலே இன்னான் இன்னானுக்கு பந்துவாகாதே என்று இவ்வளவு கொண்டு ஜீவித்தலாயிருந்தால் அவ்வளவும் செய்வாரில்லை " என்று பணிப்பராம்.

**ஆசாரியர் நிலை**

வடமொழி வேதங்களை நன்கு ஓதிய பரமவைதிகர்களான அரையர்கள் ஆழ்வார் பாசுரங்களைப் பயின்று பாடிவந்தனர். வேதத்தினும் மிக்கதாக அருளிச் செயல்களைப் போற்றினர். அதனால் ஆழ்வார்கள் பாடல்களுக்கு வைதிக பரிக்கிரஹம் ஏற்பட்டு மேன்மை பிறந்தது. இத்தகைய ஒரு நிலை வைணவத்தின் தனிப்பெருஞ்சிறப்பாகும். அரையர்கள் பொதுவாக நாதமுனிகளின் வழியினராதலால் ஆசாரிய பீடத்தை அணி செய்யும் தகுதியும் இயல்பாக அமையப் பெற்றனர். வைணவ சமயத்தின் ஒப்பற்ற பெருந்தலைவராய்த் திகழ்ந்த இராமாநுசர் ஆழ்வார் திருவரங்கப் பெருமாள் அரையரைத் தம் ஆசாரியருள் ஒருவராகக் கொண்டு அவரிடம் சரமோபாயத்தைக் கேட்டறிந்தார். அரையர் திருவத்யயனத்தில் ஆடிய களைப்புத்தீர அவருக்கு மஞ்சட்காப்பிட்டு நீராட்டிப் பணிவிடையும் இராமாநுசர் செய்திருக்கிறார். பிள்ளை திருநறையூர் அரையரை ஆசாரியராகக் கொண்டு அவரிடம் நஞ்சீயர் திருவாய்மொழி கேட்டறிந்தார் என்று நம்பிள்ளை குறிப்பிட்டிருக்கிறார்.

**அரையர்கலை வளர்த்த ஆசாரியர்கள்**

நாதமுனிகளும் அவருடைய திருப்பேரனாராகிய ஆளவந்தாரும் இராமாநுசரும் அவருடைய சீடராகிய எம்பாரும் அரையர் கலையில் திருத்தங்கள் செய்து வளர்த்து வந்ததாக நம்பிள்ளையுரையிலிருந்து நன்கு அறிய முடிகிறது. அக்கலையை ஆளவந்தார் இராமானுசர் எம்பார் ஆகியோர் ஆதரித்ததை முறையாகக் காண்போம்.

**ஆளவந்தார்**

இவர் துறவு நெறியைத் தழுவித் திருவரங்கம் திருப்பதியே இருப்பாகக் கொண்டார். திருவரங்கத்தில் வைணவ ஆசாரிய பீடத்தை அணிசெய்த ஆளவந்தார் தம் திருக்குமாரரான திருவரங்கப் பெருமாள் அரையரை விண்ணப்பஞ் செய்வாராக ஈடுபடுத்தினார். அவரும்

இளமையிலேயே நாடகக் கலையில் தேர்ச்சியுற்றுத் திருவத்யயனோற்சவங்களில் திருமால் அவதாரங்களிற் செய்தருளின செயல்களை நாடகமாகத் திருக்கோலம் புனைந்து அபிநயித்து மிகவும் உகப்பிக்கப் பெருமாளும் போரவுகந்தருளி "கோயிலுடைய பெருமாள் அரையர்" என்று திருநாமம் சாற்றி சகல வரிசைகளையும் வழங்கினார் என்று கோயிலொழுகு வருணிக்கிறது. திருக்குமாரரான அரையரின் ஆடல் பாடல்களைக் கண்டும் கேட்டும் மகிழ்ந்து ஆளவந்தார் ஊக்கமளித்துப் பாராட்டி வந்தார். ஒருமுறை திருவாய்மொழித் திருநாளில் திருவரங்கப் பெருமாள் அரையர் "கடுவினை களையலாகும்" என்ற பாசுரத்தை மிகவுருக்கமாக ஆளவந்தாரை நோக்கிப் பாடினார். அப்பாசுரத்தின் ஈற்றடியான,

*படமுடை யரவில்பள்ளி பயின்றவன் பாதம்காண*
*நடமினோ நமர்கள்உள்ளீர் நாம்உமக் கறியச் சொன்னோம்*

என்பனவற்றைக் கேட்டதும் ஆளவந்தார் நமக்கு ஆழ்வாரோடே ஒரு உறவு உண்டாக வேணும். என்று அப்போதே தம் சீடர்களான முதலிகளுடன் திருவனந்தபுரம் பயணப்பட்டாராம். அரையரின் இசையினை உற்றுக் கேட்டவுடன் ஆழ்வாரின் குறிப்பு பளிச்செனப்பட்டுச் சடக்கெனத் திருவனந்தபுரம் புறப்பட்டார் என்று தெரிகிறது.

இராமாநுசர்

இவர் அரையர் கலையைப் பேரார்வத்துடன் ஆதரித்துப் புரந்துவந்தார். திருவத்யயன உற்சவத்தில் ஆர்வத்துடன் ஈடுபட்டு அரையரின் அபிநயங்களில் ஏற்ற திருத்தங்களையும் செய்துவந்தார். இராமாநுசரின் முத்தமிழ்ப் புலமை இதற்குப் பயன்பட்டிருக்கவேண்டும். இராமாநுசர் திருத்திக் காட்டிய அபிநயம் ஒன்றை நம்பிள்ளை எடுத்துக் காட்டியிருக்கிறார்.

"அன்னையென் செய்யிலென்" என்ற பாசுரத்தைத் திருவரங்கப் பெருமாள் அரையர் அபிநயித்துக் காட்டிவந்தார். மடலேறத்துணிந்த பராங்குச நாயகி காதல் கைமிக்கு "அகப்பட்டேன்... மணிவண்ணன் வாசுதேவன் வலையுளே" என்று அரற்றுவதை அரையர் அபிநயிக்கும் சமயம் வந்தது. அப்போது வலையாகத் தமது மேலாடையை வளைத்துக் காட்டினார் அரையர். அதைக் கண்ணுற்ற இராமாநுசர் வலைக்கு அடையாளமாகத் தமது திருக்கண்களைச் சுட்டிக் காட்டினார். கண்ணை வலையாக உருவகித்த ஆழ்வார் பாசுரங்களை இராமாநுசர் நீடு நினைந்து செய்த திருத்தத்தை அரையர் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டார்.

**எம்பார்**

இவர் தமிழிலக்கிய இலக்கணங்களிலே விரகர். இசையில் மிக்க ஈடுபாடுடையவர். இவரும் அத்யயனோற்சவங்களில் தம் ஆசிரியரான இராமாநுசருடன் அமர்ந்து அபிநயங்களில் பொருத்தமான திருத்தங்கள் சில செய்து காட்டினார். அவற்றுள் ஒன்றை நம்பிள்ளை "போகுநம்பி" என்ற பாசுரத்தின் அவதாரிகையில் விரிவாகக் குறிப்பிட்டிருக்கிறார்.

உய்ந்தபிள்ளை அரையர் குலசேகராழ்வாருடைய பெருமாள் திருமொழியில் "இன்னம் என் கையகத்து ஈங்கொருநாள் வருதியேல் என் சினம் தீர்வன் நானே" என்ற பாடலுக்கு அபிநயம் பிடித்தார்.

கண்ணபிரான் மீது ஆய்ச்சி ஒருத்தி ஊடிப்பேசும் பாசுரம் அது. கண்ணன் ஒரு நாள் கைவசப்பட்டால் அன்று தன் சினத்தைத் தீர்த்துக் கொள்ளப் போவதாகப் பேசுகிறாள் தலைவி. அதாவது தலைவனான கண்ணன் மனம் வருந்தித் துடிக்கும்படி செய்வதுதான் அவள் சினம் தீர்த்துக் கொள்ளும் வழி. அதைக் கற்பனை செய்து கண்ணனைக் கையாலும் காலாலும் உதைத்துத் துகைப்பதாக அபிநயத்துக் காட்டினார். ஆய்ச்சியின் கையும் காலும் படப்பெற்றால் கண்ணனுக்கு வருத்தமா விளையும்? இன்பமன்றோதுளிர்க்கும்! அவனை வருந்தச் செய்ய வேண்டியதன்றோ ஆய்ச்சியின் உட்கோள். ஆகையால் அரையரின் அபிநயத்தில் பொருத்தமின்மையை உணர்ந்த எம்பார் எழுந்திருந்து தம் முகத்தைத் திருப்பி வைத்துக் காட்டினாராம். தலைவி நெடும்போது முகங்கொடாதிருந்தால் அதுவே தலைவனுக்குத் தக்க தண்டனையாகும். தலைவியின் முகம்பெறவும் உரை பெறவும் தலைவன் அவளடிக்கீழ் வணங்கவும் முற்படுவான். ஊடலில் தலைவன் தோற்பது அகப்பொருள் மரபாகும். இதையெல்லாம் அறிந்திருந்த எம்பார் மெய்யான அபிநயத்தை அரையருக்கு அறிவுறுத்தினார்.

**பொருளாட்சிகள்**

இனி, அரையர்கள் தமிழ்நூல்களிலும் வடமொழி நூல்களிலும் நல்ல பயிற்சி பெற்றிருந்ததால் ஆழ்வார் பாசுரங்களுக்குப் பல இடங்களில் நயமான உரைகளை நிறுவியிருக்கிறார்கள். அவ்வுரை ஆட்சிகளையெல்லாம் நம்பிள்ளை தம் பேருரையில் போற்றியிருக்கிறார். மூன்று அரையர்களின் பொருளாட்சிகள் எட்டு இடங்களில் ஆளப்பட்டிருக்கின்றன.

இவ்வாறு அரையர்களைப் பற்றியும் அரையர்சேவைக் கலை பற்றியும் அரிய குறிப்புகளை நம்பிள்ளையின் பேருரை தருகிறது. இவற்றோடு பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானங்களையும் ஒருசேர ஆராய்கின்றவர்களுக்கு அரையார்களைப் பற்றி இன்னும் விரிவான செய்திகளைத் திரட்டமுடியும்.

# இயல் 15

## வைணவ சமயக் கோட்பாடுகள்

பாரத நாட்டிலுள்ள ஆத்திகர்கள் அனைவருக்கும் நல்வழி காட்டும் முதன்மையான பிரமாணமாயிருப்பது வடமொழியிலுள்ள வேதங்கள். அந்த வேதங்கள் பல பல தேவர்களையும், அவர்களைக்குறித்த வழிபாடுகளான யாகங்களையும், தியானங்களையும் மந்திரங்களையும் ஓதுகின்றன. யஜுர்வேதம் (5-5) தேவதைகளுக்குள் அக்கினியானவன் தனக்குக்கீழ் ஒருவரில்லாதபடி மிகத் தாழ்ந்தவன்; விஷ்ணுவானவர் தமக்கு மேல் ஒருவரில்லாதபடி மிக உயர்ந்தவர். என்று ஓதுகிறது. எல்லா வேதங்களிலும் ஓதப்படும் புருஷஸூக்தம் லக்ஷ்மீநாதனான பரமபுருஷனைப் பரம்பொருளாக ஓதுகிறது. விஷ்ணு ஸூக்தங்கள் இதை வலியுறுத்துகின்றன. கடோபனிஷத், சாந்தோக்ய உபநிஷத், தைத்திரீய நாராயணவல்லி, மஹோபநிஷத், ஸுபாலோபனிஷத், நாராயணோபனிஷத் முதலான பண்டைச் சான்றோர்களால் கையாளப்படும் பல உபநிஷத்துக்களும் இவ்வண்ணமே முழங்குகின்றன. வேதத்தை வடமொழியில் விளக்கவந்த மநு, ஹாரீதம் முதலான ஸ்மிருதிகளிலும் இராமாயணம், மஹாபாரதம் என்னும் இதிகாசங்களிலும், விஷ்ணு புராணம் முதலான புகழ்பெற்ற புராணங்களிலும் விஷ்ணுவே உலகனைத்தையும் படைத்து அளித்து அழிக்கும் பரம்பொருள்; அவனே முக்தியளிக்கவல்ல முகுந்தனாவான் என்னும் கருத்து வலியுறுத்தப்படுகிறது.

தமிழ்நாட்டின் மிகப்பழைய நூல்களான எட்டுத்தொகை. பத்துப்பாட்டு என்னும் சங்கநூல்களிலும், திருமால் எனப்படும் திருவின் கணவனே அனைத்துலகங்களையும் படைத்து அளித்து அழிக்கும் முழு முதல்வன் என்றும், அவனே மறுபிறப்பை அறுத்து வீறுபெறுதுறக்கமாகிற வீடுபேற்றை அளிக்கவல்லவன் என்றும், இச்செய்திகளை முதுமொழியான மறை கூறுகின்றது என்றும் பலவிடங்களில் முழங்கப்படுகிறது. இவற்றிலிருந்து பாரததேசத்தில் வடநாட்டிலும், தென்னாட்டிலும், பண்டைக்காலத்திலிருந்தே விஷ்ணுவைப் பரம்பொருளாகக் கொணட வைணவ மதம் வைதிக மதமாக நிலவிவந்தது என விளங்குகிறது.

பிற்காலத்தில் வேதத்திற்குப் பொருள் கொள்வதில் கருத்து வேறுபாடுகள் விளைந்தமையாலும், ஆகமங்களின் தாக்கத்தாலும் வைதிகமதம் பல பிரிவுகளை உடையதாயிற்று. சமணம், பவுத்தம் முதலான வேதத்தை ஏற்காத மதங்களாலும் வைதிக மதமான வைணவம்

நலிவுற்றது.

இந்நிலையில் தமிழ்நாட்டில் தோன்றி வைணவத்துக்குப் புத்துயிரளித்தவர்கள் ஆழ்வார்கள். இவர்களுடைய நூல்கள் வேதக் கருத்துக்களையே வலியுறுத்தியதால் தமிழ் வேதங்கள் என்றும், திவ்வியப்பிரபந்தம் என்றும் தமிழகமக்களால் போற்றப்பெற்றன.

பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், என்னும் மூவரும் முதலில் தோன்றிய ஆழ்வார்களாகையாலே முதலாழ்வார்கள் என அழைக்கப்பெற்றனர். இவர்கள் திருக்கோவலூரில் ஓர் இடைகழியில் மழைக்காக ஒதுங்கியபோது காட்சியளித்த திருமாலைக்கண்டு ஒவ்வொருவரும் ஒரு திருவந்தாதி பாடினார்கள். நூறு நூறு வெண்பாக்கள் கொண்ட இவை முறையே முதல், இரண்டாம், மூன்றாம் திருவந்தாதிகள் என அழைக்கப் பெறுகின்றன. சாக்கியம் சமணம், சைவம் முதலான பல மதங்களில் புகுந்து தத்துவ ஆராய்ச்சிசெய்து கொண்டிருந்தவரும் (சென்னைக்கு அருகிலுள்ள) திருமழிசையில் அவதரித்தவராகையால் திருமழிசை யாழ்வார் எனப் பிற்காலத்தில் அழைக்கப்பெற்றவருமான ஆழ்வார் பேயாழ்வாரால் வைணவராகத் திருத்தப்பெற்றார். இவர் அருளியவை நான்முகன் திருவந்தாதி (96 பாடல்கள்). திருச்சந்த விருத்தம் (120 பாடல்கள்) என்னும் இரண்டு திவ்வியப்பிரபந்தங்களாகும்.

இந்த முதல் நால்வரான ஆழ்வார்களுக்குப் பின் அவதரித்தவர்கள் நம்மாழ்வார், அவரது சீடரான மதுரகவியாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், அவர் பெற்றெடுத்த பெண்பிள்ளையான ஆண்டாள்,தொண்டரடிப் பொடியாழ்வார் திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார், ஆகியவர்கள்.

இவர்களில் நம்மாழ்வார் நூறு பாடல்கள் கொண்ட திருவிருத்தம், ஏழு பாடல் கொண்ட திருவாசிரியம், எண்பத்தேழு பாடல்கள் கொண்ட பெரிய திருவந்தாதி. ஆயிரத்து நூற்றிரண்டு பாடல்கள் கொண்ட திருவாய்மொழி எனும் நான்கு திவ்யப்பிரபந்தங்களை அருளினார். இவை முறையே ருக், யஜுர், அதர்வண, ஸாமம் என்னும் நாலு வேதங்களின் சாரமாகக் கருதப்படுகின்றன. வேதங்களை விளக்கும் ஆறு அங்கங்கள்போலே, நம்மாழ்வாரின் நான்கு தமிழ் வேதங்களையும் விளக்குகின்றவையாகத் திருமங்கையாழ்வார் பாடியவை பெரியதிருமொழி (1084 பாடல்கள்), திருவெழு கூற்றிருக்கை (ஓர் ஆசிரியப்பா,) திருக்குறுந்தாண்டகம் (20 விருத்தப்பாடல்கள்), சிறிய திருமடல் (ஒரு கலிவெண்பா), பெரிய திருமடல் (ஒரு கலிவெண்பா), திருநெடுந்தாண்டகம் (முப்பது விருத்தப் பாடல்கள்) எனும் ஆறு திவ்வியப்பிரபந்தங்கள். பெரியாழ்வார் பன்னிரண்டு பாடல் கொண்ட திருப்பல்லாண்டையும், 461 பாடல்கள் கொண்ட பெரியாழ்வார் திருமொழியையும் அருளினார். ஆண்டாள் முப்பது பாடல்கள் கொண்ட திருப்பாவையையும், நூற்றுநாற்பத்துமூன்று பாடல்கள் கொண்ட நாச்சியார்

திருமொழியையும் அருளினார். குலசேகராழ்வார் 105 பாடல்கள் கொண்ட பெருமாள் திருமொழியை அருளினார். தொண்டரடிப் பொடியாழ்வார் பத்துப்பாடல்கள் கொண்ட திருப்பள்ளியெழுச்சியையும் , நாற்பத்தைந்து பாடல்கள் கொண்ட திருமாலையயும் அருளினார். திருப்பாணாழ்வார் பத்துப்பாடல்கள் கொண்ட அமலானாதிபிரானாலே அரங்கனின் திருவடி, சிவந்த ஆடை, உந்தி திருவயிற்று உதரபந்தம், திருவார மார்பு, முற்றும் உண்ட கண்டம், செய்யவாய், பெரியவாய கண்கள், நீலமேனி ஆகியவற்றைப் பாடி, "என் அமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே " என்று இறுதியில் அருளி, அரங்கனிடம் சேர்ந்தார். மதுரகவியாழ்வார் பத்துப்பாடல் கொண்ட கண்ணி நுண் சிறுத்தாம்பினாலே நம்மாழ்வாரைத் தவிரத் தேவுமற்றறியாதிருக்கும் தமது ஆசாரிய நிஷ்டையை விளக்கினார்.

வடமொழியில் அமைந்த வேதங்கள், ஸ்மிருதிகள், இதிகாச புராணங்கள் ஆகியவையும், தமிழ் வேதங்களாகவும், அவற்றுக்கு அங்கமாகவும், உபாங்கமாகவும் அமைந்த நாலாயிர திவ்வியப் பிரபந்தங்களும் ஒரே கருத்துடையவை என்பதை (கி.பி.ஒன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய) நாதமுனிகள் தொடங்கி (கி.பி.பதிநான்காம் நூற்றாண்டில் தோன்றிய )மணவாள மாமுனிகளீறாகவுள்ள வைணவ சமயாசாரியர்கள் நூற்றுக்கணக்கான தமது வடமொழி நூல்களாலும், தமிழ்நூல்களாலும் இரண்டு மொழியும் கலந்த மணிப்ரவாள நடையிலமைந்த நூல்களாலும் நிலைநாட்டினர். இவர்களில் நாதமுனிகள், அவரது திருப்பேரரான ஆளவந்தார், ஸ்ரீராமாநுஜர், அவரது சீடரான கூரத்தாழ்வான், அவரது குமாரரான பட்டர், ஸ்ரீராமாநுஜரின் சீடரான எங்களாழ்வான் எனும் விஷ்ணுசித்தர், அவர் சீடரான நடாதூர் அம்மாள், அவரது சீடரான ஸுதர்சனபட்டர் முதலானவர்கள் வடமொழியிலேயே நூல்கள் அருளி இதை நிறுவினர். ஸ்ரீராமாநுஜருடைய சீடரான திருக்குருகைப்பிரான் பிள்ளான், பட்டருடைய சீடரான நஞ்சியர், அவரது சீடரான நம்பிள்ளை, அவரது சீடர்களான பெரியவாச்சான் பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை ஆகிய இருவர், அழகியமணவாளப்பெருமாள் நாயனார், மாமுனிகளின் ஆசார்யரான திருவாய் மொழிப்பிள்ளை, மாமுனிகள் ஆகியவர்கள் ஆழ்வார்களின் அருளிச்செயல்களுக்கு மணிப்ரவாள நடையில் உரையிட்டு இதை நிலைநாட்டினர். இவர்களில் பெரியவாச்சான்பிள்ளை ஆழ்வார்களின் திவ்வியப்பிரபந்தம் முழுவதற்கும் உரை அருளியவர். மற்றும் பல வடமொழி நூல்களுக்கும் ரஹஸ்யங்களுக்கும் உரை எழுதி வியாக்கியானசக்கரவர்த்தி என்று புகழ்பெற்றவர். வடக்குத் திருவீதிப்பிள்ளையின் குமாரர்களான பிள்ளையுலகாசிரியரும், அழகிய மணவாளப்பெருமாள் நாயனாரும் பல ரஹஸ்யநூல்களையும் மணிப்பிரவாள நடையில் அருளி இருமொழி வேதங்களின் கருத்துக்களை விளக்கினர். இவற்றில் முக்கியமானவையான முமுட்சுப்படி, ஸ்ரீவசனபூஷணம், தத்துவத்ரயம், ஆசாரியஹ்ருதயம்

என்னும் ரஹஸ்ய நூல்களுக்கு மணிப்ரவாள நடையில் உரைகள் அருளி இருமொழி வேதங்களின் கருத்தை ஐயம் திரிபற நிலைநாட்டியவர் மணவாளமாமுனிகள்.

இந்த ஆசார்யர்களில் சிலர் செந்தமிழ்ப் பாக்களாலான நூல்களையும் அருளினார்கள். ஸ்ரீராமாநுஜரின் சீடரான அருளாளப் பெருமாள் எம்பெருமானார் ஞானசாரம், பிரமேயசாரம் எனும் வெண்பாவினாலான இருநூல்களையும் கூரத்தாழ்வானின் சீடரான திருவரங்கத்தமுதனார் கலித்துறையந்தாதியான இராமாநுச நூற்றந்தாதியையும் அருளினார். (இவற்றுக்கும் மாமுனிகள் உரை அருளினார்) வாதிகேசரி அழகிய மணவாளச்சீயர் கீதையின் சுலோகங்கள் அனைத்தையும் வெண்பாவில் மொழிபெயர்த்து பகவத்கீதை வெண்பாவை அருளினார்., மாமுனிகள் வடமொழியில் ஸ்ரீராமாநுஜரைத் துதிக்கும் யதிராஜவிம்சதியையும், தமிழ்ப் பாக்களாலான உபதேசரத்னமாலை, ஆர்த்திப்ரபந்தம், திருவாய்மொழிநூற்றந்தாதி எனும் நூல்களையும் அருளினார்.

பதின்மூன்றாம் நூற்றாண்டில் தோன்றிய ஸ்ரீவேதாந்ததேசிகர் வட மொழியிலும், தமிழ்மொழியிலும், மணிப்ரவாள நடையிலும் தனி நூல்களாகவும், உரைநூல்களாகவும், உரைநடைநூல்களாகவும், பாக்களாலான நூல்களாகவும் நூற்றுக்கு மேற்பட்ட நூல்களை எழுதி இருமொழி வேதங்களும் ஒத்த கருத்துடையவையே மற்றும் விசிஷ்டாத்வைத ஸ்ரீவைஷ்ணவ சமயத்தையே கூறுகின்றன என நிலைநாட்டினார்.

இவர்கள் அனைவரும் உபயவேதங்களின் கருத்தாக நிலை நாட்டிய கொள்கைகள் பின்வருமாறு (1) திருவின்நாயகனாய் எண்ணிறந்த மங்கள குணங்களை உடையவனான நாரணனே உலகனைத்தையும் படைத்து அளித்து அழிக்கும் ஆதிமூலப்பரம் பொருள். (2) அவனே மோக்ஷம் எனப்படும் வீடுபேற்றை அளிக்கவல்லவன். (3) பரமபதமாகிற நித்யவிபூதியும், இவ்வுலகமாகிய லீலாவிபூதியும் உண்மையானவையாய், அவனுடைய சரீரமாய், அவனுக்குச் செல்வமாயிருப்பவை. (4) ஞானம் அனுட்டானமிவை நன்றாகவேயுடையனான ஓராசாரியனைத் தஞ்சமாக அடைந்து பஞ்சஸம்ஸ்காரங்களையும் பெற்று, பிராட்டியைப் புருஷகாரமாகவும், எம்பெருமானையே உபாயமாகவும் பற்றுவதாகிய சரணாகதியின் மூலமே திருமாலின் நிர்ஹேதுககிருபைக்குப் பாத்திரமாகி ஜீவன் வீடுபேற்றை அடைகிறான். (5) மற்ற தெய்வங்களைப் பற்றுவதும், பகவானிடமும், பாகவதர்களிடமும், அபசாரப்படுவதும், உலகியல் விஷயங்களில் மண்டியிருப்பதும், இவ்வீடு பேற்றை அடையமுடியாதபடி செய்யும் தடைகளாகும். (6) ஆசார்யனின் உபதேசத்தாலே இத்தடைகள் நீங்கப்பெற்று, ஸ்ரீமந்நாராயணனையே தஞ்சமாகவும், ஆசார்யனையும், ஸ்ரீவைஷ்ணவர்களையும் ஆன்ம உறவினர்களாகவும் கொண்ட உத்தமர்களாக ஸ்ரீவைஷ்ணவர்கள் வாழவேண்டும். அனைத்துலகும்

எம்பெருமானின் சரீரமாகையாலே எவரிடமும் வெறுப்பில்லாமல் வாழவேண்டும். இப்படி வாழ்பவர்கள் இப்பிறப்பின் இறுதியிலேயே தலைசிறந்த பேரின்பமளிக்கும். விஷ்ணுவின் பரமபதத்தை அவனுடைய அருளாலேயே பெறுவது உறுதி.

**உபயவேதாந்த சமயம்**

இவ்வண்ணமாக, வேதங்களிலே முளைவிட்டு ஸ்ம்ருதிகளில் தளிர் விட்டு, இதிஹாஸபுராணங்களில் மரமாகி, சங்கநூல்களிலே பூத்து, ஆழ்வார்களின் அருளிச்செயல்களிலும், ஆசார்யர்களின் வியாக்கியானங்களிலும் அமுதரசமுடைய பழங்கள் நிறையப் பெற்று ஆசையுடையார்க்கெல்லாம் வாரி வழங்குகிறது. வைணவமாகிற கற்பகமரம். வடநாட்டில் வைதிகமதமாக ஸ்ம்ருதி இதிஹாஸபுராண காலம் வரையில் தழைத்து வளர்ந்த வைணவம், சங்க காலத்தில் தமிழ்நாட்டிலும் அப்படியே தழைத்து வளர்ந்து , ஆழ்வார்களாலும், ஆசார்யர்களாலும் விளக்கங்கள் கொடுக்கப்பெற்று உபயவேதாந்த சமயமாகச் சீரும் சிறப்பும் பெற்று பாரத தேசமெங்கும் பரவி நிற்கிறது. வடநாட்டில் பிற்காலத்தில் தோன்றிய சைதன்யமதம், வல்லப மதம், முதலானவையும் தென்னாட்டு ஸ்ரீவைஷ்ணவத்தின் வடநாட்டு வடிவங்களேயாகும். மீராபாய், ராமானந்தர், துளஸீதாசர் முதலாய பக்தர்களும் ஆழ்வார்களின் அடிச்சுவட்டில் தோன்றிய வைணவர்களேயாவர்.

ஆதிசங்கரர் தமது பாஷ்யங்களில் நாராயணனே பரமாத்மா என்று ஐயம் திரிபற விளக்கியிருந்தபோதிலும் ஆழ்வார்களின் அருளிச்செயலைத் துணைகொள்ளாமையாலே, அறிவேயான பரம் பொருள் ஒன்றே மெய். மற்ற உலகனைத்தும் பொய்த்தோற்றம் என்னும் அத்வைத மதத்தைப் பரப்பினார். ஸ்ரீராமாநுஜருக்குப் பின்வந்த மத்வரும் அருளிச்செயல்களைத் துணைகொள்ளாமையாலே, பரமாத்மாவான விஷ்ணுவை உலகத்தினின்றும் மிகவும் வேறுபடுத்திய த்வைதமதத்தைப் பரப்பினார். நாதமுனிகளை முதல்வராகவும், ஸ்ரீராமாநுஜரை நடுநாயகமாகவும் மாமுனிகளைச் சரமகுருவாகவும் கொண்ட ஸ்ரீவைஷ்ணவ பூர்வாசார்யர்கள் செய்ய தமிழ் மாலைகளைத் தெளிய ஓதித் தெளியாத மறைநிலங்கள் தெளியப்பெற்று, நாராயணனான பரம்பொருளும் உலகமும் வெவ்வேறாகயிருந்தபோதிலும் விட்டுப்பிரிக்க முடியாதபடி ஆன்மாவாகவும், சரீரமாகவும் ஒன்றி நிற்கின்றனர் என்னும் விசிஷ்டாத்வைத ஸ்ரீ வைஷ்ணவ சமயத்தை நிலைநாட்டினர்.

**வெளிப்பகைகளும் உட்பகைகளும்**

பரமவைதிகமதமாய், சங்ககாலத் தமிழர் சமயமாய், உபய வேதாந்த சமயமான வைணவமதம், பல வெளிப்பகைகளாலும் உட்பகைகளாலும் இன்று நலிவுற்று வருகிறது, அக்களைகளை நீக்கி வைணவப் பயிரைப் பேணிப்பாதுகாக்க வேண்டியது நமது கடமையாகும்.

வேதங்களிலும் ஸ்மிருதி இதிஹாஸ புராணங்களிலும், சங்க நூல்களிலும் எல்லாத் தெய்வங்களுக்கும் அந்தர்யாமியாகவும் ஒப்புயர்வற்ற பரமாத்மாவாகவும் பேசப்படும் திருமாலுக்குப்போட்டியாக, அவனுக்கு சரீரமாயிருந்து வாழ்வு பெறும் பல தெய்வங்களைப் பரம்பொருளாகப் பலர் பேசிவருகின்றனர். மற்றும் பலர் எல்லாத் தெய்வங்களும் எல்லா மதங்களும் ஒன்றுதான் என்னும் சமரசவாதத்தைப் பொது மேடைகளில் பரப்பிவருகின்றனர். இவற்றால் ஸ்ரீவைஷ்ணவர்களிலும் பலர் தமது மதத்தில் ஊற்றமில்லாதவராகின்றனர். இவை வைணவ மதத்தை நலிவுறச்செய்யும் வெளிப்பகையாகும்.

தென்கலை வடகலைச் சண்டைகளையும் சாதிவேற்றுமைகளையும் கிளப்பிவிட்டு - சிலர் உட்பகைகளை வளர்த்து வருகின்றனர், இந்த உட்பகை வெளிப்பகைகளை அடியோடு களைய முடியாவிட்டாலும், முடிந்த அளவு குறைத்தால் வைணவப்பயிர் செழித்து வளரும்.

**விசிஷ்டாத்வைத ஸ்ரீவைஷ்ணவம் மிகவும் தொன்மையானது**

திருமகள் கேள்வனான ஸர்வேச்வரன் முதலாக ஸ்வாமி மணவாள மாமுனிகள் ஈறாக உள்ள பூர்வாசார்ய பரம்பரையில் ஸ்வாமி எம்பெருமானார் நாயகரத்தினம் போல் நடுவாக எழுந்தருளியிருக்கிறார் என்பது ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவரும் அறிந்த விஷயம் ஆனாலும் இராமாநுஜருக்கு முன்னால் வைணவ விசிஷ்டாத்வைதமே கிடையாது, எல்லாம் இராமாநுஜரால் நவீனமாக உண்டாக்கப்பட்டது. என்ற பொய்ப்பிரச்சாரம் தற்காலத்தில் பத்திரிக்கைகளின் துணை கொண்டு செய்யப்பட்டு வருகிறது. உண்மை நிலை என்ன என்று ஆராய்வோம்.

வேதம் முதலான சாஸ்த்ரங்களைப் பிரபல ப்ரமாணங்களாகக் கொண்டனுஷ்டிக்கப்படும் வைதிகமதங்களில் இராமாநுஜர் வளர்த்த விசிஷ்டாத் வைதஸ்ரீவைஷ்ணவமதம் மற்றவைகளை விடத் தொன்மை வாய்ந்தது. விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தில் ஸ்ரீமந் நாராயணனே பரதத்வம், அவனே பரமோபாயம் அவன் திருவுள்ளத்தில் உகப்பே பரம புருஷார்த்தம் என்று தத்வ ஹித புருஷார்த்தங்கள் அங்கீகரிக்கப்பட்டுள்ளன. வேத வேதாந்தங்கள் ப்ரளய காலத்தில் நாராயணன் ஒருவனே இருந்தான். பிரமனும் இல்லை, சிவனும் இல்லை, நாராயணனே ஜகத்காரணம், நாராயணனே ஸர்வவியாபகன், நாராயணனே ஸர்வநியந்தா, நாராயணனே புருஷோத்தமன், நாராயணனே ஸ்ரீமான், நாராயணனே ஸகல பலப்ரதன் என்று முழங்குகின்றன. ஆழ்வார்களும் அழகும் இனிமையும் நிறைந்த தமிழில் இக்கருத்துக்களை மொழி பெயர்த்துள்ளார்கள் இவ்வர்த்தங்களையே எம்பெருமானார் தம்முடைய உபதேசத்தாலும், அநுட்டானத்தாலும், கிரந்தங்களாலும் நிர்ணயித்துள்ளார்.

"அக்ஷராணாம் அகாரோஸ்மி" என்பது பகவத்கீதை வசனம், அதாவது "அ" என்னும் எழுத்து ஸ்ரீமந்நாராயணன் ஒருவனுக்கே உரித்தானதாகும். பொய்யாமொழிப்புலவரான திருவள்ளுவரும் "அ" என்னும் எழுத்து மற்ற எழுத்துக்கெல்லாம் முதன்மையானது. அதே போல் உலகுக்கெல்லாம் அகாரவாச்யனான எம்பெருமான் ஆதிபகவன் என்ற கருத்தை எடுத்துக்காட்டுகிறார்

*அகரமுதல எழுத்தெல்லாம் ஆதி*
*பகவன் முதற்றே உலகு.*

என்கிற குறளில்.

வடமொழியிலுள்ள வேதங்கள் தமிழ்நாட்டில் கொடிகட்டிப் பறந்த காலமாகச் சங்ககாலம் காணப்படுகிறது . மாயீ என்று உபனிஷத் பரம் பொருளுக்கு வழங்கிய பெயரைத் தமிழ்முறைக்குச் சேர மாயோன் என்று திருமாலைக் குறித்து வழங்கி , இப்பெயர்க்குரிய எல்லாப் பெருமைகளும் அவனுக்கே பொருந்தும் என்று விரிவாக விளக்கினர், சங்க காலப் புலவர்கள் தம் பாடல்களில். "மாயோன் மேய காடுறை உலகமும்" என்று நானிலத்திற்கு உரிய நான்கு தெய்வங்களைக் கூற வந்த தொல்காப்பியர் தலைமைத் தெய்வமானது பற்றி முல்லைக்குரிய கண்ணனை முதலில் எடுத்து அவனை மாயோன் என்று குறித்தார். மூன்றாம் பரிபாடலில் "மாஅயோயே, மாஅயோயே" என்று திருமாலை விளித்த கடுவன் இளவெயினனார் "மறுபிறப்பு அறுக்கும் மாசில் சேவடி மணி திகழ் உருபின் மாஅயோயே" என்று விவரிக்கிறார். முழுமுதற் கடவுளாகத் திருமாலை விவரிக்கின்ற சங்ககாலப்புலவர்கள் அத்தகு பெருமையை வேறு எந்த தெய்வத்திற்கும் வழங்கவில்லை. சங்க காலத்தில் வீறுடன் விளங்கி, ஆழ்வார்களால் நிலைநாட்டப்பட்ட இந்த தரிசனத்தையே "எம்பெருமானார் தரிசனம்" என்று நம்பெருமாள் பேரிட்டு நாட்டிவைத்தார். ஸ்ரீவைஷ்ணவ விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தின் தொன்மைக்கு, மேலே எடுத்துக் காட்டியுள்ளவை தவிர மற்றும் பல அசைக்கமுடியாத சான்றுகள் இருந்தபோதிலும், சிலர் தத்தம் மதங்கள் வைணவத்திற்கும் முந்தியது என்று வாதிடுவது ஒருகாலை ஒடித்தாவது தான் பிடித்த முயலுக்கு மூன்றே கால் என்று நிருபிக்கமுயலும் அவர்களின் மனப்போக்கையே காட்டுகிறது.

**ஐந்து நிலைகள்**

ஜகத்காரணபூதனான ஸர்வேச்வரன் "ஸ்தவ்ய : ஸ்தவப்ரிய:" (துதிக்கத்தக்கவன், துதியை விரும்புமவன்) என்று சொல்லப்படுகிறவனாகையாலே அடியார்கள் தன்னை வணங்குவதற்கு ஐந்து நிலைகளாக -- பிரகாரமாகத் தன்னை அமைத்துக் கொண்டிருக்கிறான். அவை, பரம், வியூஹம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சாவதாரம் என்று சொல்லப்படும். பரம் என்பது எம்பெருமான் பரமபதத்தில் எழுந்தருளியிருக்கும் நிலை. இந்த நிலையை சேவிப்பது

உரிய காலத்தில் அல்லாது ஸம்ஸாரிகளுக்கு உடனடியாகக் கைவரத்தக்கது அன்று. வியூஹம் -- கூப்பீடு கேட்குமிடம் என்று ஆசாரியர்கள் கொண்டாடும் திருப்பாற்கடல் முதலிய இடங்களில் ஸங்கர்ஷண, ப்ரத்யும்ன, அநிருத்த ரூபியாகத் தோன்றி ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை நிர்வஹிக்கும் நிலை. எங்கேயோ உள்ள பாற்கடலுக்குச் சென்று உய்வடைவதும் இயலாது. விபவமாவது. "மீனோடு ஆமை கேழலரி குறளாய் முன்னுமிராமனாய்த் தானாய்ப் பின்னுமிராமனாய்த் தாமோதரனாய்க் கற்கியுமானான்" என்று ஆழ்வார்களும் ரிஷிகளும் கொண்டாடும் படி எல்லாரும் கண்ணாரக்கண்டு அனுபவிக்கும்படி இந்த உலகில் வந்து அவதரித்து, தன்னை அவர்களோடு கலந்து பரிமாறி, எளியனாயிருந்து ஏவல் செய்யும் நிலை. விபவாவதார காலத்தில் வாழ்ந்தவர்களுக்கு மட்டும் அந்த அனுபவம் கிட்டியிருக்கும். ஏனையோருக்குப் பயன் ஏதும் இல்லை. அந்தர்யாமித்வம்--

*நிற்பதும்மொர் வெற்பகத்து இருப்பதும் விண் கிடப்பதும்*
*நற்பெருந் திரைக்கடலுள் நானிலாத முன்னெலாம்,*
*அற்புதன் அனந்தசயனன் ஆதிபூதன் மாதவன்*
*நிற்பதும் இருப்பதும் கிடப்பதும் என்னெஞ்சுளே*

மற்றும் "அரவத்தமளி யினோடும் அழகிய பாற்கடலோடும்" முதலான ஆழ்வார் பாசுரங்களின்படி எல்லாருடைய ஹ்ருதய கமலங்களிலேயும் திருமேனியோடு இருக்கும் நிலை. "அங்குஷ்டமாத்ர புருஷ:" என்ற அந்தர்யாமியை யோகஸாக்ஷாத்காரத்தால் அனுபவிக்கலாம். ஸாமான்யர்களுக்குக் கைவராது. ஆக, பரவ்யூஹவிபவங்களும், அந்தர்யாமியும் தற்காலத்தில் நம் கண்களுக்கு விஷயமாகாது.

அர்ச்சாவதாரம். "தமருகந்ததெவ்வுருவம்" என்று அடியார்கள் உகந்த விக்ரஹத்தில் விபவ விசேஷங்கள் போல் தேசம் காலம் மற்றும் அதிகாரி நியமமில்லாதபடி ஸன்னிதி பண்ணி அவர்கள் அபராதங்களைக் காணாக்கண்ணிட்டு அர்ச்சக பரதந்த்ரமான ஸமஸ்தவ்யாபாரங்களையும் உடைய வனாய்க்கொண்டு கோயில்களிலும், வீடுகளிலும் நிற்கும் நிலை. இவற்றுள் ஆழ்வார்கள் பாடியகோயில்கள் திவ்யதேசங்கள் என்னும் சிறப்பான அடைமொழி கொடுத்துக் கொண்டாடப்படுகிறது. எல்லோரும் எக்காலத்தும் பின்னானார்வணங்கும் சோதியாக அனுபவிக்கும்படியான எளிமையின் எல்லை நிலமாய் மற்ற நிலைகள்போல் அல்லாது நாம் கண்ணாலே காணலாம்படியான அர்ச்சாவதாரமே சரணாகதிக்கும் கைங்கர்யத்துக்கும் விஷயமாவது. ஆகவே, திருக்கையிலே பிடித்த திவ்யாயுதங்களும், வைத்து அஞ்சேல் என்ற கையும், கவித்தமுடியும், முகமும் முறுவலும் ஆஸனபத்மத்திலே அழுத்தினதிருவடிகளுமாய் நிற்கிற அர்ச்சை நிலையே நமக்குத் தஞ்சம்.

**பஞ்சஸம்ஸ்காரங்கள்**

"கர்மணா ஜாயதே த்விஜ:" என்று உபநயனத்தில் பிரம்மோபதேசம் ஆனவுடன் பிராமணத்தன்மை ஸித்திப்பது போல், ஞானம் அனுட்டானம் உடைய ஸதாசார்யனை ஆசிரயித்துப் பஞ்சஸம்ஸ்காரம் செய்து கொண்டால்தான் ஸ்ரீவைஷ்ணவத்வம் ஸித்திக்கும். "தாப புண்ட்ரஸ்ததா நாம மந்த்ரோ யாகஸ்ச பஞ்சம:" என்று (1) சங்கு சக்கரங்களைத் தோளில் தரித்துக்கொள்ளுதல், (2) எம்பெருமான் திருநாமங்களை உச்சரித்து, பன்னிரண்டு இடங்களில் திருமண்காப்பு தரித்துக்கொள்ளுதல் (3) தாஸ்ய நாமம் ஏற்றுக்கொள்ளல் (4) திருமந்த்ரம் த்வயம் சரமச்லோகம் முதலிய மந்த்ரோபதேசம் பெறுதல், (5) பகவதாராதனம் செய்ய ஆசார்யன் அனுக்ரஹம் பெறுதல், ஆக ஐந்து ஸம்ஸ்காரங்கள் பரமைகாந்தியாவதற்கு அவசியமானவையாகச் சொல்லப்படுகிறது. இந்த ஸம்ஸ்காரங்கள் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு மிக அவசியம். பெரியாழ்வாரும் தம்முடைய பிரபந்தங்களில் "தீயிற்பொலிகின்ற செஞ்சுடராழி திகழ் திருச்சக்கரத்தின் கோயிற்பொறியாலே ஒற்றுண்டு நின்று" என்றும் "என்னையும் என் உடைமையையும் உன் சக்கரப்பொறி ஒற்றிக்கொண்டு" என்றும் மற்றும் பல பாசுரங்களிலும் இவற்றை அருளிச் செய்திருக்கிறார். ஆகவே வைணவர்கள் எல்லோரும் கண்டிப்பாகப் பஞ்சஸம்காரம் செய்துகொள்ளவேண்டும். நாம் எம்பெருமானுடைய அடிமை, வேறுயாருக்கும் உரியவரல்லர் என்பதால் அவனுடைய திருவடிகளைத் தியானித்துத் திருமண்காப்பு தரித்துக் கொள்ளவேண்டும்.

**ஐந்து அர்த்தங்கள்**

மந்திரஸம்ஸ்காரத்தால் அர்த்த பஞ்சகஞானம் ஏற்படுகிறது. அறியவேண்டிய ஐந்து அர்த்தங்கள்

"ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோ ரூபம் ப்ராப்துஸ்ச ப்ரத்யகாத்மந :

ப்ராப்த்யுபாயம் பலம் ப்ராப்தே: ததா ப்ராப்திவிரோதி ச"

என்று சொல்லப்பட்ட ப்ரஹ்ம, ஜீவ, உபாய, விரோதி, பலஸ்வரூபங்கள் ஆகும். திருவாய்மொழியும் மிக்க இறைநிலை, மெய்யாம் உயிர்நிலை, தக்கநெறி, தடையாகித் தொக்கியலும் ஊழ்வினை, அந்த ஊழ்வினை நீங்கினால் கிடைக்கும் வாழ்வு என்ற இந்த அர்த்தபஞ்சக ஞானத்தையே விவரிக்கிறது.

**பல ஸ்வரூபம்**

**ஜீவனின் ஸ்வரூபம் :** பகவானால் ரக்ஷிக்கப்படுகிற அவனது உடைமையாய், அவனுக்கு சேஷமாய், பரதந்த்ரமாயிருக்கை. **உபாயஸ்வரூபம்:** சரணமடையப் பெற்ற பெருமாளே உபாயம் என்று விபீஷணாழ்வான் காட்டினான். நிர்ஹேதுக கிருபையோடுகூடிய

எம்பெருமானே நிரதிசய புருஷார்த்தமான பரார்த்த கைங்கர்யத்துக்கு உபாயம். **பலஸ்வரூபம்** : ஜீவனுடைய அனுபவகைங்கரியங் களால் பரமபுருஷனுக்கு ஏற்படும் ஆனந்தமே பலன். எம்பெருமான் உகந்த கைங்கர்யமே பலஸ்வரூபம். **விரோதிஸ்வரூபம்** : தேஹமே ஆத்மா என்னும் மயக்கம், தான் ஸ்வதந்த்ரன் என்னும் மயக்கம், தான் மற்ற தெய்வங்களுக்கு அடிமை என்னும் மயக்கம், தன்முயற்சியால் பகவானைக்கிட்டுகிறோம் என்ற மயக்கம், தேகசம்பந்தத்தால் உண்டான உறவினர்களிடம் பாசம், சப்தாதி விஷயங்களில் பெருவிருப்பம் ஆகிய இவை பகவத் கைங்கர்யத்துக்கு விரோதி. ஆசார்ய கடாக்ஷத்தால் இவை நீங்கப்பெறும்.

**ஸ்ரீவைஷ்ணவநிஷ்டை**

ஸதாசார்ய ஸம்பந்தத்தால் மந்த்ரோபதேசம் பெற்ற ஸ்ரீவைஷ்ணவர் களின் கடமையை முமுக்ஷுப்படி ஸ்ரீவசனபூஷணம் முதலிய ரஹஸ்யங்களில் பிள்ளைலோகாசார்யர் முதலான பூர்வாசார்யர்கள் உபதேசிக்கிறார்கள். அவையாவன :- ஸ்ரீ வைஷ்ணவன் எம்பெருமானைத் தவிர மற்ற விஷயங்களிலும் மற்ற உபாயங்களிலும் மற்ற தெய்வங்களிடமும் ஈடுபாட்டை அடியோடு விடவேண்டும். ஸ்ரீமந்நாராயணன் ஒருவனே ரக்ஷகன் என்று எம்பெருமானையே உபாயமாகப் பற்றி நிற்கும் பிரபன்ன நிஷ்டையில் ஆழ்ந்த நம்பிக்கைகொள்ள வேண்டும். பரமபதம் நமக்கு வருகிறபோது வரட்டும். என்று இல்லாமல், கூவிக்கொள்ளும் காலம் இன்னம் குறுகாதோ என்று எண்ணவேண்டும். இதுவே ப்ராப்யத்வரை எனப்படும். இந்த உடம்புடன் இருக்கும் நாட்களில் ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப்பட்ட திவ்ய தேசங்களில் ஈடுபடவேண்டும். திவ்ய தேசத்து எம்பெருமான்களுடைய திருக்கல்யாண குணங்களை அனுபவித்துப் பல்லாண்டு பாடவேண்டும். "ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி" என்று எப்போதும் எல்லாவிதமான கைங்கர்யங்களையும் செய்ய ஆசைப்பட்டு இயன்றவரை செய்யவேண்டும். பரம பாகவதோத்தமர்களான ஸ்ரீவைஷ்ணவர்களின் ஏற்றத்தை உணர்ந்து அவர்களிடத்தில் உகப்புடன் இருக்கவேண்டும், அறியவேண்டிய அர்த்தங்கள் அனைத்தும் திருமந்த்ரத்தில் இருக்கிறது. அதன் விவரணம் த்வயம், சரமச்லோகம் ஆகியவை. இவைகளின் பொருளில் ஊன்றியிருக்கவேண்டும். எம்பெருமானுக்கு இனியனாகும்படி தனக்கு இத்தகைய யோக்யதையை உண்டாக்கின ஆசார்யன் பக்கலில் நன்றியுடன் அதிக பக்தியுடன் கைங்கர்யம் செய்துகொண்டிருக்கவேண்டும். அதேபோல் நம்மைத் திருத்திப் பணிகொண்ட அந்த ஆசார்யனோடு ஸம்பந்தத்தை உண்டாக்கின எம்பெருமானிடத்தில் எப்போதும் நன்றி பாராட்டவேண்டும். ஞானம், பக்தி, வைராக்யம், (விரக்தி) இவற்றை உடையவராயினும் இவை தமக்கு உண்டு என்று கர்வமில்லாத பரமஸத்வநிஷ்டராயிருக்கிற பாகவதர்களோடு கூடியிருக்க வேண்டும். அப்போதுதான் நல்ல குணமுடையோரை நண்ணி இருப்பதால் அவர்களுடைய ஞான பக்தி

விரக்திகள் நமக்கும் உண்டாகும் இதுவே ஸ்ரீ வைஷ்ணவர்கள் அறிந்து கைக்கொள்ள வேண்டிய ஸ்ரீவைஷ்ணவநிஷ்டை..

ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு யமபயம் கிடையாது. அநந்ய சரணர்களான ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு யமபயம் கிடையாது என்று ஸ்ரீ பராசரமஹரிஷி விஷ்ணு புராணத்தில் கூறியது போலவே ஆழ்வார்களும் அருளிச்செய்திருக்கிறார்கள்.

*"ஸ்வபுருஷமபிவீக்ஷ்ய பாசஹஸ்தம்*
*வததி யம: கில தஸ்ய கர்ணமூலே*
*பரிஹர மதுஸூதந ப்ரபந்நாந்*
*ப்ரபுரஹம் அந்யந்ருணாம் ந வைஷ்ணவாநாம்"*

என்பது விஷ்ணுபுராண ச்லோகமாகும். இதன் பொருளாவது "யமன் தன்னுடைய வேலைக்காரனைப்பார்த்து ப்ரபந்நர்களிடம் செல்லாதே. நான் அவர்களைத்தவிர மற்றவர்களுக்குத்தான் பிரபு என்று செவியில் கூறினான்" என்பது

*திறம்பேன்மின் கண்டீர் திருவடிதன் நாமம்*
*மறந்தும் புறந்தொழாமாந்தர் -- இறைஞ்சியும்*
*சாதுவராய்ப் போதுமின்கள் என்றான் நமனும் தன்*
*தூதுவரைக் கூவிச் செவிக்கு* — **என்றும்**
*அவன் தமர் எவ்வினையராகிலும் எங்கோன்*
*அவன் தமரே என்று ஒழிவதல்லால் — நமன்தமரால்*
*ஆராயப்பட்டு அறியார் கண்டீர் அரவணைமேல்*
*பேராயற்காட்பட்டார் பேர்*

என்றும் ஆழ்வார்களால் அருளிச் செய்யப்பட்டது. இதன் பொருள் எளிதில் புரியக்கூடியதே. மிகவும் பயத்துடன் "இந்த விஷயம் மிகவும் ரஹஸ்யம்" என்கிறான் யமன். "நாவலிட்டு உழிதருகின்றோம் நமன்தமர் தலைகள் மீதே" என்கிறார் தொண்டரடிப்பொடியாழ்வார்

ஆக இதுவரை 1) விசிஷ்டாத்வைத மதத்தின் தொன்மை 2) பகவானின் ஐந்து நிலைகள் 3) பஞ்சஸம்ஸ்காரங்கள் 4) அறியவேண்டிய ஐந்து அர்த்தங்கள் 5) ஸ்ரீவைஷ்ணவை நிஷ்டை 6) ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு யமபயம் கிடையாது ஆகிய விஷயங்கள் விளக்கப்பட்டன.

மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்து துன்பக்கடலுள் துவள்கின்ற நம் போல்வார்க்கு நல்வீடு பெறுவதற்கு உறுப்பாகத் தெரிந்து கொள்ளவேண்டிய விஷயங்களில் அர்த்தபஞ்சக ஞானம் மிகவும் முக்கியமானது, அதாவது (1) பரப்ரஹ்ம ஸ்வரூப ஞானம் (2) ஜீவாத்ம

ஸ்வரூப ஞானம் (3) உபாய ஸ்வரூப ஞானம் (4) புருஷார்த்த ஸ்வரூப ஞானம் (5) விரோதி ஸ்வரூப ஞானம்,

இவ்வர்த்த பஞ்சகஞானத்தை -- திருமந்த்ரம், த்வயம், சரமச்லோகம் என்கிற மூன்று ரஹஸ்யங்களும் தெரிவிக்கின்றன.

பெரிய திருமந்த்ரம் என்றும் மந்தரராஜன் என்றும் சொல்லப்படுகிற திருவஷ்டாக்ஷர மந்திரத்தை பதரிகாச்ரமத்தில் இலந்தைமரத்தின் அடியில், தானே ஆசாரியனாகவும் சிஷ்யனாகவுமாகி நாராயண மூர்த்தி நரமூர்த்திக்கு உபதேசித்தருளினான்.

மந்த்ர ரத்னம் என்று சொல்லப்படுகிற த்வயத்தை விஷ்ணு லோகத்திலே பெரியபிராட்டியாருக்கு எம்பெருமான் தானே உபதேசித்தருளினான்.

சரம ச்லோகத்தை ஸ்ரீ மஹாபாரத யுத்தத்தில் திருத்தேர்த்தட்டில் அர்ஜுனனுக்கு ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா உபதேசித்தருளினார்.

**1. திருமந்த்ரம் -- ஓம் நமோ நாராயணாய**

"ஓம்" என்பது பிரணவம். அகாரம் உகாரம் இரண்டும் சேர்ந்து "ஓ" என்றாகும், உதாரணம் புருஷ--உத்தமன் புருஷோத்தமன், கால - உசிதம் காலோசிதம்

"ஓம்" என்னும் ப்ரவணம் மூன்று பதமாய் இருக்கிறது.. அ, உ, ம் என்று அகாரத்தாலே ஸகல ஜகத்துக்கும் காரணமாய் ஸர்வ ரக்ஷகனான எம்பெருமானைச் சொல்லுகிறது. அகாரத்தில் மறைந்து நிற்கும் (தொக்கியுள்ள) நான்காம் வேற்றுமை உருபால் சேஷத்வம் சொல்லுகிறது. அகாரவாச்யனான எம்பெருமானுக்கு சேஷபூதன் என்றபடி,

"உ" காரத்தாலே அந்யசேஷத்வம் கழிகையை ப்ரதாநமாகக் கூறுகிறது. அதாவது தான் தனக்கும் உரியனல்லன், பிறர்க்கும் உரியனல்லன், எம்பெருமான் ஒருவனுக்கே சேஷபூதன் என்றதாயிற்று.

"ம" இருபத்தைந்தாம் எழுத்தான "ம" காரத்தாலே, இருபத்தைந்தாவது தத்துவமாய் அறிவாய், அறிபவனான ஆத்மாவைச் சொல்லுகிறது .

"நம:" ம: என்கையாலே நான் எனக்கு உரியவன் என்கிறது "ந" என்று அதைத்தடுக்கிறது. ஆக "நம:" என்கிற இத்தால் எம்பெருமானுக்கே உரியேனான நான் எனக்கு உரியன் அல்லன் என்கிறது.

"நாராயணாய" -- நார என்பது அழியாப்பொருள்களின் ஸமூஹம் அவை சித், அசித் என இரண்டு. "சித்" -- ஆத்மா. "அசித்"

சரீரம், அயன பதத்தாலே சித், அசித் என்கிற அழியாப்பொருள்களுக்கெல்லாம் ஆதாரபூதனாய், அவற்றுள் இருந்து ரக்ஷிப்பவன் நாராயணன் என்கிறது. ஆய பதத்தாலே எம்பெருமான் திருவடிகளில் பண்ணும் பரம புருஷார்த்தமான கைங்கர்யத்தைச் சொல்லுகிறது.

"ஸர்வ சேஷியான ச்ரியப் பதிக்கே உரியன், பிறர்க்கு உரியன் அல்லன், எனக்கு உரியனும் அல்லன், ச்ரியப் பதியான ஸர்வேச்வரனுக்கே அடிமையான நான் ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் அவனுக்கே எல்லாவிதக் கைங்கர்யங்களையும் செய்யப்பெறுவேனாக வேணும் என்பது திருமந்திரத்தின் திரண்டபொர்ருள்.

**திருமந்திரத்தில் நவவித ஸம்பந்தம்**

| பதம் | எம்பெருமான் | சேதனன் |
|---|---|---|
| அகாரம் | அவன்பிதா | இவன் புத்ரன் |
| | அவன்ரக்ஷகன் | இவன் ரக்ஷிக்கப்படுகிறவன் |
| | அவன் ஸர்வஸ்வாமி(சேஷி) | இவன் தாஸபூதன் (சேஷபூதன்) |
| உகாரம் | அவன் பர்த்தா | இவன் பார்யை |
| மகாரம் | அவன் அறியப்படுபவன் | இவன் அறிகின்றவன் |
| நம | அவன் சொத்துக்குரியவன் (ஸ்வாமி) | இவன் சொத்து |
| நாராயண | அவன் சரீரி(ஆத்மா) | இவன் சரீரம் |
| | அவன் ஸர்வ ஆதாரபூதன் | இவன் அவனையே ஆதாரமாக உடையவன் |
| ஆய | அவன் அனுபவிக்கிறவன் | இவன் அவனால் அனுபவிக்கப் படுகிறவன். |

"நின்திருவெட்டெழுத்தும் கற்று உற்றதும் உன்னடியார்க்கு அடிமை" என்கிறபடியே திருமந்திரத்திற்கு பாகவத சேஷத்வமே பிராதானமான அர்த்தம்.

"மூன்றெழுத்து" "விடையேழன்றடர்த்து" "யானே என்னை" "எண்பெருக்கந்நலம்" "எம்பிரானெந்தை" "ஒழிவில் காலம்" "வேங்கடங்கள்" "நாட்டினாயென்னை" என்கிற பாசுரங்களைத் திருமந்த்ரார்த்தமாகப் பூருவர்கள் அநுஸந்திப்பர்கள்.

## 2. த்வயம்

*ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே*

*ஸ்ரீமதே நாராயணாய நம :*

| | |
|---|---|
| ஸ்ரீ | ஜகந்மாதாவான பெரிய பிராட்டியாரை |
| மத் | திருமார்பிலே அகலாதவளாக வைத்துள்ளவனான |
| நாராயண | கல்யாணகுண நிதியான எம்பெருமானுடைய |
| சரணௌ | இரண்டு திருவடிகளை |
| சரணம் | உபாயமாக அதாவது எனக்கு ரக்ஷகமாக |
| ப்ரபத்யே | ஸ்வாதந்திரியமற்றுப் பற்றுகிறேன், |
| ஸ்ரீமதே | பெரிய பிராட்டியாரோடு கூடியுள்ள |
| நாராயண | ஸர்வலோக ஸ்வாமியான எம்பெருமானுக்கே' |
| ஆய } | ஸகலவித கைங்கர்யங்களையும் செய்யப் பெறுவேனாக வேணும். |
| நம : | அவனுக்கே ரஸமாம்படி விநியோகப்படுவேன் என் உகப்புக்கு அன்று. |

இதில் பூர்வவாக்யம் பதினைந்து திருவக்ஷரம், உத்தர வாக்யம் பத்துத் திருவக்ஷரம், ஆக இருபத்தைந்து திருவக்ஷரமாய், ஆறுபதமாய், பத்து அர்த்தமாயிருக்கும்.

### பூர்வவாக்யார்த்தம் - ப்ராபகம் (பேற்றை அடையும் வழி)

பூர்வவாக்யத்தால், சேதனன் பெரிய பிராட்டியாராகிற புருஷகாரத்தை முன்னிட்டுப் பற்ற வேண்டும் உபாயமாக எம்பெருமான் திருவடிகளைச் சொல்லுகிறது. உத்தர வாக்யத்தால் இருவருமான சேர்த்தியிலே செய்யும் கைங்கர்யத்தைச் சொல்லுகிறது. ஸ்ரீசப்தம் ஜகந்மாதாவான பெரிய பிராட்டியாரைச் சொல்லுகிறது. ஸ்ரீ சப்தத்துக்கு முக்கியமான வ்யுத்பத்தி இரண்டு. அதாவது ஸ்ரீயதே ச்ரயதே என்று; ஸ்ரீயதே என்று எல்லாராலும் ஸேவிக்கப்படா நின்றாள் என்கையாலே ஸகல சேதனர்க்கும் இவளைப்பற்றித் தங்களுடைய சேஷத்வ ஸ்வரூப லாபமாய், ச்ரயதே என்று; ஈச்வரனைப் பற்றிச் சேவியாநின்றாள். என்கையாலே இவள் தனக்கும் ஈச்வரனைப் பற்றித் தன்னுடைய ஸ்வரூபலாபமாயிருக்கும் என்கிறது. இவள் தாயாய், சேதனர்கள் கிலேசம் பொறுக்கமாட்டாதே, அவனுக்குப் பத்னியாய் இனிய விஷயமாயிருக்கையாலே கண்ணழிவற்ற புருஷகாரம்.

ஸ்ரீமத் என்கிற பதத்தில் ப்ரக்ருதியான ஸ்ரீ என்னும் பதத்துக்கு மேல் ஏறிக்கிடக்கும் மதுப்பென்ற ப்ரத்யயத்தின் பொருள் எப்போதும் கூடியிருத்தல் என்பது , எம்பெருமான் திருமார்பிலமர்ந்து, "அகலகில்லேன் இறையும் என்று அலர்மேல்மங்கை உறைமார்பா" என்கிறபடியே பூவில் மணமும், சூரியனிடம் கிரணமும், ரத்தினத்தில்

ஒளியும் அகலாதிருப்பது போலே எம்பெருமான் திரு மார்பைவிட்டு க்ஷணகாலமும் பிரியாமல் நித்யவாஸம் செய்பவள் பிராட்டி என்றவாறு. ஆக ஸ்ரீமத் பதத்தாலே, புருஷகாரமும், ஈச்வரனோடு புருஷ காரத்தினுடைய நித்தியயோகமும் சொல்லிற்று.

நாராயணபதார்த்தம் - இப்பதத்தால் அவனை ஆச்ரயிக்க உதவுகின்றவையும் நம் காரியம் செய்ய உதவுகின்றவையுமான கல்யாணகுண விசேஷங்களைச் சொல்லுகிறது. ஸ்வாமித்வம், வாத்ஸல்யம், ஸௌசீல்யம், ஸௌலப்யம், ஞானம், சக்தியாகிற இவ்வாறு குணங்களும் இவற்றில் சிறப்பானவை. ஆச்ரயிக்க ருசியுடைய சேதநன் அநாதிகாலமாகப் பண்ணின அபராதங்களைப் பார்த்து சீற்றங்கொண்டு இவனை அங்கீகரிக்கமாட்டேன். என்றிருக்கும் எம்பெருமானுடைய ஸ்வாந்த்ரியமானது உபதேசத்தாலும் அழகாலும் வசீகரித்துக் காரியங்கொள்ளவல்ல புருஷகார பலத்தாலே தலைமடிந்தொழிந்த பிறகு, அந்த ஸ்வாதந்த்ரியத்தின் கீழ் தலையெடுக்கப் பெறாமலிருந்த நிலை தீர்ந்து, தலையெடுக்கும் குணங்களே இவை. கீழ்ச்சொன்ன குணங்களில் ஸௌலப்யத்துக்கு எல்லை நிலம் அர்ச்சாவதாரம், ஆகையால் அங்கு சரணமடைவதே தக்கது.

சரணௌ -- திருவடிகளை, ஸ்ரீமத் பதத்திலே புருஷகாரபூதையாகச் சொன்ன பிராட்டியும் அவள்தானே சிதகுரைக்கிலும் "என்னடியார் அது செய்யார்" என்னும்படி நாராயணபதத்தில் சொன்ன குணச்சேர்த்தியுடைய எம்பெருமானும் கைவிடிலும், அவனுடைய திருவடிகள் தம் வைலக்ஷண்யத்தாலே துவக்கிக் கொள்ளுகையாலே சேதனனைக் கைவிடா, த்விவசனத்தால் சேர்த்தியழகையும், உபாயபூர்த்தியையும் சொல்லுகிறது. திருவடிகளைச் சொன்னது திருமேனிக்கு உபலக்ஷணமாகும், "திருவடி தாட்பாலடைந்த" என்கிறபடியே சேர்த்துக்கொள்ளும் ஸ்வபாவத்தை உடைத்தான திவ்ய மங்கள விக்ரஹத்தை நினைக்கிறது. என்கை.

**சரணம்** இஷ்டத்தைப் பெறுகைக்கும், அநிஷ்டத்தைத் தவிர்க்கைக்கும் தப்பாத உபாயமாக என்று இதன் பொருள். சரணௌ சரணம் என்கையாலே ப்ராப்யந்தானே ப்ராபகம் என்கிறது. பால் பத்யமுமாய் போக்யமுமாயிருக்கிறாப்போல எம்பெருமானே உபாயமும் உபேயமும் (வழியும் பயனும்) என்றபடி.

**ப்ரபத்யே** பற்றுகிறேன் ; ரக்ஷிக்க வேணும் என்று வாயினால் பிரார்த்தித்தாலோ , உடலால் கைகூப்புதல் நமஸ்கரித்தல் செய்தாலோகூடப் பலன் ஸித்திக்கக் குறையில்லை. ஆயினும் ஜ்ஞாநாத் மோக்ஷம் என்று மோக்ஷம் ஞானத்தாலே விளைகையாலே, இங்கு மாநஸமாகத் திருவடியைப் பற்றுவதைச் சொல்லுகிறது. எம்பெருமானுடைய ரக்ஷகத்வத்தை இசைகையாகிற ஒரு அத்யவஸாயமே (உறுதியே) இந்த ஞானமாம்.

**உத்தரவாக்யார்த்தம் - ப்ராப்யம் (அடையப்படும் பேறு)**

ஸ்ரீமதே—பூர்வவாக்யத்தில் சொல்லியபடி பெரியபிராட்டியாரோடு கூடியிருந்துள்ள எம்பெருமானுக்கு என்று நித்யயோகத்தைச் சொல்லுகிறது. பூர்வவாக்யத்தில் பிராட்டி புருஷகாரமாயிருப்பவள் எனப்பட்டது. இங்கு சேதநர் செய்யும் கைங்கர்யத்தை (எம்பெருமானோடு கூடியிருந்து) ஏற்றுக் கொள்பவளாயிருந்துகொண்டு ப்ராப்யையுமாய் இவர்கள் செய்யும் கைங்கர்யத்தை எம்பெருமான் திருவுள்ளத்திலே ஒன்று பத்தாகப்படுத்தி உகப்பிக்கு மவளாயிருப்பதைச் சொல்லுகிறது. அடிமைதான் ஸித்திப்பதும், வளர்வதும், ரஸிப்பதும் இருவருமான சேர்த்தியிலேதான்.

நாராய - - நாராயணத்வமாவது உபயவிபூதிநாதத்வமாகையாலே ஸர்வசேஷியாய் உள்ளவன் என்றபடி, (சேஷி வகுத்த ஸ்வாமி). கீழே ஸௌலப்யத்தை விவரித்தது. இங்கு ஸ்வாமித்வம், போக்யத்வத்திலே நோக்கு.

ஆய - இந்த சதுர்த்தி (நாலாம் வேற்றுமை) நித்ய கைங்கர்ய ப்ரார்த்தனையை ப்ரகாசிப்பிக்கிறது.

நம:- கைங்கர்யத்தில் களையறுக்கிறது . அதாவது கைங்கர்ய விரோதி, நிவ்ருத்தியைச் சொல்லுகிறது. விரோதியாவது - நான் அனுபவிக்கிறேன். எனது அனுபவம் என்று அனுபவ கைங்கர்யங்களில் உண்டான அஹங்கார மமகாரங்களைச் சொல்லுகிறது. அதாவது கைங்கர்யத்தால் உகப்பவனும் அவனேயொழிய நானன்று என்று அநுஸந்திக்கை, இத்தால் எம்பெருமானுக்கே [illegible]ாம்படி விநியோகப்படுகையைச் சொல்லுகிறது.

ஆக, ஸ்ரீமந்நாராயணனுடைய நிரபேக்ஷாபாயமான திருவடிகளை உபாயமாக அத்யவஸிக்கிறேன். ஸ்ரீமந்நாராயணனுக்கு ஸர்வவித சேஷவ்ருத்திகளையும் (அடிமைகளையும் ) அவனுகப்புக்குச் செய்யப்பெறுவேனாக வேணும் என்பது த்வயத்தின் திரண்ட பொருள். "ஏழையேதலன்" "அகலகில்லேன்" என்கிற பாசுரங்கள் பூர்வவாக்கியத்துக்கும். "எனக்கேயாட்செய்" "சிற்றம் சிறுகாலே" என்கிற பாசுரங்கள் உத்தர வாக்கியத்துக்கும் விளக்கமாக உள்ளன.

### 3. சரம ச்லோகம்

*ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய மாம் ஏகம் சரணம் வ்ரஜ*

*அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச*

| பதம் | பொருள் |
|---|---|
| ஸர்வ தர்மாந் | மோக்ஷஸாதனமான கர்மஜ்ஞான பக்தி யோகங்கள் முதலிய தர்மங்களையெல்லாம் |
| பரித்யஜ்ய | வாஸனையோடு விட்டு |

| | |
|---|---|
| மாம் | ஸித்த தர்மஸ்வரூபியான என்னை |
| ஏகம் | ஒருவனையே |
| சரணம் | உனக்கு உபாயமாக |
| வ்ரஜ | பற்று (அதாவது ஸித்தோபாயமான என் திருவடிகளையே உபாயமாகப் பற்றுவாயாகில் ) |
| அஹம் | ஸர்வ சக்தியுடைய நான் |
| த்வா | ஸர்வவிதத்திலும் அசக்தனான உன்னை |
| ஸர்வ பாப்பேப்ய: | ஸஞ்சிதம், மேல் சரீரங்களுக்குரிய ப்ராரப்தம் முதலான ஸமஸ்த பாபங்களினின்றும் |
| மோக்ஷயிஷ்யாமி | விடுவித்து என் நித்ய விபூதியிலே உன்னைச் சேர்க்கக் கடவேன். |
| மாசுச : | நீ உன் பாபத்துக்கு அஞ்சி பயப்படாதே. |

இந்த ச்லோகத்தில் அதிகாரியானவன் செய்ய வேண்டுவது எது என்று பூர்வார்த்தத்தால் (முற்பாதியால்) சொல்லப்படுகிறது. உபாயபூதனான ஸர்வேச்வரன் இவனுக்குச் செய்வது உத்தரார்த்தத்தாலே (பிற்பாதியாலே) சொல்லப்படுகிறது.

**பூர்வார்த்தம் - அதிகாரி க்ருத்யம்**

ஸர்வதர்மாந் - எல்லா தர்மங்களையும் என்றவாறு, மோக்ஷ உபாயங்களை உபதேசித்து வருகிற ப்ரகரணமாகையாலே ஐஹிக பலன்களுக்கும் ஸ்வர்காதி போக பலன்களுக்கும் ஸாதனங்களானவற்றைச் சொல்லுகையன்றியே, பகவத் ப்ராப்தி ரூபமான மோக்ஷ பல ஸாதனங்களான கர்ம ஜ்ஞான பத்தியோகங்களையும், மற்றும் மோக்ஷத்திற்கு ஸாதனம் என்னும் புத்தியோடு செய்யப்படுபவையான எல்லாவற்றையும் "ஸர்வதர்ம" சப்தம் சொல்லக்கடவது.

பரித்யஜ்ய -- மேற்கூறிய ஸர்வதர்மங்களையும் நன்றாக விட்டு என்பதாம். பரி-நன்றாக த்யஜ்ய - விட்டு விட்டோம் என்கிற நினைவுமின்றிக்கே மறுவலிடாதபடி வாசனையோடே முழுவதும் விடுகை.

மாம்-ஏகம்-ஸர்வலோக சரண்யனாய், ஜகத்காரணபூதனாய், ஸர்வரக்ஷகனாய், மோக்ஷ ஸாம்ராஜ்யத்துக்கு அதிபதியாய் அடியார்க்கு எளியனாயிருக்கின்ற என்னை ஒருவனையே என்பதாம். ஏகம் என்னும் இந்த ஏவகாரம் நாம் பற்றும் பற்று உபாயமன்று எனக் காட்டும்.

சரணம் வ்ரஜ - (என் திருவடிகளையே) உபாயமாகப் பற்று

உத்தரார்த்தம் - உபாயக்ருத்யம்

அஹம் - நான். சேதனுக்கு அநிஷ்ட நிவ்ருத்தியையும், இஷ்ட ப்ராப்தியையும் கொடுக்கவல்லவனாய், ஆக்கல், அழித்தல், காத்தல், ஆகிய முத்தொழிலை நடத்தும் முதல்வனாய், ஸர்வ சரீரியாய்,

ப்ரஹ்மருத்ராதிகளுடைய மனோவாக்காயங்களுக்கும் எட்டாதவனாய், அகடிதகடநா ஸாமர்த்யத்தை யுடையனாய், ஸர்வஜ்ஞனாய், ஸர்வ சக்தனாய் நிற்கிற நான்.

த்வா - தேஹத்தில் அபிமானமுடையவனாய், பந்துக்கள் பக்கலிலே பற்றுதலை உடையவனாய், ஆத்ம தத்வஜ்ஞான மில்லாதவனாய் அஜ்ஞனாய், அசக்தனாய், பாபத்திற்கு அஞ்சி மயங்கி நிற்கும் சோகாவிஷ்டனான உன்னை.

ஸர்வபாபேப்ய: இஷ்ட விரோதியாயும், அநிஷ்ட ஹேது வாயுமிருக்குமது பாபம். பாபேப்ய: என்கிற பஹு˜வசனம் (பன்மை.) அவித்யை கர்மம் வாஸனை ருசி ப்ருக்ருதிஸம்பந்தம் ஆகியவற்றைச் சொல்லுகிறது. இவை அனைத்திலிருந்தும்,

மோக்ஷயிஷ்யாமி (உன்னை) விடுவிக்கிறேன். நெடுங்காலமாகப் பாபங்களைக் கண்டு நீ நடுங்கின நடுக்கமெல்லாம் உன்னைக்கண்டு அவைதாம் பட்டு, குடல் கரிந்து, நடுங்கும்படி பண்ணக்கடவேன் என்றவாறு.

மாசுச: சோகப்படாதே - உனக்குப் பொருந்தாத உபாயங்களையே விடச்சொன்னோம். நம்மை உபாயமாக நினையென்றோம் நாம் விரோதிகளில் நின்றும் விடுவிக்கிறோம். இனி ஏன் வருந்துகிறாய்? செயல்தீரச் சிந்தித்து வாழ்கிற உனக்குச் செய்ய வேண்டுவதில்லை. சன்ம சன்மாந்தரம் காத்துக் கொண்டுபோய் வீடும்பெறவைக்கை நம் பணியாயிருந்தது நல்வினையும் தீவினையும் ஆகிறவினை பற்றறுக்கும் விதி நாமிட்ட வழக்காயிருந்தது. உன்னைப் பார்த்தோ என்னைப் பார்த்தோ, விரோதிகளைப் பார்த்தோ நீ ஏதுக்கு வருந்துகிறாய்?

முமுக்ஷு˜வான சேதனன் எம்பெருமானையே தஞ்சம் என்று பற்ற வேண்டும் என்றும், ஸ்ரீய: பதியினுடைய ஜ்ஞான சக்திகளாலே உபாய விரோதி நிவ்ருத்தியும் அதனால் உபேயமாகிற பரம புருஷார்த்தமும் ஸித்திக்கும் என்றும் இச்சரம ச்லோகத்தின் கருத்தாகும்.

# இயல் 16

# சிவாலயங்களும் சிவாகமங்களும்

**சைவ சமயம்**

உயிர்கள் நான்கு வகைப்படும். அவை 1. அண்டஜம் 2. சுவேதஜம் 3. பீஜம் 4. கருப்பையில் தோன்றுவன.

இவற்றை ஏழு பிறவி பேதங்களாகப் பிரிப்பர்.

அவை 1. தாவரம் 2. நீர் வாழ்வன 3. ஊர்வன 4. பறப்பன 5. .விலங்குகள் 6.மனிதர்கள். 7.தேவர்கள். எல்லா உயிர்களுக்கும் உணவு, அச்சம், இனச்சேர்க்கை, உறக்கம் எனப்படும் ஆஹார பய மைதுன நித்ரைகள் சமம். ஆயினும் விவேகத்தினால் இன்பத்தை அறுதியிட்டு அதை அடைவதற்குரிய சாதனங்களைப் பெறுபவர் மக்களும் தேவர்களும். மக்களில் சிறந்தோரான முனிவர்களும் தேவர்களில் மேலான இறையவரும் அழிவிலாத பேரின்பத்தைக் காட்டிச் சாதனங்களையும் வகுத்துத் தந்துள்ளனர். அவர்களின் முடிவே சமயம் ஆகும்.

மக்களில் சிறந்தோரால் அமைக்கப்பட்டவை உலோகாயதம், பௌத்தம், ஆர்ஹதம் என்பன. முனிவர்களால் அமைக்கப்பட்டவை நியாயம், மீமாம்ஸை, ஸாங்கியம், யோகம், கணாதம், வேதாந்தம் முதலிய வைதிக மதங்களாம். பாஞ்சராத்திரம், ஹிரணியகர்ப்பம், பாசுபதம் முதலியன தேவர்களாலும் உருத்திரர்களாலும் அமைக்கப்பட்டவை. இனி, முழு முதற்கடவுளான பரமசிவனால் அருளிச் செய்யப்பட்டது சைவமாகும். சிவனால் ஆக்கப்பட்டதால் அப்பெயர் பெற்றது. சிவபிரானால் அருளிச் செய்யப்பட்ட முதல் நூல் வேத, சிவாகமங்கள்.அதில் ஆகமம் ஆன்மாக்கள் மோட்சம் அடைய மலநாசம் செய்விப்பது என்று பொருள்படும். இவை சிவபிரானால் தன்னுடைய பஞ்சமுகங்களிலிருந்தும் தோற்றுவிக்கப்பட்டன. சிவாகமங்களைச் சிவபிரான் உமாதேவியார் கேட்கக் கூறியருளியதாகச் சேக்கிழார் கூறுவர்.

*எண்ணில் ஆகமம் இயம்பிய இறைவர்தாம் விரும்பும்*
*உண்மையாவது பூசனை எனவுரைத்தருள*
*அண்ணலார்தமை அருச்சனை புரிய ஆதரித்தாள்*
*பெண்ணின் நல்லவளாகிய பெருந்தவக் கொழுந்து (பெ.பு. 1128)*

இவ்வாகமம் நான்கு பாதங்கள் உடையன. அவை சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற பாதங்களாம். இந்த நான்கு பாதங்களையும் கொண்ட ஆகமங்களையே மகேந்திர பருவதத்திலிருந்து சிவபெருமான் வெளிப்படுத்தியதாக,

"மன்னுமாமலை மகேந்திரமதனில் சொன்ன ஆகமம்" (திருவா.) என்று மாணிக்கவாசகர் கூறுவர்.

"அண்டர்தமக்கு ஆகமநூல் மொழியும் எம்மாதியை" (தே. 8083) என்று தேவாரம் தெரிவிக்கிறது. சேக்கிழாரும், "உங்கள் நாயகனார் முன்ன முரைத்த ஆகமநூல்" என்று கூறியுள்ளார். ஆகமங்களை உமாதேவியாருக்கு உரைத்ததை

*இணையிலா இடைமாமருதில் எழு*
*பணையிலாகமம் சொல்லும் தன் பங்கிக்கே (தே. 5377)*

என்று திருநாவுக்கரசர் கூறுவர். சிவபிரானே ஆகமநூலின் வடிவில் இருப்பதாகவும் கருதுவர். "ஆகமம் ஆகிநின்று அண்ணிப்பான்தாள் வாழ்க" என்பர் மாணிக்கவாசகர்

சிவபிரானுடைய திருமுகங்கள் ஐந்திலிருந்தும் சிவாகமங்கள் இருபத்தெட்டும் தோன்றின.

| முகம் | திசை | நிறம் |
|---|---|---|
| சத்யோஜாதம் | மேற்கு | வெண்மை |
| வாமதேவம் | வடக்கு | சிவப்பு |
| அகோரம் | தெற்கு | கருமை |
| தத்புருஷம் | கிழக்கு | பொன் |
| ஈசானம் | மேல்நோக்கிய வடகிழக்கு | பளிங்கு |

சிலர் சிவபிரானுடைய ஊர்த்வ முகமாகிய ஈசானத்திலிருந்து 28 ஆகமங்களும் மற்ற நான்கு முகங்களிலிருந்து நான்கு வேதங்களும் தோன்றின என்பர். நான்கு பாதங்களுக்கும் விஷயம் வருமாறு :-

| | |
|---|---|
| சரியா பாதம் | சமய ஆசாரங்கள் |
| கிரியா பாதம் | மந்திரங்களின் உச்சாரணம், ஸந்தியா வந்தன ஜப பூஜாதிகள், சமய, விசேஷ, நிர்வாண, ஆசாரியாபிஷேக தீக்ஷாதிகள் |
| யோக பாதம் | அஷ்டாங்க சிவயோகம் |
| ஞான பாதம் | முப்பொருள் உண்மை |

இவற்றுள் கிரியா பாதமே ஆகமங்களில் சிறப்பான இடம் பெறுகிறது. அதுவே வழிபாட்டு முறைகளை விதிக்கிறது.

*"எய்திய சீர் ஆகமத்தில் இயம்பிய பூசனை"*

என்று சேக்கிழார் கண்ணப்பநாயனார் புராணத்தில் - கூறியுள்ளார். சிவாலயங்களை எழுப்பும் கிரியைகளையும் ஆகமங்களே விரிவாகக் கூறுகின்றன.

*சாதனத்தோடு தச்சர்தம்மையும் மனத்தால் தேடி*
*நாதனுக்கு ஆலயம் செய் நலம்பெறுநன்னாட் கொண்டே*
*ஆதரித்து ஆகமத்தால் அடிநிலை பாரித்து அன்பால்*
*காதலிற் கங்குற்போதும் கண்படாது எடுக்கலுற்றார்*

என்பர் சேக்கிழார் பூசலார் நாயனார் புராணத்தில் (பெ.பு.4181)

திருக்கோயிலுக்கு நிலத்தைத் தேர்ந்தெடுப்பதிலிருந்து (பூகர்ஷணம்) மண்டலாபிஷேகம் வரையிலுமுள்ள கிரியைகளுக்கெல்லாம் ஆகமமே பிரமாணம், அதன் பிறகு நிகழும் நித்திய,நைமித்திக பூசைகளுக்கும் ஆகமமே கருவி நூலாகும்.

சிவ தீக்ஷைபெற்றும் சிவாசாரியார்களாக அபிஷேகம் செய்விக்கப்பெற்றும் பணிபுரியும் அருச்சகர்களை "ஆகமசீலர்கள்" என்று சுந்தரமூர்த்திநாயனார் அழைத்துச் (தே. 8204) சிறப்பிக்கிறார்.

மூல ஆகமங்களுக்கு உப ஆகமங்கள் தோன்றின. வழிபாட்டில் வேதங்களைப் பயன்படுத்தினாலும் ஆகம விதிவழிப் பூஜையே வற்புறுத்தப்படுகிறது. சிதம்பரத்தில் பூஜை செய்யும் அந்தணர்களைப் பற்றி

*அருமறை நான்கினோடு ஆறங்கமும் பயின்றுவல்லார்*
*ஞானமே முதலா நான்கும் நவையறத் தெரிந்து*
*மிக்கார்(பெ.பு.354)*

என்று கூறுவர் சேக்கிழார்.

வேதாகமங்கள் இரண்டும் வழிபாட்டில் கலந்தமையால், வேதாகமநூல் விதி (பெ.பு.1889) என்பர் சேக்கிழார். வேதமும் சித்தாந்தசைவமும் என்னும் இரண்டு உத்தமநூல் என்பர் சிவஞான முனிவர். நீலகண்ட சிவம் என்பாரும் இவ்விரண்டும் செய்த கருத்தன் சிவன் ஒருவனேயாம் என்று கூறுவர். வேதப் பொருளோடு மாறுபடக் கூறும் பாசுபதம் முதலியவற்றை அவர் மறுக்கிறார். திருக்கயிலாயத்திலேயே

*அரவொலி ஆகமங்கள் அறிவார் தோத்திரங்கள்*
*விரவிய வேதவொலி விண்ணெலாம் வந்து எதிர்ந்திசைய*

என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் குறிப்பிடுகிறார்.

ஆகமநெறியில் அமைக்கப்பட்ட சிவாலயங்களிற் சென்று வழிபாடுகளைச் செய்வதால், இரு வினைகள் அகலும். மக்களேயன்றி தேவர்களும் மண்ணுலகிற்கு வந்து சிவபிரானை வழிபட்டு வினைகள் அறப்பெற்றனர். சிவபிரானைத் திருவானைக்காவில் வழிபட்டாள் அம்பிகை, திருச்செங்காட்டங்குடியில் வழிபட்டார் விநாயகர். திருச்சேய்ஞ்ஞலூரில் வழிபட்டார் முருகவேள், சீர்காழியில் வழிபட்டார் பிரம்மதேவர், இராமேச்சுரத்தில் வழிபட்டார் இராமர்.

**சிவபெருமானை வழிபடும் முறைகளாவன.**

1. இயமம், 2. நியமம், 3. ஸந்த்யாவந்தனம், 4. சிவபூஜை, 5. ஸ்தோத்திரம், 6. திருப்பணிபுரிதல், 7. திருக்கோயில் செல்லுதல் 8. குருமொழி போற்றுதல் என்று எட்டு வகைப்படும் என்று சைவ நூல்கள் அறிவிக்கின்றன. இவற்றுள் ஆலயவழிபாட்டை வலியுறுத்தி

*நிலைபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீவா*
*நித்தமும் எம்பிரானுடைய கோயில் புக்குப்*
*புலர்வதன் முன் அலகிட்டு மெழுக்குமிட்டுப்*
*பூமாலை புனைந்தேற்றிப் புகழ்ந்து பாடித்*
*தலையாரக் கும்பிட்டுக் கூத்துமாடிச்*
*சங்கரா சயபோற்றி போற்றி என்றும்*
*அலைபுனல் சேர் செஞ்சடையெம் ஆதி என்றும்*
*ஆரூரா என்றென்றும் அரற்றா நில்லே*

என்று அப்பர்சுவாமிகள் அருளியிருக்கிறார்.

சிவாலய வழிபாட்டிற்குச் செல்லும் முறை யாது? எனின், முதற்கண் நீராடி, தூயதாய் ஆடை அணிந்து, கையுறையாகப் பூவும் நீரும் பொருளும் கொண்டு சென்று, திருச்சுற்றை வலம் வந்து, கொடிமரம், பலிபீடம் விடையேறு ஆகியன வணங்கி, சிவலிங்கம் இடங்கொண்ட கருவறையை அணுகி சாஷ்டாங்கமாக வணங்கிக், கையுறைப் பொருளைச் சமர்ப்பிக்க வேண்டும். சிவ வழிபாட்டிற்குப் பிறகு அம்பாள் ஸந்நிதியை வலம் வந்து கருவறைத் திருச்சுற்றில் தக்ஷிணாமூர்த்தி, லிங்கோத்பவர், வினாயகர், சுப்பிரமணியர், துர்க்கை, சண்டீசர், ஆகியோரை வணங்கி நவகிரகங்களையும் வலமாக வந்து பிற தெய்வக் கருவறைகளையும் கண்டு வணங்கி, மீண்டும் பலிபீடம் விடையேறு ஆகியன கண்டு பஞ்சாங்கமாகவோ அஷ்டாங்கமாகவோ நிலம்தோய விழுந்து மண்டபத்தில் சிறுபோது அமர்ந்து சிவனை நினைந்து எழுந்து புறப்பட்டுச் செல்லவேண்டும்.

**இருவகை வழிபாடுகள்**

**1. பரார்த்த வழிபாடு :** ஆகமங்கள் மற்றும் சிற்பநூல்கள் கூறும் வண்ணம் கோயில்கள் அமைத்து அதில் ஒரு காலமோ நான்கு காலங்களோ, பூசைகள் நிகழ்த்தி உற்சவம் மற்றும் திருக்குட முழுக்குகள் செய்து பொது நன்மைக்காகவும் பேறுபெறுவதற்காகவும் செய்வது.

**2. ஆன்மார்த்த வழிபாடு :** அவரவர் தம் இல்லத்தில் சிவ தீக்ஷைபெற்று லிங்கபூஜை செய்வது

பரார்த்த வழிபாட்டிற்கான சிவாலயங்களை அரசர்கள் ஆகம விதிகளின் படி கட்டினார்கள். கோச்செங்கணான் என்ற சோழ மன்னன் ஒருவனே எழுபது சிவாலயங்கள் கட்டினான்.

*"இருக்கிலங்கு திருமொழிவாய் எண்டோளீசற்கு*
*எழில் மாடம் எழுபதுசெய்துலகமாண்ட*
*திருக்குலத்து வளச் சோழன்"*

என்று அவ்வரசனைப் புகழ்வர் திருமங்கையாழ்வார். (பெ.தி.மொ.)

*"பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும்*
*பெருங்கோயில் எழுபதினோடு எட்டும்"*

என்று திருநாவுக்கரசரும் புகழ்ந்துள்ளார் (திரு அடைவு, திருத்தாண்டகம் 5) சிவாலய வழிபாடு பாமரர்க்கே உரியது என்று சிலர் கருதுவது அறியாமையாகும். சிவஞான சித்தியாரில்

*திருக்கோயில் உள்ளிருக்கும் திருமேனிதன்னைச்*
*சிவன் எனவே கண்டவர்க்குச் சிவன் உறைவன் அங்கே*

என்ற பாடலுக்கு உரையெழுதிய சிவஞான யோகிகள் சிவாலய வழிபாடானது சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கு மார்க்கத்தினருக்கும் வேண்டப்படுவதாகும் என்பர்.

**கோயில் உறுப்புகளும் தத்துவப்பொருளும்**

முதற்கண், கோபுரம் கடவுளின் விராட் சொரூபம், ஸ்தூபி கடவுளின் ஸ்தூலரூபம் (ஸ்தூலலிங்கம்); கருவறையுள் இருப்பது ஸூக்ஷ்ம லிங்கம்

**மண்டபங்கள்**

| | | |
|---|---|---|
| ( 1 ) | கர்ப்பகிருஹம் | சிவதத்துவம் |
| | அர்த்த மண்டபம் | வித்தியாதத்துவம் |
| | மஹா மண்டபம் | ஆத்ம தத்துவம் |

| ( 2 ) | கர்ப்பகிருஹம் | நிவிருத்தி | |
|---|---|---|---|
| | அர்த்த மண்டபம் | பிரதிஷ்டா | என்ற |
| | மஹா மண்டபம் | வித்யா | பஞ்சகலைகள் |
| | அபிஷேக மண்டபம் | சாந்தி | |
| | அலங்கார மண்டபம் | | சாந்தியாதீதை |

அல்லது ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமதேவம், ஸத்யோஜாதம் என்ற பஞ்சப்ரஹ்மங்களையும் குறிக்கும்.

(3) இவற்றோடு சபாமண்டபம் சேர்ந்து, மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அனாஹதம், விசுத்தி, ஆக்ஞை ஆகிய ஷடாதாரங்களைக் குறிக்கும்.

**பிராகாரங்கள் (திருச்சுற்றுகள்) :**

(அ) ஏழு திருச்சுற்றுக்கள் : ரஸம், ரக்தம், மாம்சம், மேதஸ், எலும்பு, மஜ்ஜை, சுக்கிலம், என்ற ஸப்த தாதுக்கள்.

(ஆ) ஐந்து திருச்சுற்றுகள்: அன்னமய, பிராணமய, மனோமய, விக்ஞானமய, ஆனந்தமய பஞ்ச கோசங்கள்

(இ) மூன்று திருச்சுற்றுகள்: ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண தேஹங்கள்

**கதவு**

கடவுளைத் தெரியாவொட்டாது மறைப்பதால் அவித்யை என்றதைக் குறிக்கும். ராகம், துவேஷம், லோபம், மோஹம், மதம், மாத்ஸர்யம், என்பவற்றிற்குக் காரணமாக இருப்பதுவே அவித்யை.

**திரை**

இஃது மாயையினைக் குறிக்கும்.

*குன்றாத மூவுருவாய் அருவாய் ஞானக்*
*கொழுந்தாகி அறுசமயக் கூத்துமாடி*
*நின்றாயை மாயை எனும் திரையை நீக்கி*
*நின்னையார் அறியவல்லார்?*

என்று தாயுமானவர் பாடியிருக்கிறார்.

**கோயில் முழுமை**

| கருவறை | தலை |
|---|---|
| அர்த்தமண்டபம் | முகம் |
| ஸ்நபன மண்டபம் | மார்பு |

| | |
|---|---|
| மகா மண்டபம் | தொப்புள் |
| ஆஸ்தான மண்டபம் | கணுக்கால் |
| கோபுரம் | பாதம் |

**கோஷ்ட தேவதைகள்**

| | |
|---|---|
| தென்புற கோஷ்டத்தில் | தக்ஷிணாமூர்த்தி |
| மேற்குப்புற கோஷ்டத்தில் | லிங்கோத்பவமூர்த்தி |
| வடக்குப்புற கோஷ்டத்தில் | துர்க்கை |

துர்க்கைக்கு எதிரே சண்டேசுரர் இடம் பெறுவர். அவர் தெற்கு முகமாயிருப்பார்.

**சிவலிங்கம்**

லிங்கம் என்ற வடசொற்குக் குறி அல்லது அடையாளம் என்று பொருள். எங்கும் வியாபகமாய் அருவமாய்க் காணமுடியாத இறைவனைக் காண்பதற்குரிய இடமே சிவலிங்கமாகும். சிவலிங்கத்தின் அடிப்பாகம் நாற்கோணமாயிருக்கும். அதற்குப் பிரம்ம பாகம் என்று பெயர். நடுப்பாகம் எண்கோணமாயிருக்கும். அதற்கு விஷ்ணுபாகம் என்று பெயர். அது ஆவுடை என்ற பீடத்தினுள் அமைந்திருக்கும். அதற்கு மேலுள்ளது நீண்ட வட்ட வடிவமான பாகம். ருத்திர பாகம் ஆகும். அகரம் கண்டமும், உகரம் கோமுகமும், மகரம் வட்டமும், பிரணவம் லிங்கமுமாய் இருப்பன. மேலும் சிவஸாதாக்யம், அமூர்த்திஸாதாக்யம், மூர்த்தி ஸாதாக்யம், கர்த்ரு ஸாதாக்யம், கர்மஸாதாக்யம் என்று லிங்கங்களில் பலவகைகள் உள்ளன. இவற்றில் கர்ம ஸாதாக்யம் ஆவுடையுடன் கூடிய சிவலிங்கமாகும்.

ஆவுடையாகிய வேதிகைப் பீடங்கள் பலவகைப்படும். ஸ்தண்டிலம், யக்ஷீ, வாபி, வேதி, மண்டலம், பூர்ணசந்திரன், பத்மம் , அர்த்தசந்திரன், திரிகோணம், பஞ்சிகம், முதலிய வடிவங்களில் பீடங்கள் காணப்படுகின்றன.

**நந்தியும் பலிபீடமும்**

சிவலிங்கத்திற்கு எதிரில் நந்தியும் பலிபீடமும் அமைந்திருப்பதில் சிவலிங்கம் பதி எனவும், நந்தி பசு எனவும் , பலிபீடம், பாசம் எனவும் கொள்ளப்படுகிறது. இத்தகைய திரிபதார்த்தங்களும் அநாதியாம்.

*ஆயபதிதான் அருட்சிவலிங்கமாம்*
*ஆயபசுவும் அடலேறு என நிற்கும்*
*ஆய பலிபீடம் ஆகுநற் பாசமாம்*
*ஆய வரனிலை ஆய்ந்து கொள்வார்க்கே*

என்று திருமூலர் கூறுவது காண்க.

**துவஜஸ்தம்பம் (கொடிமரம்)**

மூலஸ்தானமான தேவ பிம்பத்திற்கு நேராக நிறுத்தப்படும். இது சரீரத்தைக் குறிக்கும். சரீரம் நேராகவிருந்து, இடை பிங்களை நாடிகளின் வழியாய்ப் போய்வரும் பிராண வாயுவை ஸுஷுப்தி முனையாகிய நடுவில் நிறுத்திச் சிறிதும் அசையாது தியானித்தால் பிராணவாயு நிற்கும். அது நிற்க மனம் நிற்கும், மனம் நிற்க ஐம்பொறிகள் நிற்கும். அவை நின்றால் விஷயம் நிற்கும் அதனால் பிரபஞ்சம் தோன்றாதிருக்கப் பரமானந்த ஸ்வரூபியாகிய பரமசிவத்தின் தரிசனம் கிடைக்கும்.

கொடிமரத்தின் 33 கணுக்கள் இருக்கும், சந்தனம் தேவதாரு, சண்பகம், வில்வம், மகிழ் முதலிய மரங்களால் செய்யப்படும். தேவதாருவும் தேக்கு மரமும் உறுதியாயிருப்பனவாகும். ஆலய விழாக்களில் கொடி ஏற்றப்படும். கொடிமரத்தை சிவபெருமானாகக் கொண்டால் கொடிக்கயிறு திருவருட்சக்தியாம், கொடித்துணி ஆன்மாவாம். தருப்பைக் கயிறு பாசமாம். மும்மலத்தின் வயப்படும் ஆன்மா திருவருட்சக்தியால் பாசமற்று சிவஞான வடிவமாகிய பதியின் திருவடியை அடைதலைக் குறிக்கும்.

**பூஜைகள்**

ஆலயத்தினுள் நடைபெறும் பூஜைகள் நித்யம், நைமித்திகம், காம்யம், என்று மூவகைப்படும். பரார்த்தமாக ஆலயத்தினுள் செய்யப்படும் மூவகைப்பூஜைகளையும் அதற்குரியோரான அருச்சகர்களைக் கொண்டு செய்வித்து வழிபடவேண்டும்.

பூஜையானது (1) ஸாங்கம் (2) உபாங்கம் (3) பிரத்யங்கம் என்று மூவகைப்படும்.

ஸாங்கம் என்பது அபிஷேகம், பாத்யம், ஆசமனீயம், அர்க்யம், வஸ்திரம், ஆபரணம், சந்தனம், புஷ்பம், என்று எட்டுக் கொண்டது.

உபாங்கம் என்பது தூபம், தீபம், விபூதி அணிவித்தல், குடை, கண்ணாடி, சாமரம், விசிறி, வியஜனம், நர்த்தனம், கீதவாத்யம் என்று பத்துக்கொண்டது.

பிரத்யங்கம் என்பது நைவேத்யம், பலி, ஹோமம், நித்யோத்ஸவம், சுருங்கோதக தானம், ஸ்வஸ்திவாசனம், என்று ஆறு கொண்டது.

இனி, ஷோடச உபசாரமாவது

| | | | |
|---|---|---|---|
| 1. | அபிஷேகம் | 9 | முகவாசம் |
| | வஸ்திரம் | | வாத்யம் |
| | சந்தனம் | | கீதம் |

| | | | |
|---|---|---|---|
| 4. | புஷ்பம் | 12 | நிருத்தம் |
| | தூபம் | | ஹோமம் |
| | தீபம் | | பலி |
| | நிவேதனம் | | நித்யோத்ஸவம் |
| 8. | தாம்பூலம் | 16 | ஸ்வஸ்திபாடம் |

இவற்றுள் அபிஷேகத்திற்குரிய திரவியங்கள் பற்றி ஆகமங்கள் கூறுவன:-

**(அ) 25 வகை திரவியங்கள்**

| | | | |
|---|---|---|---|
| 1. | சந்தனாதித்தைலம் | 13 | சர்க்கரை |
| 2. | மாப்பொடி | 14 | பழங்கள் |
| 3. | நெல்லிமுள்ளி | 15 | பழரஸம் |
| 4. | மஞ்சள்பொடி | 16 | இளநீர் |
| 5. | ஜலதிரவியம் | 17 | அன்னம் |
| 6. | பஞ்சகவ்யம் | 18 | சந்தனம் |
| 7. | பஞ்சாமிர்தம் | 19 | ஸ்நபனதீர்த்தம் |
| 8. | பசுநெய் | 20 | பில்வபத்ரோதகம் |
| 9. | பசும்பால் | 21 | ஸஹஸ்ரதாரை |
| 10. | பசுந்தயிர் | 22 | ச்ருங்கோதகம் |
| 11. | தேன் | 23 | ரத்னோதகம் |
| 12. | கரும்புச்சாறு | 24 | குசோதகம் |
| | | 25 | விசேஷ அர்க்யதீர்த்தம் |

**(ஆ) 16 வகை திரவியங்கள்**

| | | | |
|---|---|---|---|
| 1. | எள் எண்ணெய் | 9. | நெய் |
| 2. | மாப்பொடி | 10. | தேன் |
| 3. | நெல்லிமுள்ளி | 11. | இக்ஷுரஸம் |
| 4. | மஞ்சள்பொடி | 12. | வாழைப்பழம் |
| 5. | பஞ்சகவ்யம் | 13 | எலுமிச்சை |
| 6. | பஞ்சாமிருதம் | 14 | இளநீர் |
| 7. | பால் | 15. | சந்தனம் |
| 8. | தயிர் | 16. | ஸ்நபன கும்பம் |

**(இ) 12 வகை திரவியங்கள்**

| | | | |
|---|---|---|---|
| 1. | வாசனை எள் எண்ணெய் | 7. | தேன் |
| 2. | பஞ்சகவ்யம் | 8. | கரும்புச்சாறு |

| | | | |
|---|---|---|---|
| 3. | பஞ்சாமிருதம் | 9. | பழரஸம் |
| 4. | நெய் | 10. | இளநீர் |
| 5. | பால் | 11. | சந்தனம் |
| 6. | தயிர் | 12. | ஸ்நபனகும்பம் |

இந்தத் திரவியங்களின் அளவுகளையும் ஆகமங்கள் வரையறைசெய்துள்ளன. எண்ணெயின் அளவை அடிப்படையாகக் கொண்டு மற்ற பொருள்களின் அளவுகள் கொள்ளப்படுகின்றன. ஒவ்வொருவகை திரவியத்தாலும் செய்யப்படும் அபிஷேகத்திற்கு ஒவ்வொரு பலனை ஆகமங்கள் கூறுகின்றன.

| | |
|---|---|
| தைலம் | சுகம் |
| மாப்பொடி | கடன்நிவாரணம் |
| நெல்லிமுள்ளி | வியாதிநாசம் |
| மஞ்சள்பொடி | வசீகரணம் |
| ஜலதிரவியம் | ஸௌபாக்யம் |
| பஞ்சகவ்யம் | தூய்மை |
| பஞ்சாமிருதம் | வெற்றி |
| நெய் | மோட்சம் |
| பால் | ஆயுள் விருத்தி |
| தயிர் | புத்திரபாக்கியம் |
| தேன் | சுகம் |
| கரும்புச்சாறு | பிணிநீக்கம் |
| சர்க்கரை | பகைவர் அழிவு |
| வாழைப்பழம் | தானியலாபம் |
| மாம்பழம் | மகப்பேறு |
| மாதுளை | கோபம் அழிவு |
| இளநீர் | இன்பம் |
| சந்தனம் | திருமகள் அருள் |
| பத்ரோதகம் | அச்சம் அகலல் |

**ஆடை (வஸ்திரம்)**

முற்பகலில் வெள்ளை, நடுப்பகலில் சிவப்பு, மாலையில் மஞ்சள், அர்த்தஜாமத்தில் கறுப்பு வஸ்திரங்களை சிவலிங்கத்துக்கு அணிவிக்கவேண்டும். வெள்ளை வஸ்திரம் எல்லாக் காலத்திலும் சார்த்தலாம். சிவலிங்கத்திற்கு வஸ்திரம் சார்த்தினால் அதிலுள்ள நூலிழைகளின் அளவுள்ள காலம் உயர்ந்த பதவிகள் கிடைக்கும்.

**புஷ்பங்கள்**

ஒவ்வொரு கால பூஜைக்கும் உரிய புஷ்பங்களை ஆகம நூல்கள் விதித்துள்ளன. நறுமணம் இல்லாதவை, அதிகமான நறுமணமுள்ளவை, புழுதீண்டியவை, வாடியவை, தகாதவர்கள் தீண்டியவை, மலர்த்தப்பட்டவை, அசுத்தமான பாத்திரத்தில் சேர்க்கப்பட்டவை, பூமியில் விழுந்தவை ஆகிய மலர்கள் பூஜைக்கு விலக்கப்பட்டவையாகும். மொட்டுக்களில் சண்பகமொக்கு தவிர மற்ற புஷ்பங்களின் மொக்குகள் ஆகா.

**ஆகாத மலர்கள்**

திருமாலுக்கு ஆகாத மலர்கள் - வெள்எருக்கு, ஊமத்தை, வில்வம்

சிவனுக்கு ஆகாத மலர்கள் - செம்பருத்தி, தாழம்பூ, குடஜம், துளசி

பார்வதிக்கு ஆகாத மலர்கள் - அறுகு, வெள்ளெருக்கு, மந்தாரை, துளசி

விநாயகருக்கு ஆகாத மலர்கள் - துளசி

**தூபம் (திருப்புகை)**

தூபத்தின் சேர் பொருளைக் காரணாகமம் கூறியுள்ளது. சந்தனம் 7 பங்கு சாம்பிராணி 6, குங்கிலியம்5, குங்குமப்பூ 4, கோரைக் கிழங்கு 3, அகரு 2, பச்சைக்கற்பூரம் 1 பங்கு சேர்த்துக் கொஞ்சம் நெய்யுடன் கூட்டிப் போடும் தூபத்துக்கு சீதாரிதூபம் என்று பெயர்.

**தீபங்கள் 16 வகை**

| | |
|---|---|
| தூபம் | கஜதீபம் |
| தீபம் | வியாக்ர தீபம் |
| அலங்கார தீபம் | ஸிம்ம தீபம் |
| நாக தீபம் | துவஜ தீபம் |
| விருஷப தீபம் | மயூர தீபம் |
| புருஷாமிருக தீபம் | பூர்ண கும்ப தீபம் |
| சூலதீபம் | நக்ஷத்திர தீபம் |
| கமடதீபம் | மேரு தீபம் |

இவற்றின் நிருமாணத்தையும் பலன்களையும் ஆகமங்களிற் காணலாம்.

**நிவேதனம் (அமுது படைத்தல்)**

திரைபோட்டு நிவேதனம் செய்யவேண்டும். திரை போட்ட பிறகு தரிசனம் கூடாது. நிவேதனத்தை எட்டு பாகம் செய்து

| | | |
|---|---|---|
| சிவனுக்கு | 2 | பாகம் |
| சக்திக்கு | 1 | பாகம் |
| விநாயகருக்கு | 1 | பாகம் |
| ஸ்கந்தனுக்கு | 1 | பாகம் |
| பலி, அக்னிகார்யம் | 1 | பாகம் |
| இவற்றுக்கு } ஆசாரியனுக்கு | 1 | பாகம் |
| பரிசாரகனுக்கு | 1 | பாகம் |

என்று கொடுக்கவேண்டும். மேலும்,

**பஞ்சமுகான்னம்**

| | | | | |
|---|---|---|---|---|
| ஈசானம் | - சுத்தான்னம் | ஞாயிறு | - | பாயஸம் |
| தத்புருஷம் | - தயிரமுது | திங்கள் | - | வெண்பொங்கல் |
| அகோரம் | - எள்அமுது | செவ்வாய் | - | எள்ளோரை |
| வாமதேவம் | - சருக்கரை அமுது | புதன் | - | சர்க்கரைப் பொங்கல் |
| ஸத்யோஜாதம் | - பால் அன்னம் | வியாழன் | - | தயிர்சாதம் |
| | | வெள்ளி | - | சுத்தான்னம் |
| | | சனி | - | எள்ளோரை |

இவ்வாறு படைத்தால் போக போக்யங்கள் உண்டாகும்.

**தாம்பூலம்**

குற்றமில்லாத பாக்கு, வெற்றிலை, சங்கசூரணம், கற்பூரம், ஜாதிக்காய், பத்திரி, இலவங்கம் சேர்த்து நிவேதனம் செய்யவேண்டும்.

| | | |
|---|---|---|
| வெற்றிலையின் | நுனியில் | லக்ஷ்மியும் |
| வெற்றிலையின் | நடுவில் | சரஸ்வதியும் |
| வெற்றிலைக் | காம்பில் | மூதேவியும் |

வாசம் செய்வதால் காம்பும் பின்புறமும் நீக்கி ஸமர்ப்பிக்கவேண்டும்.

**முகவாஸம்**

ஏலம், சந்தனம், பச்சைக்கற்பூரம், இவற்றுடன் பாதிரி, நெய்தல், புஷ்பங்களுடன் கூடிய குளிர்ந்த ஜலத்தை அர்ப்பணம் செய்யவேண்டும்.

| **பண்கள்** | **பண்** | **இராகம்** |
|---|---|---|
| காலையில் | காந்தாரம் | வராளி |
| உச்சியில் | சீகாமரம் | பைரவி |
| மாலையில் | பஞ்சமம் | வேளாவல்லி |
| அர்த்தஜாமத்தில் | கைசிகம் | [illegible]கிரி |

**பரிவார தேவதைகள்**

துர்க்கைக்கு எதிரே தென்முகமாக சண்டேசர் மற்றும் ஸோமாஸ்கந்தர், சபாபதி, பைரவர், போன்ற சிவதிருக்கோலங்களும் சுற்றுத் தெய்வங்களாகப் பிரதிஷ்டை பெற்றுள்ளனர். மேலும் சமய குரவர்களையும் நாயன்மார்கள் அறுபத்து மூவரையும் ஸ்தாபித்திருக்கக் காணலாம். பிற்காலத்தே நவகிரகங்களை பிரதிஷ்டை செய்யும் மரபு ஏற்பட்டது. சிவலிங்கமே பிரதான தெய்வமாக விளங்கிய நிலைக்கு மாறாகப் பிற்காலத்து விநாயகர் முருகன் போன்ற பரிவார தேவதைகள் முதன்மையாக வழிபடப்பட்டனர்.

**பிரதான தெய்வம் சிவலிங்கம்**

அகிலமே அண்டலிங்கமாகும்
சரீரமே பிண்ட லிங்கமாகும்
ஆன்மாவே ஆத்மலிங்கமாகும்

பஞ்சபூதங்களையும் லிங்கசொரூபமாக ஆகமங்கள் விளக்குகின்றன. பஞ்ச பூத ஸ்தலங்கள் என்ற வழிபாட்டுநிலையும் உருவாகியது.

| | |
|---|---|
| திருவாரூர் | பிருதிவிலிங்கம் |
| திருவானைக்கா | அப்பு லிங்கம் |
| திருவண்ணாமலை | தேயு லிங்கம் |
| திருக்காளத்தி | வாயு லிங்கம் |
| திருத்தில்லை | ஆகாச லிங்கம் |

**லிங்கம் அமைக்கப்படும் பொருள்**

1. சைலஜம் (கல்)
2. ரத்னஜம் (இரத்தினம்)
3. லோகஜம் (உலோகம்)
4. க்ஷணிகம் (அரிசி, மணல், விபூதி, சந்தனம்)

**லிங்கத்தின் வகைகள்**

1. சுயம்பு லிங்கம் (தானாகவுள்ளது, முரடானது, ரேகையற்றது)
2. தேவிக லிங்கம் (அம்பிகையால் வழிபடப்பெற்றது)
3. திவ்விய லிங்கம் (தேவர்களால் வழிபடப்பெற்றது)
4. மானுட லிங்கம் (மனிதர்களால் வழிபடப்பெற்றது)
5. ஆர்ஷக லிங்கம் (ரிஷிகளால் வழிபடப்பெற்றது)
6. பாண லிங்கம் (யமுனை, கங்கை, நருமதை நதிகள், நேபாளம், கேதாரம், முதலிய இடங்களில் பாணாசுரனால் வழிப்படப்பெற்றவை)

7. ராக்ஷஸலிங்கம் (அரக்கர்களால் வழிபடப்பெற்றவை)

பொதுவாக, சிவலிங்கம் மூன்று பகுதிகளையுடையது . அடிப்பகுதி தேவியையும் மேற்பகுதி சிவனையும் குறிக்கும். அடிப்பகுதியை இரண்டாகப் பிரித்துப் பிரமனையும் திருமாலையும் குறிக்கும் என்பர். குமரி மாவட்டத்திலுள்ள சுசீந்திரம் கோயிலிலுள்ள சிவலிங்கமானது தாணுமாலயமூர்த்தி என்று அழைக்கப்படுகிறது. தாணு மால் அயன் என்று பிரிக்கப்பட்டு இவ்வாறு பொருள் கொள்ளப்படுகிறது. இவ்வடிவத்தினைச் சம்பந்தரும்

*பாதியோர் மாதர் மாலுமோர் பாகர்*
*பங்கயத்து அயனுமோர் பாலர்*

என்று வருணிப்பர். இலிங்கத்திருமேனியில் ஆறு அத்துவாக்கள் , திரிமூர்த்திகள், முப்பத்தாறுதத்துவங்கள் அடங்கியிருப்பதாகச் சாத்திரங்கள் கூறுகின்றன.

இறையுருவை அருவம், அருவுருவம், உருவம், என்று மூன்று வகைகளாகப் பிரிப்பர். சைவசித்தாந்த சாத்திரங்கள் சிவலிங்கத்தை அருவுருவாகவே கருதுகின்றன. ஆனால் நடைமுறையில் இலிங்கத்தை அருவத்திருமேனி என்றும் முகலிங்கத்தை அருவுருவத்திருமேனி என்றும் நடராஜர் சோமாஸ்கந்தர் போன்ற மூர்த்தங்களை உருவத்திருமேனி என்றும் கொள்வர்.

சிவலிங்கத்தை சதாசிவமூர்த்தமாகவும் பிறமூர்த்தங்களை மகேசுவர மூர்த்தமாகவும் கூறும் மரபும் உண்டு. இவை 25 வகைப்படும். அவையாவன

| | | | |
|---|---|---|---|
| 1. | சந்திர சேகரர் | 2. | உமாசகாயர் |
| 3. | இடபாரூடர் | 4. | நடராஜர் |
| 5. | கல்யாணசுந்தரர் | 6. | பிட்சாடனர் |
| 7. | காமாரி | 8. | காலாரி |
| 9. | திரிபுராரி | 10. | ஜலந்தரர் |
| 11. | கஜாரி | 12. | வீரபத்திரர் |
| 13. | ஹரியர்த்தமூர்த்தி | 14. | அர்த்தநாரி |
| 15. | கிராதமூர்த்தி | 16. | கங்காளர் |
| 17. | சண்டேசாநுக்கிரகர் | 18. | நீலகண்டர் |
| 19. | சக்ரதாதா | 20. | விக்னப்பிரசாதர் |
| 21. | சோமாஸ்கந்தர் | 22. | ஏகாபாதமூர்த்தி |
| 23. | சுகாசனர் | 24. | தட்சிணாமூர்த்தி |
| 25. | இலிங்கோத்பவர் | | |

இவற்றுள் சில மூர்த்தங்களைப் பற்றி இனிக் காண்போம்

**1. நடராஜமூர்த்தி :**

இவரை சபாபதி என்று வழங்குவர். இவர் நான்கு திருக்கரங்களைக் கொண்டவர். எட்டுத் தோள்களையுடையவர் என்றும் கூறுவர். பெரும்பாலான திருவுருவங்களில் நான்கே திருக்கரங்கள் உள்ளன. சிதம்பரத்தில் நான்கு திருத்தோள்களே உள்ளன. இத்திருவுருவின்கண், இடக்கால் தூக்கப்பட்டு, வலக்கால் முயலகன் மீது ஊன்றியிருக்கும். முன்புற இடக்கை தண்டாக நீண்டு உடம்பைச் சார்ந்து முன்னால் சிறிது வளைந்து தொங்கும். பின்புற இடக்கை நெருப்பை ஏந்தியிருக்கும். முன் வலக்கை அபயம் அளிக்கும். பின் வலக்கை துடியை ஏந்தியிருக்கும். புன்முறுவல் பூத்தமுகம், தலையில் ஜடை தரித்த கோலம் மூன்று கண்கள் சிவந்த திருமேனி : இவருடையது ஐந்தொழில் நடனம். அதாவது பஞ்சகிருத்தியம் அவையாவன

| | |
|---|---|
| கையிலுள்ள துடி | படைப்பு |
| அபயமுத்திரை | காப்பு |
| கையிலுள்ள நெருப்பு | அழிப்பு |
| முயலகன்மீதுள்ள பாதம் | மறைப்பு |
| தூக்கிய திருவடி | அருளல் |

இதனையே ஆனந்த தாண்டவம் என்பர்.

சில கோயில்களில் நடராஜர் திருவுருவத்தில் இடதுகாலை ஊன்றி வலதுகாலைத் தூக்கியவாறும் உள்ளது. மதுரை ஆலவாயில் வெள்ளியம்பலத்தில் அவ்வாறு கால் மாறாடி ஆடுகிற திருக்கோலம் காணப்படுகிறது. நடராஜருடைய பிறிதோர் நடனம் ஊர்த்துவதாண்டவம் ஆகும். இதனை ஸம்ஹாரதாண்டவம் என்றும் கூறுவர்.

தில்லைக்கண் சிதம்பரத்தில் பொன்னம்பலத்தில் நடராஜருடைய நடனம் நிகழ்கிறது. சிதம்பரம் என்றால் சித்- ஞானம் அம்பரம் - வெளி. எனவே, ஞான ஆகாச வெளியில் நிகழ்வது சிவதாண்டவம் என்பதாகும். பஞ்ச பூத ஸ்தலங்களில் சிதம்பரம் ஆகாசஸ்தலம் என்பதும் கருதத்தக்கது. இங்குள்ள சபைக்கு ஏறிச் செல்லும்படி பஞ்சாக்ஷரப்படி என்றழைக்கப்படுகிறது. பஞ்சாக்ஷர தியானத்தில் கூத்தப் பெருமானை வழிபடல் இயலும். ஸ்தூலமான தாண்டவத்தையடுத்து சூட்சுமமான தாண்டவமும் அருகிலேயே நடைபெறுகிறது. இதுவே சிதம்பர ரஹஸ்யம் எனப்படும். இங்குத் திரையொன்று மறைந்திருக்கும். உள்ளே ஒன்றும் இராது. பொன்னால் செய்த வில்வ இலையினால் வெளி ஒன்று மறைக்கப்பட்டிருக்கும். அங்குதான் இறைவனுடைய ஸூக்ஷ்மதாண்டவம் நடைபெறுகிறது. இஃது எங்கும் நிகழ்பெறுவதாகத் திருமூலம் குறிப்பிடுவர்.

*எங்கும் திருமேனி எங்கும் சக்தி*
*எங்கும் சிதம்பரம் எங்கும் திருநட்டம் (திருமந். 2722)*

சிவ திருக்கூத்தை யோகநிஷ்டர்கள் வழிபடும் போது திருச்சிலம்பின் ஓசை கேட்கும் என்று பெரியோர் பகருவர்.

மார்கழித் திருவாதிரை, ஆனி உத்திரம், சித்திரைத் திருவோணம், ஆவணி சுக்ல சதுர்த்தி, புரட்டாசி சதுர்தசி, மாசி பூர்வ சதுர்தசி ஆகிய நாட்களில் சிதம்பர தரிசனம் செய்வது விசேடமாகும்.

### 2. கல்யாண சுந்தரர் (மணவழகர்)

பிறை மௌலிப் பெருமான் உலகறிய உமாதேவியாரைத் திருமணம் செய்து கொண்டார். மாணிக்கவாசகரும் இதனை,

*மலையரையன் பொற்பாவை வாணுதலாள்*
*பெண்திருவை உலகறியத் தீ வேட்டான்*

என்று திருச்சாழல் பதிகத்தில் குறிப்பிடுகிறார். தமிழ்நாட்டுச் சிவாலயங்களில் இரண்டு வகைப் படிமங்கள் காணப்படுகின்றன. ஒன்று, சிவபிரான் நான்கு திருக்கரங்களுடன் வலப்பக்கத்தில் உமாதேவி மணக்கோலத்தில் நிற்க, அருகில் வலப்புறம் திருமால் இலக்குமியுடன் நிற்க இவர்களுக்கு முன்னால் நான்முகன் தீவேட்க இருப்பதாகும். மற்றது சிவபிரான் இரண்டு அல்லது நான்கு திருக்கரங்களுடன் வலப்பால் உமாதேவி மணக்கோலத்தில் இருப்பதாகும். திருமணஞ்சேரி, திருவேள்விக்குடி, திருவீழிமிழலை, பந்தணை நல்லூர் ஆகிய தலங்களில் கல்யாண சுந்தரரின் அழகிய திருவுருவங்களைத் தரிசிக்கலாம்.

### 3. பிட்சாடனர் (பிச்சைத் தேவர் )

தாருகாவனத்து இருடிகளுக்கு நல்லுணர்வு உண்டாக்கச் சிவபிரான் திகம்பரராய்க் கையில் பிரமனது மண்டை ஓட்டை ஏந்தி இல்லந்தோறும் பிச்சை எடுக்க எழுந்தருளிய கோலம் இதுவேயாம். இதில் உமாதேவியின் சேர்த்தி இருக்காது.

*அடியில் தொடுத்த பாதுகையும்*
*அசைந்த நடையும் இசைமிடறும்*
*வடிவிற்சிறப்ப நடந்தருளிமுழையேந்தி*
*மருங்கணைந்த*
*தொடியிற் பொலிந்தோள் முனி மகளிர்*
*அரமங்கையரை மயல்பட்டில்*
*படியிட்டெழுதாப் பேரழகாற்*
*பலிதேவர் பகவன் திகழ்தருவர்*

என்று பிட்சாடனர் திருவுருவைக் காஞ்சிப் புராணம் வருணிக்கும்.

### 4. தட்சிணாமூர்த்தி (தென்முகக்கடவுள்)

ஞானகுரு வடிவத்தில் கல்லால மரத்தின் கீழ் தெற்கு முகமாக இருந்து சனகர், சனந்தனர், சநாதனர், சனத்குமாரர் ஆகிய பிரம்ம

புத்திரர்களுக்கு உபதேசம் செய்யும் திருக்கோலத்தில் தட்சிணாமூர்த்தி எழுந்தருளியிருப்பார். வலக்கரத்தில் சிந் முத்திரை உள்ளது. சுட்டுவிரல் - உயிர், பெருவிரல் - சிவன், மற்றவை மூன்றும் ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களாம். இவற்றிலிருந்து விடுபட்டுச் சிவனோடு சேர்ந்துவாழும் வகை காட்டுவதே உபதேச முத்திரையாகும். இத்திருக்கோலத்தில் நான்கு முத்திரைகள் உண்டு. ஒரு கையில் உடுக்கை, ஒரு கையில் நெருப்பு, ஒரு கையில் சுவடி, ஒரு கையில் சிந்முத்திரை, வலது காலை பூதத்தின் மீது வைத்துக் கொண்டு, மற்றொரு காலை வலது தொடை மீது போட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்கும் தட்சிணாமூர்த்தியின் பின்புறம் ஆலமரம் இருக்கும்.

## 5. சோமாஸ்கந்த மூர்த்தி

கூத்தப் பெருமானுக்கு அடுத்தபடியாக வழிபடப் பெறுவது இம் மூர்த்தியேயாகும். உமையோடும் கந்தனோடும் கூடிய மூர்த்தியாயிருக்கும். இவர் எப்போதும் கிழக்கு நோக்கியே ஸந்நிதி கொண்டிருப்பர். திருவிழாக்காலங்களில் ரிஷப வாகனத்திலோ அன்றித் தேரிலோ எழுந்தருள்வர். திருக்கல்யாண உற்சவமும் இவருக்குச் செய்வதுண்டு. சதாசிவ மூர்த்தியின் கிழக்கு நோக்கிய தத்புருஷ மூர்த்தியே சோமாஸ்கந்தராக உயிர்களுக்கு போகத்தை அளிப்பதாகக் கூறுவர். புராண இதிஹாஸங்களை உமாதேவியாருக்கு உபதேசித்தவர் இவரே.

## 6. சந்திரசேகர மூர்த்தி

இவர் பிறை சூடியவர். நின்ற திருக்கோலம், நான்கு திருக்கரங்கள், வலது மேற்கையில் மழுவும் இடது மேற்கையில் மானும், வலது கீழ்க்கையில் அபயமுத்திரையும் இடது கீழ்க்கையில் வரதமுத்திரையும் இருக்கும். அருகில் இரண்டு கரங்களுடன் அம்பிகை நிற்கிறாள். இவரே ஸ்ரீ பலிபேரர். பௌர்ணிமை, அமாவாசை, மாதப்பிறப்புக்களில்வீதிவலமாக எழுந்தருள்வர். பிரதோஷங்களிலும் வலம் வருவர். இவருக்குப் பிரதோஷநாயகர் என்ற பெயரும் உண்டு.

## 7 காமாரி (காமதஹன மூர்த்தி)

உமையில்லாத மகேசுவர மூர்த்தங்களில் இஃது ஒன்றாகும். சிவபிரான் உமாதேவியாரைப் பிரிந்து சனகாதியருக்கு அறம் உரைத்து நிஷ்டையில் இருந்த போது தேவர்கள் தூண்டுதலால் காமன் மலர்க்கணைகளை எய்தான். அப்போது சிவபிரான் எரிவிழியால் நோக்கக் காமன் சாம்பலானான். இவ்வரலாறு நிகழ்ந்த தலம் அட்டவீரட்டானத் தலங்களில் ஒன்றான சோழநாட்டுத் திருக்குறுக்கையாகும். இக் காமாரியின் செப்பு வடிவம் அங்கு நான்கு கரங்களுடன் அமர்ந்த கோலத்தில் யோகீசுவரர் என்ற பெயருடன் விளங்குகிறது.

**8. காலாரி (கால ஸம்ஹாரமூர்த்தி)**

மார்க்கண்டேயனைக் காத்தருளச் சிவபெருமான் வெளிப்பட்டுக் காலனைக் காலால் உதைத்த வடிவமாகும். இவ்வரலாறு நிகழ்ந்த தலம் திருக்கடவூர். தாமரை ஆசனத்தில் நின்ற நிலை, வலக்கால் இயல்பாகத் தாமரையில் படிய இடது கால் சற்றுத் தூக்கிக் காலனுடைய மார்பில் வைக்கப்பட்டிருக்கும். கோரைப் பற்களுடன் திருமுகம், சடைமுடி, முக்கண், நான்கு அல்லது எட்டு கரங்கள் இருக்கும்.

**9. பைரவர்**

இவரை க்ஷேத்திரபாலர் என்பர். செஞ்சடை, நீலநிறம், திருவடிகளில் சிலம்பு, மார்பில் தலைமாலை, கைகளில் சூலம் மழு பாசம் மற்றும் உடுக்கை காணப்படும். மூன்று கண்கள், கோரைப் பற்கள், சீற்றமான முகம், ஊழிக்காலத்து சம்ஹாரம் செய்பவர். நான்கு வேதங்கள் நாய் வடிவுடன் இவருக்கு வாகனமாயிருக்கும்.

**விநாயகர்**

சிவலிங்கப் பிரதிஷ்டையே செய்து வழிபட்டு வந்த சைவர்கள் பிற்காலத்தே வினாயகர் திருவுருவையும் சிவ மூர்த்தமாகக் கொண்டு வழிபடலாயினர். வினாயகரைச் சிவனுடைய மகனாகவே சைவ சமய குரவர்கள் கருதினர். தீயோரை வருத்தி, வழிபடுவோரின் துயர் தீர்க்கும் விநாயகரை மகனாக அருளிய சிவபெருமானைப் போற்றினர்.

*பிடியதன்உரு உமைகொள மிகுகரியது*
*வடிகொடு தனது அடி வழிபடும் அவரிடர்*
*கடி கணபதி வர அருளினன் மிகுகொடை*
*வடிவினர் பயில் வலிவல முறை இறையே* **(முதல்திரு.1330 )**

என்று வலிவலத்தில் உறையும் சிவபிரானைச் சம்பந்தர் பாடியுள்ளதைக் காணலாம்.

திருநாவுக்கரசரும்

*பலபல காமத்தராகிப் பதைத்தெழுவார் மனத்துள்ளே*
*கலமலக்கிட்டுத் திரியும் கணபதி என்னும் களிறும்*
... ... .. ..
*நலமார் கெடிலப் புனலும் உடையார் ஒருவர்* **(நான்.திரு.4173 )**

என்று சிவபிரானையே துதிக்கிறார். சிவனை வழிபடும் விநாயகரையே அவர்கள் போற்றினர்.

பிற்காலத்தே வந்த திருமுறை ஆசிரியர்கள் விநாயகரையும் போற்றிப்பாடுகின்றனர். விநாயகரைச் சிவ மூர்த்தமாகவே கொண்டு பாடவும் தொடங்கினர். சிவனுடைய திருவுருவிலிருந்து முதற்கண் புறப்பட்ட வடிவம் என்று கருதினர்.

*விநாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்*
*விநாயகனே வேட்கை தணிவிப்பான் - விநாயகனே*
*விண்ணிற்கும் மண்ணிற்கும் நாதனுமாம் தன்மையினால்*
*கண்ணிற் பணிமின் கனிந்து*

என்று கபிலதேவ நாயனார் பாடியுள்ளார்.

**இவருடைய உருவம்**

ஐந்து கரங்கள், யானை முகம், தேவசரீரம், தும்பிக்கை தவிர்த்த கைகளில் பாசம், அங்குசம், தந்தம், மோதகம் அல்லது பழம் ஆகியவற்றை ஏந்தியிருப்பர். மூஷிக வாகனம், பொதுவாக பிரம்மசரிய திருக்கோலம், சில சமயம் மடியில் சக்தியோடு விளங்கும் வல்லப கணபதியாகவும் காணப்படுவார். இவருக்கு சித்தி, புத்தி என்ற தேவிமாரையும் விநாயக புராணம் கூறும். இடையின் கீழ் பூத உடல், இடைக்கு மேல் கழுத்து வரை தேவ உடல், தலை விலங்கின் தலை, ஓங்கார வடிவம், பூதகணங்களுக்கு அவரே பதியாதலால் கணபதியாவார். விக்கினத்தை ஏற்படுத்துவர் ஆதலால், முதற்கண் இவரை வழிபட்டுச் சாந்தி செய்வர்.

தமிழகத்தில், கி.பி. 7ஆம் நூற்றாண்டில் விநாயகர் வழிபாடு நுழைந்ததாக வரலாற்றறிஞர் கருதுவர். சிறுத் தொண்டரே திருச்செங்காட்டங் குடியில் வாதாபியிலிருந்து கொண்டுவரப் பட்ட கணபதியை பிரதிட்டை செய்து வழிபட்டார். பழமையான விநாயகர் உருவங்களில் இரண்டு கரங்களே உள்ளன. பிள்ளையார் பட்டியில் இவ்வாறே உள்ளது. பிள்ளையாருக்குத் தனி சந்நிதிகளும் கோயில்களும் பிற்காலத்தில் கட்டப்பட்டன.

**முருகன்**

சிவபிரானின் மகனாகவும் சிவனை வழிபடுவோனாகவுமே சைவ சமய குரவர்கள் குறிப்பிட்டுள்ளனர். "நம் கடம்பனைப் பெற்றவள் பங்கினன்" என்பர் திருநாவுக்கரசு நாயனர். முருகனைப் பற்றிய பாடல்கள் 9,11 ஆம் திருமுறைகளில் இடம் பெற்றன. சுப்பிரமணியன் என்பது 9ஆம் திருமுறையில் வருகிறது. திருமுருகாற்றுப்படை 9ஆம் திருமுறையில் சேர்க்கப்பட்டது. சிவனே தன்னுடைய ஐந்து முகங்களோடு அதோ முகமும் கொண்டு ஆறுமுகமாகத் தோன்றியதாகத் திருமூலர் குறிப்பிடுகிறார்.

**திருவுருவம்**

வள்ளியும் தெய்வயானையும் இரு புறமும் நிற்பர். கையில் வேல் ஏந்தி மயில் வாகனத்தில் வீற்றிருப்பது ஒரு திருக்கோலம். ஆறுமுகங்களும் பன்னிரண்டு திருக்கைகளும் கொண்டிருப்பது மற்றொரு திருக்கோலம். தனியே வேல் ஏந்தி பாலமுருகனாகவும் ஒரு திருக்கோலம் உண்டு. தண்டாயுதம் தாங்கிய ஆண்டியின் திருக்கோலமும் உண்டு. வள்ளி தெய்வயானை, வேலாயுதம் ஆகிய மூன்றும் இச்சா, கிரியா, ஞான சக்திகளைக் குறிக்கும். இத்திருக்கோலங்களில் வழிபட்டாலும் முருகனைச் சிவ சொரூபமாகவே வழிபட வேண்டும் என்பர் கச்சியப்பசிவாசாரியர். முருகனைப் பூசிப்போர் சிவ தீக்ஷையோடு குகதீக்ஷையும் பெறும் முறை உருவாகியது. இதனைக் குமார தந்திரம் என்னும் நூல் கூறுகிறது. சிவ பஞ்சாட்சரத்துக்குச் சமமாக முருகனுடைய ஷடக்ஷரி மந்திரம் செபிக்கப்படலாயிற்று.

## தேவி வழிபாடு

சிவபெருமானின் ஒரு கூறாகவே தேவி பார்க்கப்பட்டாள். தனிப்பட்டு வழிபடுவது பண்டைச் சைவரிடத்தில் கிடையாது. நால்வர் பாடல்களிலும் தேவிக்குத் தனிப்பட்ட தோத்திரம் இல்லை. பிற்காலத்தில் தேவியைத் தனிக்கோயில் கட்டி நிறுவி வழிபடத் தொடங்கினர். இவையாவும் சிவாலயங்களே. முதலில் சந்நிதிகள் ஏற்பட்டு அவை பெருக்கப்பட்டுக் கோயில்களாயின. பழைய தேவி சந்நிதிகளில் காளை வாகனமே காணப்படும். பிற்காலத்தில் சிங்கவாகனம் தோன்றியது. சாக்த சம்பிரதாயங்கள் தழுவப்பட்டன.

**திருவுருவம்**

சிவன் அருகில் நின்ற கோலம். பெரும்பாலும் இரண்டு கரங்கள். நான்கு கரங்களும் உண்டு. மீனாட்சி அம்மனுக்கு இரண்டு திருக்கரங்களே உள்ளன. நான்கு கரங்களானால் இரண்டு கைகளில் பாசம், அங்குசமும், இரண்டு கைகளில் வரத, அபய முத்திரைகளும் அமையும். அப்போது மூன்று கண்களோடு கூடியிருக்கும். இரண்டு கைகளே இருந்தால், ஒரு கை தொங்கவிடப்பட்டு மற்றொரு கையில் மலர் ஏந்தப்பட்டிருக்கும். அப்போது இரண்டு கண்களோடு கூடியிருக்கும். இவ்வாறு உத்தரகாமிக ஆகமத்தில் கூறப்பட்டிருக்கின்றது. கையில் கிளி, கண்ணாடி, சூலம் போன்ற பொருள்களை ஏந்திய திருக்கோலங்களும் ஆலயங்களில் காணப்படுகின்றன.

**சிவாலய நித்திய நைமித்திக காமிய பூஜைகள்**

பூஜைகள் (1) ஆன்மார்த்தம் (2) பரார்த்தம் என்று இரண்டு வகைப்படும். இவை நித்திய, நைமித்திக, காமியம் என்று முவகையாகவும் பிரிக்கப்படும். நித்திய பூஜை அன்றாடம் நடைபெறுவது, ஏதேனும் ஒரு நிமித்தம் பற்றி நிகழ்த்தப்படுவது நைமித்திக பூஜையாகும். தனிப்பட்ட

ஓர் பலனை உத்தேசித்து இயற்றப்படுவது காமிய பூஜை.

நித்திய பூஜை. இஃது ஆறுகாலங்களில் செய்யப்படும்.

**1. உஷத்காலம் :** சூரியோதயத்துக்கு முன் நடத்தப்படுகிறது. இதனைத் திருவனந்தல் என்பர். திருப்பள்ளி எழுப்பும் பூஜையாகும்.

**2. காலைசந்தி :** சூரியோதயத்தில் நிகழும். முதலில் சூரியனுக்கும் விநாயகருக்கும் நடைபெற்றப் பிறகு மூலஸ்தானத்துக்கும் பிறகு பரிவார தெய்வங்களுக்கும் நடைபெறும்.

**3. உச்சிக்கால பூஜை :** நடுப்பகலில் விசேஷமாக நடைபெறும். சிறப்பு அபிஷேக அலங்கார தீபாராதனைகள் நடக்கும். இதில் பிரசாத நைவேத்யம் சிறப்பு அம்சமாகும்.

**4. மாலைச்சந்தி :** சாயங்காலம் நிகழும். முதலில் விநாயகருக்கும் அடுத்து மூலவருக்கும் பிறகு பரிவார தேவதைகளுக்கும் பூஜை நிகழும்.

**5. இரண்டாம் காலம் :** சந்தி முடிந்து $3^3/_4$ நாழிகை கழிந்த பின் இப்பூஜை செய்யப்படும்.

**6. அர்த்தஜாமம் :** இரண்டாம் காலம் முடிந்து $3^3/_4$ நாழிகைக்குள் அபிஷேக, அலங்கார, நைவேத்யங்களோடு நடைபெறும். பிறகு திருமேனியைப் பள்ளி அறைக்கு, எடுத்துச் செல்வர். பிறகு சண்டேசுவர பூஜை செய்து, பைரவர் சந்நிதி சென்று பூஜை நிகழ்த்திக் கோயில் திறவுகோல்களை அவரிடம் ஒப்படைப்பர். காலையிலும் அவரிடம் திறவு கோல்களைப் பெற்றே திறப்பதாக மரபு உள்ளது.

### நைமித்திக பூஜை

விசேஷ காலத்தில் உற்சவ மூர்த்தியைத் திருவீதிகளில் உலாவாக எடுத்து வருவார்கள். குறிப்பிட்ட நாளில் ஒரு விழாவாக எடுப்பது பிரம்மோற்சவமாகும். இப்பெருவிழாக்களை தேவாரப் பதிகங்கள் வருணிக்கின்றன. விழாக்களில் உற்சவ மூர்த்திகளில் இறைவன் முழுப் பொலிவோடு பிரகாசிப்பதைக் காணலாம். 1. சிருஷ்டி 2. வெளிக்காட்டல் 3. சுகம் தருதல் 4. வந்து காணல் என்று நால்வகையாக உற்சவம் அமையும்.

### சிவாலய தரிசனம்

கோபுரம் ஸ்தூல லிங்கமாதலால் முதற்கண் அதனை வணங்க வேண்டும். வலமாக வந்து துவார பாலகர், நந்திதேவர் ஆகியோரை வணங்க வேண்டும். நந்தி தேவரிடம் சிவ தரிசனத்துக்காக அனுமதி பெறுவது மரபு. பிறகு விநாயகரை வணங்கி சிவஸந்நிதி செல்ல வேண்டும். தோத்திரங்கள், பஞ்ச புராணங்களைப்பாடி, அர்ச்சகர் வாயிலாக அருச்சனை செய்து அருட்பிரசாதம் பெற வேண்டும். உடனே

திரும்பி சபாபதி, தட்சிணாமூர்த்தி, சோமாஸ்கந்தர், சந்திர சேகரர். சுப்பிரமணியர் முதலிய மூர்த்திகளை வணங்க வேண்டும். பிறகு சைவ சமய குரவர்களை வழிபட்டு தேவியின் சந்நிதி செல்லவேண்டும். இங்கும் பூஜை செய்வித்துப் பின்பு சண்டேசுரர் சந்நிதி அடைந்து சிவ தரிசன பலனை அளிக்க வேண்டிக் கொள்வது மரபு.

இறுதியில் நந்திதேவரை வணங்கி ஓர் அருகில் அமர்ந்து திருவைந்தெழுத்தை உருவாகச் செபித்துத் திரும்பவேண்டும்.

சந்நிதிகளில் பஞ்சாங்க, அஷ்டாங்க நமஸ்காரங்களைச் செய்தல் வேண்டும். சேக்கிழாரும்

*அன்பு பெருக உருகியுள்ளம் அலைய*
*அட்டாங்க பஞ்சாங்கமாக*
*முன்பு முறைமையினால் வணங்கி*
*முடிவிலாக் காதல் முதிரவோங்கி ( பெ.பு.272)*

என்று இவற்றைக் குறிப்பிட்டிருக்கிறார்.

**பிரதோஷகால தரிசனம்**

வளர்பிறையில் திரயோதசி அன்றும் தேய்பிறையில திரயோதசி அன்றும் மாலை 4மணி முதல் 6மணி வரை பிரதோஷ காலமாகும். சிவபெருமான் நந்தியின் இரண்டு கொம்புகளுக்கும் மத்தியில் நடனமாடி தேவர்களுக்குத் திருக்கயிலாயத்தில் தரிசனம் கொடுக்கும் புண்ணியகாலம் பிரதோஷகாலமாகும். இது திருக்கோயில்களில் சிவதரிசனத்துக்குரிய சிறப்பான காலமாகும்.

# இயல் 17

## பாடல் பெற்ற சிவதலங்கள்

சங்க காலத்திலேயே பிறவாயாக்கைப் பெரியோனாகிய சிவபெருமானை லிங்கவடிவில் நிறுவிக் கோவிலெழுப்பி வழிபட்டனர் பண்டைத் தமிழர். ஊர்தொறும் அமைந்த பொதியில் எனப்பட்ட அம்பலத்தில் தெய்வம் உறையும் தறியாகிய தூண் ஒன்று நாட்டப்பட்டிருந்தது. நீராடித் தூய்மையுடைய மகளிர் அம்பலத்தை மெழுகித் தூய்தாக்கி அந்திப்போதில் விளக்கேற்றி இறைவனை வழிபட்டனர். அவ்வாறே பொதுமக்களும் நறுமலர் தூவிக் கடவுளை வழிபட்டனர். ஊருக்குப் புதியவர்கள் அம்பலங்களிலே தங்கி வந்தனர்.

இச்செய்தி

*தொண்டி மகளிர் உண்டுறை மூழ்கி*
*அந்தி மாட்டிய நந்தா விளக்கின்*
*மலரணி மெழுக்கம் ஏறிப் பலர் தொழ*
*வம்பலர் சேக்கும் கந்துடைப் பொதியில்*

எனவரும் பட்டினப்பாலை அடிகளால் அறியப்படுகிறது.

ஈண்டு, "கந்து" என்பதைத் தெய்வம் உறையும் தறியாகக் கருதினார் நச்சினார்க்கினியர். இவ்வாறு கந்துகள் நடப்பட்ட பொதியில்களே தேவார ஆசிரியர்களின் காலத்தில் சிவபிரானுடைய அருவுருவத் திருமேனியை வழிபடுதற்குரிய திருக்கோயில்களாகத் திகழ்ந்தன. கந்தாகிய கட்டுத்தறியே சிவலிங்கம் என்பதை அப்பருடைய அருள்வாக்கும் உணர்த்துகிறது :-

*காதன்மையால் தொழுமடியார் நெஞ்சினுள்ளே*
*கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே* ( 6-61-1)

சங்க காலத்தில் சிவாலயங்கள் தமிழ்நாட்டில் விளங்கியிருந்தன. நன்னன் என்ற குறுநில மன்னனுக்கு உரியதான நவிரமலையில் சிவாலயம் இருந்த செய்தியை

*நீரகம் பனிக்கும் அஞ்சுவரு கடும்திறல்*
*பேரிசை நவிரம் மேஎயுறையும்*
*காரியுண்டிக் கடவுளது இயற்கையும்*

என்று மலைபடுகடாம் கூறுகிறது , மேலும் பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை நோக்கி

*பணியியரத்தை நின்குடையே முனிவர்*
*முக்கண் செல்வர் நகர் வலம் செயற்கே*
*இறைஞ்சுக பெருமநின் சென்னி சிறந்த*
*நான்மறை முனிவர் ஏந்துகை எதிரே. (புறம் 6)*

என்று காரிகிழார் வாழ்த்துவதை நோக்கினால், அக்காலத்தில் தமிழ்வேந்தர்கள் சிவபிரான் திருக்கோயில்களுக்குச் சென்று வலம் வந்து பணிந்தனர் என்று அறிகிறோம் அல்லவா ?

கடைச்சங்க காலத்தில் கோச்செங்கணான் என்ற சோழன் சிவபிரானுக்கு எழுபது மாடக்கோயில்களைக் கட்டிமுடித்தான். அதனால் அவன் சிவனடியார்களில் ஒருவனாகப் போற்றப்பெற்றுத் திருத்தொண்டத் தொகையில் இடமும் பெற்றான். சோழநாட்டிலுள்ள அம்பர், நன்னிலம், வைகல் முதலான திருத்தலங்களிலுள்ள மாடக்கோயில்களை இச்சோழ மன்னனே கட்டினான். இத்திருத்தலங்களைத் திருஞானசம்பந்தர் பதிகம் பாடும் போது கோச்செங்கணான் திருப்பணிகளைப் புகழ்கிறார், அவ்வாறே சுந்தரரும் புகழ்கிறார். இவ்வாறு கோச்செங்கட்சோழநாயனார் எழுபது சிவாலயங்கள் எழுபது மாடக்கோயிலாகக் கட்டியிருந்ததைத் திருமங்கையாழ்வாரும் புகழ்ந்து பாடியுள்ளார். இம்மன்னவன் திருநறையூரில் திருமாலுக்குக் குன்றமன்னதோர் மாடக்கோயிலையும் கட்டிமுடித்துள்ளான்.

*இருக்கிலங்கு திருமொழிவாய் எண்டோளீசற்கு*
*எழில் மாடம் எழுபதுசெய் துலகமாண்ட*
*திருக்குலத்து வளச்சோழன் சேர்ந்தகோயில்*
*திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே (பெ. தி.மொ 6.6.8)*

என்பது ஆழ்வார் திருவாக்கு.

திருநாவுக்கரசர் காலத்தில் மாடக்கோயில்கள் எழுபத்தெட்டு விளங்கியிருந்தன. இவற்றுள் எழுபது மேற்குறித்த சோழமன்னனால் கட்டப்பட்டவை, எஞ்சிய எட்டினையும் அவனுடைய தோன்றல்கள் கட்டினார்கள்.

*பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும்*
*பெருங்கோயில் எழுபதினோடெட்டும் (6.71.5)*

என்பர் திருநாவுக்கரசர்.

சங்க காலத்து எழுப்பப்பட்ட திருக்கோயில்களிற் பல களப்பிரர் படையெடுப்பினாலும் சமண பௌத்த சமயத்தார்களின்

தாக்குதல்களாலும் இடைக்காலத்தில் சிதைந்து மறைந்து,, பின்பு திருநாவுக்கரசரும் திருஞான சம்பந்தரும் செய்த பிரசாரத்தினால் அவையாவும் மீண்டும் உயிர்பெற்றுச் சிறப்படைந்தன. சிவபெருமான் எழுந்தருளிய பழையாறை வடதளியில் அமைந்த மாடக்கோயிலைச் சமணர்கள் மறைத்து சமணப்பள்ளியாக மாற்றிவிட்டனர். இதையுணர்ந்த திருநாவுக்கரசர் அங்குச் சென்று உண்ணாவிரதம் இருந்தார். உடனே சோழமன்னவன் சமணர்களின் சூழ்ச்சியை அறிந்துகொண்டு அதைப் பண்டுபோலவே சிவாலயமாக மாற்றினான்.

தேவார ஆசிரியர்கள் காலத்திலும் புதிய கோயில்கள் எழுப்பப்பட்டன. சிராப்பள்ளி, மயேந்திரப்பள்ளி, குணதரவீச்சுரம் முதலியன இவ்வாறு தோன்றியவையேயாகும்.

தொல்காப்பியர் காலத்தில் தமிழ்நாடு வண்புகழ்மூவர் தண்பொழில் வரைப்பு என்றபடி சேர, சோழ, பாண்டிய நாடுகளாகப் பிரிவுண்டிருந்தது. கடைச்சங்க காலத்தின் பிற்பகுதியில் சேரநாட்டின் கிழக்குப் பகுதி கொங்கு மண்டலமாகவும், சோழநாட்டின் வடக்குப்பகுதி, தொண்டை மண்டலமாகவும் பிரிந்ததால், தமிழ்நாடு ஐந்து மண்டலங்களாகப் பிரிவு பெற்றது.

திருமூலரும் "தமிழ்மண்டலம் ஐந்தும் தாவிய ஞானம்" (திருமந். 1646) என்று அவற்றைக்குறிப்பிட்டிருக்கிறார். மேற்குறித்த ஒவ்வொரு மண்டலமும் சிறுசிறு தனிநாடுகளாகப் பிரிக்கப்பட்டு அவற்றிலிருந்த பேரூர்களின் பெயரால் வழங்கப்பட்டன. "முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே" (புறம்) என்ற சான்றினைக் காண்க.

தேவார ஆசிரியர் காலத்தில் சோழமண்டலத்துக்கும் தொண்டை மண்டலத்துக்கும் நடுவே திருமுனைப்பாடிநாடு, என்று தனி நாடு ஒன்று அமைந்தது. இதன் தலைநகர் நாவலூர் ஆகும். இங்குதான் சுந்தர மூர்த்திநாயனார் தோன்றினார். அப்போது அந்நாட்டை அரசாண்டவர் நரசிங்க முனையரையர் என்பவர். திருக்கோவலூரைத் தலைநகராகக்கொண்டது சேதி நாடு என்பதாகும். திருமுனைப்பாடி நாட்டையும் சேதிநாட்டையும் சேர்த்துப் பின்பு வந்தவர்கள். நடுநாடு என்று வழங்கினர்.

இனி, தமிழகத்தை ஒட்டிய புறநாடாகிய துளுநாட்டில் திருக்கோகரணம் என்ற தலமும், இலங்கையின் வடபகுதியாகிய ஈழநாட்டில் மாதோட்டக் கேதீச்சரம், திருக்கோணமலை என்ற தலங்களும் தேவார ஆசிரியர்களால் பாடப்பட்டுள்ளன. தமிழகத்தின் வடக்கு எல்லையான திருவேங்கடம் முதல் இமயம் வரையுள்ள பெரும் பகுதி வடநாடு என்றழைக்கப்பட்டது.

எனவே, சேரநாடு, சோழநாடு, பாண்டியநாடு, தொண்டைநாடு, நடுநாடு, துளுநாடு, ஈழநாடு, வடநாடு, என்ற பிரிவுகளில் தேவாரம் பெற்ற திருத்தலங்கள் அடக்கப்பட்டு வழங்குகின்றன.

தேவார ஆசிரியர்களால் பாடல் பெற்ற திருத்தலங்களை (1) பாடல் பெற்ற தலம் என்றும் (2) வைப்புத்தலம் என்றும் இரண்டு பிரிவுகளாகக் குறிப்பிடுவது மரபு.

தமக்கென்று தனிப்பதிகம் பெற்றதலங்கள் பாடல் பெற்றதலங்களாகும். இவ்வாறின்றிப் பிற தலத்திற்குரிய பதிகப்பாடல்களிலோ அன்றிப் பொதுப்பதிகங்களிலோ பெயரளவில் குறிக்கப்பெற்றுள்ள திருத்தலங்கள் வைப்புத்தலங்கள் ஆகும்.

தேவாரத் திருப்பதிகங்களில் பாடல் பெற்ற தலங்கள் 274 ஆகும்.

| | |
|---|---|
| சோழநாடு | 190 |
| ஈழநாடு | 2 |
| பாண்டிநாடு | 14 |
| மலைநாடு | 1 |
| கொங்குநாடு | 7 |
| நடுநாடு | 22 |
| தொண்டைநாடு | 32 |
| துளுநாடு | 1 |
| வடநாடு | 5 |
| ஆக, | 274 |

மேற்கண்ட 274 திருத்தலங்களையும் தொகுத்துக்கூறும் முறையில் உமாபதி சிவாசாரியர் என்பவர் திருப்பதிக்கோவை என்ற நூலை எழுதியுள்ளார். அதில் சோழநாட்டுத் திருத்தலங்களை (1) காவிரிக்குத் தென்கரையிலுள்ள தலங்கள்என்றும் (2) காவிரிக்கு வடகரையிலுள்ள தலங்கள் என்றும் பிரித்துள்ளார்.

காவிரிக்கு வடகரையிலுள்ளவை 63 தலங்கள்

காவிரிக்குத் தென்கரையிலுள்ளவை 127 தலங்கள்

இனி, தலங்களின் பெயர்கள் எவ்வாறு அமைகின்றன என்பதைக் காண்போம்

| | | |
|---|---|---|
| 1. | குறிஞ்சி நிலத்தவை | மலை, குன்றம், அறை, பருப்பதம் |
| | முல்லை நிலத்தவை | காடு, வனம், பாடி |
| | மருத நிலத்தவை | ஊர், ஆறு, துறை |
| | நெய்தல் நிலத்தவை | பட்டினம், வாயில், பாக்கம் |
| 5. | பாலை நிலத்தவை | சுரம் |
| | முல்லையும் மருதமும் | கா, பொழில், குளம் |

| | |
|---|---|
| நால்வகை நிலங்களிலும் | களம் |
| உப்பங்கழி நிலம் | கழிப்பாலை |
| ஒருவகை மரத்தினால் | பாலைத்துறை |
| 10. மண்ணின் இயல்பு | திருக்களர் |
| தலங்கள் + ஈற்றுப்பெயர்கள் | நிலம், பழனம், மங்கை, தானம், குடி, திட்டை, ஈச்சரம், துருத்தி, நீர்நிலை, ஆறு, மலை |
| எதிர்முகம் | வாயில் |
| நதிகள் முதலியன கூடுமிடம் | கூடல் |
| ஊர்ப்பெயர் + நகர்(அ) நன்னகர் | (வேட்களநன்னகர், பாம்புரநன்னநகர்) |

15. சிறப்புடையோர் பெயரால் விசேடிக்கப்படுபவை,

*நிறையினார் நீலநக்கன் நெடுமாநகர் என்று*
*தொண்டர் அறையுமூர் சாத்தமங்கை* (தி.ஞா.ச. 3-58-11)

| | |
|---|---|
| இல் என்று முடிபவை | அன்பில், பிரம்பில், செந்தில் |
| அகம் என்று முடிபவை | ஏடகம் |
| சேரி என்று முடிபவை | திருத்தெளிச்சேரி |
| தொன்மைகருதிவருவன | பழையாறை, பழையனூர் |

20. சமண் பள்ளிகளாக இருந்து மாறியவை   பள்ளி, பாழி

21. புதுமை கருதிவருவன
திருப்புத்தூர், அரிசிற்கரைப் புத்தூர்

22. ஒரே தலத்தில் இருக்கும் திருக்கோயில்கள்

| | |
|---|---|
| பழையாறை | வடதளி |
| ஆறை | மேற்றளி |
| காஞ்சி | மேற்றளி |
| கச்சித் | திருவேகம்பம் |
| கச்சி | மயானம் |
| கச்சி | நெறிக்காரைக்காடு |
| கச்சி | அனேகதங்காவதம் |
| கடவூர் | மயானம் |
| திருவாரூர் | திருமூலட்டானம் |
| திருவாரூர் | அரனெறி போன்றவை |

23. ஒரு நாட்டில் ஒரே பெயருடைய தலங்கள்
மேலைத் திருக்காட்டுப்பள்ளி நல்லூர்

| | |
|---|---|
| கீழைத்திருக்காட்டுப்பள்ளி | வெண்ணெய் நல்லூர் |
| தென்திருமுல்லைவாயில் | அறையணி நல்லூர் |
| வடதிருமுல்லைவாயில் | பந்தணைநல்லூர் |
| வடகுரங்காடுதுறை | கலயநல்லூர் |
| தென் குரங்காடுதுறை | ஏமநல்லூர் |
| பெரும்பற்றப்புலியூர் | பொய்கை நல்லூர் |
| திருப்பாதிரிப்புலியூர் | புள்ளிருக்குவேளூர் |
| திரும்பெரும் புலியூர் | கீழ்வேளூர் |
| எருக்கத்தம்புலியூர் | பெருவேளூர் |

24. தலை, இடை, கடை, என்று அடைமொழி பெறுதல்

| | |
|---|---|
| தலையாலங்காடு | இடைமருதூர் கடைமுடி |
| தலைச்சங்காடு | இடையாறு |
| | இடைக்குளம் |

25. ஆற்றையடுத்ததலங்கள்

| | |
|---|---|
| திருப்பராய்த்துறை | திருமாந்துறை |
| திருப்பாலைத்துறை | திருவாலந்துறை |
| கடம்பன் துறை | மயிலாடுதுறை முதலியன |

**சிறப்புத் தலங்கள்**

## வீரட்டானத் தலங்கள்

சிவபிரானுடைய வீரச்செயல்கள் விளங்கிய இடங்களிலுள்ள திருத்தலங்களை வீரட்டானத்தலங்கள் என்று போற்றுவர். வீரஸ்தானம் என்பதுவே. வீரட்டானம் என்றாயிற்று. இவை எட்டுத் தலங்களாதலால் அட்டவீரட்டானம் என்று அழைக்கப்படுகிறது.

| | | |
|---|---|---|
| 1. | திருக்கண்டியூர் | சிவபிரான் பிரமனுடைய தலையைக் கொய்து செருக்கழித்த தலம் |
| 2. | திருக்கோவலூர் | அந்தகாசுரனைக் கொன்ற இடம் |
| 3. | திருவதிகை | திரிபுரத்தை எரித்த தலம் |
| 4. | திருப்பறியலூர் | தக்கன் தலையைத் தடிந்த தலம் |
| 5. | திருவிற்குடி | சலந்தராசுரனை வதைத்த தலம் |
| 6. | திருவழுவூர் | கயமுகாசுரனைக் கொன்று தோலை உரித்துப் போர்த்துக் கொண்ட தலம் |
| 7. | திருக்குறுக்கை | மன்மதனை எரித்த தலம் |

| 8. | திருக்கடவூர் | மார்க்கண்டேயனைக் காத்துக் கூற்றுவனை உதைத்த தலம் |
|---|---|---|

திருத்தாண்டகத்துள்,

*காவிரியின் கரைக் கண்டி வீரட்டானம்*
*கடவூர் வீரட்டானம் காமருசீர்அதிகை*
*மேவிய வீரட்டானம் வழுவை வீரட்டம்*
*வியன் பறியல் வீரட்டம் - விடையூர்திக்கிடமாம்*
*கோவல்நகர் வீரட்டம் குறுக்கை வீரட்டம்*
*கோத்திட்டைக்குடி வீரட்டானம் இவை கூறி*
*நாவில் நவின்றுரைப்பார்க்கு நணுகச் சென்றால்*
*நமன்தமரும் சிவன்தமர் என்றகல்வர் நன்கே.* (6-71-2)

இவற்றுள், திருவிற்குடிக்குப் பதிலாக கோத்திட்டைக்குடி என்ற தலத்தைக் கொள்வதுண்டு. கோரத்திட்டைக்குடி வீரட்டம் ( 6-71-2 ) என்று திருநாவுக்கரசர் குறிப்பிடுவர். இவை யிரண்டும் ஒரு தலமே என்று ஆராய்ச்சியாளர் கருதுகிறார்கள்.

**தனிப்பெயர் பெற்ற திருக்கோயில்கள்**

| | |
|---|---|
| திருவெண்ணெய் நல்லூர்க் கோயில் | - திருவருட்டுறை |
| திருநெல்வாயில் கோயில் | - திரு அரத்துறை |
| திருச்சேறைக் கோயில் | - நீள்நெறி |
| திருவாரூர்க் கோயில் | - அரனெறி |

**பஞ்ச சபைகள்**

| | | |
|---|---|---|
| 1. | தில்லை | - பொன்னம்பலம் |
| 2. | மதுரை | - வெள்ளியம்பலம் |
| 3. | திருநெல்வேலி | - தாமிரசபை |
| 4. | திருவாலங்காடு | - இரத்தின சபை |
| 5. | திருக்குற்றாலம் | - சித்திர சபை |

**பஞ்சபூத ஸ்தலங்கள்**

| | | |
|---|---|---|
| 1. | பிருதிவி (மண்) | திருவாரூர், காஞ்சிபுரம் |
| 2. | வாயு (காற்று) | திருக்காளத்தி |
| 3. | தேயு (நெருப்பு) | திருவண்ணாமலை |
| 4. | அப்பு (நீர்) | திருஆனைக்கா |
| 5. | ஆகாசம் | தில்லை |

**ஸப்த (ஏழு) விடங்க ஸ்தலங்கள்**

| | | | |
|---|---|---|---|
| 1. | திருவாரூர் - | வீதிவிடங்கர் | அஜபா நடனம் |
| 2. | திருநள்ளாறு - | நகவிடங்கர் | உன்மத்த நடனம் |
| 3. | திருநாகை - | சுந்தரவிடங்கர் | வீசி நடனம் |
| 4. | திருக்காறாயில் - | ஆதிவிடங்கர் | குக்குட நடனம் |
| 5. | திருக்கோளிலி - | அவனிவிடங்கர் | பிருங்க நடனம் |
| 6. | திருவாய்மூர் - | நீலவிடங்கர் | கமல நடனம் |
| 7. | திருமறைக்காடு - | புவனிவிடங்கர் | ஹம்ஸபாதநடனம் |

**மயிலாடுதுறையை நடுவாகக் கொண்ட ஸப்தஸ்தானங்கள்**

1. வள்ளலார் கோயில்
2. கௌரி மாயூரம்
3. காசி விசுவனாதர் கோயில்
4. புனுகீசுவரர் கோயில்
5. சித்தர் காடு சம்பந்த சுவாமி கோயில்
6. சோழம் பேட்டை
7. வேலூர் வழிகாட்டும் வள்ளல் கோயில்

ஸப்தவிடங்கஸ்தலம் பற்றிய பாடல்

சீரார் திருவாரூர் தென்னாகை நள்ளாறு
காரார் மறைக்காடு காறாயில் - பேரான
ஒத்ததிரு வாய்மூர் உவந்ததிருக் கோளிலி
சத்த விடங்கத் தலம்

**ஸப்த நடனங்கள்**

**1. அஜபா நடனம் :** மேலும் கீழுமாக ஏறி இறங்கியும் முன் பின்னாகச் சென்றும் அடியார்கள் உள்ளத்தில் தியான காலத்தில் ஆடுவது

**2. பாராவார தரங்க நடனம் :** கடல் அலைகளைப்போல் ஆடுவது பாராவாரம் - கடல்; தரங்கம் - அலை

**3. உன்மத்த நடனம் :** பித்தேறியது போல் நடனம்

**4. ஹம்ஸபாத நடனம் :** அன்னத்தைப் போன்ற நடனம்

**5. கமல நடனம் :** ஒற்றைக்காலால் தள்ளுண்டு தாமரைபோல் நடனம்

**6. பிருங்க நடனம் :** மலருக்குள் வண்டு குடைந்து செல்வது போன்ற நடனம்.

**7.** குக்குடநடனம் : சேவலைப்போன்று ஆடும் நடனம்.

**குடந்தையை நடுவாகக் கொண்ட ஸப்தஸ்தானங்கள்**

1) கும்பகோணம் 2) கலயநல்லூர்
3) தாராசுரம் 4) திருவலஞ்சுழி
5) சுவாமிமலை 6) கொட்டையூர்
7) மேலைக்காவிரி

**திருவையாற்றை நடுவாகக் கொண்ட ஸப்தஸ்தலங்கள்**

1. திருவையாறு 2. திருப்பழனம்
3. திருவேதிகுடி 4. திருச்சோற்றுத்துறை
5. திருப்பூந்துருத்தி 6. திருக்கண்டியூர்
7. திருநெய்த்தானம்

**காசிக்குச் சமமான தலங்கள்**

1. திருவெண்காடு 2. திருவையாறு
3. மயிலாடுதுறை 4. திருவிடைமருதூர்
5. திருச்சாய்க்காடு 6 ஸ்ரீ வாஞ்சியம்

**பிறக்க, வசிக்க, காண, இறக்க, நினைக்க, முத்தி தரும் தலங்கள்**

1. திருவாரூரில் பிறக்க
2. காஞ்சியில் வசிக்க
3. தில்லையில் காண
4. காசியில் இறக்க
5. திருவண்ணாமலையில் நினைக்க

முக்திபெறலாம்

**புகழ் பெற்ற பிள்ளையார் கோயில்கள்**

| | | |
|---|---|---|
| 1. | பிள்ளையார் பட்டி | தேசிக விநாயகர் |
| 2. | திருவலஞ்சுழி | வெள்ளை விநாயகர் |
| 3. | திருவாரூர் | மாற்றுரைத்த விநாயகர் |
| 4. | திருச்செங்காட்டங்குடி | வாதாபி விநாயகர் |
| 5. | மதுரை | சித்தி விநாயகர் |
| 6. | திருநாரையூர் | பொள்ளாப் பிள்ளையார் |
| 7. | திருப்புறம்பயம் | பிரளயம் காத்த பிள்ளையார் |
| 8. | திருவீழிமிழலை | படிக்காசு விநாயகர் |
| 9. | திருக்கடவூர் | கள்ள வாரணப் பிள்ளையார் |

| | | |
|---|---|---|
| 10. | காஞ்சிபுரம் | விகட சக்கர விநாயகர் |
| 11. | திருச்சிராப்பள்ளி | உச்சிப்பிள்ளையார் |
| 12. | திருவையாறு | ஒலமிட்ட விநாயகர் |

**புகழ்பெற்ற அம்பிகையின் தலங்கள்**

| | | |
|---|---|---|
| 1. | திருவொற்றியூர் | வடிவுடையம்மை |
| 2. | திருமயிலை | கற்பகாம்பாள் |
| 3. | திருக்கழுக்குன்றம் | திரிபுரசுந்தரி |
| 4. | காஞ்சி | காமாட்சி |
| 5. | திருவண்ணாமலை | உண்ணாமுலை |
| 6. | சிதம்பரம் | சிவகாமி |
| 7. | திருவானைக்கா | அகிலாண்டேசுவரி |
| 8. | திருக்கடவூர் | அபிராமி |
| 9. | திருக்காளத்தி | ஞானப்பூங்கோதை |
| 10. | திருவையாறு | அறப்பெருஞ்செல்வி |
| 11. | திருவாரூர் | கமலாம்பிகை |
| 12. | திருநெல்வேலி | காந்திமதி |
| 13. | வைத்தீசுவரன் கோயில் | தையல்நாயகி |
| 14. | இராமேச்சரம் | மலைவளர் காதலி |
| 15. | கன்னியாகுமரி | பகவதி |
| 16. | மதுரை | மீனாட்சி |

**ஆதாரத் தலங்கள்**

| | |
|---|---|
| மூலாதாரம் | திருவாரூர் |
| சுவாதிஷ்டானம் | திருவானைக்கா |
| மணிபூரகம் | திருவண்ணாமலை |
| அநாகதம் | சிதம்பரம் |
| விசுத்தி | காசி |
| ஆக்ஞை | காசி |
| பிரம்ம ரந்திரம் | கயிலை |
| துவாதசாந்தம் | மதுரை |

**பரிவாரத் தலங்கள்**

தமிழகச் சிவாலயங்களில் திருவிடைமருதூர் மகாலிங்க சுவாமி கோயிலைக் கருவறையாகக் கொண்டு அதனைச் சுற்றியுள்ள கோயில்களை பரிவாரத் தலங்களாகக் கொள்ளும் மரபு நிலவுகிறது.

| | | |
|---|---|---|
| 1. | விநாயகர் | திருவலஞ்சுழி |
| 2. | முருகன் | சுவாமிமலை |
| 3. | நந்தி தேவர் | திருவாவடுதுறை |
| 4. | சண்டிகேசுவரர் | திருச்சேய்ஞ்ஞலூர் |
| 5. | நடராஜர் | சிதம்பரம் |
| 6. | தியாகராஜர் | திருவாரூர் |
| 7. | தட்சிணாமூர்த்தி | ஆலங்குடி |
| 8. | பைரவர் | சீர்காழி |
| 9. | அம்பிகை | திருக்கடவூர் |
| 10. | சூரியன் | சூரியனார் கோயில் (ஆடுதுறை) |
| 11. | சனி | திருநள்ளாறு |

**சித்தர்கள் வாழும் தலங்கள்**

| | | |
|---|---|---|
| 1. | திருமூலர் | சிதம்பரம் |
| 2. | திருநந்திதேவர் | சீர்காழி |
| 3. | தன்வந்திரி | வைத்தீசுவரன் கோயில் |
| 4. | கமலமுனி | திருவாரூர் |
| 5. | சட்டைமுனி | திருவரங்கம் |
| 6. | கருவூர்த்தேவர் | கருவூர் |
| 7. | போகர் | பழனி |
| 8. | சுந்தரானந்தர் | மதுரை |
| 9. | மச்சமுனி | திருப்பரங்குன்று |
| 10. | கும்பமுனி | திருவனந்தபுரம் |
| 11. | கோரக்கர் | திருப்பருப்பதம் |
| 12. | குதம்பைச் சித்தர் | திருக்கழுக்குன்று |
| 13. | அகப்பேய்ச்சித்தர் | திருமுதுகுன்றம் |
| 14. | பாம்பாட்டிச்சித்தர் | திருக்கடவூர் |
| 15. | கவரிமான் சித்தர் | திருக்காளத்தி |
| 16. | பதஞ்சலி | இராமேச்சுவரம் |
| 17. | இராமதேவர் | அழகர்மலை |
| 18. | வான்மீகி | எட்டிகுடி |

**அர்ஜுனஸ்தலங்கள்**

| | |
|---|---|
| மல்லிகார்ஜுனம் | வடக்கேயுள்ள ஸ்ரீசைலம் |
| திருப்புடார்ஜுனம் | அம்பாசமுத்திரத்தின் அருகில் தாமிரபரணி தீரம் |

மத்தியார்ஜுனம் திருவிடைமருதூர்

(அர்ஜுனம் - மருதமரம், இடைமருதூர் - மத்திய அர்ஜுனம்)

தமிழ்க்கடல் இராய சொக்கலிங்கஞ்செட்டியார் எழுதியுள்ள திருத்தலப் பயணம் என்னும் நூலில் உள்ளபடி (1966ப.)

| | |
|---|---|
| சோழநாடு | 191 |
| ஈழநாடு | 2 |
| பாண்டிநாடு | 14 |
| மலைநாடு | 1 |
| கொங்குநாடு | 7 |
| நடுநாடு | 22 |
| தொண்டைநாடு | 32 |
| துளுவநாடு | 1 |
| வடநாடு | 5 |
| | 275 |

| | |
|---|---|
| திருவாசகத் தலங்கள் | 45 |
| இவற்றுள் தேவாரம் பெற்றவை | 26 |
| திருவிசைப்பாத்தலம் | 14 |
| இவற்றுள் தேவாரம் பெற்றவை | 6 |

**நினைவுப் பாடல்**

*சோழநாட்டு ஒருநூற்றுத் தொண்ணூற்றொன்று,*
*தொல்லிலங்கை இரண்டு, தமிழ்ப் பாண்டிநாட்டில்*
*ஏழிரண்டு, மலைநாட்டில் ஒன்று, கொங்கில் ஏழு*
*நடுநாட்டில் இருபத்திரண்டு,*
*ஏழு ஐந்தோடு இருபதாம் தொண்டை நாட்டில்*
*எண்ஒன்றே துளுவத்தில் வடநாட்டுஐந்தே*
*எழுபத்தைந்துடன் இரண்டுநூறு கொண்டது*
*ஈசனுறை தேவாரத் திருத்தலங்கள்*

**சோழநாடு**

1. கோயில் (சிதம்பரம்)
2. திருவேட்களம்
3. திருநெல்வாயில் (சிவபுரி)

4. திருக்கழிப்பாலை
5. திருநல்லூர்பெருமணம் (ஆச்சாள்புரம்)
6. திருமயேந்திரப் பள்ளி (கோயிலடிப்பாளையம்)
7. தென்திருமுல்லை வாயில்
8. திருக்கலிக்காமூர் (அன்னப்பன்பேட்டை)
9. திருச்சாய்க்காடு (சாயாவனம்)
10. திருப்பல்லவனீச்சுரம் (காவிரிப்பூம்பட்டினம்)
11. திருவெண்காடு
12. கீழைத்திருக்காட்டுப்பள்ளி (ஆரணியேசுரர் கோயில்)
13. திருக்குருகாவூர் (திருக்கடவூர்)
14. சீர்காழி
15. திருக்கோலக்கா (திருத்தானமுடையார் கோயில்)
16. திருப்புள்ளிருக்கு வேளூர் (வைத்தீசுரன் கோயில்)
17. திருக்கண்ணார் கோயில் (குறுமானக்குடி)
18. திருக்கடைமுடி (கீழையூர்)
19. திருநின்றியூர்
20. திருப்புன்கூர்
21. திருநீடூர்
22. அன்னியூர் (பொன்னுர்)
23. வேள்விக்குடி
24. எதிர்கொள்பாடி (மேலைத்திருமணஞ்சேரி)
25. திருமணஞ்சேரி (கீழைத்திருமணஞ்சேரி)
26. திருக்குறுக்கை
27. கருப்பறியலூர் (மேலைக்காழிதலைஞாயிறு)
28. குரக்குக்கா
29. திருவாள்ஒளிப்புத்தூர்
30. மண்ணிப்படிக்கறை
31. ஓமாம்புலியூர்
32. கானாட்டுமுள்ளூர்
33. திருநாரையூர்
34. கடம்பூர் (மேலைக்கடம்பூர்)
35. பந்தணை நல்லூர்
36. கஞ்சலூர்
37. திருக்கோடிக்கா

38. திருமங்கலக்குடி
39. திருப்பனந்தாள்
40. திருஆப்பாடி
41. திருச்சேய்ஞ்ஞலூர் (சேங்கனூர்)
42.. திருந்துதேவன்குடி
43. திருவியலூர்
44. கொட்டையூர்
45. இன்னம்பர்
46. திருப்புறம்பயம்
47. திருவிசயமங்கை
48. திருவைகாவூர்
49. வடகுரங்காடுதுறை
50. திருப்பழனம்
51. திருவையாறு
52. திருநெய்த்தானம்
53. பெரும்புலி
54. திருமழபாடி
55. திருப்பழுவூர்
56. திருக்காலூர்
57. அன்பிலாந்துறை (அன்பில்)
58. திருமாந்துறை
59. திருப்பாற்றுறை
60. திருவானைக்கா (திருவானைக்கோயில்)
61. திருப்பைஞ்ஞீலி
62. திருப்பாச்சிலாச்சிராமம் (திருவாசி)
63. திருஈங்கோய்மலை (திருலிங்கநாதமலை)
(காவிரிக்கு வடகரையிலுள்ள தேவாரத்தலங்கள் முற்றிற்று)
64. திருவாட்போக்கி (ரத்தினகிரி, மாணிக்கமலை, சிவாயமலை)
65. கடம்பந்துறை
66. திருப்பராய்த்துறை
67. கற்குடி (உய்யக்கொண்டான்)
68. முக்கீச்சுரம் (உறையூர்)
69. திருச்சிராப்பள்ளி

70. எறும்பியூர்
71. நெடுங்களம் (திருநட்டான்குளம்)
72. மேலைத் திருக்காட்டுப்பள்ளி
73. திருவாலம்பொழில்
74. திருப்பூந்துருத்தி
75. கண்டியூர்
76. திருச்சோற்றுத்துறை
77. திருவேதிகுடி
78. தென்குடித்திட்டை (திட்டை)
79. திருப்புள்ளமங்கை (பசுபதிகோயில்)
80. சக்கரப்பள்ளி (அய்யம்பேட்டை)
81. திருக்கருகாவூர் (திருக்களாவூர்)
82. திருப்பாலைத்துறை
83. திருநல்லூர்
84. ஆவூர் பசுபதீச்சுரம்
85. திருச்சத்திமுற்றம்
86. பட்டீச்சுரம்
87. பழையாறை வடதளி
88. திருவலஞ்சுழி
89. குடமூக்கு (கும்பகோணம்)
90. குடந்தைக் கீழ்க்கோட்டம் (நாகேசுவரசுவாமி கோவில்)
91. குடந்தைக் காரோணம் (விசுவநாதர் கோயில்)
92. திருநாகேச்சுரம்
93. திருவிடைமருதூர்
94. தென் குரங்காடு துறை (ஆடு துறை)ட
95. திருநீலக்குடி (தென்னல்குடி)
96. வைகன்மாடக் கோயில்
97. திருநல்லம் (கோனேரிராஜபுரம்)
98. கோழம்பம்
99. திருவாவடுதுறை
100. திருத்துருத்தி (குற்றாலம்)
101. திருவழுந்தூர் (தேரழுந்தூர்)
102. திருமயிலாடுதுறை (மாயூரம்)
103. திருவிளநகர்

104. திருப்பறியலூர் (பரசலூர்)
105. திருச்செம் பொன்பள்ளி
106. திருநனிபள்ளி (புஞ்சை)
107. திருவலம்புரம் (பெரும்பள்ளம்)
108. தலைச்சங்காடு
109. ஆக்கூர்
110. திருக்கடவூர்
111. திருக்கடவூர் மயானம் (திருமெய்ஞ்ஞானம்)
112. திருவேட்டக்குடி
113. திருத்தெளிச்சேரி (கோயில்பத்து)
114. தருமபுரம்
115. திருநள்ளாறு
116. கோட்டாறு (திருக்கொட்டாரம்)
117. அம்பர்ப் பெருந்திருக்கோயில் (அம்பர்)
118. அம்பர் மாகாளம்
119. திருமீய்ச்சூர்
120. திருமீய்ச்சூர் இளங்கோயில்
121. திலதைப்பதி (திலதர்ப்பணபுரி, மதிமுத்தம்)
122. திருப்பாம்புரம்
123. சிறுகுடி
124. திருவீழிமிழலை
125. திருவன்னியூர்
126. கருவிலி
127. பேணு பெருந்துறை (திருப்பந்துறை)
128. நறையூர்ச் சித்தீச்சுரம்
129. அரிசிற்கரைப் புத்தூர் (அழகர் புத்தூர்)
130. சிவபுரம்
131. கலயநல்லூர் (சாக்கோட்டை)
132. கருக்குடி (மருதாந்த நல்லூர்)
133. திருவாஞ்சியம்
134. நன்னிலம்
135. திருக்கொண்டீச்சுரம்
136. திருப்பனையூர்
137. திருவிற்குடி

203. திருக்கானப்பேர்
204. திருப்பூவணம்
205. திருச்சுழியல்
206. திருக்குற்றாலம்
207. திருநெல்வேலி

**4. மலைநாடு (1 தலம்)**

208. திருஅஞ்சைக்களம்

**5. கொங்கு நாடு (7 தலங்கள்)**

209. அவிநாசி
210. திருமுருகன்பூண்டி
211. திருநணா (பவானி)
212. கொடிமாடச் செங்குன்றூர் (திருச்செங்கோடு)
213. வெஞ்சமக்கூடல்
214. திருப்பாண்டிக்கொடுமுடி (கொடுமுடி)
215. கரூவூர்

**6. நடுநாடு ( 22 தலங்கள்)**

216. திருநெல்வாயில் அரத்துறை (திருஅரத்துறை)
217. பெண்ணாகடம் (திருக்கடந்தைநகர்)
218. கூடலையாற்றூர்
219. எருக்கத்தம் புலியூர் (இராசேந்திரப்பட்டினம்)
220. திருத்தினை நகர் (தீர்த்தனகிரி)
221. திருச்சோபுரம் (தியாகவல்லி)
222. திருஅதிகை
223. திருநாவலூர் (திருநாமநல்லூர்)
224. திருமுதுகுன்றம்
225. திருநெல் வெண்ணெய் (நெய்வேணை)
226. திருக்கோவலூர்
227. அறையணிநல்லூர்
228. இடையாறு
229. திருவெண்ணெய் நல்லூர்
230. துறையூர் (திருத்தளூர்)
231. வடுகூர் (ஆண்டார் கோயில்)
232. திருமாணிக் குழி
233. திருப்பாதிரிப்புலியூர்

234. திருமுண்டீச்சுரம்
235. புறவார் பனங்காட்டூர்
236. திருஆமாத்தூர்
237. திருவண்ணாமலை

## 7. தொண்டை நாடு ( 32 தலங்கள் )

238. கச்சி ஏகம்பம் (காஞ்சிபுரம்)
239. கச்சிமேற்றளி (காஞ்சிபுரம்)
240. ஓணகாந்தன்தளி (காஞ்சிபுரம்)
241. கச்சி அனேக தங்காபதம் (காஞ்சிபுரம்)
242. கச்சி நெறிக் காரைக்காடு (காஞ்சிபுரம்)
243. குரங்கணில்முட்டம்
244. மாகறல்
245. திரு ஓத்தூர்
246. திருப்பனங்காட்டூர் (திருப்பனங்காடு)
247. திருவல்லம்
248. திருமாற்பேறு
249. திருஊறல் (தக்கோலம்)
250. இலம்பையங்கோட்டூர்
251. திருவிற்கோலம்
252. திருவாலங்காடு (பழையனூர் ஆலங்காடு)
253. திருப்பாசூர்
254. திருவெண்பாக்கம்
255. திருக்கள்ளில்
256. திருக்காளத்தி (காளஹஸ்தி)
257. திருஒற்றியூர்
258. திருவலிதாயம் (பாடி)
259. வடதிருமுல்லைவாயில்
260. திருவேற்காடு
261. மயிலாப்பூர் (திருமயிலை)
262. திருவான்மியூர்

263. திருக்கச்சூர் (ஆலங்கோயில்)
264. திருஇடைச்சுரம்
265. திருக்கழுக்குன்றம்
266. அச்சிறுபாக்கம்
267. திருவக்கரை
268. அரசிலி (ஒழிந்தியாப்பட்டு)
269. இரும்பைமாகாளம்

**8. துளுவநாடு ( 1 தலம்)**

270. கோகர்ணம்

**9. வடநாடு ( 5 தலங்கள்)**

271. திருப்பதம் (ஸ்ரீசைலம் மல்லிகார்ச்சுனம்)
272. இந்திர நீல பருப்பதம்
273. அனேகதங்காபதம்
274. திருக்கேதாரம்
275. திருநொடித்தான் மலை (திருக்கயிலாயம்)

# இயல் 18

# திருமுறைகளும் சித்தாந்த சாத்திரங்களும்

சிவபெருமான் திருவருள் பெற்ற அருளாசிரியர்கள் திருவாய்மலர்ந்தருளிய தெய்வத் தமிழ்ப் பாடல்களே திருமுறைகள் என்று போற்றப்படுகின்றன. திருமுறை என்ற தொடரில் வரும் முறை என்ற சொல் நூலையும் அதன் உட்பிரிவுகளையும் குறிக்கும். முறைப்பட இயற்றப்பட்டது என்பதால் முறை என்பது நூலுக்கு பெயராயிற்று.

நூல்களை உலகநூல் என்றும் அறிவனூல் என்றும் இரண்டு வகையாகப் பிரிப்பர் திருக்கோவையாருக்கு உரை எழுதிய பேராசிரியர். இவ்விரண்டில், அறிவனூல்கள் என்பன இறைவன் அடியாருள்ளத்து வீற்றிருந்து உயிர்க்கு உறுதி பயக்கும் வண்ணம் வெளியிட்ட மெய்ந் நூல்களாகும்.

சிவஞானிகளாக விளங்கிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி நாயனார், மாணிக்கவாசகர் முதலாகிய அருளாசிரியர் வாயிலாக வெளிப்பட்ட நூல்களே சைவத்திருமுறைகளாகும். இவற்றுள் பதினோராம் திருமுறையில் அடங்கிய திருமுகப் பாசுரமானது சிவபெருமானால் நேர்முகமாக அருளிச்செய்ததாகும். சிவபெருமானே நம்பி ஆரூரர்க்கும் சேக்கிழாருக்கும் நூல் தொடங்க அடி எடுத்துக்கொடுத்தான். திருநாவுக்கரசரும் தம்மைக் கொண்டு சிவபெருமானே பாடியதாகக் கூறுவர். "பன்னிய செந்தமிழ் மாலை பாடுவித்து , என் சிந்தைமயக்கறுத்த திருவருளினானை" என்பது அவர்தம் திருவாக்கு.

இவற்றால் திருமுறைகளை வேத சிவகாமங்களைப் போன்று இறைவன் அருளிய மறைகளாகவே கொண்டு போற்றிப் பயிலும் மரபு ஏற்பட்டது.

திருமுறை என்னும் பெயர் வழக்கினை, திருமுறை எழுதுவோர் வாசிப்போர், என்று கணநாத நாயனார் புராணத்தில் சேக்கிழார் குறிப்பிடுகிறார். இச்சொல்வழக்கு மூன்றாம் குலோத்துங்க சோழன் காலத்துக் கல்வெட்டுக்களில்தான் முதன் முதலாகக் காணப்படுகிறது. அதற்கு முன்புள்ள கல்வெட்டுக்களில் தேவார ஆசிரியர் மூவரும் பாடியுள்ள பாடல்கள் திருப்பதியம் என்றே குறிக்கப்படுகின்றன.

நந்திவர்ம பல்லவ மன்னனது 17ஆம் ஆட்சியாண்டில் (கி.பி.750) திருவல்லம் கோயில் கல்வெட்டு ஒன்றில் திருப்பள்ளித்தாமம் பறிப்பார்க்கும் திருப்பதிகம் பாடுவார் உள்ளிட்ட பல பணிசெய்வார்க்கும் நெல்லுநானூற்றுக் காடியும், என்று வருகிறது. இதனால் கி.பி.8ஆம் நூற்றாண்டில் முற்பகுதியிலேயே மூவருடைய தேவாரத் திருப்பதிகங்கள் திருக்கோயிலில் பாடப் பெற்ற செய்தி அறியப்படுகிறது. தேவார ஆசிரியர்கள் வாழ்ந்த காலத்தை ஒட்டியே அவர்களாற் பாடப்பெற்ற திருப்பதிகங்களைத் திருக்கோயில்களில் இசையுடன் பாடுதற்குரிய ஓதுவார்களை நியமித்து அவர்களுக்கு வேண்டிய உணவு உடைகளுக்கு நிலமும் பொருளும் வழங்கும் வழக்கம் இதனால் அறியப்படுகிறது.

விசயாலயன் முதலான சோழப் பேரரசர்களும் பிற்காலப் பாண்டிய மன்னர்களும் தேவாரப் பாடல் பெற்ற திருக்கோயில்களைக் கற்றளிகளாக்கி அங்கு மூவர்முதலிகளின் திருமேனிகளை எழுந்தருளச்செய்து நாள் வழிபாட்டிற்கும் திருவிழாச் சிறப்பிற்கும் திருக்கோயில்களில் திருப்பதிகம் விண்ணப்பம் செய்வதற்கும் வேண்டிய நிவந்தங்களை வழங்கியுள்ளனர். கி.பி.1070 முதல் 1120 வரையில் ஆட்சி புரிந்த முதற்குலோத்துங்க சோழனுடைய படைத்தலைவனாகிய மணவிற்கூத்தன் காளிங்கராயன் என்பவன் தேவாரத் திருப்பதிகங்களைச் செப்பேடுகளில் எழுதுவித்துத் திருக்கோயிலுள் பாதுகாப்பாக வைத்தான். இச்செய்தி சிதம்பரத்திலுள்ளகல்வெட்டு ஒன்றினால் அறியப்படுகிறது.

அவ்வத் தலங்கள் பற்றிய தேவாரத்திருப்பதிகங்கள் கோயிற் சுவர்களில் பொறிக்கப்பட்டிருந்தன. இப்போதுள்ள தேவாரங்களில் கிடைக்காத பதிகங்கள் பலவற்றைக் கல்வெட்டுக்களில் கண்டுபிடித்து வருகிறார்கள்.

தேவாரத்திருமுறைகள் திருக்கோயிலில் வைத்து வழிபடப் பெற்றுவந்தன. அத்திருப்பதிக ஏடுகள் சிதையாதபடி காப்பதற்குத் தமிழ்ப் புலவர்களும் அவற்றை இசையுடன் பாடும் ஓதுவார்களும் திருக்கோயில்களில் நியமிக்கப்பட்டிருந்தனர்.

திருக்கோயில்களில் திருமுறை ஏடுகளைப் பாதுகாப்பதற்குப் பயன்பட்ட மண்டபம் "திருக்கை கோட்டி " என்று அழைக்கப்பட்டது.

"...இக்கோயில் திருக்கை கோட்டியில் எழுந்தருளியிருக்கின்ற திருமுறைகள் திருக்காப்பு நீக்கி அழிவுள்ளன எழுந்தருளுவிக்கவும் திருமுறைகள்பூசித்தும் இருக்கைக்கு இவ்வூர்க் காசு கொள்ளா இறையிலியாக விடப்பட்ட நிலம் .... " என்று சீர்காழித் திருஞானசம்பந்தர் கோயிலில் ஒரு கல்வெட்டுக் கூறுகிறது.

திருவீழிமிழலையில் நரசிங்கதேவன் என்ற தலைவனால் திருக்கைகோட்டி மண்டபம் கட்டப்பெற்றது. கி.பி. (1908, 414)

**பன்னிரு திருமுறைகள்**

| | |
|---|---|
| முதல் திருமுறை | திருஞானசம்பந்தர் (1) |
| இரண்டாம் திருமுறை | திருஞானசம்பந்தர் (1) |
| மூன்றாம் திருமுறை | திருஞானசம்பந்தர் (1) |
| நான்காம் திருமுறை | திருநாவுக்கரசர் (1) |
| ஐந்தாம் திருமுறை | திருநாவுக்கரசர் (1) |
| ஆறாம் திருமுறை | திருநாவுக்கரசர் (1) |
| ஏழாம் திருமுறை | சுந்தரமூர்த்தி நாயனார் (1) |
| எட்டாம் திருமுறை | மாணிக்கவாசகர் (1) |
| ஒன்பதாம் திருமுறை | திருமாளிகைத்தேவர், சேந்தனார், கருவூர்த்தேவர், பூந்துருத்தி நம்பிகாடநம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலி அமுதனார், புருடோத்தமநம்பி, சேதிராயர் (9) |
| பத்தாம் திருமுறை (திருமந்திரம்) | திருமூலர் (1) |
| பதினோராம் திருமுறை | திருவாலவாயுடையார், காரைக்காலம்மையார், ஐயடிகள் காடவர்கோன், சேரமான்பெருமாள் நாயனார் நக்கீரதேவநாயனார், கல்லாடர், கபிலர், பரணர், இளம்பெருமானடிகள், அதிரா அடிகள், திருவெண்காட்டடிகள், நம்பியாண்டார் நம்பி (12) |
| பன்னிரண்டாம் திருமுறை (திருத்தொண்டர்புராணம்) | சேக்கிழார் (1) |
| ஆக | 27 பேர்கள் திருமுறையாசிரியர்கள் |

சிவாலயங்களில் நித்திய பூஜையில் பஞ்சபுராணம் ஓதப்படுகிறது. தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, திருத்தொண்டர் புராணம்- ஆகியவற்றிலிருந்து பாடல்களை ஓதுவார்கள் இசைத்து வருகின்றனர்.

**திருமுறை வகுப்பு**

கி.பி.10ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவரான நம்பியாண்டார் நம்பிகள் இராசராசசோழனின் வேண்டுகோட்கிணங்கி தேவாரத்திருமுறை ஏடுகளைத் தில்லையில் கண்டுபிடித்து அவற்றை ஏழு திருமுறைகளாக வகுத்தருளினார். பின் அவ்வத்திருப்பதிகத்துக்கு உரிய பண்வகைக் கட்டளை வகைகளை ஆராய்ந்து கண்டு குறித்தருளினார். மேலும் திருத்தொண்டத் தொகையில் பாடப்பெற்ற நாயன்மார்களின் வரலாறுகளை தேவாரம், பிறநூல்கள், வேறு வரலாற்று மூலங்கள் என்பவற்றை ஆராய்ந்து தாமே திருத்தொண்டர் திருவந்தாதி இயற்றி மேலும் ஒன்பது பிரபந்தங்களையும் செய்தருளினார். இவர் தேவாரங்களுக்குப் பின் எட்டு, ஒன்பது, பத்து, பதினொன்றாம் திருமுறைகளையும் சேர்த்தருளினார்.

திருஞான சம்பந்தர் அருளிச்செய்த திருப்பதிகங்க்ள் 1,2,3ஆம் திருமுறைகள்.

திருநாவுக்கரசர் அருளிச்செய்த பண்வகை, திருநேரிசை, திருவிருத்தம் என்பவை 4 ஆம் திருமுறை. அவர் அருளிச்செய்த திருக்குறுந்தொகைத் திருப்பதிகங்கள் 5ஆம் திருமுறை, அவர் அருளிச்செய்த திருத்தாண்டகங்கள் 6ஆம் திருமுறை.

நம்பி ஆரூரர் அருளிச்செய்த திருப்பதிகங்கள் 7ஆம் திருமுறை. இவை ஏழும் சேர்ந்து அடங்கன்முறை எனவும் திருநெறித் தமிழ் எனவும் வழங்கும்.

திருவாதவூரடிகள் அருளிச்செய்த திருவாசகமும் திருக்கோவையாரும் 8ஆம் திருமுறை.

திருமாளிகைத்தேவர் முதலிய ஒன்பதின்மர் அருளிச் செய்த திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்பவை 9ஆம் திருமுறை.

திருமூலர் அருளிச் செய்த திருமந்திரம் மூவாயிரமும் 10 ஆம் திருமுறை. திருவாலவாயுடையார் முதலிய பன்னிருவர் அருளிச்செய்த 40 பிரபந்தங்கள் 11ஆம் திருமுறை.

**திருத்தொண்டர் புராணம்**

சேக்கிழார் பெருமான் அநபாயசோழன் வேண்டுகோட்கிணங்கத் திருத்தொண்டர் புராணம் பாடியருளினார்.

| | |
|---|---|
| திருத்தொண்டத்தொகை | தொகைநூல் |
| திருத்தொண்டர் திருவந்தாதி | வகைநூல் |
| திருத்தொண்டர்புராணம் | விரிநூல் |

தில்லையில் அம்பலவாணார் "உலகெலாம்" என்று அடிஎடுத்துக் கொடுத்துச் சிலம்பொலி கேட்பிக்கச் சேக்கிழார் புராணம் பாடினார். மக்கள் வழக்கில் இது பெரிய புராணம் என்று பெயர்பெற்றது. இது சுந்தரர் வரலாற்றைக் காப்பிய அமைப்பில் கூறுகிறது. அவ்வரலாற்றிடையே சிவனடியார்களின் வரலாறுக ள விரித்துக் கூறுகிறது,.

**சைவ சாத்திரங்கள்**

திருமூலரின் திருமந்திரம் சைவசாத்திரங்களில் ஆதியாகக் கருதப்படுகிறது. திருமூலர் காலத்துக்குப் பிறகு பலசமய மதி பேதங்கள் ஏற்பட்டபோது சிவாநுபூதிச் செல்வர்கள் இயற்றியருளிய சாத்திரநூல்கள் பதினான்கு. அவையாவன,

**1. திருவுந்தியார்**

இது 45 கலித்தாழிசைகளால் ஆகியது. இதனை இயற்றியவர் திருவியலூர் உய்யவந்த தேவ நாயனார். கி.பி.1147 ல் அருளிச் செய்தார்.

மனமொழிகளுக்கு அப்பாற்பட்ட முதல்வனே ஞானாசிரியனாய் வெளிப்பட்டு மெய்யுணர்வை நல்குவான்.

அது கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை என்னும் நான்கின் திறத்தால் உணரப்படும். அவ்வாறு உணர்ந்தவரே சிவமே ஆவர்.

சிவமாம்தன்மைப் பெருவாழ்வு முதல்வன் அருள வருவது.

கேட்டல் ஞானம் அனுபவ ஞானமாய் முதிர்வதற்கு யோகப்பயிற்சி வேண்டப்படும்.

மெய்யுணர்வின் பயனாக யான், எனது என்னும் செருக்கு நீங்கும்படி கரைகடந்து எழும் பேரன்பு ஒன்றால்தான் சிவமாகும் தன்மையை முதல்வனால் வழங்கப் பெற்று இன்புறுநிலையை எய்தல் கூடும். இவையே திருவுந்தியாரில் விளக்கப்பெறுகின்றன.

**2. திருக்களிற்றுப்படியார்**

இந்நூலைத் திருக்கடவூர் உய்யவந்ததேவநாயனார் கி.பி.1177ல் இயற்றினார். இது வெண்பாக்களால் இயன்றது. ஆசிரியர் நூலை இயற்றித் தில்லையில் கூத்தப்பெருமான் திருமுன்பு திருக்களிற்றுப்படியின்மேல் வைத்தார். கல்லால் அமைந்த களிற்றின் கை நிமிர்ந்து இந்நூலை வாங்கிப் பெருமானது எடுத்த பொற்பாதத்தில் இட்டது. இதனால் திருக்களிற்றுப்படியார் என்று இந்நூல் பெயர் பெற்றது.

இந்நூலில், இறைவன் திருவடி கூடுதற்குரிய சாதனங்களைச் சிவதருமம், சிவயோகம், சிவஞானம் என மூன்றாக

வகைப்படுத்தியிருக்கிறது. இந்நூலாசிரியர் திருக்குறள் மற்றும் திருமுறைகளை மேற்கொளாக ஆள்கிறார்.

### 3. சிவஞான போதம்

இதனை அருளியவர் திருவெண்ணெய்நல்லூர் மெய்கண்டதேவ நாயனார். இவர் காலம் கி.பி. 13 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியாகும்.

இந்நூல் 12 சூத்திரங்களால் ஆகியது. சித்தாந்த சைவத்தின் அடிப்படை உண்மைகளையும் முடிவுகளையும் விளக்கும் மிகத்தலையாய சாத்திரம் இந்நூல். இதனுள் கூறப்படும் முடிவுகள்:-

(1) உலகம் அவன் அவள் அது என்று சுட்டி உணரப்படுவது, தோன்றியும் நின்றும் மறைந்தும் மீளவும் தோன்றுவதாய் உள்ளது. ஆதலால் இவ்வுலகை நியமித்து ஒழுங்குபட நடத்திவரும் முதல்வன் ஒருவன் இருக்கவேண்டும். அவன் சுட்டியறியப்படாதவனாய், எவ்வகை மாறுதலும் இல்லாதவனாய், எல்லா உலகையும், ஒருங்கே ஒடுக்கி ஒருங்கே தோற்றுவிக்க வல்லனாய் இருக்கவேண்டும். உயிர்கள் அறியாமையாகிற இயற்கைக் குற்றம் நீங்கி மெய்யுணர்வைப் படிப்படியாகப் பெற்று மேம்படுதற் பொருட்டே, அம்முதல்வன் உலகப் படைப்பை மேற்கொள்ளுகிறான். ஆதலால் அம்முதல்வனே உலகின் பரம ஆதார நிமித்தகாரணன் ஆவான்.

(2) உலகுயிர் அனைத்தும் அம்முதல்வனுடைய அருளாற்றற் சூழலில் அகப்பட்டு அவனுடைய வியாபகத்தில் அடங்கி நிற்பவையாகும். இந்நிலையில், அம் முதல்வன் உயிர்களோடு கலந்து ஒன்றாய் வேறாய் உடனாய் நின்று, அவை தாம் முன்செய்த வினைக்கு ஏற்ப, தொழிற்பட்டு நடக்குமாறு அவற்றைத் தனது ஐந்தொழிற்படுத்தி நடத்துவான். அவன் தானும் தன் சக்தியும் என்று தன்னுள் இருவேறு வகைப்படநின்று உலகினை நடத்துவான். அத்தகைய சக்தியை அம்மை என்றும் திருவருள் என்றும் கூறுகிறோம்.

(3) உடம்பு தோறும் காணப்படும் ஒழுங்குபட்ட அறிவுச் செயல்களுக்கு மூலமாய் யான் என்னும் உணர்ச்சி வடிவில் விளங்குவதே ஆன்மா எனப்படும்.

ஆன்மா சூனியம் அன்று
ஆன்மா பருவுடல் அன்று
ஐம்பொறிகள் ஆன்மா அல்ல
நுண்ணுடம்பும் ஆன்மா அன்று
பிராணன் ஆன்மா அன்று
பிரம்மம் ஆன்மா அன்று
கரணங்களும் ஆன்மா அல்ல

ஆதலின் இது என்று சுட்டப்படும் பொருள்கள் அனைத்திற்கும் வேறுபட்டதாய், அவ்வாறு பிற பொருள்களைச் சுட்டி உணர்ந்து பற்றியும் இதுநான் அன்று என அவற்றின் நீங்கியும் அவஸ்தைப்பட்டுவரும் உணர்வே ஆன்மா. அது மாயா காரியமாகிய பொருள்களில் ஒன்றும் அன்று. முதல்வன் மாயையைக் கடந்து நிற்பவன் ஆதலால் அஃது அம்முதல்வனும் அன்று. மாயா காரியத்திற்கும் முதல்வனுக்கும் வேறுபட்டதாய் அவ்விரண்டாலும் பயன்கொள்ளும் மூன்றாவது பொருளாகும்.

(4) ஆன்மாவிற்கு அறியாமையை விளைவிப்பதாக இயற்கை மலம் ஒன்று உண்டு. மனம், புத்தி, அகங்காரம், சித்தம், என்னும் அகக்கரணங்கள் அவ்வறியாமையை விலக்கி உலகப் பொருள்களை உணர்ந்து தக்கபடி எதிரிசைவு புரிய உதவுகின்றன.

ஆன்மாவிற்கு மூன்று அடிப்படை உணர்வு நிலைகள் உள்ளன.

அவை 1.கேவலம் 2. சகலம் 3. சுத்தம் என்பன.

கேவலம் - அறியாமையில் அழுந்தும் நிலை, இது இரவு எனப்படும்

சகலம் - உலகியற் பொருள்களின் தன்மையில் அழுந்தும் நிலை. இது பகல் எனப்படும்.

சுத்தம் - முதல்வனுடைய திருவருளில் அழுந்தும் நிலை. இது இராப்பகலற்ற இடம்.

கேவலத்திலிருந்து சகலத்தைத் தலைப்படும் நெறியில் ஆன்மாவிற்கு உயிர்ப்படக்கம், பேருறக்கம், உறக்கம், கனவு, நனவு, என்னும் ஐந்து ஆக்க நிலைகளும் சுத்தத்தில் ஐந்து ஆக்க நிலைகளும் உள்ளன. தன்னை உணரப் புகுவோர் இந்நிலைகளை எல்லாம் சகலத்தில் நின்று முன்னும் பின்னும் கூட்டி உணர்தல் வேண்டும்.

(5) மெய், வாய், கண், மூக்கு, செவி, என்னும் ஐம்பொறிகளும் தமக்குரிய ஊறு, சுவை, உரு, நாற்றம், ஓசை, என்பவற்றை அறியும் போது ஆன்மாவினால் செலுத்தப்பட்டே அறியும். ஆயினும் அவை புறநோக்கு ஒன்றே உடையன. தம்மை அறிவதில்லை. தம்மைச் செலுத்திநிற்கும் ஆன்மாவையும் அறிவதில்லை. ஆன்மா ஒரு பொருளை அறியும் போதும் ஒரு செயலைச் செய்யும்போதும் முதல்வனால் அறிவிக்கப் பெற்றும் செலுத்தப்பெற்றும் அறிகிறது., செய்கிறது. ஆனால் அது தன்னையும் அறிவதில்லை , தன் உணர்வின் முதலாக இருந்து தொழிற்படுத்தும் முதல்வனையும் அறிவதில்லை. முதல்வன் உயிர்களைத் தொழிற்படுத்தி உபகரித்தும் தான் சிறிதும் விகாரப்படுவதில்லை.

(6) முதல்வன் நம் அறிவினால் அறியப்படுபவன் அல்லன், எவ்விதத்திலும் அறியப்படாதவன் என்னாது அவன் உள் பொருள். எனவே அவன் நம் சுட்டறிவிற்கு அப்பாற்பட்டவன். பாசங்கள் நீங்கிச் சுட்டாது ஒன்றித்து நின்றுணரும் அனுபவ உணர்வுக்கு அவன்

விஷயமாவான். முதல்வனை சிவ சத்து என்பர். சிவம் - சித்து, ஸத்து - உள்பொருள் முதல்வன் அறிவு வடிவமான செம்பொருள்.

(7) நம் உடல், உடலுறுப்புகள், உலகு, நுகர்ச்சிப்பொருள் என்ற இவையாவும் தோன்றி நின்று அழிவன. ஆதலால் அஸத் எனப்படும். செம்பொருளாகிய முதல்வனே ஸத் எனப்படுவான்.

பிறப்பு நிலையில் நாம் அஸத்தாகிய பொருள்களை அஸத்தாகிய கரணங்களைக் கொண்டு அறிந்து அவ்வஸத்தின் வண்ணமாய் இருந்து வருகின்றோம். வீடு பேற்று நிலையில் ஸத்தாகிய செம்பொருளை அதன் திருவருளால் உணர்ந்து, அதன் வண்ணமாய் இருப்போம், இதனால் இரு திறனையும் இருதிறனாலும் அறிந்து இருதிறனின் கண்ணும் உள்ளதாய் விளங்கும் இயல்பே ஆன்மாவின் சிறப்பியல்பு. இந்த இயல்பு காரணமாகப் பிறப்பின்கண் ஆன்மா இவ்வுடம்பே யான் என்னும் அனுபவம் உடையதாய் வருவது போலவே, முத்திநிலையில் யான் பிரம்மம் (அஹம் ப்ரஹ்மாஸ்மி) என்னும் அனுபவம் உடையதாயிருக்கும். அதுபற்றி முதற்பொருள் என வேறில்லை, ஆன்மாவே முதற்பொருள் என்று முடிவு கூறுதல் சரியன்று. ஆன்மா அஸத்தைச் சார்ந்து அஸத்தாயும், பிறகு ஸத்தைச் சார்ந்து அவ் அஸத்தை நீங்கிச் சத்தாயும் நிற்கும் இக்காரணம் பற்றி ஆன்மா ஸதஸத் எனப்படும்.

(8) முன்பிறவிகளில் பயன்கருதாது செய்து வந்த சரியை, யோகங்களாகிய தவமுதிர்ச்சியினால் உயிர்க்குயிராக இருந்து உணர்த்திவரும் முதல்வன் ஞானாசிரியனாகத் தோன்றி மெய்யுணர்வை அளித்தருளுவான். இவ்வுணர்வைப் பெற, ஆன்மா தத்துவக்கூட்டங்களிலிருந்து நீங்கி முதல்வன் திருவடியில் பிரிப்பின்றி ஒன்றி இன்புறும் நிலையை எய்தும்.

(9) அஸத்தாகிய தத்துவங்களோடு கூடுவதால் ஆன்மாவிற்கு உண்டாகும் சுட்டுணர்வு பாசஞானம் எனப்படும். நான் யார்? என்று ஆன்மா தன் சொரூபத்தை ஆராயின் அது மாயாகாரியமாகிய கருவிகரணங்களின் தொடர்பு நீங்கித் தன் வியாபக நிலையை உணரும். அப்போது பாசம் நீங்கினும் அதன் வாசனைகாரணமாகத் தன்னை "நான் பரம் பொருள்" என்று உணரும். இவ்வுணர்வு பசுஞானம் எனப்படும். இனி, பாசம் நீங்கிய பின் ஆன்மாவின் வியாபகம் முதல்வனுடைய திருவருள்சார்பு பற்றிய விளக்கமாகும் எனத் தெளிந்து, அத்திருவருள் ஒளியில் யான் எனது என்னும் செருக்கு அற அடங்கி நின்றால், அவ்வருளுக்கு முதலாக உள்ள சிவம் பேரின்ப வடிவாய்த் தோன்றி ஆன்மாவைத் தன்வயப்படுத்தி இன்பமூட்டும். இவ்வாறு திருவருளே கண்ணாகக் காணும் காட்சியே மெய்யுணர்வு அல்லது சிவஞானம் ஆகும். பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பற்ற முடியாத பேரின்ப முதல்வனை அத்திருவருள் ஞானத்தால் தன் அறிவின் கண் ஒருவன் நாடுதல் வேண்டும். இவ்வாறு

சிந்தித்துக் காணும் காட்சி சலியாதிருத்தற்பொருட்டு முக்தி பஞ்சாட்சரமும் சுத்த மானசமாக எண்ணப்படும்.

(10) முதல்வன் உடன் நின்றபோதும் ஆன்மா யான் எனது என்னும் செருக்கோடு முயலும் போது அவன் தன் இருப்பைச்சிறிதும் அவ்வுயிர்க்குக் காட்டாது தான் பின் நின்று அதன் வழியிலே அதனைச் செல்லுமாறு ஏவி விடுகிறான், அதனால் உயிர் முதல்வன் உபகாரத்தை மறந்து செய்யும் செயல்களுக்குத் தானே பொறுப்பு ஆதலின் இருவினை அதனைப் பற்றுகிறது.

இவ்வாறு பிறப்பு நிலையில் முதல்வன் தன்னைக் காட்டாது உயிரின் செயலில் மறைந்து வந்தாற்போல், முதல்வன் இருப்பை உணரும் முக்திநிலையில் ஆன்மா தான் என்று ஒரு முதல் காணப்படாதபடி எல்லாம் முதல்வன் செயலே என்று உயர்ந்து அவன் வியாபகத்தில் அடங்கி ஒன்றாகி அவன் அருளால் அல்லது ஒன்றையும் அறிதலோ செய்தலோ இன்றி அருள்வழி நிற்றல் வேண்டும். இவ்வாறு முதல்வனோடு ஒன்றாகி நிற்றலால் இயற்கை மலம் எனப்படும். ஆணவத்தின் வாசனை பற்றறக் கழியும். அருள்வழி நிற்றலால் அருளே காட்சிப்பட்டு உலகம் காட்சிப் படாது. அதாவது மாயையின் செயல் பற்றறக்கழியும். ஆதலினால், இருவினைகளும், ஆன்மாவைப் பற்றமாட்டா. எல்லாம் முதல்வன் செயலேயாய் முடியும்.

(11) ஆன்மா பொருள்களை அறிந்து அனுபவிக்கும் போது, அவ்வான்மாவுக்கு அவ்வனுபவம் நிகழ்தற்பொருட்டு முதல்வன் அவ்வான்மாவுக்குப் பொருள்களைக காடடித தானும் அவற்றில் அழுந்தாது காண்பன். இவ்வுபகாரம் முதல்வனால் எல்லா ஆன்மாக்களுக்கும் பிறப்பு, வீடு, என்ற இருநிலைகளிலும் எஞ்ஞான்றும் செய்யப்படுகிறது. பிறப்பு நிலையில் ஆன்மாக்கள் அஸத்தாகிய உலகப் பொருள்களைத் தம் அறிவு, இச்சை, செயல்களால் பற்றி இன்பம், துன்பம் மயக்கம் என்னும் மூவகை வேதனைப்படும். முக்தி நிலையில் முதல்வனையே தம் அறிவு இச்சை செயல்களுக்கு விஷயமாகப் பற்றி அழுந்திப் பேரின்பம் துய்க்கும்.

(12) இன்புறுநிலையை (முக்தி) தலைப்பட்ட பெருமக்கள், முதல்வன் திருவருளால் உந்தப்பட்டும், அன்றி பிராரப்த வாசனை காரணமாகவும், சிற்சில சமயங்களில் அந்த நிலையிலிருந்து நீங்கி உலகத்தை நோக்கி வருவர். அப்போது மலவாசனை காரணமாக "யான் எனது" என்னும் செருக்குத் தம் உணர்வில் தோன்றாதபடி ஞான நீரால் வாசனை மாசு கழுவுவர். தம்மோடு ஒத்த மெய்யன்பரோடு கூடி நிற்பர். திருக்கோயில்களில் உள்ள திருவுருவங்களையும் திருவேடத்தையும் சிவன் என்றே தெரியக்கண்டு கை தொழுவர்.

### 4. சிவஞானசித்தியார்

இது சிவஞான போதத்தின் வழிநூல் ,அருணந்திசிவம் அருளியது. பரபக்கம் (பரபக்ஷம்) சுபக்கம் (ஸ்வபக்ஷம்) என்று இரு பகுதிகளையுடையது. பரபக்கம் 301 திருவிருத்தங்களை உடையது. சுபக்கம் 328 திருவிருத் தங்களையுடையது.

பரபக்கத்தில் (1) உலகாயதம் (2) சௌத்திராந்திகம், யோகாசாரம், மாத்யமிகம், வைபாஷிகம், என்ற நான்கு வகை பௌத்தம் (3) நிகண்ட வாதம், அசீவகம் என்ற இருவகைப்படும் சமணம் (4) பாட்டாசாரியன் மதம் பிரபாகரன் மதம் என்ற இருவகைப்படும் மீமாம்சை (5) சப்தப்ரம்ம வாதம், கிரீடாப்பிரம்மவாதம், பாஸ்கரீயவாதம், மாயா வாதம், என்ற நால்வகைப்படும் ஏகாத்ம வாதம் (6) சாங்கியம் (7) பாஞ்சராத்திரம் என்பவை கூறப்பட்டுள்ளன.

சுபக்கத்தில் சிவஞானப் பொருளே தடை விடைகளுடன் விரித்துத் கூறப்பட்டிருக்கிறது. இதன் பெருமையை தருமை ஆதீன முதல்பரமாசாரியராகிய குருஞான சம்பந்தர் மற்றும் திராவிட மாபாடிய ஆசிரியர் மாதவச் சிவஞான முனிவர் பலபடப் புகழ்ந்துள்ளனர்.

### 5. இருபாஇருபஃது

அருள் நந்தி சிவத்தால் இயற்றப்பட்டது. வெண்பா ஆசிரியப்பா என்ற இருவகைகளில் அந்தாதித் தொடையால் இருபது செய்யுட்களில் அமைந்தது. மெய்கண்டதேவரை எதிர்முகமாக்கி வினாவும் முகத்தால் அதிநுட்ப உண்மைகளையும் சிவாநுபவத்தையும் தெளிவுபடுத்துவது.

### 6. உண்மை விளக்கம்

திருவதிகை மனவாசகம் கடந்த தேவரால் இயற்றப்பட்டது. 53 வெண்பாக்களால் இயன்றது. முப்பத்தாறு தத்துவம், ஆணவம், இருவினை, உயிர், இறைவன், இறைவன் திருநடனம், ஐந்தெழுத்தருள்நிலை, பரமுத்தி நிலை, அணைந்தோர் தன்மை, ஆகியவற்றைச் சுருங்கக்கூறி விளங்கவைக்கிறது.

### 7. சிவப்பிரகாசம்

உமாபதி சிவனால் இயற்றப்பட்டது. சிவஞான போதத்தின் சார்புநூல், 100 விருத்தங்களால் ஆயது. பாயிரம், பொதுவதிகாரம், உண்மையதிகாரம், என்ற முப்பிரிவுகளை உடையது. திருக்கயிலாய பரம்பரையில் வந்த சந்தான குரவர்களை இன்னார் என்பது இதில் பாயிரத்தாற் கூறப்பட்டுள்ளது.. மனம், மொழி, மெய்களால், இயற்றப்படும் கிரியைகள் யாவும் ஞானம் கிடைப்பதற்கு நிமித்தமாகும். சிவஞானம் என்பது பரஞானம், அபரஞானம் என்று இரண்டு வகைப்படும். திருவருள்கண்ணாகக் காணும் காட்சி பரஞானமாகும். அக் காட்சியை

விளங்கக் கூறும் அருள்நூல்கள் அபரஞானமாகும். பர அபர ஞானங்களின் முடிந்த முடிபாகவுள்ளது, சிவஞானபோதம் என்ற சாத்திரம்.

**8. திருவருட்பயன்**

இது 100 குறட்பாக்களால் ஆயது. 10 அதிகாரங்கள் கொண்டது. பதிமுதுநிலை, உயிரவைநிலை, இருள்மலநிலை, அருளதுநிலை, அருள்உருநிலை, அறியும்நெறி, உயிர் விளக்கம், இன்புறுநிலை, ஐந்தெழுத்தருள்நிலை , அணைந்தோர்தன்மை என்ற 10 அதிகாரங்களைக் கொண்டது.

**9. வினா வெண்பா**

13 வெண்பாக்களால் ஆயது .சுத்த அத்வைத சித்தாந்த முக்தியின் இயல்வைக் கூறுவது.

**10. போற்றிப் பஃறொடை**

இறைவன் திருவருள் ஆத்மாக்களை அநாதி கேவலத்திலிருந்து எடுத்துச் சகல நிலைக்கு உய்த்துப் பிறப்பு இறப்புக்களில் உட்பட்டுச் சுழல வைக்கிறது. பின் பக்குவநிலை எய்திய ஆன்மாக்களை ஞானதீக்ஷை செய்து சுத்தநிலை எனப்படும் பரமுத்தி நிலையில் உய்க்கின்றது. இவ்வாறு ஆன்மாக்களுக்குத் திருவருள் தொன்று தொட்டுச் செய்து வரும் உபகாரங்களை எடுத்துக்கூறிப் போற்றுவதாக ஆக்கப்பட்டுள்ளது.

**11. கொடிக்கவி**

தில்லையில் கொடியேறும் பொருட்டுப் பாடப்பட்டது . ஒரு கட்டளைக் கலித்துறை, நான்கு வெண்பாக்கள் ஆக ஐந்து பாட்டுக்களால் ஆகியது. ஞான தீட்சையின் பயனும் திருவைந்தெழுத்தின் ஒதுமுறையும் பொருளும் உரைப்பது.

**12. நெஞ்சு விடுதூது**

உமாபதி சிவன் இயற்றியது. தம்முடைய ஞான ஆசிரியராகிய மறைஞான சம்பந்தர்பால் சென்று மாலை வாங்கிவரும்படி தம்நெஞ்சுக்குச் சொல்லித் தூது அனுப்புவதாகச் சொல்லப்பட்டது.

**13. உண்மை நெறி விளக்கம்**

உமாபதி சிவன் இயற்றியது. சிலர் சீர்காழித் தத்துவநாதர் இயற்றியது என்பர். உயிர் சகல நிலையின் நீங்கி சுத்தநிலை எய்தி இறைவன் திருவடியைத் தலைக்கூடும் ஞானநெறியில் மேற்கொள்ளவேண்டிய ஞானச் செய்திகளை இந்நூல் கூறுகிறது.

**14. சங்கற்ப நிராகரணம்**

இதில் பின்வரும் சமயவாதங்கள் நிராகரிக்கப்படுகின்றன.

1. மாயாவாதம் 2. ஐக்கியவாதம், 3.பாஷாணவாதம் 4. பேதவாதம் 5.சிவசமவாதம் 6. சங்க்ராந்த வாதம் 7. ஈசுவர அவிகார வாதம் 8. நிமித்தகாரண பரிணாம வாதம் 9. சைவவாதம். இது 13 அகவற்பாக்களையும் ஒரு வெண்பாவையும் கொண்டது. கி.பி.1313ல் இயற்றப்பட்டது.

மேற்குறித்த பதினான்கு நூல்களோடு "துகளறுபோதம்" என்ற ஞானநூலையும் சேர்த்து மெய்கண்டநூல்கள் என்றும் வழங்குவர், இதனைச் சீர்காழிச் சிற்றம்பல நாடிகள் என்பவர் இயற்றினார்.

**நீலகண்ட ஆசிரியர்**

இவர் வியாசருடைய பிரம்ம சூத்திரங்களுக்கு வேத சிவாகம நெறிப்படி பாஷ்யம் இயற்றினார். இவர் முதல்வனை உபாதான காரணமும் ஆவான் என்று கொள்வதால் இவர் கொள்கை சிவாத்வைதம் என்று வேறாக வைத்து எண்ணப்படுகிறது.

**கச்சியப்பசிவாசாரியர்**

காஞ்சியில் அவதரித்த இவர் "கந்தபுராணம்" இயற்றினார். இந்நூல் வேதஆகமங்களாகிற கலை ஞானத்தின் அதிநுட்பங்களை விளக்குகிறது. இஃது வேதம் வேதாந்தம் ஆகமம் ஆகமாந்தம் என்பவற்றின் வரலாறு, பொருண்முடிவு என்பவற்றை அறியச் சிறந்த பிரமாணநூலாகக் கொள்ளப்படுகிறது.

**வாகீசமுனிவர்**

இவர் கி.பி.12ஆம் நூற்றாண்டில் திருவொற்றியூரில் சதுரானன பண்டிதர் மடத்தில் தங்கியிருந்து சிவநெறியை விளக்கிவந்தார்.இருமொழியில் வல்லவர். சிவாகமங்களின் நான்கு பாதங்களின் பொருளையும் விளக்கித் தமிழில் ஞானாமிருதம் என்னும் அரியநூலாக இயற்றியுள்ளார். இக்காலத்தில் ஞானபாதப்பொருண்மை விளக்கும் பகுதியே வழக்கிலுள்ளது.

இயல் 19

# சைவ சித்தாந்தம் அடிப்படைக்கொள்கை

**1. பிரமாண நூல்கள் (சான்று நூல்கள்)**

பன்னிருதிருமுறைகள்
பதினான்கு சாத்திரங்கள்
வேதங்களும் ஆகமங்களும்
மற்றும் இவற்றின் வழிநூல்களும்

**2. பிரமாதாக்கள் (சான்றோர்கள்)**

1) சைவ சமய குரவர்கள்
2) சைவ சந்தான குரவர்கள்

| சைவ சமயகுரவர்கள் | சைவ சந்தான குரவர்கள் |
|---|---|
| 1) திருஞானசம்பந்தர் | 1) மெய்கண்டதேவர் |
| 2) திருநாவுக்கரசர் | 2) அருணந்திசிவனார் |
| 3) சுந்தரமூர்த்திநாயனார் | 3) மறைஞானசம்பந்தர் |
| 4) மாணிக்கவாசகர் | 4) உமாபதி சிவனார் |

**3. பிரமேயங்கள் (முடிவுநிலை உண்மைப் பொருள்கள் அல்லது தத்துவங்கள்)**

(1) பதி (இறை)
(2) பசு(உயிர்) — முப்பொருள்கள் (தத்துவத்திரயம்)
(3) பாசம் (தளை)

**4. முப்பொருள்களின் சம்பந்தம்**

பதியாகிய இறைவன் பசு பாசங்களைத் தன் ஆற்றலில் அடங்கக்கொண்டு தொழிற்படுத்துகிறான்.

5. தளை (1) ஆணவம் (2) கன்மம் (3) மாயை என மூவகைப்படும்

6. இறை, இயற்கையான முற்றுணர்வுடையது, அஃது ஒன்றே. பல அன்று.உயிர், உணர்த்த உணரும் செயற்கை உணர்வுடையது. தளை, உயிர்களின் ஆற்றலைத் தடை செய்து துன்புறுத்தும் சடப்பொருள்

7. உயிர்களின் இருநிலை 1) பிறப்புநிலை(சம்சாரம்)
2) வீட்டு நிலை (முக்தி)

பிறப்பு நிலையாவது,, ஆன்மாக்கள் தளைவயப்பட்டுப் பிறந்து இறந்து உழலும் பிறப்பு நிலை.

முக்தி நிலையாவது, இறைவன் திருவருளால் ஆன்மாக்கள் பாசத்திலிருந்து விடுபட்டு இறையை அணைந்து தூயபேரின்பத்தை அனுபவிக்கும் நிலை.

## முப்பொருள் இயல்பு

### 1. பதியின் இயல்பு

இறைவன் (பதி) தூய அறிவே வடிவமானவன்
இறைவன் தானே எல்லாம் உணரும் முற்றுணர்வுடையவன்
பசு, பாசங்களைத் தன் வியாபகத்தில் அடக்கித் தொழிற்படுத்துபவன்.
ஆன்மாக்களது சுட்டறிவைக் கடந்துநிற்பவன் (கடவுள்)
உயிர்கள், உலகுகள், இவற்றை இடமாகக் கொள்பவன்(இறை)
உயிர்களையும் உலகுகளையும் இயக்குபவன் (இயவுள்)

காணப்படும் எல்லாவகைப் பொருளுக்கும் முற்பட்ட பொருளாய், அவை அனைத்துக்கும் முடிந்த சார்பாய் நின்று, அவற்றைத் தொழிற்படுத்துபவன் (முதல்வன்,ஆதி)

முதல்வன் சிவம், சக்தி என்ற இரண்டு இயல்புகளை உடையவன். உலகு , உயிர்களின் கண் நிகழும் செயல்கள் யாவும் முதல்வனது விருப்பத்தின்படி, அவனது சங்கல்பத்தால் நிகழ்கின்றன.

திருவருள் எனப்படும் சக்தியே முதல்வனுக்கு குணமும் சொரூபம் ஆகும். முதல்வனால் நாம் எய்தும் பயனெல்லாம் சிவ சக்தியால் ஆகும். ஞாயிறு சிவத்துக்கு உவமை, அதன் ஒளி சக்திக்கு உவமையாகும். ஜீவாத்மாக்களாகிய நாம் மாயாகாரியமான தநு, கரணங்களைப் (உடம்பு உறுப்புகளான கருவிகள்) பெற்று, தடைப்படும் ஞான சக்தி சேஷ்டிதங்களை உடையவர்களாய், அம்மாயைக்கு வசப்பட்டுக் கிடைக்கிறோம். முதல்வன் தனது சக்தியையே உடம்பு முதலியனவாகக்கொண்டு தன்வசமுடையவனாய் எல்லார் செயலையும் செய்கிறான். இதனால் முதல்வனுக்கு எஞ்ஞான்றும் ஜனனமரணங்கள் இல்லை. அவன் அன்பர்களுக்கு அவ்வப்போது காட்டியருளும் திருவுரு அவனுடைய சக்தியால் அமைந்தது. ஆதலால், அது பிறவாயாக்கை எனப்படும்.

**திருக்கோயிலில் வழிபடப்படும் திருவுருவங்கள்**

அவை (1) போக வடிவம் (2) யோகவடிவம் (3) கோரவடிவம் என மூன்று வகைப்படும்.

(1) போகவடிவம் - போகத்தை விரும்புவோர் தியானிக்கவும் பூசிக்கவும் உரியவை

(2) யோக வடிவம் - ஞானயோகத்தை விரும்புவோர்க்கு உரியவை

(3) கோர வடிவம் - பகைவராலும் நோயாலும் நலிவுபட்டோர் வினை நீக்கம் பெற தியானித்தற்கும் பூசித்தற்கும் உரியவை.

**முதல்வன் இயற்றும் தொழில்**

முதல்வன் சக்தியோடு இணைந்து நின்று சங்கல்ப மாத்திரத்தில் உலகுயிர்களைத் தொழிற்படுத்தும் போது அதனை ஐவகைகளாகப் பிரித்துணரவேண்டும். அவையாவன

படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்,

(சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம், திரோபாவம், அநுக்கிரகம்)

படைத்தல் - சரீரம், மனம் முதலிய கருவி, உலகம், போகவஸ்துக்கள் என்பனவற்றை அவற்றின் முதற்காரணத்திலிருந்தும் தோன்றச் செய்தல்,

காத்தல் - அவ்வாறு தோன்றிய பொருள்களை உயிர்களுக்கு உபகாரப்பட வைத்தல்,

அழித்தல் - அங்ஙனம் உபகாரப்பட்ட பொருள்களை மீளவும் அவற்றின் முதற் காரண ரூபத்தில் மறையச் செய்தல்,

இம்மூன்று தொழில்களும் அசேதனங்களான ஜடப்பொருள்களில் நிகழ்வன.

ஜடப்பொருள்கள் எல்லாவற்றிற்கும் ஆதிமுதற்காரணம் மாயை எனப்படும் பிரகிருதியாகும்.

மறைத்தல் - ஆன்மாக்கள் வீடுபேறு அடைவதற்குரிய தகுதியைப் பெறுவதற்கு அவற்றைத் தளை (பாசம்) களின் வழியே செல்லும்படி நடத்துதல், இதனால் ஆன்மாக்கள் முதல்வனது உபகாரத்தை (அறியாதே) பெற்று, பாசத்தின் சக்தி. மெலிய அறிவு வளர்ச்சியுற்றுவரும்.

அருளல் - பக்குவ முதிர்ச்சி எய்திய ஆன்மாக்களைப் பாசங்களிலிருந்து விடுதலை செய்து அவை தன்னைத் தலைப்பட்டு உணர்ந்து பேரின்பம்பெற்று உய்யச்செய்தல்.

மறைத்தலும் அருளலும் சேதனமாகிய ஆன்மாவின் கண் நிகழ்வது, மறைத்தல் என்பது பாசங்களுக்குரிய செயலாயினும், நோயுற்ற ஒருவனுக்கு மருத்துவன் அந்த நோயின் தன்மைக்கு ஏற்றபடி மருந்துகொடுத்து அடைவே நீக்குதல் போல, முதல்வன் மல சக்திகளை உருவு திரியச் செய்து உயிர்களை அறிவாற்றல்களில் சிறக்குமாறு வளர்த்து வருவது பற்றி, முதல்வனுடைய இவ்வுபகாரம், மறைத்தல் என்று உபசார வழக்காகக் கூறப்படுகிறது.

**எண் குணங்கள்**

1. தன்வயமுடையமை
2. தூய உடம்புடைமை
3. இயற்கை அறிவுடைமை
4. முற்றறிவுடைமை
5. இயல்பாகவே பாசத்தின் நீங்குதல்
6. பேரருள் உடைமை
7. முடிவில் ஆற்றலுடைமை
8. வரம்பில் இன்பமுடைமை

இவை முதல்வனுடைய இறைமைக் குணங்கள்

பொதுவாக ஆன்மாக்களுக்கு பிரகிருதியின் காரியமாகிய சத்துவம், இராஜஸம், தாமஸம், என்னும் முக்குணங்கள் விளக்கங்களேயாகும். முதல்வனுக்கு பிராகிருதமான இவையில்லை. ஆதலால் முதல்வன் நிர்குணன் (குணமில்லாதவன்) என்று கூறப்படுவான், அதனால் திருவருட்குணங்கள் இல்லை என்பது கருத்தன்று.

மேற்கூறிய எண் குணங்களின் வடமொழிப் பெயர்கள்.

| | | | |
|---|---|---|---|
| 1) | ஸ்வதந்திரதை | 2) | விசுத்த தேஹம் |
| 3) | அநாதிபோதம் | 4) | ஸர்வக்ஞ்தை |
| 5) | அநாதிமுக்தத்துவம் | 6) | அலுப்த சக்தி |
| 7) | நித்திய திருப்தி | 8) | நிராமயம் |

இவற்றை ஆறில் அடக்கி, சுத்த ஷாட்குண்யன் என்றும் கூறுவர்.

**சொரூபநிலையும் தடஸ்த்த நிலையும்**

**சொரூபநிலை**

சச்சிதானந்தம் (உண்மை அறிவு இன்பம்) என்னும் வடிவில் மெய்யுணர்ந்தோரால் அனுபவிக்கப்படும் இயல்பு. இதனை சிவம், என்று வழங்குவர்.

**தடஸ்த நிலை**

முதற்பொருளான இறைவன் தனக்கு வேறாகிய உலகு, உயிர்களோடு கலந்திருக்கும் தொடர்பு பற்றி அதன்கண் உள்ள இயல்பு. இஃது மூவகைப்பட வழங்கப்படும்

1. எல்லாப் பொருள்களிலும் சர்வாந்தர்யாமியாய்க் கலந்து ஞானம் கிரியை என்னும் சக்திரூபமாய் நிற்கும் நிலை (லய நிலை)
2. அவ்வாறு நின்று உலகுயிர்களை ஐந்தொழிற்படுத்த முற்படும் நிலை. (போகநிலை)
3. அவ்வத்தொழிலில் யாதேனும் ஒன்றன்பாற் படுத்தித் தொழிற்படுத்தும் நிலை. (அதிகார நிலை)

இம்மூன்று நிலைகளிலும், முதல்வனுக்குள்ள திருமேனிகள் மூன்றும் அவற்றின் பெயர்களும் வருமாறு.

1. அருவம் (சக்தன், லயசிவன்)
2. அருவுருவம் (யுக்தியுக்தன், சதாசிவன்,)
3. உருவம் (பிரவிருத்தன், மஹேசன்)

உயிர்கள் உருவத் திருமேனியில் அன்பு செய்யத்தொடங்கிப் படிநிலையில் முன்னேறி அருவத்திருமேனியில் படிந்து மேல் அறிவுருவில் நிலைக்கவேண்டும்.

உருவத்திருமேனி இருபத்தைந்து மகேச வடிவங்களாம்.

அருவுருவத்திருமேனியைப் பீடமும், லிங்கமும், ஆக அமைந்த சிவலிங்கத் திருமேனி என்று கூறுவர்.

அருவுருவத் திருமேனியைப் பிரணவத்தின்மூலங்களாகிய நாதம் , விந்து, என்னும் ஒலி, ஒளி வடிவாக வைத்து வகுத்துகூறுகின்றன ஆகமங்கள்.

**பசுவின் (உயிர் ) இயல்பு**

காணப்படும் உலகப் பொருள்கள் இருவகைப்படும்.

1. அறிவுடைப் பொருள்
2. அறிவில் பொருள் (அசேதனம்)

**அறிவுடைப்பொருள்**

தன் முயற்சியுடையதாய், உடம்போடுகூடிப் புலப்படுவதாய் உள்ளது. உடம்புகள் எண்ணில. அத்தகைய உடம்புகள் தோறும் வேறு வேறாய் யான், என்னும் உணர்வு வடிவில் நிகழ்வது ; ஆன்மா (உயிர்) எனப்படும்.

அறிவில் பொருள்கள் யாவும் அறிவுடைப் பொருளான ஆன்மாவுக்கு போக்ய பதார்த்தங்கள் (நுகரப்படும் பொருள்) ஆகும். ஆன்மா போக்தா (நுகர்வோன்) ஆகும், உயிர்களும் எண்ணிலவாம்.

அசேதனங்களை போக்யமாகக் கொள்ளும் தேவை முதல்வனுக்கு இல்லை. ஏனெனின் அவன் வரம்பில் இன்பம் உடையவன்.

**அறிவுடைப்பொருள் (சேதனம்)**

ஆன்மாக்களான உயிர்கள் (சேதனங்கள்) ஒரு காலத்தில் தோன்றியவை எனப்படாமல் காலத்தைக் கடந்துள்ள பொருள்களாகும். அவை முதல்வனால் உண்டாக்கப்பட்டன என்றோ, முதல்வனிடத்திலிருந்து, வெளிப்பட்டவை, என்றோ, முதல்வன் மாட்டு மயக்க உணர்வால் வேறுபட ஏற்றி உணரப்படுபவை என்றோ, கொள்ளப்படாதன.சில இடங்களில் உயிர்களுக்குத் தோற்ற ஒடுக்கங்கள் கூறப்படுகின்றனவே என்றால், அவை உயிர்கள் உடம்பைப் பெற்றுப் பிறவிக்கு வருவதைத் தோற்றம் எனவும், உடம்பிலிருந்து நீங்குதலை ஈறு எனவும் குறிப்பனவாம். முன்பில்லாத உயிர்கள் பின் தோன்றின எனவும், தோன்றி நின்ற உயிர்கள் அழியும் எனவும் கூறுவன அல்ல என்றுணர்தல் வேண்டும்,

அறிவுடைப்பொருளும் சேதனம்; இறைவனாகிய பதியும் சேதனம் என்றால் வேறுபாடு உளதோ எனின் உண்டு.

**அ**

(1) முதல்வன் ஒருவன்

(2) முதல்வன் தானே எல்லாம்அறிந்து அறிவிக்கும் இயற்கையான முற்றுணர்வுடையோன், எல்லாப் பொருள்களையும், ஒருங்கே தனித்து நின்று அறிபவன், அறியப்படுபொருள்களில் அழுந்தித் தொடக்குறுவதில்லை. ஆகவே அவன் பற்றற்றான் எனப்படுவான்.

(3) அதாவது இறைவன் இயல்பாகவே பாசங்களிலிருந்து நீங்கி நிற்பவன்.

(4) இறைவன் உயிர்களுக்கு அநாதியான தலைவன்

**ஆ**

(1) உயிர்கள பல

(2) உயிர்கள் உணர்த்த உணர்வன; ஒவ்வொரு காலத்து ஒவ்வொரு பொருளையே சுட்டி அறிவன. அறியும்போது மெய்வாய் கண் மூக்கு செவி மனம் என்ற கரணங்களின் மூலம் பொருள்களின் ஒவ்வோர் இயல்பையே சுட்டி அறியும்,

(3) உயிர்கள் பொருள்களைச் சார்ந்து அவற்றின் வண்ணமாய் நின்றே அறியும். ஆதலால் அவை பற்று உடையவாம். அதாவது உயிர்கள்தாம் சார்ந்த பரசரீரம் சூட்சமம் சரீரம், ஸ்தூல சரீரம் அவ்வப்போது அறியும் பொருள்கள் என்னும் இவற்றின் இயல்பைப் பற்றி அது அதுவே தானாக நின்று வேறு வேறு அவஸ்தைகளை (ஜாக்ரதை, ஸ்வப்னம், ஸுஷுப்தி, என்ற நனவு, கனவு, உறக்கம்) உறுதலும் இன்ப துன்ப மயக்கம் என்னும் வேதனை உறுதலும் செய்யும். உயிர்கள் இயல்பாகவே பாசங்களில் கட்டுண்டு நிற்கும்.

(4) உயிர்கள் இறைவனுக்கு அநாதியான அடிமை.

**குறிப்பு :**

அறியாமை (அக்ஞானம்) உயிர்களுக்கு இயற்கை அன்று. அது ஆணவம் என்னும் இயற்கை மலத்தால் உயிர்களுக்கு உள்ள செயற்கை ஆகும். உயிர்கள் வினைக்கு ஈடாக எடுக்கும் பிறப்புகள் நான்கு வகைத் தோற்றத்தையும், ஏழு வகைப் பிறப்பையும் , எண்பத்து நான்கு நூறாயிரம் யோனி பேதத்தையும், உடையவை.

**நால்வகைத்தோற்றம்**

1. அண்டஜம் - முட்டையில் தோன்றுபவை
2. ஸ்வேதஜம் - வியர்வையில் தோன்றுபவை
3. உத்பிஜ்ஜம் - விதையில் தோன்றுபவை
4. ஜராயுஜம் - கருப்பையில் தோன்றுபவை

**ஏழுவகைப்பிறப்**

1. தேவர்
2. மக்கள்
3. விலங்கு
4. பறவை
5. ஊர்வன
6. நீர்வாழ்வன
7. தாவரம்

(1–6) } சரப் பொருள் (இயங்கியல்)

(7) அசரப்பொருள் (நிலையியல்)

**எண்பத்து நான்கு இலட்சம் யோனிபேதம்**

| | |
|---|---|
| தேவர்க்கு | 11,00000 |
| மக்கட்கு | 9,00000 |
| விலங்குகட்கு | 10,00000 |
| பறவைகட்கு | 10,00000 |

| | |
|---|---|
| ஊர்வனவற்றிற்கு | 15,00000 |
| நீர்வாழ்வனவற்றிக்கு | 10,00000 |
| தாவரங்கட்கு | 19,00000 |
| ஆக | 84,00000 |

**பூலோகம்** : உயிர்கள் இருவினைகளைச் செய்வதற்கும், அவற்றின் பயன்களைக் கலந்து நுகர்வதற்கும் உரியது.

**சுவர்க்கம்** : முதலியன நல்வினையை மிகுதியும் செய்த உயிர்கள் அதன் பயனாகிய போகத்தை நுகர்வதற்குரியதான ஒளி உலகங்கள்.

**நரகம்** : தீவினையே மிகுதியும் செய்த உயிர்கள் அதன் பயனாகிய துன்பத்தை நுகர்வதற்குரியதான இருள் உலகங்கள்.

குறிப்பு : (1) நிலவுலகில் பிறந்தவர்கள் இறக்கும்போது உயிர்கள் ஸ்தூல தேஹத்தை (பருவுடலை) விடும். ஸ்தூல தேஹத்துக்குக் காரணமான சூட்சும சரீரம் (நுண்ணுடல்) அழிவதில்லை.

நல்வினை செய்த உயிர்களுக்கு நுண்ணுடலில் இருந்து பூதஸார உடல் உண்டாகும். அவ்வுடலோடு ஒளியுலகு சென்று இன்பம் நுகர்ந்து வாழ்ந்து மீளவும் நிலவுலகில் பிறக்கும். தீவினையை மிகச் செய்த உயிர்கள் பருஉடம்பை விட்டு நுண்ணுடலில் இருந்து தோன்றும் யாதனா சரீரத்தை எடுத்து இருள் உலகு சென்று துன்பத்தை நுகர்ந்து மீளவும் நிலவுலகில் பிறக்கும்.

இவ்வாறன்றி உயிர்கள் பருஉடம்பை விட்டதும் நிலவுலகில்தானே ஒரு கருவிற் சேர்ந்து வேறு பருவுடம்பை எடுப்பதும் உண்டு.

(2) நிலவுலகில் மறுபிறப்பு எடுக்கும்போது, முன் உடம்பு இறக்கும்போது அவ்வவ்வுயிர்கள் செய்த வினை அவ்வவற்றின் மனக்கண்முன் எவ்வடிவினைத் தோற்றுவித்ததோ, அவ்வடிவத்திற்குரிய, கருவில், அம்மனம் தள்ள விழுந்து அப்பிறப்பையே எடுக்கும் என்பது நியதி. (இதனை அந்திமஸ்மிருதி என்பர்)

(3) ஏழுவகைப் பிறப்புகளில் மக்கட்பிறப்பே சிறந்தது. ஏனெனில் நாம் நம் தலைவனாகிய முதல்வனை அறிந்து வழிபட்டு வீடுபேறு எய்துவதற்குச் சிறந்த கருவியாக உள்ளது.

**மூவகை உயிர்கள்**

1. ஆணவம் , கன்மம். மாயை, என்ற மும்மலத்தாலும் கட்டுப்பட்டு மயங்குவோர் சகலர் (சம்ஸாரிகள்)
2. ஆணவம் , கன்மம், என்ற இருமலத்தால் கட்டுப்பட்டு மயங்குவோர் பிரளயாகலர் ( மாயை கடந்தவர்)

3. ஆணவம் என்ற ஒருமலத்தால் கட்டுப்பட்டவர் விஞ்ஞானகலர் (கன்ம, மாயைகளால், பாதிக்கப்படாதவர்)

**பாசம் - தளை இயல்பு**

1. **ஆணவ மலம் :** ஆணவம் என்பது உயிர்களின் அறிவாற்றலை இல்லை என்னும்படி மறைத்து நிற்பது. உயிர்களோடு அநாதியே உடன் கலந்து அவற்றின் தன்மையை வியாபகத்தை விளங்கவொட்டாது அணுத்தன்மை எய்துவிப்பது, (நெல்லிற்கு உமியும் செம்புக்குக் களிம்பும் போன்றது ஆணவம்)

2. **கன்மம் :** உயிர்கள் உடம்புகளோடு கூடியுள்ளபோது மனம்மொழி மெய்களால் செய்யும் நல்லனவும் தீயனவும் ஆகிய செயல்கள் ஆகும். இச்செயல்கள் செய்யப்பட்டு மறையும்போது செய்வோனுடைய புத்தியில் ஒருவகைப் பழக்கத்தை உண்டு பண்ணிமறையும் . அப்பழக்கமே முதல்வனது ஆணையால் புண்ணிய பாபங்கள் என்று இருவகைப்படும். அப்புத்தியைப் பற்றியிருக்கும், இந்த பாப புண்ணியங்கள் அப்புத்தி தொழிற்பட்டு ஒன்றை நிச்சயிக்கும்போது, அந்த நிச்சய ரூபத்தை மாற்றி இன்ப துன்ப அநுபவத்தை உண்டுபண்ணும்.

| | | |
|---|---|---|
| ஆகாமியம் | (எதிர்வினை). | |
| ஸஞ்சிதம் | (பழவினை) | எனக் கன்மம் மூவகைப்படும் |
| பிராரப்தம் | (நுகர்வினை) | |

ஆகாமியம் செயல்களால் மேல் வருவது

ஸஞ்சிதம் முன்னர் இயற்றியதன் சேர்ப்பு

பிராரப்தம் ஸஞ்சிதத்திலிருந்து இப்போது நுகர்வது

**ஸஞ்சிதம் பயன்படும்போது**

1. ஆதி தைவிகம் - தெய்வத்தால் வருவது.
2. ஆத்யாத்மிகம் - அறிவில்பொருளோடு கூடிய உயிர்களால் வருவது
3. ஆதிபௌதிகம் - அறிவில் பொருள்களால் வருவது.

இனி, வாழ்க்கைச் சூழ்நிலைகளுக்குக் காரணமான ஸஞ்சிதம் "ஜனகம்" எனப்படும். ஆயுள்களுக்கு காரணமான ஸஞ்சிதம் "தாரகம்" எனப்படும், பிறவற்றிற்குக் காரணமான ஸஞ்சிதம் "போக்யம்" எனப்படும்.

3. **மாயை :** காணப்படும் பொருள்கள் யாவும் தநு, கரணம், புவனம், போகம், என்று நான்கு வகைப்படும்.

தநு - உடம்பு

கரணம் - அந்தக்கரணமான மனம் முதலிய கருவிகள்

புவனம் - உடம்புக்கு ஆதாரமான நிலம்,

போகம் - நிலத்தில் உள்ள போக்ய வஸ்துக்கள்.

காணப்படும் பொருள் இந்த நான்கில் ஒன்றாகவே உள்ளது. இவை மாயேயம்(பிராகிருதம்) எனப்படும்.

இவை எல்லாவற்றிற்கும் முடிந்த முதற்காரணமாக உள்ள பொருள் மாயை எனப்படும். தநு, கரணபுவன, போகம் என்பன மாயையிலிருந்து தோன்றி அம்மாயையில் மறைவனவாம். மாயை என்பது ஜடம், அறிவில் பொருள், அரு, சக்திரூபம், வியாபகம், என்றுமுள்ளது. இது முதல்வன் திருவருளால் வியாபிக்கப்பட்டு அவன் சங்கல்பத்தின்படி தன் காரியங்களைத் தோற்றியும் ஒடுக்கியும் வரும்.

மாயை

(1) சுத்தமாயை (2) அசுத்தமாயை

(1) சுத்தமாயை - மல, கன்மங்களோடு விரவாதது தன்னுடன் சம்பந்தப்பட்ட ஆன்மாவுக்கு இன்பமே பயப்பது. மயக்காது நின்று பேரறிவையும் பேராற்றலையும் உதவும் முதல்வன் திருவருள் நேரே பற்றிநின்று தொழிற்படுத்துவதற்கு உரியது.

(2) அசுத்த மாயை - மல, கன்மங்களோடு கலந்து நின்று உயிர்களை மயக்கி அறிவிப்பது, இன்பம் துன்பம் மயக்கம் என்ற மூன்றினையும் தருவது.

சுத்தமாயையின் காரியம் - (1) சொல் (2) பொருள்

(1) சொல்லாவது, ஆன்மாக்கள் உலகப்பொருள்களை இஃது என்று வேறுபடுத்தி உணரும் ஸவிகல்பகஞானத்தைப் பயக்கும் மொழியாகும்.

சொல் - (1) எழுத்து (2) சொல் (3) மந்திரம் என்று மூன்றாக எண்ணப்படும்.

பொருள் - (1) கலை (2) தத்துவம் என்று இரண்டாக எண்ணப்படும்.

இவற்றுள் கலை - (1) நிவிருத்திகலை
(2) பிரதிஷ்டாகலை
(3) வித்தியாகலை
(4) சாந்திகலை
(5) சாந்தி அதீதகலை

என்று ஐந்து வகைப்படும்.

தத்துவம்

| | | |
|---|---|---|
| (1) | நாதம் | இவை சிவதத்துவம் |
| (2) | விந்து | |
| (3) | ஸாதாக்யம் | |
| (4) | ஈசுவரம் | |
| (5) | சுத்தவித்யை | |

என்று ஐந்து வகைப்படும்.

அசுத்த மாயையின் காரியம் (1) வித்யாதத்துவம் (2) ஆன்மதத்துவம்

(1) வித்யா தத்துவம்

1. மாயை
2. காலம்
3. நியதி
4. கலை
5. வித்யை
6. அராகம்
7. புருஷன்

(2) ஆத்மதத்துவம்

| | | |
|---|---|---|
| 1. | சித்தம் | நான்கு அந்தக் கரணங்கள் |
| 2. | புத்தி | |
| 3. | அஹங்காரம் | |
| 4. | மனம் | |
| 1. | மெய் | ஐந்து ஞானேந்திரியங்கள் |
| 2. | வாய் | |
| 3. | கண் | |
| 4. | மூக்கு | |
| 5. | செவி | |
| 1. | வாக்கு | ஐந்து கர்மேந்திரியங்கள் |
| 2. | பாதம் | |
| 3. | பாணி | |
| 4. | பாயு | |
| 5. | உபஸ்தம் | |
| 1. | சுவை | பஞ்ச தந்மாத்ரைகள் |
| 2. | ஒளி | |
| 3. | ஊறு | |
| 4. | ஓசை | |
| 5. | நாற்றம் | |
| 1. | வான் | பஞ்ச பூதங்கள் |
| 2. | வளி | |
| 3. | அனல் | |
| 4. | புனல் | |
| 5. | மண் | |

ஆக 24 தத்துவங்கள்

| | |
|---|---|
| எனவே சிவதத்துவங்கள் | 5 |
| வித்யா தத்துவம் | 7 |
| ஆன்ம தத்துவம் | 24 |
| | 36 |

ஆக சைவத்துள் கூறப்படும் தத்துவங்கள் 36

**முக்தி சாதனம்**

புருஷார்த்தம் - ஆணவம், கன்மம், மாயை என்ற தளைகளிலிருந்து நீங்கி முதல்வனைத் தலைப்படுவதே முடிந்த மேலான குறிக்கோள்.

சாதனம் - பாசப்பற்று விடுதற்பொருட்டு முதல்வனைப் பற்ற வேண்டும். இது வழிபாடு எனப்படும்.

வழிபாடு : (1) பொது. (2) சிறப்பு என இருவகைப்படும்

பொதுவழிபாடு - இறைவனது அருளாணையாகிய அறத்தின்வழி நிற்றல் ஆகும். இது இல்லறம், துறவம், என்றுஇருவகைப்பட்டு அன்பையும் அருளையும் அடிப்படையாகக் கொண்டு நிகழ்வது, இயமம், நியமம் என்பனவும் இப்பொது ஒழுக்கத்தில் அடங்கும். அவற்றுள்

(1) இயமம் -
- கொல்லாமை
- வாய்மை
- கள்ளாமை
- பிறன்மனைநயவாமை
- இரக்கம்
- வஞ்சனையின்மை
- பொறையுடைமை
- மனம் கலங்காமை
- அளவறிந்து உண்ணல்
- தூய்மை — ஆக 10

(2) நியமம் -
- தவம்
- மனவுகப்பு
- கடவுட்கொள்கை
- நல்வழியில் பொருள் ஈட்டி நல்வழியில் செலவிடுதல்

தன்னின் உயர்ந்தோரை வழிபடல்
அறநூல் கற்றல் கேட்டல்
முக்குறும்புகள் அகற்றல்
விவேகம்
திருநாமகீர்த்தனம்
விரதம்

ஆக 10

**சிறப்பு வழிபாடு**

(1) சரியை (2) கிரியை (3) யோகம் (4) ஞானம்

(1) **சரியை :** அருவம், அருவுருவம், உருவம் என்ற மூன்று அருள்வடிவங்களில் உருவடிவம் ஒன்றையே பொருள் என உணர்ந்து புறத்தொழில் அளவில் இயற்றப்படும் வழிபாடு, ஸந்தியா வந்தனம், பஞ்சாட்சரஜபம், ஆலயவழிபாடு முதலியனவும் அடங்கும். இதற்குப் பலன் சிவ ஸாலோக்யம்

அதாவது இறை உலகு எய்தித் தடையின்றி இயங்கி அங்குள்ள போகங்களை நுகர்தல். இது தாசமார்க்கம் என்று சொல்லப்படும். திருநாவுக்கரசர் இந்நெறி பற்றினார்.

(2) **கிரியை :** சிவலிங்கத் திருமேனியை வழிபடுவது இஃது சிவபூஜை, சிவதர்மம் எனப்படும். சிவபூஜைக்கு அங்கங்கள்

பூத சுத்தி
ஸ்தான சுத்தி
திரவிய சுத்தி
மந்திர சுத்தி
லிங்க சுத்தி

இவ்வழிபாட்டில், மனோவாக்காயங்களால் மந்திரம், கிரியை, பாவனை ஒருவழிப்படும். முன்னர் இருதய கமலத்தில் பாவனை செய்யப்பட்டுப் பின்னர் புறத்தே லிங்கத் திருமேனியில் பூசை செய்யப்படும். பூசைக்கு அங்கங்களாக தியானமும் ஹோமமும் நிகழ்த்தப்படும்.

இதற்குப் பலன் சிவ ஸாமீப்யம் ஆகும்

இறையுலகில் இறைவனுக்கு ஸமீபத்தில் இருந்து தொண்டு புரிதலாம். இது ஸத்புத்ர மார்க்கம் என்று சொல்லப்படும்.

திருஞானசம்பந்தர் இந்நெறி நின்றார்.

(3) **யோகம் :** அருவத்திருமேனியை வழிபடுவது. ஐம்பொறிகளை அடக்கி, பிராணனை ஸுஷும்னா நாடியில் செலுத்துதல், அதனால் மூலாதாரத்தில் விளங்கும் அஜபா சக்தியை மற்ற ஆதாரங்களிலும் கண்டு மேலே செல்லுதல், பின்பு பிரம்ம ரந்திரம் என்னும் உச்சியில் ஆயிரம் இதழ்த் தாமரையை அலரச்செய்து அதில் விளங்கும் சந்திர மண்டலத்தை மூலக்கனலால் இளகச்செய்தல். அதனால் ஒழுகும் அமிருத தாரையால் நாடிகள் எல்லாம் நனைதலால் உடம்பு நிலைத்திருக்கச் செய்தல், தான் உடற்பற்று நீங்கிப் பேரொளியாகிய சிவஜோதியைக் கண்டு அதுதானாகப் பாவித்தல் என்னும் இவ்வியல்பினை உடையது யோகம்.

யோகத்தின் அங்கங்கள் எட்டு

இயமம்

நியமம்

ஆசனம் (இருக்கை)

பிராணாயாமம் (வளிநிலை)

பிரத்தியாகாரம் (தொகை நிலை)

தாரணை (பொறைநிலை)

தியானம் (நினைதல்)

சமாதி (அதுவாதல்)

யோகிகள் எய்தும் ஸித்திகள் எட்டு

| | |
|---|---|
| அணிமா | மஹிமா |
| லகிமா | ப்ராப்தி |
| ப்ராகாம்யம் | ஈசத்வம் |
| வசித்வம் | கரிமா |

யோகிகள் அடையும் பலன் சிவ ஸாரூப்யம், இறைவனோடு ஒத்த உருவம் பெற்று இன்புறுவது.

இது ஸ்நேஹ மார்க்கம் (தோழமை நெறி) ஆகும்.

நம்பி ஆரூரர் இந்நெறி பற்றினார்.

சாலோக்யம், ஸாமீப்யம், சாரூப்யம், என்பன பதமுக்தியாகும்.

(4) **ஞானம் :** மேற்கூறியபடி, சரியை கிரியை, யோகங்களில் பயின்றவர்க்கு, முதற்பொருளை உணர்ந்தார்க்கு உளதாகிய வ்யாபகஞானம் ஏற்படும். அதனால் அகண்ட சச்சிதானந்தமாய் ஒளிப்பிழம்பான முதல்வனது உண்மை இயல்பை சிரவணம், மனனம், தரிசனம்., நிதித்யாஸனம், (கேட்டல், சித்தித்தல்,தெளிதல், நிஷ்டை) என்ற படிவழிச் சென்று அவன் அருள் வழி நிற்றல் ஞானம் ஆகும்.

இதற்குப் பலன் சிவ ஸாயுஜ்யம். இது சன்மார்க்கம் எனப்படும்

மாணிக்கவாசகர் இந்நெறி நின்றார்.

**சமயதீட்சை**

வேதம் ஓதுவதற்கும் வைதிக மார்க்கத்தில் நடப்பதற்கும் தகுதியை உண்டு பண்ணுவது உபநயனம் என்ற சடங்கு ஆகும். அதனால் பிராம்மணியம் ஸித்திக்கிறது அவ்வாறே சைவத் திருமுறைகளை ஓதுவதற்கும் சைவ மார்க்கத்தில் நடப்பதற்கும் தகுதியை உண்டுபண்ணுவது சிவதீட்சை என்ற சடங்கு ஆகும். அதனால் சைவம் ஸித்திக்கிறது.

தீட்சையாவது, ஆன்மாவுக்குப் பாசத்தைக் கெடுத்து மெய்யுணர்வை ஏற்றுக்கொள்ளும் பக்குவத்தை அளிப்பது. இது முதல்வனுடைய சக்தியின் தொழிற்பாடு என்று கொள்ளப்படுகிறது. இஃது முதல்வனுடைய ஐந்தொழில்களில் அருளல் என்பதைச் சேரும்.

முதல்வனால் தரப்படும் தீட்சை (1) நிராதாரம் (2) ஸாதாரம் என்று இருவகையாகும்.

(1) மூலமலம் ஒன்றேயுடைய விஞ்ஞான கலர்க்கு முதல்வன் அந்தர்யாமியாய் நின்று மல சக்தியைக் கெடுத்துத் தன்னை உணரும் மெய்யுணர்வைப் பிறப்பிக்கச் செய்வான்.

மலம் கன்மம் இரண்டினையுடைய பிரளயாகலர்க்கு முதல்வன் தன்னுடைய அருள்திருமேனி காட்டித் திருநோக்கு, பரிசம், உரை என்ற மூன்றாலும் மலங்கெடுத்து மெய்யுணர்வு அளிப்பான்.

இவை இறைவன் தானே செய்வதால் நிராதார தீட்சையாகும். மூவர் முதலிகளுக்கு நிராதார தீட்சை கிடைத்தது.

(2) மலம், கன்மம், மாயை என்ற மூன்றாலும் கட்டுண்டவர்களுக்கு தன்னால் நிலவுலகில் நிறுவப்பட்ட திருக்கயிலாய பரம்பரையில் வரும் ஞானாசிரியரைக் கொண்டு செய்வது ஸாதார தீட்சையாகும். மாணிக்கவாசகருக்கு முதல்வன் தானே வந்து அருள் செய்தது உண்டாயினும், சாதார தீட்சையின் இயல்பை மக்கள் உணர்ந்து கடைபிடித்தற் பொருட்டு அதற்குரிய முறையால் அருள் செய்யப்பட்டது என்பது மரபு.

**சாதார தீட்சை ஏழு வகைப்படும்.**

(1) **திருநோக்கு :** ஆசாரியன் தன் அருள்நோக்கால் சீடனை பாசபந்தத்திலிருந்து விடுவிப்பது ( மீன் சினையை நோக்குவது)

(2) **ஸ்பரிசம் :** ஆசாரியன் தன் திருக்கரத்தால் சீடனின் சிரசில் வைத்துப் பாசபந்தத்திலிருந்து விடுவிப்பது. திருவடியை முடிமீது

வைப்பதும் அடங்கும். (கோழி முட்டையைக் காத்தல்)

(3) **வாசிகம் :** ஆசாரியன் பஞ்சாட்சரம் முதலிய சிவமந்திரங்களை உபதேசித்தல்.

(4) **பாவனை :** ஆசாரியன் சீடனைச் சிவமாக நினைத்து அருளல். (ஆமை முட்டையை நினைதல்)

(5) **சாஸ்திரம் :** சித்தாந்த சாஸ்திரங்கள் மூலமாக முப்பொருள் இயல்பை உளங்கொள்ளச் செய்து அதனால். அகவிருள் போக்குதல்

(6) **யோகம் :** ஆசாரியன் சீடனுடைய ஆன்மாவை யோக மார்க்கத்தில் தன் உயிர்ப்போடு சேர்த்துக்கொண்டு போய் தன் முடிமீது விளங்கும் பரஞ்சோதியுடன் ஒன்றுவித்துத் தூயதாக்கி மீளவும் சீடன் இதயத்தில் நிறுவுதல்.

இவை ஆறும் சீடர்களின் பக்குவத்துக்கு ஏற்ப தனித்தனியே செய்யப்படுவதால் ஸ்வதந்திர தீட்சையாகும்.

(7) **ஹௌத்ரி :** குண்ட மண்டலங்களோடு கூடிய ஹோமத்துடன் செய்யப்படுவது. (ஹுதம் - ஹோமம்) இதற்கு அங்கமாக ஸ்வதந்திர தீட்சைகளில் ஒன்றோ பலவோ செய்விக்கப்படும்.

**ஹௌத்ரி தீக்ஷை**

1. சமய தீக்ஷை 2. விசேஷ தீக்ஷை 3. நிர்வாண தீக்ஷை

என்று மூவகைப்படும்.

**1. சமய தீக்ஷை** : யாகசாலை அமைத்து அக்னிசொரூபமாக விளங்கும் முதல்வனை சீடன் வழிபடும்படி செய்து அவனை ஹோமத்தால் சுத்தம் செய்வது. இதனால் அவன் திருவைந்தெழுத்து எண்ணுதல் முதலிய சரியை நெறி நிற்றற்குத் தகுதியுடையோன்.

**2. விசேஷ தீக்ஷை :** சமய தீக்ஷை பெற்ற சிஷ்யனைச் சிவபுத்திரன் ஆகச் செய்வது. இதனால் கிரியை, யோகங்களுக்குத் தகுதி அளிக்கப்படுகிறது.

**3. நிர்வாண தீக்ஷை :** சரியை, கிரியை, யோகங்களில் வழுவாது நின்ற சிஷ்யனுக்கு அவனுடைய சஞ்சிதகர்மத்தை வறுத்த விதை போல வலியிழக்கச் செய்வது. மூல மலத்தின் வலியையும் நீக்கி, முப்பொருள் பற்றிய மெய்யுணர்வை விளங்கச் செய்வது. இதனைப் பெற்றவர்கள் ஞானநெறி நின்று சிவபூசை யோகப் பயிற்சிகளைக் கடைப்பிடித்து ஒழுகுவார்கள்.

**ஹௌத்ரி தீக்ஷை**

(1) நிர்பீஜம் (2) ஸபீஜம் என்று இருவகை

மந்திரங்களை பீஜாட்சரங்களுடன் உபதேசம் பெறுவது ஸபீஜம். பீஜாட்சரமின்றிப் பெறுவது நிர்பீஜம்.

**சமய வழிபாடு**

(1) நித்யம் (2) நைமித்திகம் (3) காமியம் என்று மூவகைப்படும். நித்யம் என்பது தினமும் செய்வது, நைமித்திகம் என்பது நித்யத்தில் ஏற்படும் குறைவு தீரச் சிறப்புக்காலங்களில் செய்வது, காமியம் என்பது பலன் கருதிச் செய்வது.

நிர்பீஜ தீக்ஷை பெற்றவர்கள் நித்யம் ஒன்றிற்கே உரியவர்கள். ஸபீஜதீக்ஷை பெற்றவர்கள் நித்ய, நைமித்திக, காம்ய பூஜைகளுக்கு உரியோரானவர்கள்.

**சைவாசாரியர்**

மேற்கூறிய சமய தீட்சை, விசேஷ தீக்ஷை, நிர்வாண தீக்ஷை ஆகிய மூன்று தீக்ஷைகளையும் ஸபீஜமாகப் பெற்று, ஆசார்ய அபிஷேகமும் பெற்றவரே சைவாசாரியர் ஆவர். இவை யாவும் உடைய சிவவேதியர் திருக்கோயில்களில் பரார்த்த பூஜை செய்தற்கு உரியர்.

**சைவவொழுக்கம்**

சிவ சின்னங்கள் அணிதல், திருவைந்தெழுத்து எண்ணுதல், திருமுறை ஓதுதல், மெய்கண்ட நூற்பொருள் கேட்டல், சிவபூஜை சிவத்தியானம் செய்தல் முதலியன சிறப்பு ஒழுக்கங்களாம். கொல்லாமை, புலால் உண்ணாமை, கள்ளுண்ணாமை என்பன சிறப்பு ஒழுக்கத்துக்கு அடையாளமாக உடன் நிகழ்வன.

திருநீறு : இஃது சிவசின்னம். நல்ல ஆவின் சாணத்தைச் சிவாக்கினியில் மந்திரங்களைச் சொல்லி இட்டுத் தஹித்ததால் கிடைக்கும் பொடியாகும். வெண்ணிறமுடையதே அணியத்தக்கது. திருநீற்றை அணியும் போது சிவசிவ என்னும் மனுவை ( மந்திரம் ) அல்லது ஈசானாதி பஞ்சப்ரம்ம மந்திரங்களையோ உச்சரித்து அணிதல் வேண்டும்.

கண்டிகை : இஃது சிவசின்னம், ருத்ராக்ஷமணி எனப்படும். கயிலாசத்தில் சிவன் திருமுன் தேவர்கள் திரிபுரத்து அசுரர்களால் ஏற்பட்ட துயரத்தைச் சொல்லியதும், இறைவன் மூன்று திருக்கண்களிலிருந்து நீர் பெருகியது. அந்நீரில் தோன்றியவை உருத்திராக்கமரமும் அதன் கண்மணியும்.

# இயல் 20

## தலபுராணங்கள்

வடமொழிப் பௌராணிகர்கள் மூர்த்தி, தலம், தீர்த்தம் என்று மூவகையாகக் கூறப்படுவனவற்றில் தலங்களின் புராணப்பெருமைகளைப் புனைந்து கூறி,வடமொழிக்கண் தலபுரணங்களைச் செய்தனர். அவற்றிற்கு ஸ்தல மகாத்மியம் என்று பெயர் வழங்கினர். அத்தகைய தலபுரணங்களைத் தமிழ்ப்புலவர்கள் தமிழ்மொழியில் மொழி பெயர்த்து நூல் வடிவாக்கினர். வடமொழித் தலபுரணங்கள்யாவும் பிரம்மாண்ட புராணத்தில் அடக்கப்பட்டன. இதனை பிரம்ம வைர்த்தகபுராணம் என்றும் கூறுவர்.

வைணவத்தில் "ஸத்யகிரி க்ஷேத்திர மாஹாத்மியம்" என்ற புராணத்தை வேதாந்த தேசிகர் என்ற ஆசாரியப் பெருமகனார் "மெய்விரத மான்மியம்" என்ற பெயரில் தமிழில் செய்யுள் வடிவத்தில் மொழிபெயர்த்தார். இந்நூல் கி.பி. 13ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டது. இது மிகப் பழமையான தலபுராணமாகும்.

வடமொழியில் வேதவியாசரால் இயற்றப்பட்ட பதினெட்டுப் புராணங்களிலிருந்து தலபுராணங்கள் பெரிதும் வேறுபட்டவை. புராணங்களிலிருந்து கதைப் பகுதிகளைத் தேர்ந்தெடுத்துத் தலபுராணங்கள் தோற்றுவிக்கப்பட்டன.

தலபுராணங்கள் பொதுவாக,

தலத்தின் பெருமைகள்
வழிபட்டுப் பயனடைந்தோர்
தீர்த்தங்களின் மகிமை
தவமியற்றிய முனிவர்கள்
இறைக்காட்சி பெற்ற தவத்தோர்கள்

ஆகியவற்றைப் பொருளாகக்கொண்டு கற்பனைகள் கலந்து இலக்கியச்சுவை பொருந்தி அமைகின்றன.

சைவத்தில் உமாபதிசிவம் என்பவர் கி.பி. 14ஆம் நூற்றாண்டில் கோயிற்புராணம் என்ற தலபுராணம் பாடினார். அதையொட்டிப் பல புராணநூல்கள் பாடப்பட்டன. தலபுராணங்களில் புகழ் பெற்றவை திருவிளையாடற் புராணங்களாகும். வேம்பத்தூரார், பெரும்பற்றப் புலியூர் நம்பி, பரஞ்சோதி முனிவர் ஆகியோர் திருவிளையாடற்புராணங்களை

இயற்றினர். இவற்றில் பரஞ்சோதி முனிவர் செய்த புராணமே பெருவழக்குப் பெற்றுள்ளது. இஃது 3360 பாடல்களைக் கொண்ட பெரியநூலாகும்.

கி.பி.15, 16ஆம் நூற்றாண்டுகளில் தருமபுரம் திருவாவடுதுறை முதலிய மடங்களின் ஆதரவு பெற்ற புலவர்கள் தலபுராணங்களைப் பாடினர். இவர்கள் திருமழபாடி, திருவொற்றியூர் முதலான தலங்களுக்குப் புராணங்கள் இயற்றினர்.

நிரம்ப அழகிய தேசிகர் என்பவர் திருப்பரங்கிரிப் புராணம், சேது புராணம் ஆகியவற்றைப் பாடினார்.

வடநாட்டுத் தலமாகிய காசியைக் குறித்துப் புராணம் பாடியவர் அதிவீரராமபாண்டியர். அதற்குக் காசிக்காண்டம் என்று பெயர்.

திருமலைநாதர் என்பவர் சிதம்பரபுராணம் பாடினார். கச்சியப்ப முனிவர் திருத்தணிகைப் புராணம் பாடினார். இஃது இலக்கியச் செறிவு மிகுந்து கற்போர்க்கு விருந்தாய் அமைகிறது. சிவப்பிரகாச சுவாமிகள் திருக்கூவப் புராணம் இயற்றினார். வீரராகவ முதலியார் திருக்கழுக்குன்றப் புராணம் பாடினார்.

திருவாரூர், திருவெண்காடு, திருவண்ணாமலை, திருச்செங்கோடு, விரிஞ்சிபுரம், வேதாரணியம், கும்பகோணம் முதலான தலங்களைப் புகழ்ந்து புலவர்கள் புராணங்களை இயற்றி அரங்கேற்றினர்.

அக்காலத்தில் தலபுராணங்கள் பொதுமக்களைப் பெரிதும் கவர்ந்தன. அவற்றில் வரும் நாட்டுப்படலம் நகரப்படலங்களைப் படித்து அவர்கள் தத்தம் ஊர்களைப் பற்றிப் பெருமைப்பட்டனர்.

கொடியவர்களும் மனம் திருந்திக் கோயில்களுக்கு வந்து இறைவனை வழிபட்டு நல்லவர்களாக மாறிய கதைகள் தலபுராணங்களில் இடம்பெற்றன. அவற்றை மக்கள் விரும்பிப் படித்து நல்ல எண்ணங்களை வளர்த்துக்கொண்டனர்.

கி.பி.17ஆம் நூற்றாண்டில் தலபுராணங்கள் பலவற்றைப் பாடிப்பெரும் புகழ் படைத்தவர் சைவ எல்லப்ப நாவலர் ஆவார். திருவண்ணாமலை, திருவெண்காடு, திருவிரிஞ்சை, தீர்த்தகிரி, திருச்செங்காட்டங்குடி முதலிய ஊர்களைக் குறித்துத் தலபுராணங்களை அவர் இயற்றினார். அவற்றில் பக்திச் சுவை நிரம்பியுள்ளது.

சென்னையின் ஒரு பகுதியான திருவொற்றியூருக்கு ஒரு புராணத்தை ஞானப்பிரகாசர் இயற்றினார். இவரே திருவாரூர்த் தலபுராணத்தையும் இயற்றினார்.

சென்ற நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்த திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை (1815-1876) தலபுராணங்கள்

பலவற்றை இயற்றி அரங்கேற்றிப் பெரும் புகழ்படைத்தார். அவருடைய மாணவராகத் திகழ்ந்த உ.வே. சாமினாதையர்.

| | |
|---|---|
| ஆற்றூர்ப் புராணம் | (1935) |
| சூரைமாநகர்ப் புராணம் | (1908) |
| தணிகாசலப் புராணம் | (1939) |
| தனியூர்ப் புராணம் | (1907) |
| திருக்காளத்திப் புராணம் | (1912) |
| திருக்குடந்தைப் புராணம் | (1983) |
| திருப்பெருந்துறைப் புராணம் | (1883) |
| மண்ணிப்படிகரைப் புராணம் | (1892) |
| வில்லைப் புராணம் | (1935) |
| விளத்தொட்டிப் புராணம் | (1907) |
| வீரவனப் புராணம் | (1903) |

முதலிய தல புராணங்களைப் பதிப்பித்து வெளியிட்டுள்ளார்.

ஒவ்வொரு தலபுராணத்திலும் இந்திரன் முதலிய தேவர்கள் சாபம் நீங்கவும் பாபம் போகவும் அந்த அந்த ஊர்க்கோயிலுக்கு வந்து வழிபட்டுப் பயன் பெற்றதாகக் கதைகள் புனையப்பட்டன.

இக்கதைகளால் சமயப்பூசல்கள் பிற்காலத்தில் வளர்ந்தன. ஆழ்வார்கள் அருளிய திவ்வியப்பிரபந்தங்களில் இடம் பெறும் தலபுராணக் கதைகள் ஒரிரண்டேயாகும். ஆனால், திருமுறைகளில் தலபுராணச் செய்திகள் பெருமளவு தழுவப்பட்டிருக்கின்றன.

தலபுராணங்களில் வரும் பல செய்திகள் வழிபடு கடவுளை உயர்த்துவதற்காகக் கற்பனைகளோடு இடம் பெற்றன.

தலபுராணங்கள் இந்த நூற்றாண்டில் செல்வாக்கை இழந்தன. பலவற்றிற்கு மறுபதிப்பே தேவையில்லாது போயிற்று. தலபுராணங்களில் இடம் பெற்ற பொய்க் கதைகள், இலக்கியச் சுவையின் வறட்சி, குழப்பமான முரண்பட்ட கதைகள், ஒரே மாதிரியான அமைப்பு முதலிய காரணங்களால் இவையாவும் மறக்கப்பட்டு மறையத்தொடங்கின. ஒரு சிலவே புலவர்களால் போற்றப்பட்டன.

சில திருக்கோயில்கள் தலபுராணங்களை உரைநடைப்படுத்திச் சிறு நூல்களாக வெளியிட்டுள்ளன.

வடமொழியில் எழுந்த மிகப் பழமையான தலவரலாறுகள் திரு வேங்கடத்தைப் பற்றியதாகும். இவற்றை வேங்கடாசல இதிஹாஸ மாலா என்று பெயரிட்டு இராமானுசருடைய சீடரான அனந்தாழ்வான் தொகுத்தார். இதன் காலம் கி.பி.11ஆம் நூற்றாண்டு. திருமங்கையாழ்வார்

திருவேங்கடமுடையான் தொண்டைமான் என்ற அரசனுக்கு அருள் புரிந்த செய்தி ஒன்றை துளங்கு நீண்முடியரசர் என்று தொடங்கும் பாசுரத்தில் குறிப்பிடுகிறார். இது வேங்கடாசல இதிஹாஸமாலாவில் வரும் புராணச் செய்தியாகும். ஆழ்வார்கள் பெரும்பாலும் தல புராணச் செய்திகளைக் காட்டுவதில்லை. திருவரங்கம், திருவேங்கடம், ஆகிய இரண்டு திருத்தலங்களின் தலவரலாற்றுக் குறிப்புகள் மட்டும் இடம் பெற்றன.

"துண்ட வெண் பிறையின் துயர் தீர்த்தவன்" என்று திருப்பாணாழ்வார் குறிப்பிடுகிறார். சந்திரன் தன் தொழு நோய் நீங்கத் திருவரங்கத்தில் தவமிருந்து நலம் பெற்ற வரலாறு ஸ்ரீரங்க மஹாத்மியம் என்ற தலபுராணத்தில் வருகிறது. சந்திரன் தவமிருந்த இடம் இன்றும் சந்திர புஷ்கரிணி என்று போற்றப்படுகிறது.

திருமுறைகளில் தலபுராணச் செய்திகள் திவ்வியப் பிரபந்தங்களிற் காட்டிலும் மிகுதியாகவே இடம் பெற்றுள்ளன.

இந்திரன் பெற்ற முனிசாபம் நீங்க வழிபட்டது. (1097)
இராமன் வழிபட்டது (2901)
எலி மாவலிச்சக்கரவர்த்தியாகப் பிறந்தது. (4641)
சூரியன் வழி பட்டது (2757)
கோட்டாற்றில் யானை வழிபட்டது. (1928)
சிலந்தியைச் சோழனாக்கியது (2152)
தருமிக்குப் பொற்கிழி அளித்தது (7000)

என்று இவ்வாறு வரும் பல செய்திகள் திருமுறையில் வருகின்றன.

தலபுராணங்களில் வரலாற்றுச் செய்திகளுக்கு இடமில்லை. வரலாற்றில் இடம் பெறும் அரசர்கள்கூடப் புராணங்களில் வரும் மன்னர்களாகவே குறிக்கப்படுவர். உதாரணமாக மாமல்லன் என்ற பல்லவ மன்னனைத் தல புராணங்கள் மஹாபலி என்னும் சக்கரவர்த்தியாக மாற்றிவிடுகின்றன.

தலங்களின் பெயர்களுக்கு வினோதமான காரணங்களைத் தல புராணங்கள் வழங்குகின்றன.

திருக்கோளூர் என்ற தலத்தைப் பிசுன க்ஷேத்திரம் ( பிசுனம்- பொய்) என்று ஆக்கி அதற்கு ஏற்றவாறு கதையும் படைக்கப்பட்டிருக்கிறது. ஒப்பிலியப்பன் எழுந்தருளியுள்ள தலத்தைக் குறித்து எழுந்த தலபுராணம் உப்பிலியப்பன் என்று கொண்டு அதற்கேற்றபடி கதையும் படைத்துள்ளது. அதனால் அங்கு உப்பு இல்லாத பொருளே நிவேதனமாகப் படைக்கப்படுகிறது.

தொலைவில்லிமங்கலம் என்ற திவ்விய தேசம் ஆழ்வார் திருநகரிக்குத் தொலைவில் இல்லாது அருகிலேயே அமைந்துள்ளது. மேலும் தொலைவு (அழிவு) இல்லாதது என்பதால் அப்பெயர்பெற்றது. ஆனால் துலை வில்லி மங்கலம் என்று பிரித்து தராசுவில் இவற்றை அடிப்படையாகக் கொண்டு ஒரு கதையும் தலபுராணத்தில் படைக்கப்பட்டிருக்கிறது.

தலபுராணங்களை மிகவும் பழமைபெற்றதாகக் காட்டுவதற்காகக் கிருதயுகத்திலேயே அத்தலம் இருந்ததாகத் தொடங்கப்படும். ஒவ்வொரு யுகத்திலும் நடந்ததாகச் சில செய்திகளும் விரித்துரைக்கப்படும்.

ஒரு சில தலபுராணங்களில் ஆழ்வார்கள் அல்லது நாயன்மார்களின் வரலாறுகளும் இடம் பெற்றிருக்கின்றன.

கோயில் தலபுராணங்களிலிருந்து சில சுலோகங்கள் திருமால் கோயில்களில் நித்தியபடி பூஜையில் மந்திர புஷ்பம் என்ற புஷ்பாஞ்சலி சமயம் ஓதப்பட்டு வருகிறது. தலபுராண படனம் திருக்கோயிலில் செய்தவர்களுக்கு அரசர்கள் இறைலியாக நிலங்கள் வழங்கினார்.

தலபுராணங்களிலுள்ள கற்பனை அம்சங்களை விலக்கி ஆராய்ந்தால் வரலாற்றுண்மைகள் இழைந்தோடுகின்றன.

# இயல் 21

# சிறு தெய்வக் கோயில்கள்

இயற்கையின் ஆற்றலைக் கண்டு ஆதிமனிதர்கள் மிகவும் அஞ்சினார்கள். அவற்றின் சீற்றத்திற்கு ஆளாகாது இருக்கவே அவற்றை வழிபட்டனர். இதன் விளைவாகவே இயற்கை வழிபாடுகளும் விழாக்களும் தோன்றின. இவற்றால் இயற்கை ஆற்றல்களைத் தம் வசப்படுத்தலாம் என்று எண்ணினார்கள். இயற்கையான சக்திகளுக்கு உருவங்களைக் கற்பித்துக் கோயில்களையும் எழுப்பி வழிபாடுகளையும் தோற்றுவித்தனர். இடி, மழை, மின்னல், நிலநடுக்கம், மலைஎரிவு போன்றவற்றைக் கண்டு அஞ்சியதாலும், நோய்களுக்குக் காரணம் ஆவிகளே என்று நம்பியதாலும் அந்த ஆவிகளைச் சமாதானப்படுத்தவே தெய்வங்களை வழிபட்டனர். சிக்மண்ட் பிராய்டு என்பவர், இயற்கையிடமும், மரணத்திற்குப் பிறகு நேரிடும் நிலைமைகளை நினைத்து அஞ்சியதாலும் ஏற்பட்ட அச்சமே வழிபாட்டுக்கு அடிப்படைக் காரணம் என்கிறார். தீமை விளைந்தால் தெய்வக் குற்றத்தால் ஏற்பட்டது என்றும் கிராமப்புற மக்கள் உறுதியாக நம்பினர்.

இயற்கை வழிபாடே மிகத் தொன்மையானது. இன்றும் பழங்குடி மக்கள் பல்வேறு வடிவங்களில் இயற்கையையே வணங்குகின்றனர். இவர்களால் வணங்கப்படும் தெய்வங்களையே கற்றறிந்தோரும் நாகரிகம் மிக்கவர்களும் சிறு தெய்வங்கள் அல்லது சில்லரை தெய்வங்கள் அல்லது கிராம தேவதைகள் என்று அழைத்தனர். வைணவர்கள் இவற்றை தேவதாந்தரங்கள் என்பர். வேதநெறி ஆகமநெறிகளின்படி கடவுள் வழிபாடுகள் நகர்ப்புறங்களில் செழித்து வளர்ந்ததால் சிறுதெய்வ வழிபாடுகளை ஆழ்வார்களும் நாயன்மார்களும் கண்டித்தனர். மேலும் சிறுதெய்வ வழிபாடுகளில் உயிர்க்கொலைகள் நிகழ்த்தப்பட்டதாலும் அவ்வாறு கண்டித்தனர்.

**சிறுதெய்வங்கள்**

குலதெய்வ வழிபாடும் வேதக்கடவுளோடு தொடர்பில்லாத ஊர்த்தெய்வ வழிபாடும் சிறுதெய்வ வழிபாட்டில் அடங்கும். வீட்டுத் தெய்வ வழிபாடு, குலதெய்வ வழிபாடு, சிறுதெய்வ வழிபாடு, பெருந்தெய்வ வழிபாடு என்று நான்கு வகைப்படும். ஆதிகாலத்தில் குடும்பத் தெய்வங்களின் பெயர் விவரங்களைப் பிறர்க்கு தெரியாது மறைப்பார்கள். தெரிந்தால் மந்திர சக்தி மூலம் துன்பம் செய்வார்கள் என்று நம்பினர். வீட்டில் யாரேனும் நோயுற்றால் குடும்ப தெய்வத்துக்குப்

பூஜைகள் வைப்பார்கள். பிள்ளைகளுக்குக் குடும்ப தெய்வத்தின் பெயர்களை வைப்பார்கள்.

ஒவ்வோர் இனத்திலும் பல குடும்பங்கள் உண்டு. ஒவ்வோரு குடும்பத்துக்கும் குலதெய்வம் உண்டு. குலதெய்வ வழிபாடு ஊர்த் தெய்வ வழிபாடாகவும் மாறும்,. இத்தெய்வங்களுக்குப் படிமைகள், கோயில்கள், பூஜை முறைகள் முதலியவற்றைத் திட்டவட்டமாக வரைமுறைப்படுத்தும் நூல்கள் உண்டாகவில்லை.

சிறு தெய்வங்களில் மாரி அம்மனும், காளி அம்மனும் மக்களிடம் மிகுந்த செல்வாக்குப் பெற்றவையாம். அம்மை, காலரா, போன்ற வியாதிகளுக்கு இவையே காரணம் என்று நம்பினர்.

மக்களுக்காக வாழ்ந்து அரிய பெரிய காரியங்களைச் சாதித்த வீரர்களும் தெய்வம் என்று போற்றப்பட்டனர். மதுரைவீரன் வழிபாடு இவ்வாறே தோன்றியது. பாண்டிமுனி, ஜடாமுனி வழிபாடுகளும் இவ்வாறேதான் தோன்றின. வாய்மொழியான நாட்டுப்புற இலக்கியங்களே சிறுதெய்வங்களைப் புகழ்கின்றன. எழுத்திலக்கியங்கள் பெரும்பாலும் பெருந்தெய்வங்களையே புகழ்கின்றன.

சிறுதெய்வ வழிபாட்டில் சைவம், வைணவம், என்ற பாகுபாடுகள் காணப்படவில்லை. கருப்பணசாமிக்கு நெற்றியில் திருமண் காப்பு அணிவிக்கப்படுகிறது. திருமால் கோயில்களில் காவல் தெய்வமாக இவை கருதப்படுகின்றன. கிருஷ்ண வழிபாட்டில் கிராமிய நிலையாக இதன் தோற்றத்தைக் கொள்ளலாம்.

சிறுதெய்வங்களுக்கு ஊனும், கள்ளும், படைக்கின்றனர். ஆடு,கோழிகளைக் கொன்று பலியிடுகின்றனர். வேண்டுதல் முறைகளும் கொடுமையாக உள்ளன. அலகுகுத்துதல், தீ மிதித்தல், போன்ற முறைகளே மிகுதியாக நிலவுகின்றன.

சிறுதெய்வக் கோயில்களில் பிராம்மணர்கள் பூசை செய்வதில்லை. பரநாச்சியம்மனுக்கு ஆதி திராவிடர்கள் பூஜை வைக்கின்றனர். சில தெய்வங்களுக்குக் குயவர்களும் வேளார்களும் பூஜை செய்கின்றனர். பண்டாரங்களும் பூசை புரிகின்றனர். இந்த வழிபாடுகளில் மந்திரங்கள் பயன்படவில்லை. அய்யனார் கோயில்களில் சிறப்பு வழிபாடுகளில் வேளார் இனத்தினர் மட்டும் மந்திரங்களை ஓதி வருகின்றனர்.

**கோயில்கள்**

நாட்டுப்புற தெய்வங்களுக்குக் கோயில் என்ற கட்டிட அமைப்பு பெரும்பாலும் இல்லை. அனேகமாக வெறும் பீடங்கள் மட்டுமே இருக்கும், சில இடங்களில் மண்ணினால் மண்டபங்கள் கட்டியிருப்பர். விழாக்காலத்தில் பீடத்திற்கு முன் பந்தல் போடுவார்கள்.

பெரும்பாலானவற்றில் மரத்துக்கு அடியில்தான் இத்தெய்வங்கள் இருக்கும்.

மரம் என்பது அபிவிருத்திக் குறியீடாகும். போதி மரத்தின் கீழ் சித்தார்த்தர் பௌத்தரானார். மரத்தின் கீழ்ப்பிள்ளையார் வழிபாடு நடைபெறுகிறது. வில்வமரம், வேப்பமரம், கடம்ப மரம், போன்ற மரங்கள் பெருந்தெய்வக் கோயில்களிலும் தெய்வத்தன்மை பெற்று விளங்குகின்றன. ஸ்தல விருக்ஷம் என்ற பெருமை பெறுகின்றன.

மரத்தின் கீழ் சிறுகற்களையும் சதுரமான மண் பீடங்களையும் சிறு தெய்வங்களாக எண்ணி வழிபடுகின்றனர். சில இடங்களில் மண்ணாலான உருவத்திலும் கல்லினாலான உருவத்திலும் வழிபட்டு வருகின்றனர். மிகச் சில இடங்களில் ஆகமக் கோயிலமைப்பு முறையும் ஏற்பட்டிருக்கிறது. அதாவது, கருவறை மண்டபங்கள், மடைப்பள்ளி, மதிள், கோபுரம், போன்று ஏற்பட்டிருக்கிறது, சமயபுரம் மாரியம்மன் கோயில், நாட்டரசங்கோட்டை கண்ணாத்தாள் கோயில் போன்றவை உதாரணங்களாகும்.

சிறுதெய்வங்களின் வழிபாட்டு முறைகள் பல்வகையாகும். காணிக்கை செலுத்துதல், மொட்டை போடுதல், காவடி தூக்குதல், தீ மிதித்தல், தீச்சட்டி ஏந்துதல் என்பன வழிபாட்டின் முறைகளாம். தேங்காய் உடைத்துப் பழம், சூடம், காட்டி வணங்குவர். இவற்றில் பல தெய்வங்களுக்கு அன்றாடம் பூஜைகள் கிடையாது. சில பருவகாலங்களில் ஊரினர் கூடி வழிபாடுகளைச் செய்வார்கள். இவ்விழாவினைத் திருநெல்வேலிப் பகுதியில் கொடை என்பர். கிராமத் தெய்வ விழாக்களில் ஊர்ப்பெருந்தனக்காரருக்கும் பூசாரிகளுக்கும் மரியாதைகள் செய்யப்படுகின்றன. திருவிழாவில் மண்ணால் செய்த புதிய உருவங்களை நிறுவுவது வழக்கம். அய்யனார் கோயில்களில் புதிய குதிரைகளை நிறுவுவார்கள். இதனைப் புரவி எடுத்தல் என்பர். இவ்விழா நான்கு நாட்கள் நடைபெறும். விழாக் காலங்களில் கூத்து நடத்தி மகிழ்வார்கள்.

திருவிழாத் தொடங்குமுன் பல்லி சகுனம் மூலம் சாமி ஒப்புதல் கேட்பார்கள். பூசாரியின் கனவில் தோன்றியும் ஒப்புதல் வழங்கப்படும், ஆண்டுதோறும் விழா எடுத்துச்சாமி கும்பிடுவது போல், பொங்கல் ,சித்திரைப் பிறப்பு, ஆடிமாதப் பிறப்பு, கார்த்திகை போன்ற தினங்களிலும் கோயில்களுக்குச் சென்று வழிபடுவர். வாழை இலையில் பிரசாதங்களை வைத்துப் பூசாரி நைவேத்யம் படைப்பார். இவ்விழாக்கள் சமூக ஒற்றுமையை உண்டாக்குகிறது. பொதுவாக பிள்ளைவரம், மழைவரம், எடுத்தகாரியம் முடிய வரம் என்று இவ்வாறு பல முறைகளில் மக்கள் நாட்டுப்புற தெய்வங்களை இன்றும் வழிபட்டு வருகின்றனர்.

நாட்டுப்புறக்கலைகள் பற்றி விரிவாக ஆராய்ச்சிகள் இன்று நடைபெறுகின்றன. சில ஆராய்ச்சியாளர் நாட்டுப்புறத் தெய்வங்களின்

எண்ணிக்கைகளையும் தொகுத்துச் சேர்த்து வருகின்றனர். அவை நூற்றுக்கு மேற்பட்டுக் காணப்படுகிறது. அவற்றில் சில :-

| | |
|---|---|
| அங்காளம்மன் | சுடலைமாடன் |
| அரவான் | செங்கிடாக்காரன் |
| இசக்கியம்மன் | தருமராசா |
| உக்கிரமாகாளி | துரோபதி அம்மன் |
| உச்சினி மாகாளி | செல்லியம்மன் |
| எல்லைக் கறுப்பு | துர்க்கை |
| ஐயனார் | பத்திரகாளி |
| ஐவர் ராசாக்கள் | பாவாடை ராயன் |
| ஒற்றை மாராப்பு | பிடாரி |
| கண்ணாத்தாள் | புற்றுமாரியம்மன் |
| கந்தசாமி | பேச்சியம்மன் |
| கபாலக்காரன் | மலையரசி |
| கறுப்பண்ணன் | முத்தாலம்மன் |
| கருமாரியம்மன் | முனிசுபரர் |
| கன்னிகள் | வெள்ளைக்காரன்சாமி |
| காட்டேரி | கன்னிகா பரமேஸ்வரி |
| குரங்கணியம்மன் | |
| கொப்புடையம்மன் | |
| சங்கிலிமாடன் | |

பெண் தெய்வங்களே பழமையானது. பிடாரி, காளி, அங்காளம்மன், செல்லியம்மன், மாரியம்மன், முதலியன பண்டைக்காலம், தொட்டே வழிபடப்பட்டு வருகின்றன. இவற்றில் சப்த கன்னியர் வழிபாடு தமிழகமெங்கும் பரவியுள்ளது. அழகர்மலையில் பெருமாள் கோயிலுக்குப் பின்புறம் கன்னியர் எழுவர் சிலைகள் வழிபாட்டிலுள்ளது. சுற்றுக்கோயில் பூசை முறையில் வழிபாடு நடக்கிறது. இதனைச் சதிரிளமடவார் என்று அழைத்து வருகின்றனர். அவர்கள் பிராமி, மகேசுவரி, கௌமாரி, வைஷ்ணவி, வாராகி, இந்திராணி, சாமுண்டி என்று பெயர் பெறுவர். ஆலம்பாக்கத்தில் செல்லியம்மன் கோயில் பண்டைச் சோழர் காலத்தில் சப்த மாதர்களுக்காக ஏற்பட்டது. இங்குள்ள கல்வெட்டிலிருந்து இது திருவொற்றியூரான் இராயர் அலங்காரப் பிரியன் என்பவனால் கட்டப்பட்டது. என்றும் கோயில் செலவுகளுக்காக நிலங்களை நிவந்தமாக விட்டான் என்றும் தெரிகிறது.

கருவறையின் மேல் சாலை வடிவில் சுதையால் ஆன புதுப்பிக்கப்பட்ட விமானம் ஒன்றுள்ளது. இதன் நான்கு திக்குகளிலும்

நான்கு காவற்பெண்டுகள் காணப்படுகின்றனர். வடக்கே பார்த்த இக்கோயிலின் முன் பலிபீடமுள்ளது. நித்திய பூஜையை ஒரு பண்டாரம் செய்துவருகிறார். திருவெள்ளறையிலுள்ள செல்லாண்டி அம்மன் கோயிலும் தொன்மையானது. மாசி மாதம் திருவிழா நடைபெறுகிறது. முதல் நாள் காப்புக்கட்டும் 7ஆவது நாள் காப்புக் கட்டும் நடக்கிறது. முதலில் மஞ்சள் கயிறும் அடுத்து வெள்ளைக் கயிறும் கட்டப்படும். இடைப்பட்ட தினங்களில் தினமும் ஆடு வெட்டிச் சிறப்புப் பூசை நடத்துகிறார்கள். எட்டாம் நாள் சப்பரத்திருவிழாவில் தெய்வத்தை ஓலையில் எழுதி சப்பரத்தில் வைத்து ஊர்வலம் வந்து தென்மேற்கு மூலையில் கன்னிமார் கோயிலுக்கு வடக்கில் ஆலமரத்தடியில் நிறுத்துவார்கள். உடனே இரு ஆட்டுக்குட்டிகளை அறுத்து அவற்றின் குருதியைச் சோற்றுடன் கலந்து சட்டியில் போட்டு நால்வர் ஊர் எல்லைக்குச் சென்று உடைத்துவிட்டுத் திரும்புவர். 12ஆவது நாள் வரை பூசைகளுடன் சப்பரம் நிற்கும் ஆலமரத்தின் அடியில் பூசனைகள் படைக்கப்படும். இறுதி நாள் சப்பரம் கோயிலுக்கு இழுத்துச் செல்லப்பட்டு விழா முடிவடையும்.

**அங்காளம்மன் கோயில் (திருவெள்ளறை)**

பிற்காலத்தில் கருவறை, அர்த்தமண்டபம், முக மண்டபம், மகாமண்டபம், ஆகியவற்றைக் கட்டிப் பெரிதாக்கியுள்ளனர். மருதி, வீரபத்ரன், பேச்சாயி, கருப்பணசாமி, இருளப்பன், என்ற 5 தெய்வங்களும் மகா மண்டபத்தில் சிற்றாலயங்களில் உள்ளன. பண்டாரம் பூசை வைக்கிறார். அங்காளம்மன் உற்சவ மூர்த்திக்கு நான்கு கரங்கள், மேலிருகரங்களில் சூலமும் பாசமும் உள்ளன. கபாலமாலை பூணூலாகவுள்ளது. வலது கீழ்க்கரம், அபயமுத்திரை காட்டுகிறது. இடது கீழ்க்கரத்தில் கபாலம் உள்ளது. மார்பில் நாகபந்தம் . இது நாயக்கர் காலத்தைச் சேர்ந்தது என்பர்.

# இயல் 22

# திருக்கோயில்களும் சமுதாயப்பணிகளும்

திருக்கோயில்கள் இறைவன் உறைவிடங்களாகும். இறைவனை மக்கள் சென்று வழிபாடு செய்வதற்குரிய இடமுமாகும். இத்தகைய ஆலயங்கள் பொதுமக்களின் வாழ்க்கையை வளப்படுத்தும் சிறந்த சாதனங்களாகவும் விளங்கி வந்தன. இம்மை மறுமைப் பயன்களை ஒருங்கே பெறுவதற்கு வழி காட்டும் தலங்களாகவே அவை பணியாற்றின.

## 1) கல்வி மையம்

தமிழகத் திருக்கோயில்கள் கல்விப்பணியாற்றும் நிறுவனங்களாகத் திகழ்ந்தன. கோயில் வளாகத்தில் வாழ்ந்த ஆசிரியர்களுக்கும் மாணவர்களுக்கும் ஆதரவாகக் கட்டளைகள் ஏற்பட்டிருந்தன. மாணவர்கள் உறைவதற்காக விடுதிகளும் ஆலயங்களிலேயே இருந்தன. ஆலயங்களில் நடைபெற்ற பாடசாலைகளில் சரஸ்வதி பண்டாரங்கள் இருந்தன. அவற்றில் ஓலைச் சுவடிகளில் எழுதப்பட்ட நூல்கள் சேமிக்கப்பட்டிருந்தன. வேதங்ளை அத்யயனம் செய்வதற்கும் வேதாங்கங்களைக் கற்பதற்கும் தேவாரத் திருப்பதிகங்களை ஓதுவதற்கும் திருவாய்மொழி அதிகரிப்பதற்கும் கோயில் பாடசாலைகளில் வழிவகைகள் செய்யப்பட்டிருந்தன. வைதிகவித்யைகளைக் கற்றுக் கொள்வதற்கு வசதியாக மன்னர்கள் மானிபங்களைத் தாராளமாக வழங்கி வந்தனர். முதற்பராந்தக சோழனின் 13ஆம் ஆட்சி ஆண்டில் கப்பலூரில் சாந்தோக்கியம் கற்பிப்பதற்காக விளைநிலம் வழங்கப்பட்டது. அதற்கு "சாந்தோக்யக் கிடைப்புறம்" என்று பெயர் வழங்கப்பட்டது. மாணாக்கர் பயிலும் வகுப்பிற்கு "கிடை" என்று பெயர். சுந்தர சோழன் காலத்தில் கோயில் தேவராயன் பேட்டையிலுள்ள ஆலயத்தில் மார்கழித் திருவாதிரைத் திருவிழாவில் ஜைமினிஸாமம் ஒப்பிக்கும் போட்டியில் வெற்றிபெறும் மாணவர்களுக்குப் பொற்காசுகள் பரிசளிப்பதற்காக மானிபம் வழங்கப்பட்டது. கும்பகோணத்திலுள்ள நாகேசுவரர் கோயிலில் ப்ராபாகர மீமாம்சை படிப்பதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. திருவெறும்பூர் ஆதித்யேசுவரர் கோயிலில் திருப்பதியம் விண்ணப்பம் செய்யும் மூவருக்கு நித்தியக் கட்டளையாக சுந்தர சோழன் காலத்தில் நிலங்கள் அறக்கொடையாக

வழங்கப்பட்டிருந்தன. திருவாமாத்தூர் ஆலயத்தில் தேவாரப்பதிகங்களை ஓதும் குழுவில் விழியிழந்தோர் பதின்மரும் ஆசான்கள் இருவரும் இடம் பெற்றிருந்தனர். இவர்களைப் பரிபாலிப்பதற்காக இரண்டாம் குலோத்துங்க சோழன் 12 வேலி நிலங்களைக் கூடுதலாக வழங்கினான். திருமால்புரத்திற்கு அருகிலுள்ள கோவிந்தப்பாடி என்ற சிற்றூர்க் கோயிலில் திருவாய்மொழி விண்ணப்பம் செய்வதற்கு நிபந்தங்கள் விடப்பட்டிருந்தன.

## 2) கலைகளின் இருப்பிடம்

இசைக்கலை மற்றும் நுண்கலைகள்யாவும் கோயில்களிலேயே வளர்ந்து செழித்தன. இசையும் நாட்டியமும் இறைவழிபாட்டின் அங்கங்களாகப் போற்றப்பட்டன. திருவிடைமருதூரில் பாண்டியன் தலை கொண்ட கோப்பரகேசரிவர்மன் ஆட்சிக்காலத்திய கல்வெட்டு ஒன்று குறிப்பிடத்தக்கது. (S.I.I.154, 1895) ஏழுதினங்கள் ஆரியக்கூத்து ஆடுவதற்கான ஏற்பாடுகளை அக்கல்வெட்டு அறிவிக்கிறது.

அரசனுடைய ஆணை எட்டியதும், கோயில் கேள்வி செய்யும் அதிகாரி, சபையார், நகரத்தார், தேவகன்மிகள் எல்லாரும் கோயில் நாடக சாலையில் கூடினர். ஏழுதினங்கள் நாடகம் நடிக்கவேண்டும் என்றும் அதில் ஒவ்வோரு ஆட்டக்காரர்களுக்கும் 14 கலம் நெல் வழங்கப்படும் என்றும் தீர்மானித்தனர். சிற்பிகள் அனைவருக்கும் ஓவியக்காரர்களுக்கும் திருக்கோயில்களில் இடமளிக்கப்பட்டது. கோயில் திருவிழாக்களில் நானா திசைகளிலிருந்தும் பெரும் திரளான மக்கள் கூடினார்கள். அப்போது சந்தைகள் கூட்டப்பட்டன.விழா ஊர்வலங்களில் கரக ஆட்டங்கள் போன்ற கேளிக்கைகள் நடைபெற்றன.

## 3) அரசர்களின் ஆதரவு

மாமன்னர்களும் அடிக்கடி திருக்கோயில்களுக்கு வழிபாடுகள் செய்ய வருகைபுரிந்தனர். ஒவ்வொரு அரசருக்கும் குலதெய்வங்கள் தனியாக இருந்தனர். அக்குலத்தெய்வங்களின் கோயில்கள் அரசர்களிடமிருந்து பெருங்கொடைகளைப் பெற்றுச் சிறப்புற்றன. முதல் பராந்தக சோழன் ஹேமகர்ப்ப துலாபாரங்கள் மூலம் பெரும் பொருளைக் கோயில்களுக்கு வாரி வழங்கினான்.உத்தர மேரூர் சுந்தர வரதப்பெருமாள் கோயிலுக்கு அவ்வாறு துலாபாரங்கள் மூலம் பெருவருவாய் கிட்டியதால் அக்கோயில் துலாபாரதளி என்ற பெயரை அடைந்தது. அரசர்களின் பட்டாபிஷேகங்கள் கோயிலில் நடைபெற்றன. ராஜசபை மண்டபத்தில் சோழர்கள் பட்டாபிஷேகம் செய்து கொண்டனர். பெரு வெற்றிகளைக் கொண்டாடும் முறையில் அரசர்கள் விஜயாபிஷேகம் மற்றும் வீராபிஷேகங்களையும் கோயில்களில் செய்து கொண்டனர்.

## 4) அரங்கேற்றம்

புலவர் பெருமக்கள் கோயில் மண்டபங்களில் சங்கமாகக் கூடியிருந்து அரங்கேற்ற வைபவங்களை நடத்தினார்கள். ஆதித்தசோழன் காலத்தில் நாதமுனிகள் என்ற வைஷ்ணவ ஆசாரியர் முன்னிலையில் திருவரங்கம் பெரியகோயிலில் கவிச்சக்கரவர்த்தி கம்பர்பெருமான் இராமகாதையை அரங்கேற்றினார். தில்லையில் ஆயிரக்கால் மண்டபத்தில் சேக்கிழார் பெரிபுராணத்தை எழுதி அரங்கேற்றினார்.

## 5) அறக்கொடைகள்

அறக்கொடைகளாக வந்த சொத்துக்களிலிருந்து கிடைத்த வருமானம் எல்லாருக்கும் பிரித்துக்கொடுக்கப்பட்டது. உத்தமசோழன் (கி.பி.959-985) தன்னுடைய 8ஆவது ஆட்சியாண்டில் தன்னுடைய தாய் செம்பியன்மாதேவி அரசியாரின் விருப்பத்திற்காகக் கோனேரிராஜபுரத்தில் அறக்கட்டளை ஒன்று அமைத்தான். அதைத் தெரிவிக்கும் கல்வெட்டில் அக்கட்டளையிலிருந்து ஊதியம் பெறுவோர்களைப் பட்டியல்போட்டுக் கூறியிருக்கிறது. அதில் பூமாலை தொடுப்போர், திருநந்தவனம் செய்வோர், சாந்துக்காப்புப் பணி செய்வோர், ஸ்ரீபாதம் தாங்குவோர், திருவலகிடுவோர், திருக்கரகக்காரர், இசைகாரர், கணக்கர், குயவர், கொல்லர், தச்சர், துன்னகாரர், பரிசாரகர் முதலிய பல்வகைத் தொழில் வினைஞர்கள் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

## 6) நிர்வாகத்தில் நேர்மை

சோழப் பேரரசில் கோயில்கள் நன்றாகவே பரிபாலிக்கப்பட்டு வந்தன. கோயில் நிர்வாகத்தில் சிலசமயங்களில் ஊழல் குற்றங்கள் கண்டுபிடிக்கப்பட்டு அரசர்களால் குற்றவாளிகள் தண்டிக்கப்பட்டனர்.

1) இராஜகேசரிவர்மன் முதலாம் ஆதித்த சோழன் காலத்தில் தில்லைஸ்தானத்திலுள்ள ஆலயத்தின் நிர்வாகத்தை மேற்கொண்டிருந்த ஸ்ரீ கார்யம் செய்வோர் கோயில் நிதியைக் கையாடியது கண்டுபிடிக்கப்பட்டது. நகரக்கரணத்தான், கணக்கு எழுதுகின்றவன் மற்றும் இன்னொருவன் ஆகிய மூவருக்கும் மூன்று கழஞ்சுகள் அபராதம் விதிக்கப்பட்டது. அத்தொகை கொண்டு சுவாமிக்கு நெற்றிப்பட்டை செய்து அணிவிக்கப்பட்டது. (35, 1895)

2) தில்லைஸ்தானத்திலேயே முதல் பராந்தகன் காலத்தில் 25ஆம் ஆட்சியாண்டில் மற்றுமொரு விசாரணை மேற்கொள்ளப்பட்டது. நகரவாரியத்தாரோடு அதனுடைய அதிகாரிகள் சேர்ந்து விசாரித்துக் குற்றவாளி தண்டிக்கப்பட்டு அபராதத்தொகை வசூலிக்கப்பட்டு அதைக் கொண்டு சுவாமிக்கு நெற்றிப்பட்டம் செய்து அணிவித்தனர்.

3) உத்தம சோழன் ஆட்சியில் திருவிடைமருதூர் ஆலயத்தில் கோயில் நிர்வாகம் விசாரணைக்கு உட்படுத்தப்பட்டது. சபையார், நகரத்தார், திருக்கோயிலுடையார், (டிரஸ்டி) அரசாங்கஅதிகாரிகள் எல்லோரும் நாடகசாலை மண்டபத்தில் ஒன்றுகூடி விசாரணை செய்தனர். அக்கோயிலில் திருநுந்தா விளக்கு எரிப்பதற்கான நிபந்தத்தின் வட்டித் தொகையானது மறைக்கப்பட்டதைக் கண்டிபிடித்தனர். மேற்கண்ட கட்டளையின் சிலாசாசனம் பூமிக்கடியில் ஒளிக்கப்பட்டிருந்ததையும் கண்டுபிடித்து அதனை மீண்டும் கோயிலைப் புதுப்பிக்கும் போது கல்லில் வெட்ட ஏற்பாடுகளைச் செய்தனர். காடுவெட்டிகள் கந்திபோத்தரயன் என்பவன் விட்ட 60 பொற்கழஞ்சு நன்கொடையானது விடுபட்டிருந்ததும் கண்டுபிடிக்கப்பட்டுக் கல்லில் வெட்டப்பட்டது.

4) கோனேரின்மை கொண்டான் ஆட்சியில் 14வது ஆண்டுக் கல்வெட்டு ஒன்று அரிய செய்திகளைக் கூறுகிறது. இவ்வரசன் உத்தம சோழனாதல் வேண்டும் என்பர் (286, 1906) சிற்றியாற்றூர் என்ற கிராமம் திருமால்புரம் (திருமாற்பேறு) திருக்கோயிலுக்கு தேவதான இறையிலியாக அரசனால் விடப்பட்டது. அருகிலுள்ள புதுப்பாக்கம் கிராம சபை மேற்படி இறையிலி கிராமத்தைப் பெற்றுக் கொண்டு திருமால்புரம் கோயிலுக்குக் கட்டளைகளை நிறைவேற்றுவதாக ஒப்புக்கொண்டது. இந்த இறையிலி நன்கொடை தொண்டைமான் ஆற்றூர்த்துஞ்சின தேவரான முதல் ஆதித்த சோழனின் 21 வது ஆட்சியாண்டில் வழங்கப்பட்டது.

5) 22வது ஆட்சியாண்டில் யானை மேல் எல்லை நடந்து ஒப்படைக்கப்பட்டது. ஆனால் இந்த நன்கொடை முதல் பராந்தக சோழனின் 4வது ஆட்சியாண்டு வரை மேற்குறிப்பிட்ட இறையிலி நன்கொடைக் கணக்குகளில் வரவு வைக்கப்படவில்லை. அதனால் புதுப்பாக்கம் சபை கட்டளைத்திட்டங்களை கோயிலில் செய்யவில்லை. இதை விசாரித்தறிந்து முதல் பராந்தகன் 36வது ஆட்சியாண்டில் மேலும் புதிய நிலங்களையும் சேர்த்து அறக்கொடைவழங்கி அனைத்தையும் கணக்குகளில் வரவு வைத்துக் கட்டளைத் திட்டங்களை ஒழுங்காக நடக்கும்படி செய்தான்.

6) திருமால்புரம் கோயிலைச் சேர்ந்த தேவகன்மிகள், உண்ணாழிகையுடையார், மாஹேச்வரர்கள் எல்லோரும் சேர்ந்து உத்தம சோழனுடைய அமைச்சரான சோழ மூவேந்தவேளானிடம் புதுப்பாக்கம் சபையானது. கோயில் நிதிகளைத் தவறாகப் பயன்படுத்தி ஊழல் செய்ததாக முறையிட்டனர். அதன்மேல் அரசன் மேற்குறித்தவர்களையும் புதுப்பாக்கம் சபையாரையும் அழைத்து விசாரணை செய்தான். சபை செய்த குற்றம் நிரூபிக்கப்பட்டது. சபை முழுவதுக்குமே அபராதம்

விதிக்கப்பட்டது. இதனால் பொதுச்சொத்துக்கள் தவறாகப் பயன்படாதவாறும் அபகரிக்கப்படாதவாறும் அரசரால் கண்காணிக்கப்பட்டது. என்று தெரிகிறது.

7) வங்கிகள் - திருக்கோயில்கள் தம்வசமிருந்த பணத்தைப் பஞ்சம், வெள்ளம் போன்ற காலங்களில் சபைக்குக் கடனாகவும் வழங்கின. தனிப்பட்டவர்களுக்கும் கடன் கொடுக்கப்பட்டு வருமானம் பெருக்கப்பட்டிருக்கிறது. கோயிலில் உள்ள தொகை மக்கள் நலத்துக்காக ஒரு வங்கிபோல் வழங்கப்பட்டது. தலைச்சங்காடு என்ற ஊர்ச் சபை நல்துணைச்சுரம் என்ற கோயில் நிதியிலிருந்து 500 கழஞ்சு பொன் கடனாகப் பெற்றுக் கொண்டது. வட்டிக்காகக் கோயிலைச் சேர்ந்த இரண்டு வேலி நிலங்களுக்குரிய வரியைச் செலுத்த ஒப்புக்கொண்டது.

8) வறுமைப்பட்டோரின் துயர்போக்கும் இடமாகவும் கோயில்கள் விளங்கின. ஊனமுற்றோர்களுக்கும் பரதேசிகளுக்கும் (தேசாந்தரிகள்) சோற்றுருண்டைகள் வழங்கப்பட்டன. அதற்கான அறக்கொடைகள் ஏற்படுத்தப்பட்டிருந்தன.

9) கிராமசபைக் கூட்டங்கள் கோயில்களில் நடைபெற்றன. தேர்தல்களும் அங்கு நடைபெற்றன. அதனால் தெய்வபயத்துடன் உறுப்பினர்கள் பொறுப்புக்களை ஆற்றினார்கள். பொய் பேசவோ உண்மையை மறைக்கவோ அஞ்சினார்கள்.

10) உத்திரமேரூர் வைகுண்டப் பெருமாள் கோயில் கல்வெட்டிலிருந்து அக்கால கிராம சபைகளின் தேர்தல் முறை நன்கு அறியப்படுகிறது. கோயிலைச் சேர்ந்த பொது அறக்கட்டளைகளை கல்வியிற் சிறந்த அறிஞர்களே நிர்வகித்து வந்தனர். ஸ்ரீனிவாசநல்லூரில் சதுர்வேதி பட்டாராகப் பெருமக்கள் அவ்வாறு பொது நிதியைப் பொறுப்பேற்று நடத்தியதாகக் கல்வெட்டுக்கள் வாயிலாக அறிகிறோம், வேதாரணியத்தில் தேவர்இடைச் சான்றோர்கள் ஆடுகளை அறக்கொடையாகப் பெற்று அதன் வருமானத்திலிருந்து கோவிலுக்குத் திருவிளக்குகளுக்கு நெய் வழங்கினர். வீரநாராயண சதுர்வேதி மங்கலம் திருக்கோயில் நிதிகளை நிர்வகிப்பதற்காக "சாஸன பத்த சதுர்வேதிபட்ட பெரும்பதி ஸஹஸ்ர தான பெருமக்கள்" என்ற சபையை முதல் பராந்தகன் உண்டாக்கினான். (585, 1920) உத்தம சோழனின் தாயாரும் கண்டராதித்த சோழரின் பட்டத்தரசியாருமான செம்பியன் மாதேவி என்பவள் தன் பெயரில் ஒரு கிராமத்தை உண்டாக்கி அதை நிருவகிக்கும் பொறுப்பை "சாசன பத்த சதுர்வேதி பட்டர் தானப் பெருமக்களிடம்" ஒப்படைத்தாள். (496, 1925)

11) பழைய கோயில்களைப் புதுப்பித்துக் கட்டும்போது பழைய கல்வெட்டுக்களைப் பிரதி செய்துகொண்டு மீண்டும் புதுச்சுவர்களில் அவற்றைப் பொறித்தனர். (91, 920, 1895).

12) அக்காலத்தில் மகப்பேறில்லாத மகளிர் கோயிலிலுள்ள அம்பிகையை மகளாக ஸ்வீகாரம் செய்துகொண்டு திருக்கல்யாணம் செய்துவைத்தனர். அப்போது தாராளமாக நிலக்கொடைகள் வழங்கினர். வேட்டன் சேந்தன் என்பாரின் மகள் சேந்தன் காரி என்பவள் அவ்வாறு ஸ்திரீதனமாக நிலங்களை எழுதிவைத்த செய்தி கல்வெட்டினால் அறியப்படுகிறது. (151, 1936-37) பரகேசரிவர்மனின் 15 வது ஆட்சி ஆண்டு )

13) கோயில்கள் பொது ஆவணக் கூடங்களாகவும் அக்காலத்தில் பணியாற்றின. அரசனுடைய ஆணைகளும் மெய்க்கீர்த்திகளும் கோயில் கருவறைப் புறச்சுவர்களிலும் மண்டபங்களிலும் மதிள்களிலும் பொறிக்கப்பட்டன. அவற்றின் மூலப்படிகள் செப்பேடுகளிலோ ஓலைகளிலோ எழுதப்பட்டுப் பிரதிகள் கல்வெட்டுக்களாகப் பொறிக்கப்பட்டன. அவற்றிலிருந்து அரிய செய்திகளைத் தெரிந்துகொள்ள முடிகிறது.

திருமுக்கூடல் வேங்கடேசப்பெருமாள் கோயில் கல்வெட்டு ஒன்று வீரராஜேந்திரன் காலத்தைச் சேர்ந்தது ( பாலாறு, வேகவதி, செய்யாறு மூன்றும் சேருமிடம் முக்கூடல்) அக்கல்வெட்டின்படி அக்கோயிலுக்கு அளிக்கப்பட்ட அறக்கொடையின் வருஷ வருமானம் 3243 கலம் நெல்லும் ரொக்கம் 216 காசுமாகும். இதனை எவ்வாறு செலவழிக்க வேண்டும் என்பதையும் சாசனம் கூறுகிறது. கோயிலைச் சேர்ந்த வேத பாடசாலையும் உணவு விடுதியும் ஆதுலர்சாலையும் (மருந்தகம்) அவ்வருமானத்தில் நடத்தப்பட்டன. அந்தப் பாடசாலையில் ரிக்வேதம், யஜுர்வேதம், ஆகமங்கள், தந்திரங்கள், கற்பிக்கப்பட்டன. உணவு விடுதியில் 60 பேர்களுக்கு உணவு, பாய், விளக்கெரிக்க எண்ணெய், 51 சனிக்கிழமைகளில் எண்ணெய்க் குளியலுக்கான எண்ணெய் முதலியன அளிக்கப்பட்டன. ஆதுரசாலையில் வைத்யன். சல்லியக்கிரியை பண்ணுவான், மூலிகை கொணர்வான், விறகுதருவான், செவிலி, அம்பட்டன், காவலன், ஆகியோர் பணி செய்தனர். ஆதுரசாலையில் 15 படுக்கைகள் இருந்தன. வியாதிபட்டுக் கிடப்பாருக்காக மருந்துகள் எப்போதும் கைவசமிருந்தன. சரகஸம்ஹிதை, சுச்ருதஸம்ஹிதை, அஷ்டாங்கஹிருதயம் முதலிய ஆயுர்வேத நூல்களில் சொல்லப்பட்ட மருந்துகள் தயாரிக்கப்பட்டன. அதற்காக 40 காசுகள் செலவிடப்பட்டன. தஞ்சாவூரிலும் "சுந்தர சோழ விண்ணகர் ஆதுலர்சாலை" ஒன்றினைக் குந்தவை ஆழ்வார் என்ற அரசியார் ஏற்படுத்தி அதற்கு வைத்யபோகம் என்ற அறக்கட்டளையையும் உண்டாக்கி வைத்தாள். சுந்தரசோழனின் மகளே குந்தவைப்பேரரசியாவாள்.

# இயல் 23

# சோழர், பாண்டியர் மற்றும் நாயக்கர் காலத்தில் கோயிற் பணிகளும் ஆட்சிகளும்

**சோழப்பேரரசர்கள்**

சோழப் பேரரசர்கள் திருக்கோயில்களின் நாள் வழிபாட்டிற்கும் திருவிழாக்களுக்கும் நிவந்தங்களை வாரி வழங்கினர். அவற்றின் விவரங்களைக் கோயிற்சுவர்களில் பொறித்து வைத்தனர். அவற்றைப் பொறிக்கும்போது அரசாங்க அதிகாரிகள் மேற்பார்வையிட்டனர். அவற்றின் படிகளைச் செப்பேடுகளிலும் எழுதிவைத்தனர். அவையும் கோயிலதிகாரிகளிடம் சேர்ப்பிக்கப்பட்டன. அவை யாவும் கோயில் பண்டாரத்தில் அல்லது கருவுகலத்தில் சேமிக்கப்பட்டன. இதனைச் கல்லிலும் செம்பிலும் வெட்டிக்கொள்ளச் சொன்னோம் என்று கல்வெட்டுக்களின் இறுதியில் வருவதிலிருந்து இதனை அறிந்துகொள்கிறோம்,

சோழமன்னர்களின் ஆளுகையில் ஊராட்சி நடத்திவந்த சபைகள் நன்கு செயலாற்றி வந்தன. அவை (1) பிராமணர்கள் பிரமதேயவுரிமையுடன் வசித்து வந்த சதுர்வேதிமங்கலங்களில் இருந்த சபை (2) திருக்கோயில்களுக்குரிய தேவதானங்களில் இருந்த சபை, (3) பிராமணரல்லாத பிற வகுப்பினர் வசித்த ஊர்களிலிருந்த சபை (4) வணிகர்கள் வசித்த நகரங்களில் இருந்த சபை ஆகிய நான்குமேயாம். இவற்றை கிராமசபை, தேவதானத்துசபை, ஊர்ச்சபை, நகரசபை, என்று கூறுவது பொருத்தம். இவையாவும் கோயில் மண்டபங்களிலே கூடின. குடவாசல் சபை அவ்வூர் கண்டராதித்தன் மண்டபத்திலும் இராசராசன், மண்டபத்திலும் வண்ணக்கனார் அம்பலத்திலும் கூடியதாகக் கல்வெட்டுக்கள் அறிவிக்கின்றன.

தஞ்சாவூர் மாவட்டம் சாத்தமங்கலம் என்ற ஊரில் ஒரு பகுதி சிவன் கோயிலுக்கு உரிய தேவதானமாகவும் மற்றொரு பகுதி ஜெயினர்களது பள்ளிச்சந்தமாகவும் இருந்தது. அதனால் இரு சபைகள் அவற்றை நிருவகித்தன. இரண்டும் சேர்ந்து ஒரு குளமும் நந்தவனமும் அமைத்ததற்கு ஊர்ப்பொதுநிலத்தை வழங்கினர் என்று திருத்துறைப்பூண்டிக் கல்வெட்டினால் அறியப்படுகிறது.

கிராமங்களில் சபைகளைத்தவிர வேறுகுழுக்களும் செயல்பட்டன. அவர்கள் 1) மூலபருடையார் 2) சாத்த கணத்தார் 3) காளி கணத்தார் 4) கிருஷ்ண கணத்தார் 5) குமார கணத்தார் 6) மணிகிராமத்தார், 7) வளஞ்சியார் 8) சங்கரபாடியார், 9) பன்மாகேச்சுரர் என்போர். அவர்களில் மூலபருடையார் என்போர் திருக்கோயிற் காரியங்களை நடத்தி வைப்பதற்குத் தேவதான ஊர்களிலுள்ள சபையார் அமைத்திருந்த உட்கழகத்தினர், சாத்த கணத்தார் என்போர் ஐயனார் கோயிலின் நாள் வழிபாடு ஆண்டுவிழா இவற்றை நடத்தி வந்த ஒரு நிர்வாகக்குழுவினர். காளி கணத்தார் காளி கோயில் நிருவாகத்தையும் கிருஷ்ணகணத்தார் கிருஷ்ணன் கோயிலையும் குமார கணத்தார் முருகன் கோயிலையும் பரிபாலித்து வந்தனர். இவர்கள் கணப்பெருமக்கள் என்று சிறப்பிக்கப்பட்டனர். இவர்கள் குடவோலை முறைப்படி தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

வாணகப்பாடி நாட்டுச் சிற்றரசனாகிய வாணகோவரையன் வீரவர்மன் என்பான் சபையிலுள்ள தான்தோன்றீசுவரமுடைய நாயனார் திருக்கோயிலுக்குத் தம் முன்னோர்கள் வழங்கியிருந்த இரண வீரமங்கலம் என்ற ஊரோடு புதிய நிபந்தங்களும் அளித்து நாள் வழிபாடு விழாக்கள் முதலானவற்றை ஒழுங்காக நடத்துமாறு அக்கோயிலை அந்நாட்டுச் சபையாரிடம் ஒப்பித்தான். அதனை ஏற்றுக்கொண்ட வாணகப்பாடி நாட்டுச் சபையார் அந்நாட்டிலுள்ள கிராமங்களில் ஒன்றைக் குடவோலை வாயிலாகத் தேர்ந்தெடுத்து, அந்த கிராமத்திலுள்ள சபையார் கோயில் காரியங்களைப் பார்த்து வருமாறு ஏற்பாடு செய்தமையோடு அதனைத் தாமும் மேற்பார்த்து வந்தனர். ஆண்டு தோறும் குடவோலை வாயிலாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட வெவ்வேறு கிராம சபையாரே அக்கோயில் காரியங்களை நிர்வகித்து வந்தமை குறிப்பிடத்தக்கதாகும். (109, 1906).

### இரவு வரி

சில கிராமங்களில் புரவு வரிபோக இரவு வரி விதித்து அதைக் செலவுகளுக்காக அளித்தனர். இவ்வரி இக்காலத்தில் விதிக்கப்படும் "செஸ்வரி" போன்றது என்பர். வட ஆர்க்காடு மாவட்டம் வாலாஜாபேட்டை வட்டத்திலுள்ள திருமால்புரம் என்று வழங்கும் திருமாற்பேறு சிவாலயத்துக்கு இரவு வரியாக 187 கலம் நெல்லும் 26 கழஞ்சு அரை மஞ்சாடிப் பொன்னும் கொடுக்கப்பட்டது என்று உத்தம சோழனுடைய 14 ஆம் ஆட்சியாண்டில் வரையப்பட்ட கல்வெட்டு தெரிவிக்கிறது.

### திருவாழிக்கற்கள்

சோழர் ஆட்சியில் நிலங்களை நன்கு அளந்து எல்லைக் கற்கள் நட்டனர். அக்கற்களைப் புள்ளடிக்கற்கள் என்று குறிப்பிட்டனர்.

சிவாலயங்களுக்கு விடப்பட்ட நிலங்களுக்குத் திரிசூலம் பொறிக்கப்பட்ட கற்களும் திருமால் கோயில்களுக்கு விடப்பட்ட நிலங்களுக்குத் திருவாழிபொறித்த கற்களும் எல்லைக் கற்களாக நடப்பட்டன. சைனக் கோயில்களுக்கு விடப்பட்ட நிலங்களில் முக்குடை பொறிக்கப்பட்ட கற்களை எல்லைக் கற்களாக நட்டனர்.

**பல்வகை நிலக்கொடைகள்**

தேவதானம் என்பது சிவன்கோயில்களுக்கும் திருவிடையாட்டம் என்பது திருமால் கோயில்களுக்கும் பள்ளிச் சந்தம் என்பது சைன பௌத்த கோயில்களுக்கும் மடப்புறம் என்பது மடாலயங்களுக்கும் சாலாபோகம் என்பது அபூர்விகள் அந்தணர்கள் சிவயோகிகள் முதலாயினோர்க்கு உணவளிக்கும் அறச்சாலைகளுக்கும் பிரமதேயம் என்பது வேத சாத்திரங்களை ஓதியும் ஓதுவித்தும் பணிபுரியும் அந்தணர்களுக்கும் வழங்கப்பட்ட நிலங்களாகும்.

திருக்கோயில்களில் அர்ச்சனை செய்யும் பொருட்டுச் சிவவேதியர்க்கும், ஆதுரசாலைகளிலிருந்து பொதுமக்களுக்கு வைத்தியம் செய்யும் பொருட்டு மருத்துவர்க்கும், விழா நாட்களில் ஆரியக் கூத்து நிகழ்த்தும் பொருட்டுக் கூத்தச் சாக்கையர்க்கும் கொடுக்கப்பட்ட நிலங்கள் முறையே அர்ச்சனாபோகம் என்றும் வைத்தியபோகம் என்றும் நிருத்த போகம் என்றும் வழங்கிவந்தன. ஊர்களில் இரவில் அம்பலத்து அமர்ந்து பாரதம் படித்து விரிவுரை நிகழ்த்தும் பொருட்டுப் புலவர்களுக்கும் திருக்கோயில்களில் வேதம் ஓதவும் புராணம் படிக்கவும் அந்தணர்களுக்கும் விடப்பட்ட நிலங்கள் முறையே பாரத விருத்தி என்றும் பட்ட விருத்தி என்றும் வழங்கின.

திருக்கோயில்களில் ஆடல்கள் பாடல்களை நிகழ்த்தும் பதியிலார்க்கும் அவர்களை ஆட்டுவிக்கும் நட்டுவனுக்கும், ஆரியக் கூத்தாடும் கூத்தச்சாக்கைக்கும் தமிழ்க் கூத்தாடுவோர்க்கும் வீணை வாசிப்போருக்கும் மத்தளம் கொட்டும் மெய்மட்டிக்கும் இசைபாடும் முரலியனுக்கும், ஒரு கட்பறை கொட்டும் உவச்சனுக்கும் கணக்கு எழுதும் கணக்கனுக்கும், திருப்பதிகம் விண்ணப்பம் செய்யும் ஓதுவார்க்கும் கொடுக்கப்பட்ட நிலங்கள் முறையே பதியிலார்காணி, நட்டுவக்காணி, சாக்கைக்காணி, கூத்தாட்டிக் காணி, வீணைக்காணி, மெய்ம்மட்டுக்காணி, முரலியக்காணி, உவச்சக் காணி, கணக்கக்காணி, திருப்பதிகக் காணி என்று வழங்கி வந்தன.

தளிச்சேரிப் பெண்டுகளாகிய பதியிலார்க்கும் தேவரடியார்க்கும் இசைப் பயிற்சி அளித்து வந்த பாணர்களுக்கு கொடுக்கப்பட்ட இறையிலி நிலம் பாணக்காணி என்று வழங்கியது.

ஊர் அம்பலங்களை மெழுகி நாள்தோறும் தூய்மை செய்யும் பணிமகளுக்கும் அவற்றில் குடிதண்ணீரும் அக்கினியும் சேமித்து

ஊரார்க்கு வேண்டும்போது கொடுத்துதவும் பணிமகனுக்கும் அளிக்கப்பட்ட இறையிலி நிலங்கள் முறையே மெழுகுப்புறம், அம்பலப்புறம் என்று வழங்கின. இவையாவும் பொதுவாக மானிபங்கள் என்று பெயர் பெற்றன.

தேவதானம், பிரமதேயம், மடப்புறம், திருவிடையாட்டம், ஆகியவற்றை அரசர்களோ, அரசியல் தலைவர்களோ, ஊர்ச்சபையாரோ இறையிலி நிலங்களாகவே விடுவது வழக்கம். நாட்டிலுள்ள செல்வர்கள் அவற்றை வழங்குபவராயின் அவற்றிற்குரிய அரசிறையின் பொருட்டு அவர்களிடம் முதற்பொருள் பெற்று அதிற்கிடைக்கும் பலிசையைக் கொண்டு அரசுக்குச் சேரவேண்டிய நிலவரியை ஆண்டு தோறும் ஊர்ச்சபையார் செலுத்தி வருவார்கள். மேலே குறிப்பிட்ட தேவதானம் பிரமதேயம், முதலான நிலங்களுக்குப் பொதுமக்களே பங்குவீதமாக அரசிறை செலுத்துவதும் உண்டு.

நிலவுரிமைகளை மாற்றியமைத்துக் கோயில்களுக்கு விடுவதும் நிலவியது. தென்னார்க்காடு மாவட்டம் பெண்ணாகடத்துக்கு அருகில் பிரமதேயமாக அனுபவிக்கப்பட்டு வந்த கூடலூர் என்னும் ஊரை இரண்டாம் குலோத்துங்க சோழன் தேவதானமாக மாற்றி எதிரிலி சோழநல்லூர் என்று பெயரிட்டு அவ்வூரிலுள்ள தூங்கானைமாடத் திருக்கோயிலின் வழிபாட்டுச் செலவிற்காக வழங்கினான்.

சோழமன்னர்கள் கோயில்களுக்கு தேவதானம் அளிக்குங்கால் , சில சமயங்களில் அவ்வூரிலுள்ள குடிகளையும் அவர்களுக்குரிய பழைய உரிமையோடு அக்கோயிலுக்குக் கொடுத்து வருவதும் உண்டு. அத்தகைய தேவதானம் குடி நீங்காத் தேவதானம் என்று வழங்கியது. சில வரிகள் மூலம் கோயில்களுக்கு வரவுகள் ஏற்படுத்தப்பட்டன. குமரகச்சாணம் என்பது முருகன் கோயிலுக்காகச் செலுத்தவேண்டிய ஒரு வகைப் பொன்வரி. தீயெறி என்பது கோயிலில் தீ ஓம்பி அதில் சோற்றை பலி தூவுவதற்காகத் தண்டப்பட்ட வரியாகும். மன்னர் இவ்வாறு தண்டிய வரிகளைக் கோயில் நலனுக்காகச் செலவிட்டனர்.

**தளிச் சேரிப் பெண்டுகள்**

அக்காலத்தில் பரதத்திலும் இசையிலும் வல்ல தளிச்சேரிப் பெண்டுகள் பலர் கோயில்களில் பணி செய்தனர். இக்கலையில் தேர்ச்சி பெற்றவர்களைப் பல ஊர்களிலிருந்து அழைப்பித்து தஞ்சை இராசராசேச்சுரத்தைச் சூழ்ந்துள்ள தெருக்களில் முதல் இராசராச சோழன் குடியேற்றிய செய்தி அன்னோர் பெயர்களுடன் அக்கோயிலில் வரையப்பெற்றிருக்கிறது.

திருக்கோவலூர் வீரட்டானேசுவார் கோயிலில் நாடக மகளிர் 32 பேர் தொண்டு புரிந்து செய்தி முதல் இராசராசன் காலத்துக் கல்வெட்டால் அறியப்படுகிறது. (SII Vol III 863) அவர்கள் கோயிலைச்

சேர்ந்த இடங்களில் வாழ்ந்தனராதலால் தளிச்சேரிப்பெண்டுகள் எனப்பட்டனர். இறைவனுக்குத் தொண்டு புரிந்ததால் தேவரடியார்கள் எனப்பட்டனர். நாட்டியத்தில் வல்லவராதல் பற்றி நாடகக் கணிகையர் எனப்பட்டனர். யாரையும் மணந்து கொள்ளாதது பற்றிப் பதியிலார் எனவும் வழங்கப்பட்டனர். ஒரு சிலர் மணம் புரிந்து கொண்டதையும் கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. இவர்கள் சிவபக்தி நிறைந்தவர்கள். கோவிலுக்கு அறக்கொடைகள் வழங்கியுள்ளனர். தளிச்சேரிப் பெண்டுகளில் பதியிலார் என்றும் தேவரடியார் என்றும் பிரிவுகள் உண்டு. திருவதிகையில் நூற்றுக்கால் மண்டபத்தில் சுவாமி ஏறியருளினால் முதலில் திருத்திரை எடுத்தால் பதியிலார் ஆடவும் பிற்பாடு திரை எடுத்தால் தேவரடியார் ஆடவும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. தேவரடியார்கள் பலவகையான கூத்துக்களை நிகழ்த்தினர். சாந்திக் கூத்து, ஆரியக் கூத்து, சாக்கைக் கூத்து. தமிழர் கூத்து, தெருக்கூத்து என்று பலவகையாகும். கூத்தாடுபவர்களைக் கூத்தப் பெருமக்கள் என்றழைத்தனர். கூத்துக்கள் நிகழக் கோயில்களில் நாடக சாலைகள் அமைக்கப்பட்டிருந்தன. தேவரடியார்களுக்குத் தலைக் கோலிகள் என்றும் கோயிற் பிணாக்கள் என்றும் பெயர்கள் வழங்கின. தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் 400 தேவரடியார்களை இராஜராஜன் அமர்த்தினான். திருவிழாக்களில் தேவரடியார்கள் பாடிய பாடல்களில் அகமார்க்கம் என்பது ஒருவகையாகும். திருவொற்றியூரில் மார்கழித் திருவாதிரை விழாவின் போது பதினாறு தேவரடியார்கள் தேவாரப் பதிகங்களை அகமார்க்க முறையில் பாடினார்கள் என்று அறியப்படுகிறது. தேவரடியார்கள் கலை வளர்ச்சியியோடு கோயிற் பணிகளுக்கு அறக்கொடைகளும் வழங்கிவந்தனர்.

தேவரடியார்களுக்குப் பாதங்களில் சூலக்குறி சூடுபோடும் வழக்கம் நிலவியது. இவர்களுக்கு விருதுப்பெயர்களும் வழங்கின. திருமெய்யம் அருகில் ராங்கியம் என்ற ஊரிலிருந்த உமையம்மை என்பவள் தேவரடியாராக ஏற்கப்பட்டு நாலுதிக்கும்வென்ற மாணிக்கம் என்ற விருதுப் பெயரும் வீடும் நிலங்களும் வழங்கப்பட்டாள்.

**அடிமைகள்**

அக்காலத்தில் மக்கள் கோயில்களுக்குத் தம்மை விற்றுக்கொண்டு அடிமையாகித் தொண்டு புரிந்தனர். இவர்கள் வழிவழியாக அடிமை செய்து வந்தனர்.

நந்திவர்ம மங்கலத்து மத்யஸ்தன் சந்திரசேகரன் என்பவன் தன்னுடைய அடிமைப் பெண்கள் மூவரை வயலூர் திருக்கற்றளிப் பரமேச்சுரர் கோயிலில் திருப்பதிகம் பாடுவதற்கும் கவரிப் பிணாக்களாகத் தொண்டு புரிவதற்கும் கி.பி. 948ல் அளித்தான். (149 1936- 37) திருநெல்வேலி மாவட்டம் நாங்குனேரி வட்டத்திலுள்ள கருங்குளம் இராசசிம்மேசுவரமுடையார் கோயிலுக்குப் பறை கொட்டும் ஓர் உவச்ச அடிமையை அரசியல் அதிகாரி ஒருவன் கி.பி. 1105 ல் அளித்தான்.

இருமுடிச்சோழத் தெரிந்த வில்லிகள் என்ற படைத்தலைவன் பெரும்பாணப்பாடி நாட்டுப் பாணபுரத்திலிருந்த கணபதிநம்பியாகிய அழகிய பாண்டிய பல்லவரையர் என்பான் கி.பி.1119ல் தன் குடும்பப் பெண்கள் சிலரைத் தேவரடியாராக சூல இலச்சினையிட்டுத் திருவல்லம் கோயிலில் பணிபுரிய விட்டான் என்று அவ்வூரிலுள்ள முதல் குலோத்துங்கசோழன் 49 ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு உணர்த்துகிறது. அடிமைகளைக் கோயிலுக்கு விட்டுப் பொற்காசுகள் பெற்றுக்கொண்ட செய்தியும் கல்வெட்டுக்களால் அறியப்படுகிறது. இவ்வடிமைகள் ஓடிப்போய்விடுவதும் உண்டு. அவ்வாறு ஓடிப் போனவர்களைப் பிடித்து வந்து தண்டித்து மீண்டும் அவர்களிடம் வேலை வாங்குமாறு மூன்றாம் குலோத்துங்க சோழன் செய்த உத்தரவு ஒன்று திருவாலங் காட்டுக் கோயிற் கல்வெட்டிலுள்ளது. பஞ்ச காலங்களில் ஏழைகள் தங்களைக் கோயிலுக்கு விற்றுக்கொண்டனர். பெண்களை அடிமையாக விடும்போது ஆள்விலைப் பிரமாண இசைவு சீட்டு எழுதி விற்கப்பட்டனர். அதில் கிரமாகதமாய் வருகின்ற அடியார் என்று எழுதப்பட்டது. இவ்வாறு பெரிய கோயில்களில் நூற்றுக்கணக்கானவர் அடிமைப்பட்டுப் பணிபுரிந்தனர்.

**வளஞ்சியர்கள்**

அக்காலத்தில் தென்னிலங்கை வளஞ்சியர் என்ற ஈழநாட்டு வணிகர்கள் வேற்று சமயத்தினராயினும் அவர்கள் கோயிற் பணிகளும் ஆற்றினர். மாயவரத்துக்கு அருகிலுள்ள திருவேள்விக்குடிக் கோயிலின் ஒரு பகுதியை திசை ஆயிரத்து ஐந்நூற்றுவரும் வளஞ்சியரும் கட்டுவித்தனர் என்று கல்வெட்டால் தெரியவருகிறது: (131 1926) திருக்கண்ணபுரத்தில் சௌரிராசப் பெருமாள் பெருவிழாவின்போது ஸ்ரீ வைஷ்ணவர்களை உண்பிக்கவென்று தென்னிலங்கை வளஞ்சியர்கள் ஒவ்வொருவரும் இரண்டு காசு வரியாகச் சேர்த்து வழங்கினர். (505, 1922)

**பணக்கொடை**

திருக்கோயில்களுக்கு அறக் கொடை விட்டோர் தாம்தாம் நிரந்தரமாகக் கொடுக்கும் பொருளை கிராமசபையாரிடம் வாடாக்கடனாகக் கொடுத்து அதன் வட்டித் தொகையைக் கொண்டு தம் அறங்களை நாள்தோறும், ஆண்டுதோறும் நடத்திவருமாறு ஏற்பாடு செய்தனர். வட்டியானது நெல்லாகவே தரப்பட்டது. திருக்கோயில்களில் ஸ்ரீகாரியம் செய்வோரும் வட்டி நெல்லைப் பெற்றுப் பண்டமாற்று முறையில் கோயில் பூசைக்கு வேண்டிய பொருளை வாங்கினர்.

**நிலம் திருத்தி அறக்கொடை**

கிராமங்களில் வள்ளலாகத் திகழ்ந்தவர்கள் களர் நிலங்களையும் பாழ் நிலங்களையும் செம்மைப்படுத்தி விளை நிலங்களாக மாற்றிக் கோயில்களுக்கு வழங்கினர். அல்லூர் என்ற சிற்றூரிலிருந்த

வள்ளல் ஒருவன் ஊர்ச்சபையாரிடம் புன்செய் நிலத்தைப் பெற்று நீர் நிலமாக்கி அத்துடன் துளைப் பொன் பத்துக் கழஞ்சும் சேர்த்து அல்லூர் நக்கன்கோயில் பரமேசுரர்க்குக் கொடையாகத் தந்தான். அவற்றைப் பெற்ற கோயில் பட்டுடையார் இவற்றால் வரும் நெல்லையும் வட்டியையும் கொண்டு கோயில் இருகாலைச் சந்தியிலும் அந்தியம் போதிலும் ஒரு சாம காலத்திற்கும், உச்சிப்போதில் ஆறு நாழிகை நேரத்துக்கும் மூன்று விளக்குகளை எரிக்கவும் சங்கராந்தி தோறும் இறைவனுக்கு நெய்யமுது ஒருபடி, கறியமுது, தயிரமுது, அடைக்காய் அமுது ஐந்து, இலையமுது ஒரு அடுக்கு மஞ்சட்காப்பு அரைப்பலம் வழங்குவதற்கும் ஒப்புக் கொண்டனர்.

**திருவிளக்குகள்**

கோயில்களில் திருவிளக்குகளையும் நன்கொடையாகவே மக்கள் வழங்கினர். அல்லூர் இறைவனுக்கு உலகமகராசி என்ற பெண் நிலை விளக்கு ஒன்று அளித்து அதை எரிக்க ஐம்பது கழஞ்சு பொன் கொடையளித்தார்.

கோயில்களில் நந்தாவிளக்குகள் இரவும் பகலும் தொடர்ந்து எரிந்தன. திரு.நுந்தா விளக்கு என்றும் இவற்றை அழைப்பர். இவற்றைப் பேணிவருவதற்காக நிலங்கள் அல்லது கால்நடைகளைக் கொடையாக வழங்குவர். பரிவேட்டைக்குப் போன செல்வப் பேரையன் என்பவன் ஒருவனைத் தேவன் என்பவன் கைப்பிழையால் அம்பெய்து கொன்றுவிட்டான். இவன் அறியாமல் செய்த குற்றத்துக்குக் கழுவாயாகக் கோயிலுக்கு அரை நந்தா விளக்கு வைத்து வரவேண்டும் என்று நீதிமன்றம் தீர்ப்புக் கூறியது.

அறக்கொடைகளை கோயிற்பட்டுடையார் என்னும் குழுவினர் ஏற்று அறங்களை வழுவின்றிச் செயற்படுத்துவார்கள்.

அல்லூர்க் கோயிலில் உள்ள இறைவனுக்கு அவ்வூரினனான அல்லூருடையான் அரிஞ்சிகைப்பாண்டன் என்ற வள்ளல் மூன்று சந்திக்கும் காவிரியிலிருந்து காளம் ஊதிக்கொண்டு தூணிக்கொள்ளிக் குடத்தால் திருமஞ்சன நீர் கொண்டு வருவதற்காக ஆறு கழஞ்சு பொன் அளித்துள்ளார். இதனைப் பெற்றுக்கொண்ட கோயில் பட்டுடையாரான கௌசிகன் அரங்கன், ஆனைக்காவன், அரங்கன், திருமேற்றளி, சிவகோசரி, ஊரன் அரிஞ்சிகை கமுகுவன், விடமன் கற்கடை ஆகியோர் மேற்காட்டிய இறைப்பணியைத் தவறாது செய்வதற்காகவும் ஒரு நாள் தவறினாலும் ஒரு மஞ்சாடிப் பொன் தண்டம், செலுத்துவதாகவும் ஒப்புக்கொண்டனர்.

வீரசோழ இளங்கோ வேள் என்பவன் இறந்து போனதும் அவனுடைய மனைவி கங்கமாதேவி உடன்கட்டை ஏறி உயிர் நீத்தாள். அப்படித் தீப்பாயுமுன் இருபது கழஞ்சு பொன்னை அல்லூர்க் கோயிலுக்குக் கொடையாக வழங்கி ஒரு நந்தாவிளக்கு எரித்துவருமாறு

ஏற்பாடு செய்தாள். அதை மேற்படி கோயில் பட்டுடையார் குழு ஏற்றுக்கொண்டது. (690)

**பதிவு செய்தல்**

அறக்கொடைகளை ஓலைக் குறிப்பில் எழுதிக் கையெழுத்திட்டு வைக்கும் கோயில் கணக்கர்கள் அவற்றைக் கல்வெட்டில் வெட்டச் செய்து தம் பெயரையும் சேர்த்தனர். கோயிலடி (திருப்பேர்நகர்) பெருமாள் கோயில் கல்வெட்டு ஒன்றில் கோயில் கணக்கரின் பெயர் திருப்பேர் உடையான் சுந்தரப்பெருமாள் தித்தன் என்று பெயர் வருகிறது.

**பல்வகைச் செலவினங்கள்**

நிலக்கொடைகள், நிபந்தங்கள், பொற்கொடைகள், ஆடுமாடு, கொடைகள், ஆகியவற்றின் வருமானத்திலிருந்து திருக்கோயிலின் பல்வேறு செலவுகள், செய்யப்பட்டன. உத்தம சோழன் காலத்துக் கல்வெட்டு ஒன்று செலவினங்களைத் தொகுத்துக் கூறுகிறது.

இறைவனுக்குரிய பலவகைப்பட்ட படையல்கள், சந்தனக் காப்பு, தூபம், தீபம், செம்பியன் மாதேவியின் பிறந்த நாளான கேட்டையன்று நிகழ்த்தப்படும் திருப்பலிச் சடங்கு, மார்கழித் திருவாதிரை, வைகாசி விசாகம் ஆகிய திருவிழாக்களில் அந்தணர்களுக்கும் அடியார்களுக்கும் உணவிடல், சந்தனம், அரைப்போர் ஊதியம், செப்புத் திருமேனிகள் வலம் வரும் போது விரிப்புகள் தூக்குவோர்க்கு ஊதியம், பூப்பறிப்பவர், மாலை தொடுப்போர், திருவலகிடுவோர், இசைபாடுவோர், முரைசறைபவர், காளமும் சங்கும் ஊதுவோர், மெய்காவலர் திருப்பதியம் ஓதுவார், கோயில் ஸ்ரீகார்யமான அந்தணர்கள், கோயில் கணக்கர், கோயிலுக்குச் சக்கரமிடுவோர், திருப்பரிவட்டம் சாயம்தோய்ப்போர், திருமஞ்சனத்துக்குக் காவிரியிலிருந்து தீர்த்தம் கொணர்வோர், கோயிற் கணக்கு தணிக்கை செய்வோர், நல்ஓலை வாசிப்போர், தோட்டக்காரர், கொத்தர், தச்சர், கொல்லர், திருப்பணி, மாதப் பிறப்பு, கிரகணத்தில் பூஜை, நந்தவனம், விரிப்பு விருது செப்பனிடுதல், திருப்பரியட்டம் புதுப்பித்தல், முழுக்காட்டுச் செலவுகள், குருக்கள், பாடகர், ஸ்ரீகாரியம் முதலிய செலவினங்கள்.

**பாண்டியர் காலத்தில் கோயிலாட்சி**

முற்காலப் பாண்டிய மன்னர் பலர் புதிய கோயில்களை அவ்வக் காலங்களில் கட்டிவந்தார்கள். வேள்விக்குடிச் செப்பேட்டில் குறிக்கப்படும் நெடுஞ்சடையன் பராந்தகன் என்ற முதல் வரகுண பாண்டிய மன்னன் மகன், ஸ்ரீவல்லபன் என்பவன் சிவபெருமானுக்கு சாளக்கிராமத்தில் கோயில் எடுப்பித்து வரகுண ஈச்வரமுடையார் கோயில் என்று பெயரிட்டு வழங்கினான். அதற்கு தேவதான நிலங்களை இறையிலியாக வழங்கினான். இவன் காலத்தில் (கி.பி.774.) சாத்தன் கணபதி என்பவன்

சம்புவின் திருக்கோயிலையும், திருக்குளத்தையும், திருத்துவித்தான், அவனது மனைவியாகிய நக்கன் கொற்றியார் துர்க்கைக்கும் சேட்டைக்கும் கோயில் எடுப்பித்தாள். முதல் வரகுண பாண்டியனுடைய உத்தர மந்திரி மதுரகவி என்னும் மாறன் காரி மதுரைக்கு அருகில் ஆனைமலையில் நரசிங்கப் பெருமாள் குடவரைக் கோயிலை எடுப்பித்தான்.கோயிலைக் கட்டிமுடிக்குமுன் அவர் இறந்ததால், அவனுடைய தம்பி மாறன் எயினன் கோயிலைக் கட்டி முடித்தான் (கி.பி.770 நவ,4) முதல் வரகுண பாண்டியன் பரம வைணவனாகக் குறிப்பிடப்படுகிறான். இவன் குரு சரிதை கொண்டாடியதாகச் செப்பேடுகள் குறிப்பிடுகின்றன. பெரியாழ்வாரைச் சிறப்பித்ததையே குருசரிதை கொண்டாடியதாகக் கருதப்படுகிறது. இவனுக்கு "சீவரன்" என்னும் விருதுப் பெயரும் உண்டு. தென்பாண்டி நாட்டிலுள்ள வரகுணன் தனது அதிகாரியான அண்டநாட்டு வேளான் என்பவரிடம் நிதி அளித்துக் கோயில்களில் நிசதம் விளக்கு எரிக்க நிவந்தங்கள் ஏற்படுத்தினான். திரு நெய்த்தானத்துச் சிவன் கோயிலில் வரகுணமகாராஜன் என்ற பெயரிடப்பட்ட திரு நுந்தா விளக்கு எரிக்க கோன் பராந்தகனார் காசுகள் கொடுத்தார். இவர் வரகுணனுடைய தம்பியாவார்.

இரண்டாம் வரகுணன் பரமசிவபக்தன் கி.பி. (863-911) இவனுக்கு வாரிசு இல்லை. இவன் தன் அரசியலைத் திருவிடைமருதூர்க் கோயில் இறைவனுக்கு அர்ப்பணித்து சிவதர்மத்தில் மூழ்கினான்.

வீரபாண்டியன் கி.பி. (860 -863) சோழாந்தக சதுர்வேதி மங்கலத்தில் வீரகேரளவிண்ணகர் என்ற விஷ்ணு கோயிலைக் கட்டினான். அவனுடைய அண்ணன் சுந்தரன் இளமையில் இறந்தான். அவனது பூத உடல்மீது வீரபாண்டியன் ஒரு பள்ளிப்படைக் கோயிலைக் கட்டினான். கோயிலின் பெயர் பள்ளிப்படை சுந்தர பாண்டிய ஈச்சுவரம் என்றும் கோயிலின் நிர்வாகம் மகாவிரதிகளின் மடத்தால் நிர்வகிப்பட்டது என்றும் கல்வெட்டுக்களால் அறியப்படுகிறது. இன்று பள்ளிமடை என்று அவ்வூர் வழங்குகிறது, இறைவன் காலநாதசுவாமி என்று அழைக்கப்படுகிறார்.

சோழாந்தக சதுர்வேதி மங்கலத்தின் ஒரு பகுதியில் கி.பி.1102ல் ஸ்ரீவல்லபன் திருச்சக்கரத்தாழ்வார் கோயிலைக் கட்டினான். குருவித்துறையில் சித்திரரத வல்லபப் பெருமாள் கோயிலாக அது விளங்குகிறது. இக் கோயில் கட்டுவதற்காக 5 வேலி நிலம் அளிக்கப்பட்டது. இதில் ஸ்ரீ கோயிலும் திருமுற்றமும் திரு மடை வளாகமும் அடங்கும். தென்கரையில் சிவபெருமானுக்கு ஸ்ரீவல்லபன் கோயில் ஒன்று கட்டினான். கி.பி. (1103) அது ஸ்ரீமூல ஸ்தானமுடையார் கோயில் என்று பெயரிடப்பட்டது. இங்கு கல்லினால் ஆன நடராஜர் சிலையை மன்னன் நிறுவினான். கூத்தாடு தேவரையும் நம்பிராட்டியாரையும் எழுந்தருளுவித்ததாகக் கல்வெட்டுக் கூறுகிறது. இவர்க்கு நித்திய பூசைக்காக நிவந்தங்கள் அளித்தான்.

**சோழபாண்டியர்**

பாண்டிய மண்டலத்தைச் சோழர்கள் ஆட்சி செய்த காலத்தில் திருக்கோயில்கள் பல கட்டினார்கள். திருப்பணிகள் பல செய்தனர். சைவத்தில் மிகுந்த பற்றுக் கொண்டவனும் சிவபாத சேகரன் என்ற பெயரைத் தரித்தவனுமான குலோத்துங்கன் மதுரையை வென்று அழித்தபோதும் அங்கயற் கண்ணி ஆலயத்தைப் பாதுகாத்துப் புதுப்பித்துப் பொன்மயமாக்கினான். அங்கயற்கண்ணியும் சொக்கரும் வீதியுலா வரும்போது திருவீதியில் நின்று ஒரு சாதாரண மனிதனைப் போல் சேவித்தான்.

அம்பாசமுத்திரம் அருகே உள்ள மன்னார்கோவில் கோபால சுவாமி கோயில் முதலாம் இராஜேந்திர சோழன் காலத்தில் (கி.பி.1025) கட்டப்பட்டது. கல்வெட்டுக்களில் இக்கோயில் இராஜேந்திர சோழ விண்ணகரம் என்று அழைக்கப்படுகிறது. குலசேகரபாண்டியன் காலத்தில் (கி.பி.1200) இவ்வாலயத்திற்குள் குலசேகராழ்வாருக்குத் தனிக் கோயில் எடுக்கப்பட்டது. குலசேகர பாண்டியன் சைவத்திலும் பற்றுக் கொண்டவன். திருச்செந்தூருக்கு அருகில் உள்ள ஆற்றூரில் சிவன்கோயில் கட்டினான். அதில் உள்ள ஒரு செய்தி :

"ஸ்ரீகோச்சடைப் பன்மரான திருபுவனம் சக்கரவர்த்திகள் குலசேகரர் தேவர்க்கு யாண்டு 13 வதின் எதிர் மூவாமாண்டு குடநாட்டுப் பிரம்மதேயம் ஆற்றூர் சேந்தமங்கலமான அவனிபசேகர மங்கலத்து மகாசபையோமும், இவ்வூர் காரண்மை குடிகளோமும் உடையார் ஸ்ரீ சோமநாத தேவுர்க்கு திருமடை விளாகமாக பிள்ளை பஞ்சவன் மகாராஜன் பிள்ளையார் திருமுறை செப்பேடு கண்ட பெருமாள் திருநாமத்தில் திருவிழா வீதி ஆகத்தர வேண்டுமென்று அ!ருளிச் செய்தபடி"

இதனால் மாடவீதி ஒன்றிற்குப் பெயரிடப்பட்டமுறை அறியப்படுகிறது. (கி.பி.1206) இதில் பிள்ளை பஞ்சவன் பிரமமாதிராஜன் என்பவர் பன்னிரு திருமுறைகளைச் செப்பேட்டில் எழுதியுள்ளார் என்றும் சொல்லப்படுகிறது. பன்னிரு திருமுறைகளிலும் 18, 905 பாடல்கள் உள்ளன.

முதற்குலோத்துங்க சோழன் காலத்தில் நரலோக வீரன் என்பவன் மூவர் முதலிகளின் ஏழு தேவாரங்களையும் செப்பேட்டில் எழுதித் தில்லையில் வைத்தான் என்று சிதம்பரம் கல்வெட்டுக் கூறுகிறது. மூவர் முதலிகளின் பாடல்கள் 8270 உள்ளன. இவை கி,பி.1100ல் செப்பேட்டில் எழுதித் தில்லையில் வைக்கப்பட்டன. பிற்காலத்தில் 106 ஆண்டுகள் கழித்து 1206ல் பன்னிரு திருமுறைகளும் பாண்டியனது அதிகாரியால் செப்பேட்டில் எழுதப்பட்டு ஆற்றூர்ச் சிவன் கோயிலில் வைக்கப்பட்டன.

சுந்தரபாண்டியனுடைய மந்திரி குருகுலத்தரையன் என்பவன் திருத்தங்கல் நின்றநாராயணப்பெருமாள் கோயிலின் விமானம், கர்ப்பக்கிரகம், அர்த்தமண்டபம், மகாமண்டபம் ஆகியவைகளைக் கற்றளியாகக் கட்டினான். ( கி.பி.1227ல் ) கோயிலில் சுந்தரபாண்டியன் சந்தியினையும் ஏற்பாடு செய்தான். குரு குலத்தரையன் திருத்தங்கலில் சிவன் கோயிலையும் கட்டினான். கௌரிக்கும் கற்றளி எடுப்பித்தான். திருநெல்வேலி நாடான் என்பவன் அக்கோயிலுக்கு நிபந்தங்கள் அளித்தான். பிக்ஷாடனமூர்த்தி இனிக் கபாலம் ஏந்திப் பிச்சை எடுக்கவேண்டாம், நிலங்கள் கொடுத்துள்ளேன் என்று எழுதிவைத்தான். சுந்தரபாண்டியன் காலத்தில் அருப்புக்கோட்டை சிவன்கோயிலில் அருந்தவம் செய்த நாச்சியார் கோயில் எடுக்கப்பட்டது. இக்கோயிலில் லிங்க புராண தேவர் (லிங்கோற்பவர்) எழுந்தருளுவிக்கப்பட்டார். இம்மன்னன் காலத்தில் ஸ்ரீவில்லிபுத்தூரில் இடர் கெடுத்த பெருமாள் விண்ணகர் ஆழ்வார் கோயிலும் பகவதி ஆழ்வார் கோயிலும் கட்டப்பட்டன. அரண்மனைப் பணிப்பெண்களும் ஆலயம் எழுப்பிய செய்தி கல்வெட்டுக்களால் அறியப்படுகிறது. ( கி.பி. 1239ல் ) பாண்டியன் அரண்மனை பணிப்பெண் ஒருத்தி விக்கிரம பாண்டிய ஈசுவரமுடையார் கோயிலில் சொக்கநாச்சியார் அம்மன் கோயிலை எடுப்பித்தாள். கால்வடம், பாடகம், திருச்சேரி, முகக் காரை, முலைத்தடம், ஹாரம், மாங்கல்யம், பத்தைக் காரை, தோடு, வாளி, பஞ்சசரம், ஏகவடம், தாளை வடம் முதலிய ஆபரணங்களை அளித்தாள்.

இரண்டாம் மாறவர்மன் சுந்தரனின் காலத்தில் திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலில் அழகிய திருச்சிற்றம்பலம் உடையார் என்னும் நடராஜப்பெருமான் எழுந்தருளுவிக்கப்பட்டார். இவ்வூரில் மேலைக்காணிக் கரையில் திருஞான சம்பந்தரின் கோயிலும் எடுக்கப்பட்டது. இக்கோயிலைப் பராமரிக்க நிலங்கள் விடப்பட்டன. திருநெல்வேலிக் கோயிலில் திருமுறை ஓதுவதற்கு நிவந்தங்கள் விடப்பட்டன. திருநெல்வேலியில் பாண்டிமாதேவி ஈச்வரன் கோயிலுக்கு நிலங்கள் கொடுத்ததாகச் சொல்லப்பட்டுள்ளது. பாண்டிமாதேவி என்பவள் நின்ற சீர் நெடுமாற நாயனாரான மாறவர்மன் அரிகேசரி பாண்டியனின் அரசியார் மங்கையர்க்கரசியாவார். 63 நாயன்மார்களில் இவள் ஒருத்தியாவாள்.

வீரசோமேச்வரன் என்ற போசள மன்னன் 13ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் பாண்டிமண்டலத்தை வென்று சூறையாடினான். (கி.பி. 1239 மார்ச் 14) போசளர் படையெடுப்பின்போது சில விஷமிகள் கோயிற் கதவுகளை உடைத்து பண்டாரத்திலிருந்த பணத்தைத் திருடிக் கொண்டார்கள் என்ற செய்தி திருப்புத்தூர்க் கல்வெட்டில் உள்ளது.

புதுக்கோட்டை வயலோகம் கல்வெட்டு (கி.பி. 1239) மற்றொரு செய்தியைத் தருகிறது.

".... இசைந்த ஊரோம் எங்களூர் உடையார் திரு. அகஸ்தீஸ்வரம் உடைய நாயனார்க்கு தண்டேஸ்வர விலைப் பிரமாணம் பண்ணிக்குடுத்த படியாவது, இந் நாட்டில் வல்லாள தேவன் இறை கொண்ட நாளில் கன்னடியர் எங்களைச் சிறைப்பிடித்ததில் சிறைமீள எங்களால் ஒரு செய்தியும் இல்லாமையால் நாங்கள் திருஆபரணங்களை அறவிட்டுக் குடுத்து சிறை மீட்கையில் பின்பு இம்முதல் எங்களால் இறுக்க ஒண்ணாமையால் இந்நாயனார் தேவதானமாக நிலங்கள் கொடுக்கப்பட்டன"

கி.பி. 1250ல் முடிசூடிய சுந்தரபாண்டியன் பலமுறை துலாபாரம் ஏறி திருவரங்கம் கோயிலுக்குப் பொன்வேய்ந்தான். ஸ்ரீ ரங்கநாதப் பெருமாளுக்கு விலை உயர்ந்த கற்களோடு கூடிய திருமுடியை அளித்தான். தங்கத்தினால் ஆன சேஷசயனப்படுக்கையும் செய்வித்தான். நரசிங்கப்பெருமாள் எழுந்தருளியிருக்கும் தங்க விமானத்தைக் கட்டினான். காடவ மன்னன் கோப் பெருஞ்சிங்கனைத் தோற்கடித்து அவனிடமிருந்து பெற்ற திறையைக் கொண்டு விஷ்வக்சேனர் விமானத்தைக் கட்டிப் பொன்வேய்ந்தான். திருவரங்கனுக்குப் பொன்னால் ஆன மகரதோரணம் செய்வித்தான். பெருமாளுக்கு முத்து, இரத்தின, மாணிக்க மாலைகளும் முத்துப்பந்தலும் அளித்தான். தோட்டங்கள் பல அளித்தான். தங்கத் தேரும் செய்து வைத்தான். பொன்னால் இயன்ற கருடனின் திருமேனியை எழுந்தருளுவித்தான். தங்கத் திருமஞ்சனத் தொட்டியும் செய்து வைத்தான். சித்திரையில் ஸ்ரீரங்கநாதனுக்குத் தேரோட்டத்திருவிழா கொண்டாடினான். தெப்ப உற்சவத்திற்காகத் தங்கத்தால் செய்த தட்டு ஒன்றை சமர்ப்பித்தான். பெருமாளுக்கு முத்தங்கியும் பொற்கேடயமும் அளித்தான். விமானங்களைப் பொன்வேய்ந்தான். அதனால் ஹேமாச்சாதன ராஜா என்று போற்றப்பட்டான். கோயில் பொன் வேய்ந்த பெருமாள் என்று போற்றப்பட்டான்.

சுந்தரபாண்டியன் சிதம்பரத்திலும் விமானத்தைப் பொன் வேய்ந்தான். தன் அண்ணன் விக்கிரம பாண்டியன் பெயரில் விக்கிரம பாண்டிய சதுர் வேதி மங்கலம் என்ற ஊரை உண்டாக்கி அங்கு விக்கிரம பாண்டிய ஈச்வரம் என்ற கோயிலைக் கட்டினான் அக்கோயிலில் தன் பெயரால் எல்லாம் தலையான பெருமாள் என்னும் சிறப்பு வழிபாடுகளுக்கு நிபந்தங்கள் அளித்தான். மதுரையில் விக்கிரம பாண்டியன் நினைவாக "விரதம் முடித்த பெருமாளான புவனேகவீரன்" என்ற நந்தவனத்தை எழுப்பித்தான். புக்குளியூரில் கி.பி. 1282 சுந்தரமூர்த்தி நாயனாருக்குக் கோயில் கட்டினான்.

மூன்றாம் குலோத்துங்கனின் இராஜகுருவான சோமேசுவரர் தில்லைக் கோயிலில் சரஸ்வதி பண்டாரம் என்னும் நூலகம் ஒன்றை

நிறுவியிருந்தார். அதனை கி.பி.1263ல் சுந்தர பாண்டியன் விரிவுபடுத்தினான். அதில் பொத்தகங்களைப் பார்க்கவும் எழுதவும் அவிழ்த்துக் கட்டவும் திவ்விய ஆகமத்தை வாசிக்கவும் புராணம் சோதிடம் படிக்கவும் எழுதவும் பணியாளர்கள் இருபது பேர்களை நியமித்தான். முன்பு எழுதிக்கிடக்கிற கிரந்தங்களுக்குப் புதிய படிகள் எடுக்கவும் புதிய கிரந்தங்கள் சேர்க்கவும் நிபந்தங்கள் அளித்தார். சோமேசுவரர் எழுதிய பொத்தகங்களையும் சித்தாந்தரத்னாகர நூலையும் ஆராய்வதற்குப் பணியாளர்களை நியமித்தான். செல்லரித்த சுவடிகளை மீண்டும் எழுதச்செய்தான் விக்கிரம சோழன் திருக்கைகோட்டியில் கிரந்தங்களிலும் தமிழிலுமுள்ள நூல்களை தேசாந்தரிகளுக்கும் வேண்டுவோர்க்கும் எழுதிக் கொடுக்கவும் ஒத்துப்பார்க்கவும் பண்டிதர்கள் நியமிக்கப்பட்டனர். அவர்களுக்கு நிலங்கள் வழங்கப்பட்டன.

விக்கிரம பாண்டியன் காலத்தில் (கி.பி.1254-59) மதுரைக்கு அருகில் பராந்தக சதுர்வேதி மங்கலத்துச் சபையார் இருப்பைக்குளம் வடமுற்றி ஆகிய இரு கிராமங்களை ஒன்று சேர்த்து சங்கத்தழகநல்லூர் என்று பெயரிட்டு திருமாலிருஞ்சோலை நின்றருளிய பரமஸ்வாமிக்குத் திருவிடையாட்டமாக அளித்தனர். காணியாட்சி உரிமையை மலைமண்டலத்து கழனிக்கரைக் கண்ணன் நாராயணன் என்பவனுக்கு கொடுத்தனர். பிறகு பல ஆண்டுகள் அவன் ஒழுங்காக நெல் அளக்காது தவறிவிட்டான். அவனை அழைத்துக் கண்டித்துக் கொடுபடாமல் இருந்த நெல்லை உடனடியாக அளந்து வாங்கினர் அரசு அதிகாரிகள்.

முதலாம் மாறவர்மன் குலசேகரன் (கி.பி. 1268-1318) பல ஆலயங்களை எடுப்பித்தான். திருவிளையாடல் புராணத்தை முதன்முதலில் தமிழில் எழுதிய பெரும்பற்றப் புலியூர் நம்பி என்பவருக்குப் பரிசுகள் வழங்கினான். நெல்லையப்பர் கோயிலில் திருச்சுற்று மாளிகை கட்டினான். ஸ்ரீவைகுண்டம் பெருமாள் கோயிலில் "சேரனை வென்றான்" என்ற நந்தவனத்தை உண்டாக்கினான். வைகுந்தவல்லி நாச்சியாரை எழுந்தருளுவித்தான். குலசேகரன் திருமண்டபத்தைக் கட்டினான். திருப்பரங்குன்றத்தில் கி,பி.1311ல் அம்மன் கோயிலைக் கட்டினான்.

இவன் காலத்தில், முனைவாலீச்வரமுடையார் கோயில் ஸ்ரீருத்திரர்கள் கோயிலில் இருந்த தேவரடியார்கள் ஒவ்வொருவருக்கும் தினமும் 2 நாழி நெல் கொடுக்க ஒப்புக் கொண்டனர். தேவரடியார்களுக்கு ஆண்வாரிசு இன்றிப் பெண் வாரிசுகள் இருந்தால் அவர்களுக்கும் நெல் கொடுக்கப்பட்டது. தேவரடியார்கள் பணிபுரியும் போது திருமணமாகி வெளியூர் சென்றாலும் நெல் வழங்கப்பட்டது. மேலும் பல சலுகைகள் தேவரடியார்களுக்கு அக்காலத்தில் வழங்கப்பட்டன.

மூன்றாம் சடையவர்மன் வீரபாண்டியன் (கி.பி.1297-1342) கலியுகராமன் என்று போற்றப்பட்டான். ஸ்ரீரங்கத்தில் கலியுகராம சதுர்வேதிமங்கலம் என்ற ஊரை உண்டாக்கினான். அதில் ஸ்ரீவைஷ்ணவர்களைக் குடியேற்றினான். நிலங்களை விற்பதானால்

அந்தணர்களுக்கே விற்கவேண்டும் என்றும் இல்லாவிடில் இராமானுஜ தரிசனத்தைப் பின்பற்றும் பாகவதர்களுக்கே விற்கவேண்டும் என்றும் ஆணையிட்டான். ஸ்ரீரங்கம் கோயிலின் ஆறாம் திருச்சுற்றுமதிலைக் கட்டினான். கலியுகராமன் மதில் என்று இதனைக் கோயிலொழுகு குறிப்பிடுகிறது. இவன் பரம விஷ்ணு பக்தன், சிவன் கோயிலுக்கும் கொடைகள் வழங்கினான். திருவெண்காட்டுக் கோயிலில் நாச்சியார் வேயனதோளி நாச்சியார்க்கு நிலங்கள் அளித்தான். அங்கேயே வீரபாண்டிய ஈசுவரமுடையார் கோயிலையும் கட்டினான். கி.பி.1311ல் மாலிக்காபூர் படையெடுப்பின் போது இவன் மதுரையை விட்டு ஓடினான்.

நான்காம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி.1303-1325) ஸ்ரீ வைகுண்டம் பெருமாள் கோயில் கோபுரமும் மதிலும் கட்டினான். சுந்தரபாண்டியன் சந்தியும் ஏற்படுத்தினான். ஐந்தாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் (1304- 1319) ஆட்சியில் (1318ல்) காஞ்சீபுரம் அருளாளப்பெருமாள் கோயில் கல்வெட்டிலிருந்து அரசு அதிகாரியான நெட்டூர் உடையான் இளையாழ்வான் காளிங்கராயன் தான் பிறந்த சித்திரை நட்சத்திரத்தில் சிறப்பு விழாக்கள் எடுத்துத் திருவாழியாழ்வாரை எழுந்தருளுவித்தான். என்றும் ஸ்ரீராமாநுஜரின் திருமேனியை எடுப்பித்தான் என்றும் இராமானுஜ தரிசனத்தையும் இராமானுஜ பாஷ்யத்தையும் பரப்புவதற்காக நிவந்தங்கள் அளித்தான் என்றும் சொல்லப்பட்டுள்ளன.

சுந்தரன் ஸ்ரீரங்கம் அருகே கோதண்டராம சதுர்வேதிமங்கலம் என்ற கிராமத்தை ஏற்படுத்தினான். வேதவிருத்திக்காகவும் புராண விருத்திக்காகவும் வைத்திய விருத்திக்காகவும் 700 மா நிலத்தைப் பட்டர்களுக்கு இறையிலியாக அளித்தான். கோதண்டராமப் பெருமாள் கோயிலையும், லக்ஷ்மி நாராயணப் பெருமாள் கோயிலையும் கட்டினான். அழகர்கோயிலில் கோதண்டராமன் திருமதிலை எடுத்தான். முதலாம் சடையவர்மன் பராக்கிரம பாண்டியன் (கி.பி.1315-1334) கல்வெட்டுகளில் வாளால் வழி திறந்த பெருமாள் என்று வருணிக்கப்படுகிறான். இவன் மதுரை மீனாட்சி அம்மன் கோயிலின் ஆடிவீதி மேற்கு கோபுரத்தை கி.பி.1323ல் கட்டினான்

பிற்காலப் பாண்டியர்கள் வலுவிழந்து மறைந்தனர். முசுலீம் படையெடுப்புகளில் கோயில்களும் தேவதானங்களும் சீர்குலைந்தன. பிற்காலத்தில் விஜயநகர சாம்ராஜ்யம் தோன்றியது. அவர்களின் அரசப் பிரதிநிதிகளாக நாயக்கமன்னர்கள் ஆண்டனர். அவர்கள் காலத்தில் மீண்டும் கோயில்கள் புத்துயிர்பெற்றன.

மாலிக்காபூர் கி.பி.1311ல் பாண்டிய நாட்டின் மீது படையெடுத்து மதுரையைச் சூறையாடினான். பல திருக்கோயில்களை இடித்துக் கொள்ளையிட்டான். இராமேசுவரத்தில் பள்ளிவாசல் ஒன்றையும் கட்டினான். 1323ல் மீண்டும் ஓர் படையெடுப்பு மதுரையை உலுக்கியது. அப்போது படையெடுத்தவன் முகமதுபின்துக்ளக்கு இதன் விளைவாக

மதுரையில் (கி.பி.1333-1378) சுல்தான் அரசு ஏற்பட்டது. விஜயநகரப் பேரரசு அப்போது உதித்தது. புக்கர் என்ற பேரரசரின் புதல்வரான வீர கம்பணர் தமிழகத்தில் படையுடன் வந்து மதுரை முசுலீம் ஆட்சியை ஒழிக்க முற்பட்டார். இவருடைய முயற்சிகளை மதுரா விஜயம் என்ற நூல் வருணிக்கிறது. இதனை எழுதியவர் கம்பணரின் மனைவியான கங்கா தேவியாகும். கி.பி.1371ல் முசுலீம் படையெடுப்பில் வெளியே எடுத்துச்செல்லப்பட்ட திருவரங்கர் திருமேனியை மீட்டுக் கொண்டுவந்து பிரதிட்டை செய்து வழிபட்டான் வீரகம்பணன். மதுரையில் மீனாட்சி திருக்கோயிலைத் திறந்து வழிபாடுகளைத் தொடங்கினான். தமிழகம் முழுவதும் விஜயநகரப் பேரரசின் கீழ் வந்தது.

கிருஷ்ணதேவராயர் காலத்தில் நாகமநாயக்கர் தட்சிணமகா மண்டலேசுவரராய் இருந்தார். இவருடைய மகனான விசுவநாத நாயக்கர் மதுரை நாயக்கர் ஆட்சிக்கு அடி கோலினார். இவர் ஆட்சித் திறமை மிக்கவர். (1529-1564) பாண்டி மண்டலத்தை 72 பாளையப்பட்டுக்களாகப் பிரித்து நிர்வாகத்தை நடத்தினார். பாழ்பட்டுக் கிடந்த மீனாட்சி சுந்தரேசுவரர் கோயிலைத் தம் கைப்பொருளைச் செலவிட்டுப் புதுப்பித்தார். அப்போது தளவாய் அரியநாதமுதலியார் ஆயிரக்கால் மண்டபத்தைக் கட்டினார்.

இவரை அடுத்து வந்த கிருஷ்ணப்பநாயக்கர் (கி.பி.1564-1572) திருநெல்வேலிக்கு அருகில் கிருஷ்ணாபுரம் என்ற ஊரைக்கட்டி அங்கு திருவேங்கடநாதர் கோயிலை எழுப்பி அதற்கு இறையிலியாகச் சிற்றூர்களை அளித்தார். கோயிலுக்குத் தேர் செய்து கொடுத்தார். கோயிலைச் சுற்றி அகன்ற வீதிகளை உண்டாக்கினார். சிவன் கோயில் ஒன்றையும் கட்டினார். தெப்பக்குளம் வெட்டினார். இக்கோயில் கலைகளுக்கு இருப்பிடமாகத் திகழ்கிறது.

மீனாட்சி, சொக்கர் கோயில்களில் வெள்ளியம்பலம். வடக்கு கோபுரம், திருமடைப்பள்ளி, மூர்த்தியம்மன் மண்டபம், இரண்டாம் பிரகாரத் திருச்சுற்று மண்டபம், கொடிக்கம்பத்திற்கு முன்னுள்ள வீரப்பர் மண்டபம் இவற்றைக் கட்டினார். மீனாட்சி ஸந்நிதியில் தூண்களுக்குப் பொன்தகடு பூட்டினார். மீனாட்சிக்கு பொற்கவசம் செய்து சாத்தினார். இவருடைய திருப்பணிகளை திருப்பணிமாலை கூறுகிறது.

வீரப்பநாயக்கர் (1572-95) தில்லைக்கோயிலின் மதிலைக் கட்டினார். இவர் செய்த கோயில்களைத் திருப்பணிமாலை வருணித்துள்ளது. இரண்டாம் கிருஷ்ணப்பநாயக்கரும் (கி.பி.1595-1601) கோயிற் பணிகளைச் செய்தார். இவருக்கு உதவியாக அரியநாதர் விளங்கினார். இவ்வரசர் அறுபத்துமூவர் மண்டபம், வன்னியடி முருகன் சந்நிதி கட்டினார். சொக்கருக்கு வெள்ளிச் சிங்காசனம் செய்து வைத்தார். அரியநாத முதலியாரின் மகன் காளத்திநாத முதலியார் பங்குனி மாதம் தேர்த்திருநாள் ஏற்படுத்தினார். கீழ்நிலைக் கோபுரம் ஒன்றும் கட்டினார்.

இவர்களுக்குப் பிறகு மதுரையைத் திறமையுடன் நீண்ட காலம் ஆண்டவர் திருமலை நாயக்கராவார். (1623-1659) இவர் 5 லட்சம் பொன் செலவழித்து மீனாட்சி கோயில் திருப்பணி செய்வதாக நேர்ந்து கொண்டார்.

அவர் காலத்தில் கோயில் ஆட்சி அபிஷேக பண்டாரத்திடமிருந்தது அதைத்தாமே ஏற்றுக்கொண்டார். நாட்டு வருவாயில் லட்சம் பொன்னுக்கு ஆயிரம் வீதம் இறை வழிபாட்டிற்கும் நாற்பதினாயிரம் பொன் விழாக்களுக்கும் எழுதிவைத்தார். கோயில் ஆட்சியைப் பெற்றுக்கொண்டதற்கு அபிஷேக பண்டாரத்துக்கு நிலங்களை வழங்கி அவர் பெயரால் ஒரு கோயில் கட்டிக் கொடுத்தார். அங்கயற்கண்ணிக்கு அளவற்ற ஆபரணங்களை வழங்கினார்.

# இயல் 24

# கோயிற்கலைகள்

**நாதசுரக்கலை**

மங்கள வாத்தியம் என்று போற்றப்படும் நாதசுரம் தமிழகத்தின் தனிப் பெரும் இசைக்கருவியாகும். சிலப்பதிகாரம் அரங்கேற்று காதையில் அடியார்க்கு நல்லார் உரையில் நாதசுரத்திற்கு வங்கியம் என்னும் பெயரால் இலக்கணம் கூறப்பட்டிருக்கிறது. இதற்கு முந்திய நூலாகிய அகத்தியச் சூத்திரங்களில் அதிதேவதைகளும் கூறப்பட்டிருக்கின்றன.

வங்கியம் என்னும் குழலைப் பற்றி அடியார்க்கு நல்லார் தரும் குறிப்புகளை ஆராய்ந்தால் அவை நாதசுரத்திற்குப் பொருந்துவதை உணரலாம். ஆம்பற்குழலைப் பற்றி விளக்கம்தரும்போது அதற்கு வெண்கலத்தால் அணைகள் செய்து இணைக்கப்பட்டு இருந்ததாகக் கூறுகிறார் அடியார்க்கு நல்லார். இது நாதசுரத்தின் ஒரு அம்சமான முக வீணையைக் குறிக்கிறது.

வங்கியம் செய்வதற்கு உகந்தவை மூங்கில்,சந்தனம், வெண்கலம், செங்காலி, கருங்காலி, என்ற ஐந்துமாம். அதன் தன்மையைக் கூறுமிடத்து மூங்கில் பொழுது செய்யும் என்றும் , வெண்கலம் வலிது என்றும் மரம் எப்போதும் குத்துநிற்கும் என்றும் கூறுகிறார் மேலும் இக்காலத்தில் கருங்காலி, செங்காலி, சந்தனம் இவற்றால் செய்து கொள்ளப்படும் என்றும் கருங்காலியை ஏற்பதே பெருவழக்கு என்றும் குறிப்பிடுவார்.

இன்றும் இவ்வங்கியத்தை ஊதுமிடத்து வளைவாய் சேர்ந்த துளையை முத்திரை என்றுநீக்கி முன்னிருக்கும் ஏழினையும் ஏழுவிரல் பற்றி வாசிக்கவேண்டும். என்றும், ஏழு விரல்களாவன இடக்கையில் பெருவிரலும் சிறு விரலும் நீக்கி மற்றைய மூன்று விரல்களும், வலக்கையில், பெருவிரல், ஒழிந்த நான்கு விரல்களும் என்றும் கூறுவது நாதசுரத்திற்கே மிகப் பொருந்தும்.

**நாதசுர இலக்கணம்**

அகத்தியர் இயற்றிய 6000 சூத்திரங்கள் அடங்கிய "மகாபரதம்" என்னும் நூலை 298 செய்யுட்களாகச் சுருக்கி அரபத்தநாவலர் இயற்றிய நூலின்கண் நாதசுர இலக்கணம்

சொல்லப்பட்டிருக்கிறது.

நாதசுரம் ரிக் வேதத்திலிருந்து தோன்றியது, நாதசுரக்கருவியின் ஒவ்வோர் அங்கங்களுக்கும் அதிதேவதைகள் உள்ளன. அடிவட்டம் சூரியன், மேற்சிறுதுளை சக்தி, உட்பெருந்துவாரம் விஷ்ணு என்பர்.

மேலும்,

| | | |
|---|---|---|
| கண்டை | - | பிரமம், |
| நாதம் | - | சிவன் |
| சிறுதுளை | - | முருகன் |
| சரம் | - | தேவர்கள் |
| கின்னா | - | இந்திரன் |
| வலக்கையின்<br>கனிட்ட விரல் | - | சரஸ்வதி |
| அநாமிகை | - | இந்திராணி |
| மத்திமை | - | வைரவி |
| தர்ச்சனி | - | வராஹி |
| இடது கையில்<br>அநாமிகை | - | காளி |
| மத்திமை | - | நாராயணி |
| தர்ச்சனி | - | துர்க்கை |

இவ்வாறு தேவதைகளைக் கொள்வது நந்திமதம் எனப்படும்.

நாதசுரத்தின்அளவு 32 விரல் நீளமும் நாலரை விரல் சுற்றளவும் ஆகும். மேல்துளை நெல்லளவாக இருத்தல் வேண்டும். நாதசுரம் செய்ய 42 வயதிற்கு மேற்பட்ட மரத்தையே தேர்ந்து எடுக்கவேண்டும்.

நாதசுரம் திருக்கோயில் வழிபாட்டில் சிறப்பான இடத்தைப் பெறுகிறது. இறைவன் திருவீதி வலம் வரும்போதும், காலை மாலை திருவோலக்கத்தில் கொலு வீற்றிருக்கும் போதும், அபிஷேக காலங்களிலும் ஷோடச உபசார காலத்திலும், நித்திய பலி நடைபெறும்போதும் சுற்றுக் கோயில் பூஜைகளிலும் பெருந்திருவிழாக்களிலும், நாதசுர இசை தெய்வ ஸாந்நித்யத்தை ஏற்படுத்துகிறது. நாதசுரம், தவில், ஒற்று, தாளம் இவற்றோடு கூடிய இசை பூஜாகாலங்களில் மகாமண்டபத்தில் நிகழ்த்தப்படுகிறது.

நாதசுரத்தின் தெய்வீகத் தன்மையினைப் பற்றிச் செவி வழியாக வரும் ஒரு செய்தி உள்ளது. முசுகுந்த சக்கரவர்த்தி தேவலோகம் சென்று இந்திரனைக் கண்டு இந்திரனால் பூஜிக்கப்பட்டுவந்த தியாகராஜமூர்த்தியைத் தான் வழிபடுவதற்காகக் கேட்டுப் பெற்றார். அப்போது தேவேந்திரன் தியாகராஜ மூர்த்தியின் பூஜாகாலத்தில் வாசிக்கப்பட்டு வந்த திமிரிநாதசுரம், பாரிநாதசுரம், முகவீணை முதலிய துளைக்கருவிகளையும் யாழ் முதலிய நரம்புக் கருவிகளையும் தவில் மத்தளம் பஞ்சமுக வாத்தியம் போன்ற தோற்கருவிகளையும் அவற்றை இசைத்துவந்த கந்தருவர்களையும் சேர்த்து முசுகுந்தச் சக்கரவர்த்திக்குத் தேவேந்திரன் வழங்கியதாகவும் பின்னர் முசுகுந்தச் சக்கரவர்த்தி இறைவனைத் திருவாரூரில் நிலைநிறுத்தியதாகவும் இன்றளவும் அந்த வாத்தியங்களை தேவலோக கந்தருவ மரபினரே வாசித்து வருவதாகவும் கூறப்படுகிறது. தியாகராஜப் பெருமான் எழுந்தருளும் போது வீதிகளில் இன்ன இடத்தில் இன்ன இராகம் வாசிக்கப் பெறவேண்டும். என்ற மரபும் நிலவுகிறது. இதில் பெரும்பாலும் தேவாரப் பண்களே இசைக்கப்படுகின்றன. பாரிநாயனம் என்பது அளவில் மிகப் பெரிய நாதசுரமாகும். ஆழ்வார் திருநகரி ஆதிநாதர் ஆலயத்தில் கல்நாதசுரம் வாசிக்கப்படுகிறது.

**இசைக்கலை**

சங்க காலத்தில் பரிபாடல் என்ற இசைப்பாக்கள் வழங்கி வந்தன. அக்கால இசைக்கலைஞர்கள் பாணர்கள் என்று போற்றப்பெற்றனர்.இவர்களில் இசைப்பாணர், யாழ்ப்பாணர், பெரும்பாணர், சிறுபாணர், என்ற பிரிவுகள் இருந்தன. இடைக்காலத்தில் திருநீலகண்ட யாழ்ப்பாணர், திருப்பாணாழ்வார், பாணபத்திரர், ஆகியோர் சிறந்த பாணர்களாகத் திகழ்ந்தனர், இவர்கள் மரபு கி.பி.10ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு அருகிவிட்டது.

பெட்டநாகனார், நன்நாகனார், கண்ணநாகனார் ஆகியோர் பரிபாடலுக்கு இசை வகுத்த நாககுலத்தவராவர்.

இசைநூல்கள் பலவற்றையும் உரையாசிரியர்கள் பெயர்குறித்துச் சொல்லியுள்ளனர். முதுநாரை, முதுகுருகு, என்பன பண்டைய தமிழிசை நூல்களாம். இவற்றோடு பெருநாரை, பெருங்குருகு, பஞ்சபாரதீயம் என்னும் நூல்களையும் குறிப்பிடுகின்றனர். பஞ்சபாரதீயம் நாரதமுனிவரால் இயற்றப்பட்டது. இசை நுணுக்கம் என்ற நூல் சிகண்டி என்னும் முனிவரால் இயற்றப்பட்டது. யாமளேந்திரர் என்பவரால் இந்திரகாளியம் இயற்றப்பட்டது. தமிழகத்து இசைக்கலை பற்றிக் குடுமியான் மலைக் கல்வெட்டு பல தகவல்களைத் தருகின்றது. அக்கல்வெட்டு மகேந்திரவர்மரால் பொறிக்கப்பட்டது. பல்லவர் காலத்தைச் சேர்ந்தது. மகேந்திரவர்ம பல்லவ மன்னனுக்கு சங்கீர்ணசாதி என்ற விருதுப் பெயர் வழங்கியது. திருக்கோயில்களில் அன்றாடம் வழிபாடுகளிலும் இசைக்குச் சிறப்பிடம் கொடுக்கப் பெற்றது. திருமால்

திருக்கோயில்களில் விண்ணப்பம் செய்வார்களும் அரையர்களும் திவ்வியப்பிரபந்தப் பாசுரங்களை இசையில் அமைத்துப்பாடினர். தேவரடியார் என்ற மகளிர் பணியாளர்கள் வழிபாட்டிற் கலந்துகொண்டு இசைபாடி மகிழ்வித்தனர். சிவாலயங்களில் உருத்திரகணிகையார் அவ்வாறே இசைப்பணி புரிந்துவந்தனர். இவர்களுக்கு அரசர்கள் நிலங்களை இறையிலியாக விட்டிருந்தனர். நித்திய பூசையில் நான்கு வேதங்கள் ஆகமங்கள் இதிகாச புராணங்கள் திவ்வியப் பிரபந்தங்கள் ஆகியவற்றிலிருந்து சில பகுதிகள் ஓதப் பெற்ற பிறகு இறுதியாக இசை பாடப்படுவதோடு வழிபாடு நிறைவுறுகிறது

**இசைக்கருவிகள்**

இசைப்பாட்டிற்குத் தேவையான பல்வகைக் கருவிகள் திருக்கோயில்களில் வாசிக்கப்பட்டன. அவை தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி என்பனவாகும். பேரிகை, படகம், இடக்கை, உடுக்கை, மத்தளம், சல்லிகை, கரடிகை, திமிழை குடமுழா, தோல், தக்கை, சணப்பறை, தமருகம், தகுணிச்சம், தண்ணுமை, எக்கம், தடாரி, முழவு, மத்தினி, என்பன வழக்கிலிருந்தன. இவை இசைப்பாட்டிற்குப் பக்க வாத்தியங்களாம். இவை அகமுழவு எனப்படும். தண்ணுமை, தக்கை தகுணிச்சம் என்பன மத்தியமமான கருவிகள். இவை அகப்புறமுழவு எனப்படும். புல்லாங்குழல், நாதசுரம் முகவீணை, மகுடி, தாரை, கொம்பு, எக்காளம், முதலியன துளைக்கருவிகளாம். இவை மரத்தினாலும் உலோகத்தினாலும் செய்யப்படுபவை, சங்கு வாத்தியம் இயற்கையாக உண்டாவதாகும்.

மரத்தினால் செய்யப்பட்டு நரம்புகள் அல்லது கம்பிகள் ஒட்டப்பட்டவை. நரம்புக்கருவிகளாகும். யாழ், வீணை, தம்புரா, கோட்டுவாத்தியம், பிடில் முதலியன நரம்புக் கருவிகளாம். கஞ்சக்கருவிகள், வெண்கலத்தால் செய்யப்படுவனவாகும். தாளம், குண்டுதாளம், பிரமதாளம், ஜால்ரா, முதலியன கஞ்சக்கருவிகளாகும்.

**இசைக்கற்றூண்கள்**

ஒரு பெரிய தூணைச் சுற்றி மெல்லிய கம்பங்கள் கொண்ட அமைப்பே இசைத்தூண்களாகும். இந்தக் கம்பங்களை ஒரு உலோகத் தடியால் தட்டினால் ஏழு இசைகளும் ஒலிக்கும். மதுரை மீனாட்சி திருக்கோயிலில் 22 மெல்லிய கம்பங்களையுடைய பத்து இசைத்தூண்கள் இருக்கின்றன. மதுரை கூடலழகர் திருக்கோயிலில் தாயார் சந்நிதி முன் மண்டபத்தில் இரண்டு இசைத்தூண்கள் நிற்கின்றன. நெல்லையப்பர் ,கோயிலிலும் சுசீந்திரம் கோவிலிலும் இசைத்தூண்கள் உள்ளன. புதுக்கோட்டையைச் சேர்ந்த அன்னவாசல் என்னும் ஊரில் ஒரு சமண உருவம் கருங்கல்லில் அமைக்கப்பட்டிருக்கிறது. இதைத் தட்டினால் இனிய ஓசை உண்டாகிறது.

இது போன்று மதுரை மாவட்டம் சோழவந்தான் அருகிலுள்ள குருவித்துறை சித்திர ரத வல்லபராசப் பெருமாள் திருக்கோயிலுள்ள யோகநரசிங்கமூர்த்தி திருமேனி இவ்வாறு தட்டினால் இனிய நாதத்தை எழுப்புகிறது.

**கொட்டாட்டுப் பாட்டு - இசை**

திருக்கோயில்களில் ஷோடச உபசாரத்தின்போது 14வது அங்கமாக இசையும் இசைக் கருவிகளும் பயன்படுகின்றன. நிருத்தம் 15 வது இடம் பெறுகிறது.

காலத்துக்கு ஏற்றதான பண்ணைக் கலைஞர்கள் பாடினர். அதிகாலையில் காந்தாரப் பண்ணையும் அடுத்து ஷட்ஜமத்தையும் நடுப்பகலில் நட்டராகத்தையும் பின்னர் கௌசிகத்தையும் மாலையில் இந்தளம் என்ற பண்ணையும் அர்த்தராத்திரியில் பஞ்சமம் என்ற பண்ணையும் பாடி, பரத சாத்திரப்படி ,நிருத்தம் செய்ய வேண்டும். இவ்வாறு ஆகமங்கள் கூறுகின்றன. குடுமியாமலை, திருமெய்யம் ஆகிய இடங்களில் கிடைத்த கல்வெட்டில் பண்களைப் பாடும்முறைகள் குறிக்கப்பட்டிருக்கின்றன. மகேந்திரவர்மன் என்ற பல்லவ மன்னன் கந்தர்வ சாஸ்திரம் ஒன்றை இயற்றினான் என்றும் சங்கீர்ணஜாதி என்ற புதிய இராகம் ஒன்றை இசைப்படுத்தினான். என்றும் அறிகிறோம். "வீணை நாரதன்" என்ற பட்டமும் பெற்றிருந்த செய்தியும் அறியப்படுகிறது.

**கூத்துக்கலை**

ஆண்களில் நாட்டிய ஆசான்கள் நட்டுவர் என்று அழைக்கப்பெற்றனர். அவர்கள் பயிற்றுவது நட்டுவம் என்ற கலையாகும். இவர்களிற் பலர் திருக்கோயில்களில் பணி புரிந்தனர். இவர்களுக்கு "நிருத்தமாராயர்" என்ற பட்டம் வழங்கப்பட்டது. தஞ்சைப் பெருங்கோயிலில் மட்டும் 400 நாட்டிய மகளிர் திருப்பணி புரிந்தனர். இவர்களுக்குப் பயிற்சி அளித்தவர் மும்முடிச் சோழ நிருத்தமாராயன் என்று அழைக்கப்பட்டனர். கூத்துக்கள் விழாக் காலத்தில் இறைவன் திருவுலா எழுந்தருளும்போது ஆடப்பெற்றன. நாடகங்களும் இடம் பெற்றன. தஞ்சையில் இராசராசேச்வரம் என்னும் நாடகம் நடத்தியதாகக் கல்வெட்டுச் செய்தி உள்ளது.

**சிற்பக்கலை**

கட்டடக்கலையை விடச் சிற்பக்கலை மிக நுண்ணியது. சிற்பக்கலைகள் கண்ணையும் கருத்தையும் கவர்ந்து மனத்திற்கு இனிமை கொடுக்கவல்லது. மனிதன், விலங்கு, பறவை, மரம், கடல், மலை, முதலிய இயற்கை உருவங்களையும்,தெய்வம், தேவர்,. அரக்கர், முதலிய கற்பனை உருவங்களையும் அழகுபட அமைப்பதே சிற்பக் கலை ஆகும்.

**சிற்பம் அமைக்கும் பொருட்கள்**

மெழுகு, அரக்கு, சுதை, மரம் , தந்தம் , கல், பஞ்சலோகம் முதலியவைகளினால் சிற்ப உருவங்கள் அமைக்கப்படுகின்றன.

*கல்லும் உலோகமும் செங்கல்லும் மரமும்*
*மண்ணும் சுதையும் தந்தமும் வண்ணமும்*
*கண்ட சருக்கரையும் மெழுகும், என்றிவை*
*பத்தே சிற்பத் தொழிற்குறுப் பாவன.*

என்பது திவாகர நிகண்டு.

*வழுவறு மரனும் மண்ணும் கல்லும்*
*எழுதிய பாவையும்*

என்றும்,

*மண்ணிலும் கல்லினும் மரத்திலும் சுவரிலும்*
*கண்ணிய தெய்வதம் காட்டுநர் வருக*

என்று மணிமேகலைக் காப்பியம் கூறுகிறது. காவிரிப்பூம்பட்டினத்திலே உள்ள மாளிகையில் சுதையினால் செய்யப்பட்ட உருவங்கள் அமைக்கப்பட்டிருந்ததை மக்கள் கண்டு களித்தனர் என்றும் மணிமேகலைக் காப்பியம் கூறுகிறது.

**இரண்டு வகைச் சிற்பம்**

முழு உருவங்கள் என்றும் புடைப்புச் சிற்பங்கள் என்றும் இரண்டு விதமாகச் சிற்ப உருவங்களைப் பாகுபடுத்தலாம். முழு உருவச் சிற்பம் என்பது பொருள்களின் முன்புறம் பின்புறம் முதலிய முழுமையும் விளங்க அமைக்கப்படுவது. புடைப்புச் சிற்பம் என்பது பொருள்களின் ஒருபுறம் மட்டும் விளங்க அமைக்கப்படுவது. இவ்வகைச் சிற்பங்கள் கோயில்களிலே அமைக்கப்படுகின்றன.

**கல்லும் உலோகமும்**

உத்தரமேரூர் சுந்தரவரதப் பெருமாள் கோயிலுள்ள தெய்வ உருவங்கள் மரத்தினால் செய்யப்பட்டவையாகும். திருவல்லிக்கேணி பார்த்தசாரதிப் பெருமாள், காஞ்சி பாண்டவதூதப் பெருமாள், மகாபலிபுரம் தலசயனப் பெருமாள், திருவிடந்தை வராகப்பெருமாள், முதலிய கோயில்களில் உள்ள உருவங்கள் சுதையினால் அமைக்கப்பட்டவையாகும். பல்லவ அரசர்களும், பிற்காலச் சோழ அரசர்களும் கருங்கல்லினாலும் பஞ்ச உலோகத்தினாலும் சிற்ப உருவங்களை அமைத்தனர். இம்முறை கி.பி. 7ஆம் நூற்றாண்டில் எழுந்தாகும்.

**சிற்பத்தில் மறை பொருள்**

பண்டைய நாளில் தமிழர் தெய்வ உருவ வழிபாட்டை மேற்கொள்ளவில்லை. தெய்வங்களின் அடையாளங்களையே வைத்து வணங்கினர். முருகனுடைய வேல், இந்திரனுடைய வச்சிராயுதம் அல்லது அவனது வெள்ளையானை, கற்பகத்தரு ஆகியவற்றின் உருவங்களை வைத்து வணங்கினர். பண்டைத் தமிழர்கள். இதைத்தான் வேற்கோட்டம், வச்சிரக்கோட்டம், அமரர் தருக் கோட்டம்., வெள்ளை யானைக் கோட்டம், என்று சிலப்பதிகாரம் கூறுகிறது. பிறகு தெய்வ உருவங்களை ஆகம சிற்ப நூல்களில் கூறியபடி படைத்து வணங்கினர்.

**பலவகை மூர்த்தங்கள்**

சைவர்கள் சிவபெருமானுடைய திருஉருவங்களை, இருந்த கோலமாகவும், நின்ற கோலமாகவும், ஆடுங்கோலமாகவும், கற்பித்தார்கள். வைணவர்கள் திருமால் திருஉருவங்களை, நின்ற கோலமாகவும் இருந்த கோலமாகவும் , கிடந்த கோலமாகவும் கற்பித்தார்கள். கடவுளின் சக்தியை அம்மன் தேவி என்னும் பெயரால் ஆற்றல்களைப் புலப்படுத்துவதற்கே இவ்வாறு பல்வேறு மூர்த்தங்களைக் கற்பித்தார்கள்.

**பௌத்த சமய சிற்பங்கள்**

கி.பி. 10ஆம் நூற்றாண்டில் பௌத்த சமயம் நன்றாக வளர்ச்சி பெற்றிருந்தது. பௌத்தத் தமிழர்கள் பண்டைநாளில் புத்தர் திருஉருவத்தை வைத்து வணங்காமல் பாதபீடிகை, தருமபீடிகை, ஆகிய புத்தருடைய அடையாளச் சின்னங்களை வைத்து வணங்கினர். புத்தருடைய திருஉருவம் கற்பிக்கப்பட்ட காலத்தில் புத்தருடைய உருவத்தை நின்ற கோலமாகவும், இருந்த கோலமாகவும், கிடந்த கோலமாகவும் சிற்பிகள் அமைத்தனர். சமண சமயத்தைச் சார்ந்த தமிழர்கள் அருகக் கடவுளின் உருவத்தையும் தீர்த்தங்கரரின் உருவத்தையும் வணங்கினார்கள்.

**நால்வகைப்பிரிவு**

உலோகத்தினாலும் கல்லினாலும் அமைக்கப்பட்ட சிற்ப உருவங்களை நான்கு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவையாவன. 1) தெய்வவுருவம், 2) இயற்கை உருவம் 3) கற்பனை உருவம், 4) பிரதிமை உருவம், இந்நான்கு வகையான சிற்பங்களையும் நமது நாட்டுக் கோயில்களில் காணலாம்.

**பிரதிமைச் சிற்பங்கள்**

தனிப்பட்ட ஆட்களின் உருவ அமைப்பை உள்ளது உள்ளவாறு அமைப்பது பிரதிமைச் சிற்பங்கள் ஆகும். மேல் நாட்டு முறைப்படி நமது நாட்டில் இம்முறை வளர்ச்சி பெறவில்லை. பிரதிமை உருவங்களில் பல்லவ

அரசர் உருவங்கள் பழமையானவை, அவை மாமல்லபுரத்தில் காணப்படுகின்றன. பஞ்சலோகத்தினால் பிரதிமை உருவங்களைச் செய்யும் வழக்கம் பிற்காலச் சோழர் காலத்தில் ஏற்பட்டது. தஞ்சைப் பெரிய கோயிலில் பஞ்ச லோகத்தினால் செய்யப்பெற்ற பிரதிமைகளைக் காணலாம். விசயநகரத்து அரசர் கிருஷ்ணதேவராயரின் செப்புப் பிரதிமை உருவம் திருப்பதிக் கோயிலில் உள்ளது. இவருடைய கற்சிலைப் பிரதிமை உருவம் சிதம்பரம் கோயிலில் இருக்கிறது. தென்னாட்டுப் பிரதிமை உருவங்களைப் பற்றி ஆங்கிலத்தில் நூல்கள் உள்ளன. தமிழில் அவ்வாறு நூல்கள் ஏதும் எழுதப்படவில்லை.

## ஓவியக்கலை

### ஓவியக்கலையின் பழமை

ஓவியத்திற்குச் சித்திரம் என்றும் பெயர் உண்டு. நேர்கோடு, வளைந்த கோடு, கோணக்கோடு, முதலிய கோடுகளினாலும், சிவப்பு, கறுப்பு, மஞ்சள் , நீலம் முதலிய நிறங்களினாலும் ஓவியங்கள் புனையப்படுகின்றன. சங்க காலத்திலே இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே ஓவியக்கலை தமிழகத்தில் வளர்ச்சி பெற்றிருந்தது. தமிழக ஓவியங்கள் பெரும்பான்மை சுவர் ஓவியங்களே. சிறுபான்மை மரப்பலகைகளிலும் எழுதப்பட்டன. படம் அல்லது படாம் என்பது சித்திரம் எழுதப்பட்ட துணிச்சீலை என்னும் பொருள் உடையது. காவிரிப் பூம்பட்டினத்தில் இருந்த உவவனம், ஓவியன் ஒருவன் துணிச்சீலையில் அழகாக எழுதிய சித்திரப் படம் போல் இருந்தது. என்று மணிமேகலைக் காவியத்தில் சீத்தலைச்சாத்தனார் குறிப்பிடுகிறார்.

### சுவர் ஓவியம்.

பண்டைக்காலத்தில் சுவர் ஓவியங்கள் தாம் பெரிதும் பயின்று வந்தன. அரசருடைய அரண்மனை, பிரபுக்கள் மாளிகை, கோயில் மண்டபம், முதலிய கட்டடங்களின் சுவர்களில் ஓவியங்களை அழகுபட எழுதினார்கள். சித்திரமாடம் என்ற ஓர் அமைப்பு ஒவ்வொரு அரசனுடைய அரண்மனையிலும் இருந்தது. பாண்டியனின் சித்திரமாடத்தை மாங்குடி மருதனார் என்னும் புலவர்,

*"வித்தகர் இயற்றிய விளங்கிய கைவினைச்*
*சித்திரச் செய்கைப் படாம்போர்த் ததுவே*
*யொப்பத் தோன்றிய உவவனம்"*
*"கயம் கண்ட வயங்குடை நகரத்துச்*
*செம்பியன் றன்ன செஞ்சுவர் புனைந்து"*

என்று கூறுகின்றார். நக்கீரர் பாடிய நெடுநல்வாடையிலும், இது பற்றிய செய்தி கூறப்படுகிறது.

*வெள்ளியன்ன விளங்கு சுதையுரீஇ*
*மணிகண் டன்ன மாத்திரட் டிண்காழ்ச்*
*செம்பியன் றன்ன செய்வுறு நெடுஞ்சுவர்*

என்று நக்கீரர் சித்திர மாடத்தை வருணிக்கிறார்.

**பரங்குன்றத்துச் சுவர் ஓவியம்**

பரங்குன்றில் முருகப் பெருமான் கோயிலைச் சார்ந்த ஒரு சித்திர மாடம் இருந்தது. என்று குன்றம்பூதனார் கூறுகிறார்.

*நின் குன்றத்து*
*எழு தெழில் அம்பலக் காமவேள் அம்பின்*
*தொழில் வீற்றிருந்த நகர்*

இச் சித்திர மாடத்தில் எழுதப் பெற்ற சில ஓவியங்களை நப்பண்ணனார் சற்று விளக்கிக் கூறுகிறார் :

*இரதி காமன் இவள் இவன் எனாஅ*
*விரதியர் வினா வினாவிறுப் போரும்*
*இந்திரன் பூசை இவளகலிகை இவன்*
*சென்ற கவுதமன் சினனுறக் கல்லுரு*
*ஒன்றிய படியிதென் றுரைசெய் வோரும்*
*இன்ன பலபல வெழுத்து நிலை மண்டபம்*

**பல்லவர், சோழர் கால ஓவியங்கள்**

குகைக் கோயில் சித்திரங்களும் ஓவியங்களே, குகையின் பாறைச் சுவரின் மேல் மெல்லியதாகச் சுதை பூசி அதன் மேல் ஓவியங்கள் வரையப்பட்டன. காஞ்சி கயிலாசநாதர் கோயில், பனைமலைக் கோயில், தஞ்சைப் பெரியகோயில், ஆகியவற்றில் பல்லவர், சோழர் கால ஓவியங்கள் காணப்படுகின்றன. சித்தன்னவாசல் குகைக் கோயில், திருமலைப்புரத்துக் குகைக்கோயில் ஆகியவற்றில் பல்லவர் பாண்டியர் காலத்து ஓவியங்கள் காணப்படுகின்றன. காஞ்சிபுரம் நூற்றுக்கால் மண்டபத்தில் ஓவியங்கள் எழுதப்பட்டிருந்தன. அவை பின்னர் நன்றாகப் பூசப்பட்டுச் சித்திரங்கள் யாவும் மறைக்கப்பட்டன.

**சுவரை வைத்தல்லவோ சித்திரம் எழுதவேண்டும்.**

பட்டினத்துப் பிள்ளையார் தாம் உலகக் காட்சியை மறந்து கடவுட் காட்சியை அடைந்ததைச் சுவரில் எழுதப்பட்ட ஓவியத்திற்கு உவமை கூறுகிறார். சுவரில் எழுதப்பட்ட சித்திரங்களைக் காண்பவன் அந்த ஓவியங்கள் காட்டும் காட்சிகளைக் கண்டு மனம் மகிழ்ந்து அவற்றில் ஈடுபடுகிறான். அவன் சற்று அருகில் வந்து அந்த ஓவியங்களை கையினால் தடவிப் பார்க்கும் போது, அவை மறைந்து

சுவராகத் தோன்றுவதைக் காண்கின்றான். சுவர்ச் சித்திரங்கள் பெரிதும் பயிலப்பட்டிருந்தபடியினால்தான் "சுவரை வைத்தல்லவோ சித்திரம் எழுத வேண்டும்" என்னும் பழமொழி வழங்குவதாயிற்று. "அச்சிலேற் பண்டியுமில்லை சுவரிலேற் சித்திரமில்லதே போன்று" என்று அருங்கலச் செப்பு என்னும் நூல் கூறுகிறது.

**கண்ணுள் வினைஞர்**

*எண்வகைச் செய்தியும் உவமம் காட்டி*
*நுண்ணிதி னுணர்ந்த நுழைந்த நோக்கிற்*
*கண்ணுள் வினைஞர்.*

என்று மாங்குடி மருதனார் குறிப்பிடுகின்றார். சித்திரகாரர்களே கண்ணுள் வினைஞர் என்று கூறப்படுகின்றனர்.

**சித்திரகாரப் புலி**

மகேந்திரவர்ம பல்லவனின் சிறப்புப் பெயர்களில் ஒன்று "சித்திரகாரப் புலி" என்பது. இதனால் இவன் சித்திரக் கலையில் வல்லவன் என்று அறியப்படுகிறான். இவன் ஓவிய நூல் ஒன்றிற்கு உரையும் எழுதியிருக்கிறான்.

**ஓவியநூல்**

அடியார்க்கு நல்லார் காலத்திலும் ஓவியநூல் இருந்தது. மாதவி என்னும் கணிகையின் மகள் பல கலைகளைக் கற்றவள் என்றும், ஓவியக் கலையையும் பயின்றவள் என்றும் மணிமேகலை கூறுகிறது :-

*ஓவியச் செந்நூல் உரைநூற் கிடக்கையும்*
*கற்றுத் துறைபோகிய பொற்றோடி நங்கை*

**ஓவியம் பற்றிய பெயர்கள்**

ஓவியத்தை வட்டிகைச் செய்தி என்பர். "வட்டிகைச் செய்தியினை வரைந்த பாவையின்" என்பது மணிமேகலை. வண்ணம் தீட்டாமல் வரைந்த ஓவியத்திற்குப் புனையா ஓவியம் என்று பெயர் கூறப்படுகிறது.

*மனையகம் புகுந்து மணிமே கலைதான்*
*புனையா ஓவியம் போல நிற்றலும்*

என்றும்,

*புனையா ஓவியம் புறம் போந்தென்ன*

என்றும் மணிமேகலை கூறுகிறது. புனையா ஓவியம் கடுப்ப (147) என்று நெடுநல்வாடை கூறுகிறது. ஓவியத் தொழிலுக்கு "வட்டிகைச் செய்தி"

என்னும் பெயரும் உண்டு. வட்டிகை என்பது துகிலிகை. வட்டிகைப் பலகை என்பது ஓவியம் எழுதும் போது வண்ணங்களைக் குழைக்கும் பலகை. காவிரிப்பூம்பட்டினத்தில் எட்டி குமரன் வட்டிகைச் செய்தி போல் இருந்தான் என்று சீத்தலைச் சாத்தனார் கூறுகிறார்.

*தகரக் குழலாள் மன்னொடு மயங்கி*
*மகர யாழின் வான்கோடு தழீஇ*
*வட்டிகைச் செய்தியின் வரைந்த பாவையின்*
*எட்டி குமரன் இருந்தான்.*

பாலை பாடிய பெருங்கடுங்கோ சித்திரம் எழுதும் துகிலிகை, பாதிரிப் பூவைப் போல இருக்கும் என்று கூறுகிறார்.

**சில ஓவியச் செய்திகள்**

*எண்மெய்ப் பாட்டினுள் இரக்கம் மெய்ந்நிறீஇ*
*ஓவ்வினை ஓவியர் கண்ணியவிருத்தியுள்*
*தலையது*

என்று ஓவியத்தைப் பற்றிப் பெருங்கதை குறிப்பிடுகின்றது. மேலும்,

*ஒன்பது விருத்தி நற்பதம் நுனித்த*
*ஓவ்வினை யாளர் பாவனை நிறீஇ*
*வட்டிகை வாக்கின் வண்ணக் கைவினைக்*
*கட்டளைப் பாவை......*

என்று ஓவியக் கலைஞர் எட்டுவகை மெய்ப்பாடுகளையும் ஒன்பது வகையான விருத்திகளையும் தமது சித்திரங்களில் அமைத்து எழுதியதை இப்பகுதிகள் விளக்குகின்றன.

உதயண மன்னன் பள்ளியறையில் இருந்த போது அவ்வறையின் சுவர்களில் ஓவியக் கலைஞர் எழுதியிருந்த பூங்கொடி, மான், மறி முதலிய ஓவியங்களைக் கண்டு மகிழ்ந்தான் என்ற குறிப்புப் பெருங்கதையில் காணப்படுகிறது. திருத்தக்க தேவர் மங்கையரின் அழகான உருவ அமைப்பைக் கூறும்போது ஓவியக்கலைஞர் எழுதிய சித்திரம் போன்று அழகுடையவர் என்று கூறுகிறார்.

**தென்னிந்திய ஓவியம்**

பண்டைக்காலத்தில் தென்னிந்திய ஓவியங்கள் சிறப்புற்றிருந்தன. அஜந்தா மலைக்குகை ஓவியங்களும், காஞ்சி கைலாசநாதர் கோயில் ஓவியங்களும் திருமலைபுரம் மலையடிப்பட்டி ஓவியங்களும், தஞ்சைப் பெருவுடையார் கோயில் ஓவியங்களும், இலங்கை சிகிரியாமலைச் சுவர் ஓவியங்களும் தென்னிந்திய ஓவிய மரபின. தமிழ்நாட்டில் மிகப் பழைய ஓவியம் சித்தன்னவாசல் ஓவியமே.

**சித்தன்னவாசல் ஓவியம்**

முதலாம் மகேந்திர வர்மபல்லவனால் ஏற்படுத்தப்பட்டது. சித்தன்னவாசல் குகைக்கோயில் சுவர் ஓவியங்கள், குறிப்பிடத்தக்கவை மகேந்திரவர்மனும் அவன் அரசியும் ஆகியவர்களின் உருவச் சித்திரங்களும், இரண்டு நடன மாதர்களின் ஓவியங்களும், "காதிகாபூமி" என்னும் பெயருள்ள தாமரைகள் நிறைந்த அகழியின் ஓவியங்களும் ஆகும். தற்போது இவை அழிந்துபட்ட நிலையில் உள்ளன. 1919ல் டி.ஏ. கோபிநாதராயர் இவ் ஓவியங்களைக் கண்டுபிடித்து உலகுக்கு அறிவித்தார்.

**கயிலாசநாதர் ஓவியம்**

இரண்டாம் நரசிம்மவர்ம பல்லவன் காஞ்சி கயிலாசநாதர் கோயிலைக் கட்டினான். இவனே இக் கோயிலின் சுவர்களிலும் சுவர் ஓவியங்களை எழுதுவித்தான். நெடுங்காலம் இக்கோயிற் சுவர் ஓவியங்கள் மறைந்திருந்தன. 1931 இல் மூவோ தூப் ராய் இதனைக் கண்டு பிடித்தார். இக்கோயில் சுவர் ஓவியங்கள் சிதைந்தும் மங்கியும் கரிய கோடுகளையுடைய புனையா ஓவியங்களாகவும் காணப்படுகின்றன. அழகான ஓவியங்கள் உருத்தெரியாமல் சின்னா பின்னப்பட்டுக் காட்சியளித்தன. ஒரு இளைஞனுடைய முகத்தின் ஒருபாதி, நெற்றியின் ஒருபாதி, ஒரு கண், மூக்கின் ஒருபாதி வாயின் ஒருபாதி ஆகிய இவை மட்டும் தான் அவ் ஓவியத்தில் காணப்படுகின்றன. அது அழியாமல் முழு ஓவியமாக இருந்திருந்தால் மிக அழகாக இருந்திருக்கக்கூடும்.

**பனைமலை ஓவியம்**

இராச சிம்மபல்லவன் கட்டியது பனைமலைக் கோயில். இக்கோயிலிலும் அழகான சிதைந்து போன ஓவியம் ஒன்று உண்டு. இவ்வோவியத்தில் காணப்படுவது மகுடம் அணிந்த பெண்ணின் உருவம் அவள் முடிமேல் அழகான குடை இருக்கிறது. தூணின் மீது சாய்ந்து நிற்கின்றது இவ்வுருவம். இது பார்வதிதேவியின் உருவம் என்று கூறப்படுகின்றது. இது ஒரு ராணியின் உருவம் போலக் காணப்படுகின்றது. இவ் ஓவியத்தின் பிரதியொன்று சென்னைப் பொருட்காட்சி சாலையில் ஓவியப் பகுதியில் உள்ளது.

**வேறு சில ஓவியங்கள்**

திருமலைப்புரத்தில் உள்ள குகைக்கோயில்களிலும் பழைய ஓவியங்கள்காணப்படுகின்றன. இவற்றைக் கண்டு பிடித்தவரும் மூவோ தூப்ராய்தான். மத்தளம் வாசிப்பவன் உருவம். ஆண், பெண் உருவங்கள் இலைக்கொடி, பூங்கொடி வாத்து இவைகளில் ஓவியங்கள் சிதைந்து அழிந்தும் காணப்படுகின்றன. மலைப்பட்டிக் குகைக் கோயில்களிலும் பழைய காலத்து ஓவியங்கள் உள. இவையும் மழுங்கி மறைந்து விட்டன.

**தஞ்சைக் கோயில் ஓவியம்**

கி.பி. 11ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இராசராச சோழனால் அமைக்கப்பட்டது. தஞ்சைப் பெரிய கோயிலில், அவன் காலத்திலேயே சோழர் காலத்து ஓவியங்கள் உள்ளன. இவ் ஓவியங்களும் நெடுங்காலமாக மறைந்திருந்தன. இவ் ஓவியங்களின் மேல் கி.பி. 17ஆம் நூற்றாண்டில் நாயக்க மன்னர்கள் வேறு புதிய ஓவியத்தை எழுதி மறைத்து விட்டார்கள் மறைக்கப்பட்டிருந்த சோழர் காலத்துக் சித்திரங்களைக் கண்டுபிடித்தவர் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பேராசிரியராக இருந்த காலஞ்சென்ற எஸ். கே. கோவிந்தசாமி. இவ் ஓவியம் சுந்தரமூர்த்தி நாயனாருடைய வரலாற்றை விளக்குவதாக உள்ளது. அன்றியும் இராசராசச் சோழன் கருவூர்த்தேவர் முதலியோர் ஓவியங்களும் காணப்படுகின்றன.

**நாயக்கர் காலத்து ஓவியம்**

தஞ்சை, மதுரை ஆகிய இடங்களில் அரசாண்ட நாயக்க மன்னர்களும் சுவர் ஓவியங்களை அமைத்திருக்கிறார்கள். தஞ்சை நாயக்க அரசர்கள் தஞ்சைப் பெரிய கோயிலிலும், மதுரை நாயக்க அரசர்கள் மதுரை மீனாட்சி அம்மன் கோயிலிலும் ஓவியங்களை அமைத்தனர். பழைய கோயில்களில் இன்னும் சில ஓவியங்கள் மறைந்துள்ளன. அவை முற்காலத்து ஓவியங்களும் பிற்காலத்து ஓவியங்களுமாக இருக்கும். இவற்றைக் கண்டுபிடித்துப் பாதுகாக்க வேண்டும்.

# இயல் 25

## ஆலயங்களும் நிர்வாகமும்

ஆலயம் என்ற சொல்லில் சமய உணர்வு செறிவுற்றிருக்கிறது.. ஆகவே அதன் பொருளும் சமயம் சம்பந்தப்பட்டது. உயிர்கள் லயம் பெறும் இடம் ஆலயம். "ஊனுடம்பு ஆலயம்" என்பது திருமந்திரம். ஆகவே உயிரினங்கள் யாவுமே ஆலயங்களே. இதன் உட்கருத்து இறைவன் வேறு உயிரினங்கள் வேறு என்பதில்லை. இறைவனின் ஒளிக்கதிர்களே உயிர்கள் என வேதம் சொல்லும். ஆகவே இறைவனை உருவகப்படுத்தி உயிரினங்கள் இயங்குகின்றன. இவற்றை நடமாடும் கோயில் எனத் திருமந்திரம் கூறுகின்றது; மேலும் உயிர்கள் தங்களது மூலம் எங்கே உளது என ஆய்வு செய்வதையே சமய ஞானமாய் வலியுறுத்துகின்றது. ஆகவே இறைவனை அறிய மனிதன் கொண்ட சாதனங்கள் பலப்பல. ஆக்கிய நூல்களும் ஏராளம். அவற்றுள் நாம் காணும் ஆலயங்கள் பல நூற்றாண்டுகளாக இறைவனை அறியும் சாதனமாகக் கருதப்படுகின்றன. ஆலயம் பற்றிய தத்துவக் கருத்துகளுள் புகுந்து வெளியில் வர முடியாமல் திணறுவதை விட இன்றைய ஆலயங்களை இறை வழிபாட்டிற்கு நமது முன்னோர்கள் ஆக்கித் தந்தனர் என மட்டும் கொள்வோம்.

நமது தமிழகத்தில் சுமார் 40000 ஆலயங்கள் உள்ளன. இவற்றில் சிறு சிறு கிராம ஆலயங்கள்சுமார் 30000க்கு மேல் இருக்கும். இவை யாவுமே புராதனமானவைதான். பேரரசர்கள் குறுநில மன்னர்கள் சிறு சிறு பாளையக்காரர்கள் மற்றும் தனவந்தர்கள் ஆகியோரது பக்திச்சின்னங்களாக இந்த ஆலயங்கள் விளங்குகின்றன. ஆலயங்களைக் கொண்டு கால அளவும் குறிப்பிடலாம். ஒவ்வொரு காலத்திற்கும் ஒரு கலைத் தொகுப்பு உண்டு. பல்லவர் காலந்தொட்டு நாயக்கர்காலம் வரை எத்தனையோ விதவிதமான ஆலயங்கள் கட்டடக்கலை, சிற்பக்கலை, இசை, நாட்டியம் எனக் காலந்தோறும் ஒரு தொகுப்பு உண்டு. பெருங்கோயில், கரக்கோயில், .ஞாழற்கோயில், கொகுடிக்கோயில், ருக் வேதம் முழங்கும் இளங்கோயில், மணிக்கோயில், ஆலக்கோயில் எனப் பல விதங்கள் தேவாரத்தில் காணப்படுகின்றன. இனத்திற்குப்பல கோயில் வீதம் கட்டி மகிழ்ந்த மூவேந்தர்களும் உண்டு. சிவாலயமாயினும் சரி, வைணவ ஆலயமாயினும் சரி இவ்விதப் பிரிவினை பலப்பல தோன்றின. காட்டாக மாடக் கோயில்கள் என்ற தனிக் கோயில்கள் வரிசையில் அமைந்தவை, குன்றுகளிலும் காடுகள் மற்றும் கடற்கரையிலும் உள்ள வானளாவிய சிற்பக் கோயில்கள்.

இக்காலத்தில் கோயில் அமைப்பைக் கொண்டு இந்த ஆலயம் இன்ன பிரிவைச் சேர்ந்தது எனக் சொல்லவும் இயலவில்லை. ஆனால் ஆலயங்கள் நமக்குக் காட்டும் எண்ணற்ற கலை நுட்பத்தையும் வாழ்க்கைத் தத்துவத்தையும் தொகுத்துத் தரும் அமைப்புகள். தமிழ் வடமொழி நூல்களின் சிறப்பையும் அந்நாளைய கலைஞர்கள், மற்றும் தத்துவ மேதைகளையும் மனித இனம் மறக்க முடியாது.

*மாலற நேயம் மலிந்தவர் வேடமும்*

*ஆலயம் தானும் அரன் எனத் தொழுமே*

என்பது சைவ சிந்தாந்தத் தெளிவு. ஆகவே தான் ஆலயங்களை எடுக்கும் போது அங்கே வாழ்க்கைக்கலை அனைத்தையும் வடித்துக் காட்டினார்கள். அப்பர் சுவாமிகள் தேவாரத்தில் ஆலய வகை பற்றிய ஒரு இனிய பாடல் :-

*பெருக்காறு சடைக் கணிந்த பெருமான் சேரும்*

*பெருங் கோயில் எழுபதினோ டெட்டும் மற்றும்*

*கரக்கோயில் கருதரிய ஞாழற் கோயில்*

*கருப்பறியல் பொருப்பனைய கொகுடிக் கோயில்*

*இருக்கோதி மறையவர்கள் வழிபட் டேத்தும்*

*இளங் கோயில் மணிக் கோயில் ஆலக் கோயில்*

*திருக் கோயில் சிவனுறையும் கோயில் சூழ்ந்து*

*சென்றிறைஞ்சத் தீவினைகள் தீரும் அன்றே*

இவ்வளவு சிறப்பு வாய்ந்த ஆலயங்களைப் பராமரிப்பதில் அரசுகள் காட்டிய அக்கறை மற்றும் கடமை உணர்வு கலைக்கும் சமயத்திற்கும் செய்த சேவை ஆகும். தமிழகத்தில் ஆங்கிலேயர் கால ஆலயக் கண்காணிப்பு முறை நமது பாரம்பரியத்தை மதித்து வகுத்ததேயாகும். இங்கிலாந்தில் 1853-ல் "சேரிட்டபிள் டிரஸ்ட்ஸ் சட்டம்" என்ற சட்டம் அவர்களது அற நிறுவனங்களுக்காக ஏற்பட்டது. அதன்படி அற நிறுவனங்கள் யாவும் சேரிட்டி கமிஷனர்கள் என்ற ஆணையர்களின் ஆளுகைக்குள் கொண்டு வரப்பட்டன. அரசின் நேரடிக் கவனம், மேற்பார்வை, செயல்படுத்தும் கடமை ஆகிய துறைகளால் அறக் கட்டளைகள் பாதுகாக்கப்பட்டன. இதன் சிறப்பு அம்சம் என்னவென்றால், பொதுவாக அறக் கட்டளைகளைச் செயல்படுத்துவதில் அவற்றின் ஸ்தாபகர் எழுதிவைத்த சாசனப்படிதான் இதன் நிபந்தனைகளுக்கு உட்பட்டுச் செயல்படுத்த இயலும். நிபந்தனைகள் மீறப்படுமானால் நீதிமன்றம் அவற்றைத் தடை செய்யலாம். அறக் கட்டளையை விரிவு படுத்தவும் அறங்காவலர்களுக்கு அதிகாரம் இல்லை. ஆனால் ஆங்கிலேயரது இந்தச் சட்டம் அறக் கட்டளைகளை விரிவுபடுத்தவோ, அதன் பொது நன்மையைக் கருதி நிபந்தனைகளை மாற்றவோ, சேரிட்டி

கமிஷனர்களுக்கு அதிகாரம் வழங்கியது. மேலும் அறக் கட்டளை வருமானத்தை மட்டும் தான் செலவு செய்வதற்கு அறங்காவலர்களுக்கு அதிகாரம் உண்டு என்ற நிலையை மாற்றி அதன் மூலதனத்தையே தேவையான முறையில் பயன்படுத்தலாம். என்ற உத்தரவு வழங்க சேரிட்டி கமிஷனர்களுக்கு அதிகாரம் வழங்கியது. இந்தச் சட்டத்தை அப்படியே பின்பற்றித் தயார் செய்யப்பட்டதுதான் நமது 1951ஆம் வருடத்திய 19வது சட்டம். இந்து சமய அறநிலையங்களின் சட்டம் என இந்தச் சட்டம் 30.9.51 லிருந்து அமலுக்கு வந்தது. முந்திய 1927ஆம் வருடத்திய 2வது சட்டத்தில் அறநிலையங்கள் என்ற தொடர் கிடையாது. மேலும் அந்தச் சட்டத்தின்படி அமைந்த வாரியம் நீக்கப்பட்டு அதன் அதிகாரங்கள் யாவும் அரசின் துறைகளில் ஒன்றான இந்து சமய அறநிலையத்துறையின் ஆணையர் வசம் ஒப்புவிக்கப்பட்டது.

ஆனால் இந்தச் சட்டம் பல கோணங்களில் தாக்குதலுக்கு உள்ளானது. அரசின்நேரடிப் பார்வையில் ஆலயங்களையும் அற நிலையங்களையும் கொண்டு வரும்போது அவற்றுள் மடங்களும் மடங்களைச் சார்ந்த கோயில்கள், அற நிறுவனங்கள் மற்றும் மடாதிபதிகள் தங்களது சமய உரிமை பறிக்கப்படுவதாகவும் சமயச்சார்பற்ற அரசு இவ்விதக் கட்டுப்பாட்டை ஏற்படுத்துவது அரசியல் சாசனத்திற்கு விரோதம் என்றும் வழக்குகள் தொடர்ந்தனர். இவற்றின் முடிவு உச்சநீதி மன்றத்தில் மூலம் சட்டத்தின் பல பிரிவுகள் செல்லாது என்று அறிவிக்கப்பட்டது. மடாதிபதிகளின் சமயக் கொள்கைகளுக்கும் செயல் முறைகளுக்கும் பாதுகாப்பு வழங்கப்பட்டது. அவர்களது ஆலயங்களையும் அறக்கட்டளைகளையும் பழக்க வழக்கத்திற்கு உட்பட்டு அவர்களே பாதுகாப்பது எனவும் தணிக்கை போன்ற அரசின் கட்டுப்பாட்டை அவர்கள் கடைப்பிடிப்பதென்றும் தெளிவாகியது. பாத காணிக்கைகளை அவர்கள் ஏற்றுக் கணக்கு வைத்துச் செலவு செய்வதென்றும் நியதி ஏற்பட்டது. இவற்றில் பல விஷயங்கள் சிரூர் மடத்து வழக்கில் உச்ச நீதிமன்றத்தால் 1954ல் முடிவு செய்யப்பட்டன. மேலும் அரசு ஏற்கும் மேற்பார்வைக்கு ஆலய நிதிகளிலிருந்து வரி என்று பெறாமல் சகாயத்துகை என்றும் தணிக்கைக் கட்டணம் என்றும் பெறுவது எனச் சட்டத்தில் திருத்தம் செய்ய வேண்டியதாயிற்று.

இன்னும் 1951ஆம் வருஷத்திய சட்டம் திருத்தத்திற்கு உட்பட வேண்டிய காரணம் ஒன்று ஏற்பட்டது. 1953ல் ஆந்திர மாநிலச் சட்டம் ஏற்பட்டுவிட்டது. ஆகவே 1951ல் ஏற்பட்ட சட்டம் தமிழ்நாடு, ஆந்திரம் இரண்டுக்கும் ஏற்பட்டதாகையால் ஆந்திரம் விலகியதால் சட்டம் திருத்தத்திற்கு உள்ளாகியது. திருப்பதி-திருமலை தேவாலயங்கள் நமது கையை விட்டு விலகின. அவற்றைப் பற்றிய சட்டப் பகுதியும் நீக்கப்பட்டது. 1951ஆம் வருடத்திய சட்டத்தில் ஏற்பட்ட மற்ற திருத்தங்கள் எல்லாம் நிர்வாகச் சீரமைப்பிற்காக ஏற்பட்டவையே. ஆலயம் என்றால் என்ன என்பதும் ஆலயங்களை வகைப்படுத்துவதும், தனியான அறக்கட்டளைகளை வகைப்படுத்துவதும் அவற்றிற்கான

அறங்காவலர்களை பரம்பரை மற்றும் பரம்பரை இல்லாதவர்கள் என்று வகைப்படுத்துவதும், எல்லாவற்றையும் அரசு கண்காணிக்க ஆணையர் தலைமையில் ஒரு நிர்வாக இயந்திரமான நிர்வாகத் துறை அமைவதும் ஆனதுதான் 1959 ம் வருடத்திய 22 வது சட்டமான இந்து சமய அறக்கட்டளைகள் சட்டம் ஆகும். இச்சட்டம் தான் இப்போது அமலில் உள்ளது.

ஆலயங்களைச் சட்டத்திற்கு உட்பட்டவை என்றும் உட்படாதவை என்றும் இருவகையாகப் பிரிக்கலாம். சட்டத்திற்கு உட்படாத ஆலயங்கள் மீது அரசுக்கு எந்த ஆதிக்கமும் கிடையாது. சட்டத்திற்கு உட்பட்ட கோயில்கள் மீதுதான் அரசு சட்ட விதிகளைப் பிரயோகிக்க இயலும். ஆனால் தமிழ் நாட்டில் இருக்கும் அல்லது தோன்றும் கோயில்கள் யாவும் சட்டத்திற்கு உட்பட்ட கோயில்களாகவே முதலில் கருதப்படும். அதாவது இவை பொதுக் கோயில்கள் எனக் கருதப்படும். ஒரு கோயில் சட்டத்திற்கு உட்படாதது அதாவது தனியார் கோயில் என்று சொல்லுபவர்கள் அறநிலையத் துறை அதிகாரிகளுக்குச் சட்டப்படி மனுச்செய்து அப்படி ஒரு உத்திரவைப் பெற்றாக வேண்டும்.

அப்படிப் பெறாதவரை யாரும் ஒரு உரிமை கொண்டாடித் தன் இஷ்டம் போல் அதை நிர்வகிக்க முடியாது. இங்கு தான் சட்டப்படியான கோயில் என்றால் என்ன என்பதற்கு விளக்கவுரை வருகிறது. ஆலயம் என்பதற்குத் தத்துவரீதியான விளக்கம் எதுவாயிருந்தாலும் சட்டப்படியான விளக்கமே இங்கு வலியுறுத்தப்படும். நீதிமன்றங்களும் இதனையே ஏற்றுக்கொண்டு தீர்ப்பு வழங்கும்.

**விளக்கம் வருமாறு**

"இந்து சமூகத்தினர் அல்லது அதன் பிரிவினர்கள் உரிமையோடு சென்று சமய ரீதியான வழிபாடு செய்யும் இடம்" இதுவே ஆலயம் ஆகும். இங்கு ஆலயக் கட்டடம் சொல்லப்படவில்லை. சமயரீதியான வழிபாடு செய்யும் இடம் என்று தான் உள்ளது. தனியார் இடங்களில் வேறு யாரும் உரிமையோடு செல்ல இயலாது ஆகவே பொது இடங்களில் வழிபாடு நடைபெறுமானால் அது ஆலயம் என்று கருதப்படும். வழிபாடு என்றாலே இறைவழிபாட்டையே குறிக்கும். சமாதி போன்ற இடங்களில் நடைபெறும் வழிபாடு இறைவழிபாடு ஆகாது. அப்படிப்பட்ட இடம் கோயில் ஆகாது. ஆலயங்கள் சட்ட வரம்பிற்கு உட்பட்டவை உட்படாதவை என்றிருப்பது போல தமிழக மடங்களும் பிரிக்கப்படலாம். மடம் என்று சொல்லும்போது சந்நியாசிகள் தங்கும் இடம் என்று பொருள் கொள்ளலாகாது. மடத்திற்கு ஸ்தாபகர் ஒருவர் உண்டு. சமயக் கோட்பாடுகளில் ஏதேனும் ஒரு பகுதியைப் பரப்பும் பொருட்டு மடம் ஸ்தாபிக்கப்படுகிறது. ஆகவே ஒரு குரு பரம்பரை ஏற்படுகிறது. சமயக் கோட்பாடுகளைப் பெறும் சீடர் பரம்பரையும் அமைகிறது. இப்படி அமையும் ஸ்தாபனமே மடம் எனப்படும். மடத்தின் அபிமானிகள் மூலம் கிடைக்கும் சொத்துக்கள் மடத்தின் சொத்துக்கள்

ஆகும். இவற்றைப் பராமரிக்கும் பொறுப்பு மடத்தின் தலைவரான மடாதிபதியைச் சார்ந்தது. பக்தி, அன்பு, மேலீட்டால், மடாதிபதிகள் பெறும் பாதகாணிக்கைகள் தணிக்கைக்கு உட்பட்டவை. இருப்பினும் இதனை, அவர்கள் சமய மேம்பாட்டிற்காகத் தமது இஷ்டம் போல் செலவிடலாம். எஞ்சியிருப்பின் மடத்துடன் சேர்க்கப்படுகிறது, ஒரு மடம் ஏற்படும்போது சமயக் கோட்பாடு ஒன்றை உருவாக்கும் குருவே மடத்தின் ஸ்தாபகர் ஆவதால் அவரது கருத்தினைப் பரப்பும் பணியிலிருந்து விலகப் பின்வரும் சீடர் பரம்பரைக்கு உரிமையில்லை. புதிய கோட்பாடுகள் தோற்றுவிக்கப்படலாம். ஆனால் மூலம் சிதைவுறாமல் பாதுகாக்கப்படவேண்டும். தமிழகப் பாரம்பரியம் வேதாந்த மடங்களையும் சிந்தாந்த மடங்களையும் பெற்றுள்ளது. இவற்றின் மீது சட்டம் பிரயோகிக்கப்படுவதில் அரசுக்கு மிகுந்த தயக்கம் அமைவது இயல்பே ஆகும். சமயச்சார்பற்ற அரசு, சமயக் கோட்பாடுகளை மக்கள் மடங்கள் மூலம் பெறுவதில் எவ்வகையிலும் குறுக்கிட முடியாது. தடை செய்வது என்பது சட்ட விரோதம். அரசியல் சாசனத்திற்கு முரணானது. ஆனால் தமிழகச் சட்டம் ஒரு மடத்தின் கொள்கைக்கு விரோதமாக நடந்து கொள்ளும் மடாதிபதியை எச்சரிக்கவும் மீறினால் மடத்திலிருந்து அகற்றவும் வழி செய்கிறது. இவ்விதி அரசு சமயத்திற்குத் தரும் உத்தரவாதமாகக் கருதப்படுகிறது. இன்னும் பல நிர்வாகக் குறைபாடுகளுக்காகவும் மடாதிபதியின் மீது நடவடிக்கை எடுக்க அரசுக்கு அதிகாரம் இருக்கிறது.

ஆகவே தமிழகச் சட்டம், ஆலயம், மடம் ஆகிய இரண்டு சமய நிறுவனங்களுக்காக ஏற்பட்டதாகிறது. இவற்றைப் பாதுகாப்பது அரசின் கடமை என்பது முன்பே வலியுறுத்தப்பட்டுள்ளது. ஆலயங்களைச் சார்ந்தும் மடங்களைச் சார்ந்தும் ஏற்படும் அறக் கட்டளைகளும் சட்டத்தின் பிடியில் அமையும். அரசின் முக்கிய பொறுப்பு பொருட்பாதுகாப்பு. இரண்டாவது சமயப் பழக்க வழக்கமான வழிபாட்டை யாரும் சிதைவுறச் செய்திடாமல் தடுத்தல். இவற்றின் அடிப்படையில் ஏற்பட்ட விதிமுறைகளே சட்டத்தின் பல பிரிவுகளாக அமைந்துள்ளன. இச்சட்டத்தின்படி அமைந்ததே இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை ஆகும். இத்துறையின் தலைவர் மாநிலம் முழுவதற்கான ஆணையர் ஆவார். இவருக்குக் கீழ் மண்டலங்களுக்கு இணை ஆணையர்களும் மாவட்டம் தோறும் துணை மற்றும் உதவி ஆணையர்களும் உள்ளனர். இவர்களின் பணி ஆலய அறங்காவலர்கள் ஆலயங்களைச் சட்டத்திற்கு உட்பட்டு நிர்வகிக்கச் செய்வதேயாகும். அறங்காவலர்களுக்கு உதவியாக அரசு செயல் அலுவலர்களை நியமிக்கிறது. ஆகவே அறங்காவலர்களும் செயல் அலுவலர்களும் ஆலய நிர்வாகத்தின் அடிப்படைப் பணியாளர்கள். ஆலயங்களின் வருமானத்திற்கேற்ப அவை பிரிக்கப்பட்டு அவற்றிற்குரிய செயல் அலுவலர் நியமிக்கப்படுகிறார். இவ்வித வருமானத்தின் அடிப்படையிலேயே உதவி ஆணையர், துணை ஆணையர் மற்றும் ஆணையரின் நேரடிக் கண்காணிப்பு அமைக்கப்பட்டுள்ளது.

ஆலயங்களின் வரவு செலவுத் திட்டம் மற்றும் திட்டப்படியான செலவினங்கள் அந்த அந்தப் பிரிவிற்கான உதவி ஆணையர் துணை ஆணையர் மற்றும் ஆணையரால் அனுமதிக்கப்படுகிறது. ஆனால் மடங்கள் யாவும் ஆணையரின் நேரடிப்பார்வையில் இருப்பவையாகும். ஆகவே மடங்களில் சிறியவை, பெரியவை, என்றில்லாமல் எல்லா மடங்களின் வரவு செலவுத் திட்டமும் ஆணையராலேயே அனுமதிக்கப்படுகிறது.

ஆலயங்கள் மற்றும் அறக்கட்டளைகளின் அறங்காவலர்கள் அறநிலையைச் சட்டத்தின்படி நியமிக்கப்படுகின்றனர். முன்பு சொன்னபடி வருமானத்தின் அடிப்படையில் உதவி ஆணையரின் மேற்பார்வைக்கு உட்பட்ட ஆலயங்களுக்கு உதவி ஆணையரும் துணை ஆணையர் மேற்பார்வைக்கு உட்பட்டவைக்குத் துணை ஆணையரும் ஆணையரின் மேற்பார்வைக்குட் பட்டவைகளுக்கு ஆணையரும் நிய்மிக்கிறார்கள். தற்சமயம் ஒரு குறிப்பிட்ட வருமானத்திற்கு மேற்பட்ட ஆலயங்களுக்கு அறங்காவலர்களை நியமிக்கும் அதிகாரம் அரசின் ஆணையின் மூலம் அரசே நியமிக்கிறது. அறங்காவலர்களைத் தேர்வு செய்யும் பணிக்கு மாவட்டம்தோறும் ஒரு மண்டலக் குழுவையும் அரசு நியமித்துள்ளது. இக்குழுவின் பரிந்துரைப்படி நியமனம் செய்யப்படுகிறது. இவ்வித நியமன விதிகள் பரம்பரை அறங்காவலர் உள்ள ஆலயங்களுக்குப் பொருந்தாது.

இன்னொரு முக்கிய அம்சம் செயல் அலுவலர் நியமனம் பெறும் ஆலயங்கள் தமிழகத்தில் சுமார் 500 க்கு மேல் இல்லை. மற்ற ஆலயங்கள் அறங்காவலர்களாலேயே நிர்வகிக்கப்படுகின்றன. தமிழகத்தில் உள்ள சுமார் 40000 ஆலயங்களில் அரசின் கவனத்திற்கு வந்திருப்பவை சுமார் 10000 இருக்கும், சிறு சிறு கிராம ஆலயங்களை இன்னும் அந்தந்தக் கிராமத்தினரே கவனிக்கின்றனர். அல்லது அந்தந்தப் பூசாரிகளே கவனித்து வருவர். பழனியில் உள்ள அருள்மிகு பழநி ஆண்டவர் ஆலயம்தான் தமிழகத்தில் அதிக வருமானம் உள்ளது. பழநியைச் சுற்றியுள்ள சிறு சிறு ஆலயங்கள் இதன் பாதுகாப்பின் கீழ்க்கொண்டுவரப்பட்டுள்ளது. இவ்விதமே பெரிய ஆலயங்கள் சிறு சிறு ஆலயங்களைப் பாதுகாக்கும் பொறுப்பை ஏற்கின்றன.

ஆலயங்கள் மற்றும் அறக்கட்டளைகளின் வருமானம் புதிய சட்டத்தின் கீழ் பல கல்வி நிறுவனங்களை ஏற்றுள்ளது. சமுதாயப் பணிகளும் ஆங்காங்கே மேற்கொள்ளப்பட்டுள்ளன. கல்லூரிகள் மேல்நிலைப் பள்ளிகள், உயர்நிலைப்பள்ளிகள் போன்ற கல்வி நிலையங்கள் மக்களைக் கவர்கின்றன. மடங்கள் ஆற்றிவரும் தமிழ் இலக்கியப் பணியும் குறிப்பிடத்தக்கது. தமிழ்ப் பேராசிரியர்களிற் பலர் மடங்களின் சிறப்புப் புலவர்களாய் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளனர். மயிலம், தமிழ்க் கல்லூரி அத்தகைய பெருமைக்கு உரியது.

நிற்க நாட்டில் நிலச் சீர்திருத்தம் பற்றிப் பேசும் போதெல்லாம் சமய நிறுவனங்களின் நிலங்களைப் பயிர் செய்து வரும் விவசாயப்

பெருமைக்களை மனதில் வைத்தே திட்டங்கள் ஏற்பட இயலும். தமிழகத்தில் அறநிலைய நிலங்களுக்கு விவசாயச் சட்டங்களிலிருந்து விதிவிலக்கு அளிக்கப்படுமாயின் விவசாயச் சட்டங்களுக்கு அவசியமில்லையென அரசின் புள்ளிவிவரங்கள் கூறுகின்றன. ஆகவே இந்த முயற்சி அவ்வப்போது பேசப்பட்டுக் கைவிடப்படுகிறது. மன்னர்களும் நிலக்கிழார்களும் ஆலயங்களுக்கும் மடங்களுக்கும் தானமாகவும் வரியின்றியும் வழங்கிய நிலங்கள் இன்று சர்ச்சைக்கு உரிய நிலையில் அவற்றிற்குப் பயனற்றவையாகவே கருதப்படுகின்றன. அரசின் கவனம் இத்துறையில் இல்லாது போனால் அசையாச் சொத்துக்கள் அசையும் சொத்துக்களாய் மாறிவிடும் எனலாம்.

இவ்விதம் பலவகையிலும் கலை வளர்ச்சி தொழில்வளர்ச்சி மற்றும் சமுதாயப் பொருளாதார மேம்பாடு என்ற துறைகளில் சமய நிறுவனங்கள் பாதுகாக்கப்படவேண்டியவையாய் உள்ளன. தொல்பொருள் பாதுகாப்பு வேண்டும். கலைநுட்ப ஆய்வு வேண்டும். ஆலயங்களில் கையாளப்படாத கலை இல்லை. விவரிக்கப்படாத நுட்பம் இல்லை. விளக்கப்படாத வாழ்க்கைத் தத்துவம் இல்லை. மனிதன் வாழ்வோடு ஒட்டியதே சமய உணர்வும் சமய வளர்ச்சியும் ஆகும்.

## ஆங்கிலேயர் ஆட்சியில் ஆலயங்கள்

இந்தியா சமயங்கள் நிறைந்த நாடு. சமய தர்மங்களும் ஏராளம். பொதுவாகக் கீழைநாடுகள் சமயங்களும் சமயத் தத்துவங்களும் கொண்ட நாடுகள், மக்கள் சமயப் பற்று உடையவர்கள். சமயத்திற்கும் சமய தர்மத்திற்கும் தானங்கள் வழங்குவது புண்ணியச் செயல்கள் என மதிக்கப்படுகின்றன. வாழ்நாளில் தர்மம் செய்வது பிந்தின வாழ்விற்கு ஆதாரம் என மதிக்கப்படுகிறது. ஏழைகளாயினும் தர்மம் செய்வதில் அவரவர் சக்திக்கேற்றவாறு செய்வது எனும் கோட்பாடு கொள்கின்றனர்.

இந்திய நாட்டில் சிறு கிராமங்களிலும் கோயில்களிலும் கோயில் தர்மங்களும் மலிந்தேயுள்ளன. கோயில் இல்லா ஊரில் குடியிருக்கவேண்டாம் என்பதே இதன் அடிப்படை, ஆகவே சமயம் மற்றும் தர்ம நிறுவனங்கள் எங்கும் தோன்றுவதாயின. இவை குறித்த சட்டமும் விதிகளும் இந்துக்களைப் பொறுத்தவரை முன்னாளில் வரையறுக்கப்படவில்லை. ஆகவே சமயம் மற்றும் அறக்கட்டளைகள் குறித்து வழக்குகள் வரும்போது நீதிபதிகள் ஆங்கிலேயர் முறைப்படி நியாயம் சமநிலை மற்றும் நல்ல மனச்சாட்சி, என்ற முறையிலேயே தீர்ப்புகளை வழங்கினர்.

சமய அனுஷ்டானம் மற்றும் தர்மச் செயல்கள் ஆதியில் இருவகைப் பட்டவை. ஒன்று "இஷ்டதர்மம்", இது வேதத்தை அடிப்படையாகக் கொண்ட பலிகள் சமயச் சடங்குகள் மற்றும் இவற்றைச் சார்ந்த தானங்கள் ஆகும். மற்றொன்று "பூர்த்த தர்மம்". இது

வேதத்தைச் சார்ந்த பக்தி பூர்வமான தர்மம் ஆகும். ஆகவே வேதத்தைப் பாதுகாப்பதும். வேதம் கற்றோரை ஆதரிப்பதும் இவற்றைச் சார்ந்த தானங்கள் செய்வதும் சமயத்தின் புனிதத்தைக் காப்பதாகக் கருதப்பட்டது. மற்றும் பூர்த்த தர்மம் மூலம் எல்லாப் பொது மக்களுக்கும் நல்லன செய்தல் ஆன்ம திருப்தியாகவும் கருதப்பட்டது. தர்மசாலைகள் கட்டிக் கிணறுகள் வெட்டித் தண்ணீர் தர்மம் செய்தல், கிரஹணம், போன்ற விசேஷ காலங்களில் தானங்கள் செய்தல், ஆலயங்கள் அமைத்தல், துறவிகளுக்கு மடங்கள் அமைத்தல் என்று பலவித அறச் செயல்கள் பலவாகப் பெருகின. ஆகவே சமயத்திற்கும் மற்ற தர்மங்களுக்கும் அதிக வேறுபாடு இல்லாமலேயே இந்த நாட்டில் தர்ம ஸ்தாபனங்கள் பெருகின. அவற்றைப் பாதுகாக்கும் பொறுப்பும் ஏற்பட்டுவிட்டது.

வேதகால ஆரம்பத்தில் ஆலயங்கள் மடங்கள் என்று இருந்ததாய்த் தெரியவில்லை. இவை பின்பு ஏற்பட்டவையே. புத்தர் காலத்தில் பலவிதத் துறவிகள் மற்றும் தர்ம ஸ்தாபனங்கள் ஏற்பட்டதாய் வரலாறு கூறுகிறது. பின்பு ஆதி சங்கரர் காலத்து நான்குவேதாந்த மடங்கள் குறிப்பிடத்தக்கவை. ஆனால் இவை சங்கரரது காலமான எட்டாவது நூற்றாண்டின் வரலாறு. பின்பு வேதம் சார்ந்த மடங்கள் பலவாகப் பெருகின. இவை அத்வைத மடங்கள் ஆயின. பின்பு ஸ்ரீராமானுஜர் ஸ்ரீமத்வாச்சார்யர் ஏற்படுத்திய விஸிஷ்டாத்வைதம் மற்றும் துவைத மதக்கோட்பாடுகளைச் கொண்ட மடங்கள்ஏற்பட்டன. மேற்கண்ட மூவகை மடங்கள் இன்றும் நாட்டில் மதிக்கப்பட்டு வருகின்றன. சைவ மடங்களும் ஆதீனங்களும் தோன்றின.

ஆனால் தமிழகத்தில் கடைச் சங்க காலந்தொட்டு சைவ வைணவ மடங்களும் ஆலயங்களும் ஏற்பட்டுத் திராவிட வேதம் என்கிற திருமுறைகளும் திவ்வியப்பிரபந்தங்களும், தமிழ் இலக்கியத்தோடு பக்தி என்ற பேரொளியை இணைத்து நிற்கின்றன. சமய இலக்கியம் என்பது தமிழ் இலக்கியத்தில் ஒன்றியிருப்பதைக் காணலாம். அவை சமயஞானத்தைத் தரும் கரூவூலம் என்றால் மிகையாகாது.

வேத காலத்திலும் அல்லது புத்தர் கால ஆரம்பத்திலும் விக்கிரக வழிபாடுகளும் இருந்ததாகச் தெரியவில்லை. சுமார் நான்காம் நூற்றாண்டிலிருந்து புராதனமான இறைவழிபாடு ஏற்பட்டதாக அறியலாம். ஆறாவது நூற்றாண்டில் எண்ணற்ற ஆலயங்கள் பஞ்ச பூதத்திலும் உணரப்படும் இறைவழி பாட்டிற்கென ஏற்பட்டது. நாயன்மார்களும் ஆழ்வார்களும் சைவ வைணவ ஆலயங்களை மக்கள் போற்றிப் பேணுமாறு செய்தனர்.

ஆலயங்களின் பெருக்கம் அவற்றிற்கென ஏற்பட்ட நன்கொடைச் செல்வங்களும் அவ்வப்போதைய அரசுகளின் கவனத்தில் வந்ததோடு அரசுகளும் பெரும் செல்வம் வழங்கிச் சேவைகள் பல செய்தன. ஆனால் அதே நேரத்தில் இவ்விதச்சமய ஸ்தாபனங்களைக்

கண்காணிப்பது அரசின் கடமை என்றும் உரிமை என்றும் எல்லா அரசுகளும் ஏற்றுக் கொண்டிருந்தன. இதைப்பற்றி எழுத்து மூலமான அதிகார ஆவணம் இல்லையாயினும் இவ்வித உரிமை வழக்கமான சட்டம் எனக் கருதப்பட்டது. முந்தைய தீர்ப்புகள் இவற்றைத் தெரிவிக்கின்றன.

ஆலயங்களை இறைவனாக பாவிக்கும் இந்து தர்மமும் இறைவனை அறிவிக்கும் சாதனம் என்று கருதும் இஸ்லாமியர்களும் மக்களின் புராதனக் கலாச்சாரம் என உணர்ந்து கொண்ட ஆங்கிலேயர்களும் ஆலயம் மற்றும் அறக்கட்டளை நிறுவனங்களை மக்களுக்குப் பயனுள்ள வகையில் நிர்வகிக்கவும் இந்த நிறுவனங்களின் மூலதனங்கள் வீண் விரயம் ஆகாமல் தடுக்கவும் அவ்வப்போது பெரும் முயற்சிகள் எடுத்துள்ளனர். குறிப்பாக ஆங்கிலேயர்கள் இப்பணியை ஒரு உரிமை என்றும் கடமை என்றும் கருதி ஆரம்பத்தில் "வழிமுறை விதிகள்" என்று சட்டமும் ஏற்படுத்தினர். ஆங்கிலேயர்களின் நேரடி ஆதிக்கத்தில் இருந்த இந்தியப் பகுதிகளில் வங்கத்தில்தான் முதன்முதலில் ரெகுலேஷன் நிர் 10/1810 என்ற வழிமுறை விதிச் சட்டம் என்ற சட்டம் இயற்றினர். இதைத் தொடர்ந்து சென்னையில் ரெகுலேசன் நிர். 7 / 1817 என்ற வழிமுறை விதிச் சட்டமும் பம்பாயில் 1827ல் இவ்விதமே ஒரு ரெகுலேஷனும் ஏற்படுத்தினர். இஸ்லாமியரும் அவர்கள் ஆட்சிக் காலத்தில் இந்து ஆலயங்களையும் அறக் கட்டளைகளையும் பாதுகாக்கும் முறையில் பல ஆக்க வேலைகள் செய்தனர். சில இடங்களில் அவர்கள் நன்கொடைகளும் வழங்கினர், சில காலத்தில் அவர்களால் இந்து ஆலயங்களுக்கு ஏற்பட்ட அழிவுகளும் உண்டு. ஆனால் தர்மங்கள் காலத்தையும் கடந்து மேலோங்கியே நிற்கின்றன.

ஆங்கிலேயர்கள் மேற்சொன்னபடி இந்து ஆலயங்களையும் அறக்கட்டளைகளையும் பாதுகாப்பதைக் கடமையாய்க் கொண்டது போல் இஸ்லாமியரின் மசூதிகளையும் மற்றும் அவர்களது தர்ம ஸ்தாபனங்களையும் சிதைவுறாமல் காக்கவும் செய்தனர். இந்திய மக்கள் மனத்தில் ஆங்கிலேயர்கள் இந்தியப் பாரம்பரியத்தை மதிப்பவர்கள் என்ற எண்ணம் நிலைத்து நின்று விட்டது. நாம் நமது பாரம்பரியச் செவ்வங்களையும் கலைகளையும் மதிக்கிறோமோ இல்லையோ, ஆங்கிலேயர்கள் உண்மையாகவே மதித்தார்கள் என்றே சொல்லலாம். அவர்களது வியாபார நோக்கமும் அரசியல் ஆதிக்கமும் வலுப்பெற அவர்களது இந்தப் பண்பு துணை நின்றது.

ஆலயங்களையும் அறக்கட்டளைகளையும் நிர்வகித்த முறையும் குறிப்பிடத்தக்கது. முந்தைய அரசுகள் கைக்கொண்ட கொள்கைகளை மாற்றவே இல்லை. அதிகாரிகளும் அறக்கட்டளைகளின் மூல புருஷர்களின் ஸ்தானத்தில் இருந்து அவர்கள் விருப்பம் என்னவோ அதன்படி நிர்வகிக்க வேண்டுமென்பது ஆங்கிலேயர்களால் வலியுறுத்தப்பட்டது. இதனால் ஒரு கிறிஸ்துவ அரசு

இந்து ஆலயங்களையும் இஸ்லாமிய மசூதிகளையும் கண்காணித்தது என்ற கருத்தே நிலவி வந்தது. வங்கத்தில் 1810ல் வழிமுறை விதிச் சட்டம் ஏற்பட்டதிலிருந்து சுமார் 30 ஆண்டுகள் வரை இந்து ஆலயங்களை ஆங்கிலேயர்கள் நேரடியாகவே பராமரித்து வந்தனர். 1817 லிருந்து 1842 வரை இந்துக்கள் திருப்திக்கேற்றவாறே ஆலயங்கள் பாதுகாக்கப்பட்டன.

1839லிருந்து 1845 வரை கிறிஸ்துவ பாதிரியார்கள் ஒரு கிறிஸ்துவ அரசு இந்து ஆலயங்களை நிர்வகிப்பதோ மேற்பார்ப்பதோ சரியல்ல என ஆட்சேபணைகளை எழுப்பினர், அரசு இந்த நிர்வாகப் பொறுப்பை வாபஸ் பெற வேண்டுமென வற்புறுத்தினர். இந்த எதிர்ப்பு மேற்சொன்ன 1810, 1817 வருஷத்திய ரெகுலேஷன்களில் சொல்லிய கடமை என்ற கோட்பாட்டிற்கே விரோதமானது. என இந்தியாவில் இருந்த ஆங்கிலேய அதிகாரிகள் அரசுக்குத் தெரிவித்தனர். இதனால் 1845ல் இந்திய சட்டக் குழு உறுப்பினர் திரு.எல்லியட் சமர்ப்பித்த அறிக்கை முக்கியத்துவம் பெற்றது. இதன்படி ஆங்கிலேயர் "இயக்குனர் நீதிமன்றம்" ஒரு உத்தரவைப் பிறப்பித்தது. 10.8.1840ல் கவர்னர் ஜெனரல் சென்னை சர்க்காருக்கு எழுதிய கடிதத்தில் ஆலய நிர்வாகத்தில் அரசு தலையிடுவதை வாபஸ் பெறுகிறோம் என்றும் ஆங்காங்கே உள்ள சமய நம்பிக்கையும் தகுதியும் உள்ள பிரமுகர்களிடம் ஆலயங்களை ஒப்புவிப்பதே அரசின் கொள்கை என்றும் தவறுகள் ஏற்படும் சமயங்களில் நீதிமன்றங்கள் மூலம் நியாயம் பெற்றுக் கொள்ளவேண்டும் என்றும் விளக்கமாய் அறிவித்தார். இதைத் தொடர்ந்து 12.6.1841ல் சென்னைக் கவர்னரும் இவ்விதமே சென்னை ரெவின்யு போர்டிற்கு உத்திரவு பிறப்பித்து ஆலய நிர்வாகத்தை ஆங்காங்கே உள்ள உள்ளூர்வாசிகளிடம் ஒப்புவிக்கச் செய்தனர். ஆனால் ஒரு முக்கிய நிபந்தனை, ஆலயங்களின் நிலங்கள் யாவும் அரசின் நிர்வாகத்திலேயே இருந்து வரும் என அறிவித்தனர். இதன்படி இரண்டு முக்கிய விஷயங்கள் தீர்வு செய்யப்பட வேண்டியிருந்தது. 1. ஆலய நிலங்களில் இருந்து வந்த விவசாயிகளின் பாதுகாப்பு, 2. அரசு மேற்பார்வையில் இருந்த காலத்தில் கிடைத்த வருமானத்தை எவ்வாறு உள்ளூர் வாசிகளிடம் அதாவது புதிய நிர்வாகத்தினரிடம் ஒப்புவிப்பது. இந்த விஷயங்கள் இந்திய அரசின் சீரிய பரிசீலனைக்குப் பின்பு அறக்கட்டளை நிலங்கள், கிராமங்கள், யாவும் விவசாயிகளின் நன்மையைக் கருதியும் பருவ காலங்கள் தவறினால் ஆலயங்களும் அறக்கட்டளைகளும் விவசாயிகளுக்கு உதவ இயலாததென்றும் அதனால் இக் கட்டளைகளும் பாதிக்கப்படும். என்றும், ஆகவே அறக்கட்டளைகளின் நன்மையைக் கருதியும் அரசின் கைவசமே இருக்க வேண்டுமென முடிவு செய்தனர். அரசின் வசம் இருந்த வருமானத் தொகையை அறக்கட்டளைகளின் தேவைக்குப் போக எஞ்சி இருப்பின் பொது சமுதாய நன்மைக்குச் செலவிடுவதெனவும், அதாவது கிணறுகள், வெட்டித் தருதல், ரோடுகள் அமைத்தல் போன்ற தர்மங்களுக்குப்

பயன்படுத்துவதெனவும் முடிவு செய்தனர். இம்முடிவு அக்கால அரசின் கொள்கையைக் காட்டுகின்றது. புதிய அறங்காவலர்களிடம் நம்பிப் பெரும் செல்வத்தினை ஒப்படைக்கவில்லை, இதற்குக் காரணம் அப்போதைய இந்திய அதிகாரிகளே நிர்வாகமாற்றம் படிப்படியாய் செய்யப்பட வேண்டுமெனக் கருதியதாகும்.

நிர்வாக மாற்றத்தில் ஏற்பட்ட நிபந்தனைகளில் குறிப்பிடத்தக்கவை சில. சிறிய ஆலயங்களை அந்த அந்தப் பூசாரிகளிடமே ஒப்புவித்தனர். நடுத்தர ஆலயங்களை நிர்வகிக்கப் பூசாரிகளுடன் கிராம அதிகாரி ஒருவர் மற்றும் கிராமப் பிரமுகர் ஒருவர் என இருவரைச் சேர்ந்து ஒரு நிர்வாகக் குழு என நியமித்தனர். பெரிய ஆலயங்களை இந்து சமுதாய முக்கியத்துவம் வாய்ந்ததெனக் கருதி அவற்றில் நிலவிய பழக்க வழக்கங்களை மதித்துப் பரம்பரை நிர்வாகிகளை அங்கீகரித்தனர். இவற்றில் குறிப்பிடத்தக்க ஆலயங்கள் 1. அப்போதைய வடஆற்காடு மாவட்டத்தில் திருப்பதி தேவஸ்தானம் (அப்போதைய ஆண்டு வருமானம் ரூ.109873 ) 2. காஞ்சிபுரம் ஸ்ரீவரதராஜப் பெருமாள் தேவஸ்தானம் 3. திருவள்ளூர் 4. ஸ்ரீ பெரும்புதூர் 5. திருவண்ணாமலை 6. ஸ்ரீரங்கம் 7. மலைக்கோட்டை ஆலயங்கள் ஆகியவற்றிற்குத் தனிக்கவனம் செலுத்தித் தனித்தனி நிர்வாக அமைப்பை ஏற்படுத்தினர். சில ஆலயங்களின் பரம்பரை நிர்வாக பாத்தியதையை அங்கீகரித்து பல ஆலயங்களுக்குப் புதிய அறங்காவலர்களை நியமித்தும் ரெவின்யு போர்டு அரசைக் கலந்து உத்திரவுகளை வழங்கியது. ஆகவே 1839 லிருந்து 1845க்குள் ஆங்கிலேயர்கள் தமது நேரடி மேற்பார்வையை விலக்கிக் கொண்டனர். 1863 வரை இந்த நிலை நீடித்தது. இதில் ஏற்பட்ட அனுபவம் முறையற்ற நிர்வாகம், அறக்கட்டளைகளின் வரவினங்கள் கையாடல், மற்றும் ஆங்காங்கே செல்வந்தர்களின் ஆதிக்கங்கள். அரசு அதிகாரிகளின் கண்காணிப்பு இன்மையால் சம்பிரதாயத்தை மதிக்கும் பண்புடைய ஆங்கிலேயர் ஆட்சிக்கே இந்துக்கள் மற்றும் இஸ்லாமியர் மத்தியில் இழுக்கு ஏற்பட்டது. ஆகவே மேற்பார்வைக்கு அதிகார இயந்திரம் தேவை எனக் கருதி சென்னை மாகாணத்தில் ரெகுலேஷன் 7/1817ஐ நீக்கி 1863ஆம் வருடத்திய 20வது சட்டம் கொண்டு வரப்பட்டது. இதுவே முதல் முதலில் சில முக்கிய ஆலயங்களுக்கு அரசு அங்கீகாரத்துடன் லோக்கல் கமிட்டிகள் ஏற்படுத்தும் அதிகாரத்தை வழங்கியது. மற்ற ஆலயங்கள் முன்பு போலவே ரெவின்யு போர்டின் மேற்பார்வையில் எப்போதும் போல் ரெகுலேசன் 7/1817 ன் படி இருந்து வந்தன. முறையற்ற நிர்வாகம் தொடர்ந்தது. புதிய சட்டப்படியான கமிட்டிகளின் அதிகார வரம்பு நிர்ணயம் செய்யப்படவில்லை. ஆலய அபிவிருத்திகளுக்குப் போதிய பணம் பெறும் வாய்ப்பும் கமிட்டிகளுக்கு இல்லாதிருந்தது கமிட்டியின் உத்திரவுகளுக்குப் பணியாதவர் மீது நீதிமன்றத்தில் வழக்குதான் தொடர வேண்டுமென்ற நிலை இருந்தது. கமிட்டி மெம்பர்கள் ஆயுள்கால

மெம்பர்களாகக் கருதப்பட்டனர். அவர்களை நீக்க வேண்டுமானால் நீதிமன்றத்திற்குத்தான் செல்ல முடியும். கமிட்டி மெம்பர்களைப் பக்தர்களைக் கொண்டு தேர்வு செய்தல் என்றும் இருந்ததால் இதற்கென வாக்காளர் விவரமும் சரியானபடி இல்லாதிருந்தது. இக்காரணங்களால் இந்தச் சட்டம் சுமார் 6,7 வருஷங்களிலேயே கண்டனத்திற்கு வந்தது.

1872ல் அப்போதைய சட்டசபை (மேல் சபை) உறுப்பினராக ராம ஐயங்கார் ஒரு சட்ட நகல் தயார் செய்தார். இதனைத் தொடர்ந்து சட்டம் தயார் செய்யச் செய்தனர். இதன்படி ஆலய நிர்வாகம் பரவலாய் இருப்பதைக் கேந்திர முறையில் ஒரு வாரியம் மூலம் (போர்டு) நிர்வகிக்கலாம் என இந்த அறிக்கை தெரிவித்தது. இன்னும் தெளிவு பெறாத நிலையில் பின்பு மூன்று பில்கள் வந்தன. அவை கார்மிச்சேல் பில், சல்லிவன்ஸ் பில் மற்றும் முத்துச்சாமி ஐயர் பில் எனப்பட்டன. முத்துச்சாமி ஐயர் தலைமையில் முக்கியத்துவம் என்னவென்றால் அவர்தான் முதல் இந்திய உயர் நீதிமன்ற நீதிபதி, இவரது பில் 1919ம் வருடத்திய பெரிய சீர்திருத்தச் சட்டத்தின்படி, ஏற்பட்ட சட்டசபையினால் முதல் முதலில் நிறைவேறியதாகும். இருப்பினும் இச்சட்டம் இந்து, முஸ்லிம் இருபாலாருக்கும் பொதுவானதாய் இருந்தது. அந்நிலையை மாற்ற பின்பு 1923ல் இந்து ரிலிஜியஸ் என்டோமெண்ட்ஸ் சட்டம் முதன் முதலில் இந்து ஆலய அறக்கட்டளைகளுக்காக நிறைவேற்றப்பட்டது. இதன்படி ஆலயக் கணக்குகள் தணிக்கைக்கு உட்பட்டுப் பிரசுரிக்கப்பட வேண்டுமென்பது ஆயிற்று. ஆலயங்களும் அறக்கட்டளைகளும் ஒரு வகையில் அரசின் நேரடிப் பார்வையில் மறுபடியும் வந்ததாகவே கருதவேண்டும். லோக்கல் கமிட்டிகள், டிரஸ்டிகள், மாகாணத்திற்கான மத்திய வாரியம் செயல்பட்டன. அரசின் மறைமுகமான கண்காணிப்பு நிலவி வந்தது. இருப்பினும் 1925ல் மேற்கண்ட 1923ம் வருடத்திய சட்டம் திருத்தப்பட்டு வாரியத்தில் கமிஷனர் நியமனமும் ஆலயங்கள் மேற்பார்வைக்கான வரிவிதிப்பும் செய்யப்பட்டன.

பின்பு இந்தச் சட்டமும் திருத்தப்பட்டு 1927ஆம் வருஷம் ஆகஸ்ட் 2 1927 என்ற சட்டம் இயற்றப்பட்டது. இதுவே ஆலய நிர்வாகத்தை ஒரு தனி வாரியத்திடம் ஒப்படைத்த முக்கியமான சட்டமாகும். இதுவே இடையிடையே பலதிருத்தங்களுக்கு உட்பட்டு 1951 வரை அமலில் இருந்தது. இச்சட்டத்தின்படி மாநில அரசு ஒரு வாரியத்தை அமைத்து அதன் வசம் தன்னாட்சி முறையில் ஆலயங்கள் மேற்பார்வையை ஒப்படைத்தது. ஐந்து ஆணையர்கள் கொண்ட ஒரு வாரியம், அவர்களில் ஒருவர் தலைவர் என்று அரசு நியமித்தது. இவர்களுக்கு சில விஷயங்களில் நீதி வழங்கும் அதிகாரமும் வழங்கப்பட்டது. வாரியத்தின் மேற்பார்வையில் எந்த எந்த ஆலயம் வரும் என்றும் தெளிவாக வரையறுக்கப்பட்டது. இந்த வாரியம் நியமனம் ஆகும்போது தாலுக்கா கமிட்டிகளும் அவற்றின் மூலம் ஆலயங்களுக்கு அறங்காவலர் நியமனம் செய்யும் முறையும் இருந்தன. இம்முறையும் ஒரு திருத்தம் மூலம் மாற்றப்பட்டு மாவட்டம் தோறும் உதவி

ஆணையர்களை நியமனம் செய்தும், அறங்காவலர், நியமனத்தை வாரியமே செய்தது. ஆலயச் சொத்துக்கள் நிர்ணயம் செய்யும் அதிகாரமும் வாரியத்திற்கு வழங்கப்பட்டது. வாரியம் எடுக்கும் முடிவுக்கு மேல் மாவட்ட நீதிமன்றத்திற்குச் செல்லும் உரிமையும் பாதிக்கப்பட்டோருக்கு வழங்கப்பட்டது. ஏற்கனவே இருந்து வந்த தேவதாசி முறையும் ஒழிக்கப்பட்டது. உரிய மானிய நிலங்களை ஊழியர்கள் பராதீனப்படுத்துவதைச் சட்டவிரோதம் எனவும் அறிவிக்கப்பட்டது. குறிப்பிட்ட சில பெரிய ஆலயங்களுக்கு நிர்வாகத் திட்டம் ஏற்படுத்தவும் வாரியத்திற்கு அதிகாரம் அளிக்கப்பட்டது. ஆலயப் பிரவேசச் சட்டமும் இச்சட்டத்தின் திருத்தமாக அங்கீகரிக்கப்பட்டு இறைவன் முன்பு யாவரும் சமமாய் வழிபடும் உரிமை, வழங்கப்பட்டது. சுருங்கச் சொன்னால் 1927ஆம் வருடத்திய சட்டம் பல அறக்கட்டளைகளையும் ஆலயங்களையும் தன்வசப்படுத்தியது. அவற்றின் நிதி நிலைமையை அபிவிருத்தி செய்ததுடன் தவறான செலவினங்கள், கையாடல்கள், யாவும் தவிர்க்கப்பட்டன. எதேச்சையாக ஆலயங்களையும் அறக்கட்டளைகளையும் தமது என்று அனுபவித்து வந்தவர்களுக்கு இச்சட்டம் ஒரு தடையாக விளங்கியது. சுதந்திரம் பெற்ற பின்பு இச்சட்டம் நான்கு ஆண்டுகள் அமலில் இருந்தது. 1951ல் இச்சட்டத்தின் வாரிய நிர்வாகத்தை நீக்கி இந்து சமய அறநிலையத் துறை என்ற ஒரு துறையை அரசு ஏற்படுத்தி அதன் வசம் ஆலயங்கள் மற்றும் அறக்கட்டளைகளின் நிர்வாகம் ஏற்படுத்தப்பட்டது.

ஆங்கிலேயர் ஆட்சியில் ஆலயங்களும் அறக்கட்டளைகளும் மிகவும் கவனமாகவே கையாளப்பட்டன. நமது அனுபவிக்க பெரியவர்களின் விருப்பத்திற்கேற்ப அவ்வப்போது திருத்தங்களுடன் ஆங்கிலேயர்கள் விதிமுறைகளையும் சட்டங்களையும் ஏற்படுத்தினர். நமது சமயப் பண்புகளை ஒரு போதும் அவர்கள் அவமதித்ததில்லை. கிறிஸ்துவ மிஷனரிகளின் எதிர்ப்பு எப்படி இருப்பினும் அரசின் கவனம் எல்லாம் நமது சமயப் பண்புகளை உதாசீனம் செய்யாமல் மதிப்பதிலேயே இருந்தது. பல ஆங்கிலேய அதிகாரிகளும் இந்து ஆலயங்களுக்குத் தமது நன்கொடைகளை வழங்கியுள்ளனர். அரசியல் ரீதியில் அவர்கள் எப்படி இருந்தாலும் சமயத் துறையில் அவர்களது நல்ல எண்ணம் பாராட்டுதலுக்குரியது.

# பின் இணைப்பு

## 1. ஒழுகுநூல்கள் - கோயிலொழுகு

கோயில் ஒழுகு என்னும் நூல், கோயில் என்று ஸ்ரீ வைஷ்ணவர்கள் அனைவராலும் வழங்கப்படும் ஸ்ரீரங்கம் கோயிலின் வரலாற்றை இதிஹாஸ புராண காலத்திலிருந்து 18-ஆம் நூற்றாண்டின் இறுதிவரை கூறுவதாகும். ஸ்ரீரங்கம் கோயில் அதிகாரிகளால் செவிவழிச் செய்திகளையும் கல்வெட்டுகளையும் கொண்டு அவ்வப்போது தொகுக்கப்பட்டு உருவானநூல் இது. இதே போன்று திருமலை ஒழுகு என்னும் நூல் ஒன்றும் உள்ளது.

ஒழுகு என்பது ஒரு பதிவேடு, அரசர்கள் வழங்கிய அறக்கொடைகளை முறையாகப் பதிவு செய்த ஆவணமாக விளங்குகிறது. கி.பி.13ஆம் நூற்றாண்டைச்சேர்ந்த ஒரு கல்வெட்டில் ( **S.I.I.** எண் 233 ) ஒழுகு என்ற கிராம நிலப்பதிவு ஆவணம் குறிப்பிடப்பட்டிருக்கிறது. நிலப்பதிவுகள் மட்டுமின்றி வமிசாவளிகளின் பதிவுகளும் ஒழுகு என்று வழங்கப்பட்டிருக்கிறது. உதாரணமாக அண்ணன் திருமாளிகை ஒழுகு என்ற நூல் திருவரங்கம் கோயிலில் பணிசெய்து வரும் கந்தாடையார் என்ற ஆசாரியர்களின் வமிசாவளியையும் அவர்கள் ஆற்றிய அரிய கோயிற்பணிகளையும் விரிவாகக் கூறுகிறது.

மேற்குறித்த அண்ணன் திருமாளிகை ஒழுகுநூலில் "பலகலவன் ஒழுகு" என்ற நூல் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதுவே கோயில் ஒழுகு என்ற நூலாக இருக்கத்தகும். திருவரங்கம் திருக்கோயில் ஸ்ரீபண்டாரத்துப் பணியாளர் அவ்வப்போது குறிப்பாக எழுதிச் சேர்த்த தொகுப்பே ஒழுகு நூல் ஆகும். கோயில் நிகழ்ச்சிகளை அப்பணியாளர் நால்வர் அதிகாரிகள் முன்பு அப்பதிவுகளை ஏட்டில் எழுதியுள்ளனர். அவ்வேட்டுச்சுவடி முத்திரையிடப் பெற்றுப் பத்திரமாக ஸ்ரீபண்டாரத்தில் சேமிக்கப்பெற்றது. பிற்காலத்தில் வழக்குகளும் விவகாரங்களும் ஏற்பட்டபோது அந்நூல் வெளியே எடுக்கப்பட்டுப் பரிசோதிக்கப்பட்டு முடிவுகள் மேற்கொள்ளப்பட்டன. பரம்பரை பரம்பரையாக இக்குறிப்புகள் ஏடுபடுத்தப்பட்டன.

கோயிலொழுகு நூலில் கோயில் நிகழ்ச்சிகளிற் பல காலவரிசையில் இடம் பெயர்ந்து காணப்படுகின்றன. பின்னே வந்த சுவடி எழுத்தாளர்கள். ஓலைகளை இடம் மாற்றிக் கோத்துவிட்டனர். முசுலீம் படையின் தாக்குதலை வருணித்தபிறகே ஆசாரியர்களின் வரலாறு இந்நூலில் இடம் பெறுவதற்கு அதுவே காரணமாகும். விஜயநகர மன்னர்களின் ஆட்சிக்காலத்திய நிகழ்ச்சிகள் இந்நூலில் காலவரிசை

மாறாதபடி குறிப்பிடப்பட்டுள்ளன.

வைணவ குருபரம்பரை நூல்களில் சொல்லப்படாத பல அரிய வரலாற்றுச் செய்திகள் கோயிலொழுகு நூலில் காணப்படுகின்றன. கோயிலொழுகுநூல் மணிப்பிரவாள நடையில் எழுதப்பட்டுள்ளது. சில நிகழ்ச்சிகள் மிக நீண்ட வாக்கியங்களில் விவரிக்கப்படுகின்றன. சில தொடர்கள் முடிவுபெறாது நிற்கின்றன. அக்காலத்து வழங்கிய அரிய கலைச் சொற்களையும் கோயில் தொடர்பான மரபுகளையும் இந்நூல் விருந்தாகத் தருகிறது.

ஸ்ரீரங்கமகாத்மியம் என்ற புராணச் செய்தியோடு கோயிலொழுகு தொடங்குகிறது. ஸ்ரீரங்கவிமானம் இராமபிரானால் விபீடணனுக்குப் பரிசாக வழங்கப் பெற்றுள்ளதையும், அஃது காவிரியாற்றிற்கு நடுவில் சந்திர புஷ்கரணியின் கரையில் நிலை நிறுத்தப்பெற்றதையும் கோயில் ஒழுகு முதற்கண் விவரிக்கிறது. அதையடுத்து தர்மவர்மா என்ற சோழமன்னன் கருவறையைச் சுற்றித்திருச்சுற்றுக்களையும் மண்டபங்களையும் எழுப்பிய பணிகள் இயம்பப்படுகின்றன. பிறகு காவிரி வெள்ளத்தில் விமானம் மூழ்கியபோது மண்மேடிட்டுக் கோயில் அழிந்ததையும் அப்போது கிளிச்சோழன் தன் கனவில் கண்டபடி புதைந்துபோன ஸ்ரீரங்க விமானத்தை வெளிக்கொணர்ந்து பிரதிஷ்டை செய்ததையும் கோயிலொழுகு குறிப்பிடுகிறது. இந்நூல் குறிக்கும் தர்மவர்மா நந்தசோழன், கிளிச்சோழன் என்ற மன்னர்கள் சங்ககாலத்துக்கும் முற்பட்டவர்களாவர்.

ஸ்ரீரங்கவிமானத்தின் வரலாற்றையடுத்து ஆழ்வார்களின் அவதாரமும் அவர்களாற்றிய கோயிற் பணிகளும் இடம் பெறுகின்றன. திருமங்கையாழ்வார் திருமதில்களையும் திருச்சுற்றுகளையும் அமைத்தார். ஆலிநாடன் திருச்சுற்று என்று இன்றும் அது வழங்குகிறது. குலசேகராழ்வாரின் திருப்பணிகளும் பெரியாழ்வார் ஆண்டாள் இருவரின் சம்பந்தமும் வருணிக்கப்படுகின்றன.

அதையடுத்து முதலாம் ஜடாவர்மன் சுந்தரபாண்டியனின் அறக்கொடைகள் வருணிக்கப்படுகின்றன. அவை கல்வெட்டுக்களாகவும் பொறிக்கப்பட்டுள்ளன. கி.பி. 13ஆம் நூற்றாண்டின் முற்பாதியில் அரசாட்சி செய்த ஹோய்சாளரின் திருப்பணிகளும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. வீரநரசிம்மன் ராமனாதன் போன்ற ஹோய்சாள மன்னர்கள் மற்றும் சிங்கண்ண தண்ட நாயக்கர், கரியமாணிக்க தண்ட நாயக்கர் போன்ற படைத்தளபதிகளின் அறப்பணிகளும் விவரிக்கப்பட்டுள்ளன.

கி.பி.1311 மற்றும் 1323 ஆண்டுகளில் நிகழ்ந்த முசுலீம் படையெடுப்புக்களைக் கோயில் ஒழுகு மிக உருக்கமான உணர்வோடு விரித்துக் கூறுகிறது. இதில் பல சம்பவங்கள் காலமாறுபாடுகள் ஏற்பட்டுக் குழப்பத்தையும் தருகின்றன.

இராமானுஜரின் வாழ்க்கைச் செய்திகள் கோயில் ஒழுகு நூலில் மிக விரிவாக இடம் பெற்றுள்ளன. ஐந்து வகைப்பட்டதாக இருந்த கோயிற் பணிகளை இராமாநுஜர் பத்துக் கொத்தாக விரித்து அமைத்த வரலாறு ஆய்வாளர்களுக்குப் புதிய செய்திகளைத் தாங்கி நிற்கின்றன. பிறகு பராசரபட்டர் மற்றும் கூரநாராயண ஜீயர் வரலாறுகளும் அவர்களாற்றிய கோயிற்பணிகளும் இடம் பெறுகின்றன. அதே போன்று முதலியாண்டான், கோயிலண்ணன், மணவாள மாமுனிகள், ஆகியோரது அரும்பெரும் தொண்டுகள் வருணிக்கப்பட்டுள்ளன. அரையர் சேவை தொடங்கப்பட்ட வரலாறு அதன் வளர்ச்சி ஆகியன இந்நூலில் மிகச் சிறப்பாக வருணிக்கப்பட்டிருக்கின்றன.

விஜயநகரப் பேரரசர்களின் சிறப்புப் பணிகள் மற்றும் நாயக்க மன்னர்களின் ஆட்சிமுறைகள் பற்றியும் அறிவதற்கு இந்நூல் பெரிதும் பயன்படும் ஆதார நூலாகும். கோயில் ஒழுகு பிரிட்டிஷ் ஆட்சிக் காலம் வரை குறிப்புகளைக்கொண்டுள்ளது. கி.பி.1803ல் ஜான் வாலேஸ் என்ற நீதிபதியின் ஒரு தீர்ப்புரையோடு நூல் முடிவுறுகிறது.

கோயிலொழுகு நூல் 1888ம் வருடத்திலும் 1909 ம் வருடத்திலும் அச்சிடப்பட்டது. பிறகு இரு பதிப்புகளையும் ஒப்பிட்டு 1976ல் ஸ்ரீவைஷ்ணவ சுதர்சனம் மாதஇதழ் ஆசிரியர் ஸ்ரீ கிருஷ்ணசாமி அய்யங்கார் நல்ல தெளிவான பதிப்பாக இந்நூலை வெளியிட்டுள்ளார்.

திருப்பதி வேங்கடேசுவர பல்கலைக்கழகத்தில் வரலாற்றுப் பேராசிரியராக இருந்த Dr.V.N.ஹரி ராவ் என்பவரால் 1961ல் கோயில் ஒழுகு பற்றி விரிவான ஆராய்ச்சி நூல் ஆங்கிலத்தில் வெளியிடப்பெற்றது. அவர் கோயில் ஒழுகு நூல் முழுவதையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளார். அவருடைய பதிப்பில் தான் பிரிட்டிஷ் ஆட்சிக்காலத்துப் பதிவுகள் சேர்க்கப்பட்டுள்ளன.

திருவரங்கம் கோயிலில் இராமாநுஜர் ஏற்படுத்திய பத்துக் கொத்துக்கள் :-

1. திருப்பதியார்.
2. திருப்பணிசெய்வார்
3. பாகவதநம்பியார்
4. உள்ளூரார்
5. விண்ணப்பம்செய்வார்
6. திருக்கரகக்கையார்
7. ஸ்தானத்தார்
8. பட்டாள் கொத்து
9. ஆரியப்பட்டாள் கொத்து
10. தாசநம்பி கொத்து

திருவரங்கம் கோயிலோடு தொடர்பு பெற்ற மன்னர்கள் :

(அ) தர்மவர்மா
கிளிச்சோழன்
ராஜ மகேந்திரசோழன்
நந்தசோழன்
சோழேந்திரசிம்மன்
விக்கிரம சோழன் அகளங்கன்
குலோத்துங்க சோழன்
திருவிக்கிரம சோழன்
பள்ளிகொண்டான் சோழன்
ராஜேந்திர சோழன்

(ஆ) வல்லப தேவ பாண்டியன்
சுந்தர பாண்டியன்
கலியுகராமன்

(இ) கம்பய தண்ட நாயக்கர்
கரியமாணிக்க தண்ட நாயக்கர்
வீரநரசிங்கன்
வாலநாதராயர்
கோபணவுடையார்
பெரிய கிருஷ்ணராயர்
அண்ணப்பவுடையார்
ஹரிஹரராயர்
திம்மராகுத்தர்
பிரதாப தேவமஹாராயர்
சக்கரராயர்
விருப்பண்ணவுடையார்
நாகராஜவுடையார்
ஐந்நய நாயக்கர்
சாளுவ திருமலைராஜா
விசுவநாத நாயக்கர்
கிருஷ்ணப்ப நாயக்கர்
குமார கிருஷ்ணப்பநாயக்கர்

## திருமலையொழுகு

இந்நூல் கோயிலொழுகு போன்று அமைந்துள்ளது. திருமலையிலுள்ள திருவேங்கடவன் திருக்கோயில் வரலாற்றைத் தொகுத்துக் கூறுகிறது. ஏட்டுச்சுவடிகளாகவும் காகிதப்பிரதிகளாகவும் சேமித்து வைக்கப்பட்டிருந்த இந்த நூல் முதன்முறையாக 1953 ஆம் ஆண்டு திருமலை திருப்பதி தேவஸ்தான அச்சகத்தில் பதிப்பிக்கப்பட்டது. திருவேங்கடவன் கீழ்க்கலை ஆராய்ச்சிக் கழகத் தமிழ்துறைத்தலைவர் திரு.கோ. பாலசுந்தரநாயக்கர் அவர்கள் இந்நூலை நன்கு பரிசோதித்து வெளியிட்டிருக்கிறார்கள். ஏட்டுப்பிரதிகளைப் பாதுகாத்து அளித்தவர் ஸ்ரீபெரும்பூதூர் ஸ்ரீ.உ.வே.கோயில் கந்தாடைராகவசாரிய ஸ்வாமி ஆவார். காகிதக் கையெழுத்துப் பிரதிகளாக எழுதிவைத்துப் பாதுகாத்தவர் ஸ்ரீ.உ.வே. கச்சிக் கடாம்பி யாமுனாசாரிய ஸ்வாமி ஆவார். திருப்பதியில் இப்போதும் வாழ்ந்துவருகின்ற வித்துவான் ஸ்ரீ.உ.வே.தி.அ. கிருஷ்ணமாசாரியார் ஸ்வாமி இந்நூலில் வரும் வடமொழி சுலோகங்களைப் பிழைதிருத்திச் செம்மையாக வடிவமைத்து அளித்திருக்கிறார்.

திருமலை திருக்கோயிலின் செய்திகளை வடமொழியிலுள்ள புராணங்கள் யாவும் விரித்துரைக்கின்றன. அவற்றை எல்லாம் முறையாகத் தொகுத்துக் கூறும் வடமொழிநூல் ஒன்று அனந்தாழ்வான் என்ற ஆசாரியரால் இயற்றப்பட்டது. அவர் இராமாநுஜருடைய சிஷ்யராக விளங்கியவர். ஸ்ரீ வேங்கடாசல இதிஹாஸ மாலா என்ற அந்நூலிலுள்ள அரிய செய்திகள் திருமலை ஒழுகு நூலிலும் இடம்பெறுகின்றன. இந்நூலில் புராண காலம் தொடங்கி விஜயநகர மன்னர்களில் சதாசிவராயர் காலம் முடிய வரலாற்றுக்குறிப்புகள் அமைந்துள்ளன. அவை ஆராய்ச்சியாளர்களுக்குப் பெரிதும் பயன்படும்.

## இந்நூலில் அறியப்படும் அரியசெய்திகள்

(1) இராமாநுஜர் மூன்றுமுறை திருமலை திருக்கோயிலுக்கு எழுந்தருளி மங்களாசாஸனம் செய்தருளினார். முதன்முறையாக அனந்தாழ்வான் நிர்மாணித்த பூந்தோட்டத்தைக் கண்டு அவரைப் பாராட்டுவதற்காக எழுந்தருளித் திருமலையில் மூன்று நாட்கள் தங்கித் திருவேங்கடவனை மங்களாசாஸனம் செய்தார். ஓராண்டு திருப்பதியில் தங்கியிருந்து திருமலைநம்பிகளிடம் ஸ்ரீராமாயணம் பாடம் கேட்டார். இரண்டாம் முறையாக, தம்முடைய திக்விஜய யாத்திரையின் முடிவில் திருமலை எழுந்தருளினார். அப்போது சைவர்களின் ஆக்கிரமிப்பைத் தமது வாதத்திறமையால் போக்கித் திருவேங்கடவன் திருவாழி திருச்சங்குகளை தரிக்கும்படி செய்தார். மூன்றாம் முறையாகத் தமது முதிர்ந்த பிராயத்தில் தில்லையிலிருந்து சோழமன்னனால் அப்புறப்படுத்தப்பட்ட கோவிந்தராஜரின் திருமேனியைத் திருப்பதியில் பிரதிஷ்டை செய்தார்.

2) தொண்டைமான் சக்கரவர்த்த... ன் வரலாறு

(3) திருமலை நம்பிகளின் திருமஞ்சனத் தொண்டுகளும் ஆகாசகங்கை தோன்றிய வரலாறும்.

(4) திருமலையில் இராமாநுசர் செய்துவைத்த திருத்தங்கள்

திருவேங்கடமுடையானைத் திருவாழி திருச்சங்குதரிக்கச் செய்தது. ஆனந்த நிலைய விமானத்தில் வைகானஸ ஆகமரீதியாக வராக, நரசிம்ம, வேங்கடேச தேவதைகளை அமைத்தது ; பெருமாளின், திருமார்பில் திருமகளை இருகைகளையுடைய திருவுருவோடு ஒரு நல்ல தினத்தில் சுக்கில துவாதசியும் சுக்கிர வாரமும், உத்தர பல்குனீ நட்சத்திரமும் கூடின ரத்ன மஞ்சரிகா யோகத்தில் அணிவித்தது.

(5) பரிவார தெய்வங்களை உரிய ஸ்தானங்களில் பிரதிஷ்டை செய்தது.

(6) திருமலை இறைவன் திருமாலே என்று எல்லோரும் அறியும்படி பிரகடனம் பண்ணி வைகானச ஆகமமுறையில் மகாஸம்புரோக்ஷணம் செய்வித்தது.

(7) திருமஞ்சன காலத்தில் திருமகள் மார்பிலிருந்து இழிந்திருக்கும்போது நாச்சியார் திருமொழியை ஓதும்படி நியமித்தது.

(8) திருமஞ்சனத்துக்குப் பின்னர் பெருமாள் திருநெற்றியில் இரு கோடுகளான திருமண்காப்பைக் கருப்பூரப் பொடிகளால் அமைத்து மூன்று தினங்கள் அமைத்துக் காட்சி அளிக்கவும், மற்ற தினங்களில் முத்துப்பொடிகளால் அமைத்துக் காட்சியளிக்கவும் செய்தது.

(9) திருக்கண் மலருக்குக் குளிர்ச்சிக்காக அஞ்சனக் காப்பு இடவும் ஏற்பாடு செய்தது.

(10) புரட்டாசி பிரம்மோத்ஸவம் நன்கு நடைபெற மாடவீதிகளைத் தேரோடும் வீதிகளாகப் செம்மைப்படுத்தியது.

(11) திருவேங்கடச் செல்வம் வளர்ந்து பெருகும்படி தன ஆகர்ஷண யந்திரத்தை மந்திர பூர்வகமாக அமைத்தது.

(12) யோகநரசிம்மனாகிய வேங்கடத்து அரியைத் திருச்சுற்றில் பிரதிஷ்டை செய்தது.

(13) பூப்பறித்தல் விழா, தண்ணீர் வழியமுது திருத்தும் திருவிழா, ஊஞ்சல் விழா, கோடைத்திருநாள், திருப்பள்ளியோடத் திருநாள், பகற்பத்து இராப்பத்து அத்தியயனத்திருவிழா மற்றும் பல விழாக்களை ஏற்படுத்தியது.

(14) திருமலையில் தங்குவோர் மேற்கொள்ள வேண்டிய விதிமுறைகளை வகுத்தது.

15) கீழ்த்திருப்பதியில் கோவிந்தராஜப் பெருமாள் ஸந்நிதியை உண்டுபண்ணியது முதலியனவாகும். திருமலை திருவேங்கடவன் சந்நிதியிலுள்ள கோபுரம் மண்டபங்களின் அழகிய தமிழ்த் திருப்பெயர்களைத் திருமலை ஒழுகு நூல் குறிப்பிடுகிறது. அவற்றுட் சில வருமாறு

வைகுந்தன் திருவாசல்

செண்பகத் திருவாசல்

அவாவறச் சூழ்ந்தான் திருவாசல்

வென்றுமாலையிட்டான் திருமண்டபம்

மலை குனிய நின்ற பெருமாள் (உற்சவ மூர்த்தி)

அழகப்பிரானார் திருக்கிணறு

யமுனைத் துறைவன் (மாலை கட்டும் மேடை)

### 1) திருப்பணிகள் இயற்றிய மன்னர்கள்

இராமாநுஜருடைய சீடன் கட்டியம்யாதவநாராயணன் வீரநரசிங்க யாதவராயன் (கி.பி.1224) கிருஷ்ணதேவராயர் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி.1245).

### வேறு செய்திகள்

இராமாநுஜர் திருமலையில் பெரியகேள்வி ஜீயர் மடத்தை நிறுவினார். மணவாள மாமுனிகள் சிறிய கேள்வி ஜீயர் மடத்தை நிறுவினார்.

கந்தாடை இராமாநுசன் என்பவர் திருவேங்கடவன் உலா இயற்றினார்.

திருமலைமேல்கோயிலில் உள்ளே வடபுறச் சுற்றில் இராமாநுசர் ஸந்நிதியிலுள்ள திருமேனி மிகப் பழமையானது.

### (2) திருப்பணி மாலைகள்

### 1. குழைக்காதர் திருப்பணி மாலை

இதனை இயற்றியவர் இரத்தினகவிராயரின் குமாரர் திருமேனி கவிராயர் ஆவார். முந்நூறு ஆண்டுகளுக்குமுன் இந்நூல் இயற்றப்பட்டது. இந்நூலில் தென்திருப்பெரெயில் என்ற பாண்டிநாட்டுத் திருப்பதிகளில் ஒன்றான திவ்வியதேசத்தில் கோயில் கொண்டிருக்கும் மகரநெடுங்குழைக்காதருக்கு வள்ளற் பெருமக்கள் அவ்வப்போது

ஆற்றிய தொண்டுகள் பதிவு செய்யப்பட்டுள்ளன. இந்நூல் கலிவெண்பா யாப்பில் 161 கண்ணிகளைக் கொண்டதாக அமைந்துள்ளது.

### 2. வைத்தமாநிதி திருப்பணி மாலை

இதனை இயற்றியவர் அறியப்படவில்லை. இந்நூலில் குறிப்பிடும் ஸ்ரீவானமாமலை பட்டர்பிரான் ஜீயரைக் கொண்டு இந்நூலாசிரியர் கி.பி.19ஆம் நூற்றாண்டின் தொடக்க காலத்தில் வாழ்ந்தவர் என்று கருதப்படுகிறது. வடமலையைப்ப பிள்ளை என்ற கொடை வள்ளலின் ஆலயத்திருப்பணிகள் பலவற்றை இந்நூல் தெரிவிக்கிறது.

### 3. திருவாலவாயுடையார் திருப்பணிமாலை

மதுரை மீனாட்சியம்மன் திருக்கோயிலின்கண் இயற்றப்பெற்ற பல்வகைத் திருப்பணிச் செய்திகளை இந்நூல் அளிக்கிறது. இது ஒரு தொகுப்புநூல் பல்வேறுகாலங்களில் பல்வேறு புலவர்கள் இயற்றிச்சேர்த்த பாடல்களின் தொகுப்பாக அமைந்துள்ளது. தத்வமூர்த்தி ஒதுவார் என்பவர் இவற்றைச் சேகரித்து நூல் வடிவில் தொகுத்துள்ளார். இதில் 160 பாடல்கள் உள்ளன. மதுரைக் கோயிலின் விரிவை ஆராய்வதற்குப் பயன்படும், பாண்டித்துரைத் தேவர் மதுரையில் நான்காம் சங்கத்தைத் தோற்றுவித்தவுடன் இந்நூலைப் பதிப்பித்து வெளியிட்டார்.

இதே போன்று மதுரை ஸ்தானீகர் வரலாறு மற்றும் ஸ்தலவரலாறு இவ்விரண்டையும் மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் வெளியீடான செந்தமிழில் பரிசோதித்து வெளியிட்டிருக்கிறார்கள், முதலில் குறிப்பிட்ட நூலில் திருக்கோயிற் பணியாளர்களான பட்டர்களின் வரலாறு இடம் பெறுகின்றன. ஸ்தலவரலாற்றில் அரசியல் வரலாறு இடம் பெறுகிறது.

திருச்செங்கோடு ஸ்ரீகைலாசநாதர் கோயில் திருப்பணிமாலை என்ற நூலும் பிற்கால நாயக்கமன்னர்களின் ஆட்சிக்காலத்தில் நடைபெற்ற திருப்பணிகளை அறியவுதவுகிறது.

மேற்குறித்த திருப்பணி மாலைகளிலிருந்து அரிய பல செய்யுட்களை மு.இராகவையங்கார் தொகுத்து 1936ல் வெளியிட்ட பெருந்தொகை என்ற நூலில் காணலாம்.

திருமலை நாயக்கர் மதுரையில் சொக்கனாதர் ஸந்நிதிக்குமுன் கட்டிய புதுமண்டபம் பற்றிய ஒரு செய்யுள்

*தரணிபுகழ் மேருகிரி பலவுரு வெடுத்துநற்*
*சந்நிதா னத்தில் வந்து*
*தவமுற்ற தென்னநூற் றிருபத்து நாலுகால்*
*தன்னிலே எந்த நாளும்*

*திரமுறும் புதியமா மண்டபம் கட்டியே*
*சித்திரமும் எழுதி யந்தச்*
*செய்யமண் டபமணியும் மாலையென இருபால்*
*சிறந்த மண்டபமி யற்றிக்*
*குரவமர் கருங்குழல் அங்கயற் கண்ணம்மை*
*கொன்றையணி சொக்கேசனார்*
*கூடிவிளை யாடியும் வசந்தமெனும் நல்விழாக்*
*கொண்டருள வேசெய் தனன்*
*பரராச சேகரன் பரராச பூஷணன்*
*பரராச ராச திலகன்*
*பரராசர் பணிமுத்து கிருஷ்ணப்ப பூபனருள்*
*பாலதிரு மலைபூ பனே*

## 3) தொழில் அட்டவணை

திருக்கோயில் பணியாளர்கள் பரம்பரை மிராசாகப் பணி செய்துவந்தனர். அவர்களுடைய பணிப்பெயர்களும் பணிசெய்யும் காலப்பகுதியும் வரையறை செய்யப்பெற்றுப் பண்டைக் காலம் தொட்டே ஓலைகளில் எழுதி வைத்தனர். சில பணிவுப் பிரிவுகளை ஒருவர்க்கு மேல் பலர் பங்கிட்டுக் கொள்ளும் முறை நிலவியது. அழகர் கோயில் பணியாளர் தொழில் அட்டவணை மாதிரியாகக் கீழ்க்கொடுக்கப்பட்டிருக்கிறது.

**பணிப்பிரிவுகள் நிருவாகம்**

1. அர்ச்சகம்
   1. ஸ்ரீரங்கராஜபட்டர்
   2. ஏறுதிருவுடையான் பட்டர்
   3. நலன் திகழ் நாராயண பட்டர்
   4. அலங்கார பட்டர் — 4
2. திருமாலிருஞ்சோலை ஜீயர் ஸ்ரீகாரியம் — 1
3. ஆண்டார்
   1. திருமாலையாண்டார்
   2. தோழப்பையங்கார் — 2
4. சந்நிதி பரிசாரகம்
   1. அமுதார்
   2. அலங்காரநம்பி
   3. திருமாலிருஞ்சோலைமலைநம்பி
   4. சடகோப நம்பி

5. சேனை நாராயண அமுதார்
6. திருமலை நம்பி
7. சோலை நம்பி
8. வடமாமலை அமுதார்
9. தெய்வசிகாமணி நம்பி
10. தியாகம் செய்த நம்பி 10

5. சந்நிதி பட்டைகள் (வேத விண்ணப்பம் செய்வோர்)
திருமலைநம்பிகள் 1

6. திருப்பணி செய்வார்
திருமலை நம்பிகள் 1

7. நாச்சியார் பரிகரம் (மடைப்பள்ளி)
1. திருமலை நம்பிகள் 1
2. அமுதார் 1

8. சன்னிதி பண்டாரி (திருமாலை கட்டுவோர்)
சுந்தரராஜ பண்டாரி 1

9. கணக்கு
1. திருமாலிருஞ்சோலைப்பிரியன்
2. சேதுராஜப் பிரியன்
3. சௌந்தரராஜப் பிரியன் 3

10. சந்நிதி ஸ்தானாதிபதி 1

11. திருவிளையாட்டான் 1

12. கொத்தன்
1. அலங்காரக் கொத்தன்
2. அண்ணாவிக் கொத்தன் 2

13. சின்ன மேளம், பெரியமேளம்

14. ஸ்ரீபாதம் தாங்கிகள் (4 கரையார்) 1
(இது 28-6-1803 அன்று வெளியானதின் படி)